ஸ்திரமான ஸ்வபாவன், அசலஃ - அசையாதவன், ஸநாதநஃ - அநாதியானவன். (உங-உச)

(தா-ம்.) ஆயுதங்கள் இந்த ஆத்மாவை வெட்டாதுகள்; அக்நியானவன் இந்த ஆத்மாவை எரிக்கான்; ஜலங்கள் நனைக்கிறதில்லை; வாயுவானது உலர்த்துகிறதில்லை; இந்த ஆத்மாவானவன் வெட்டத்தகாதவன்; எரிக்கத்தகாதவன்; நினைக்கத்தகாதவன்; உலர்த்தத்தகாதவன் என்றுமுள்ளவன்; எல்லாவற்றிலுமிருப்பவன்; இவன் அநாதியானவன்; சலிக்கத்தகாதவன்; ஸ்திரமாயிருக்கிறவன். (உங-உச)

அவ்யக்தோऽயமசிந்த்யோऽயமவிகார்யோऽயமுச்யதே ॥
தஸ்மாதேவம் விதித்வைநம் நாநுஶோசிதுமர்ஹஸி ॥ உரு ॥

(ப-ம்.) அயம் - இந்த (ஆத்மா), அவ்யக்தஃ - (காணப்படாதவன்) அயம்-இவன், அசிந்த்யஃ-சிந்தைக்கெட்டாதவன், அயம் - இவன், அவிகார்யஃ-மாறுபாட்டுக்கேலாதவன், (என்று) உச்யதே-சொல்லப்படுகிறான்; தஸ்மாத் - ஆகையால், ஏநம்-இவனை, ஏவம் விதித்வா - அறிந்துகொண்டு, அநுசோசிதும் - துக்கிப்பதற்கு, நார்ஹஸி - (உனக்குத்) தகாது. (உரு)

(தா-ம்.) இந்த ஜீவன் காணத்தகாதவனும், சிந்திக்கத்தகாதவனும், விகாரத்தை அடையாதவனுகவும் சொல்லப்படுகிறான். ஆனபடியால், இவனை இப்படியாக அறிந்து துக்கிப்பதற்கு நீ தகுந்தவனன்று. (ஶ.) அவிகார்யஃ-விகாரமடையாதவன். (உரு)

அத சைநம் நித்யஜாதம் நித்யம் வா மந்யஸே ம்ருதம் ।
ததாபி த்வம் மஹாபாஹோ நைவம் ஶோசிதுமர்ஹஸி ॥

(ப-ம்.) அதச - இல்லாவிட்டால், ஏநம்-இந்த (ஆத்மாவை), நித்ய ஜாதம் - எப்போதும் பிறந்து, நித்யம் ம்ருதம்வா-எப்போதும் இறந்தவனுகவாகிலும், மந்யஸே - மதிக்கிறாயோ, ததாபி - ஆனபோதிலும், மஹாபாஹோ - ஓ பெருந்தோளுடையாய்! த்வம்-நீ, ஏவம்-இப்படி, சோசிதும்-துக்கிப்பதற்கு, ந அர்ஹஸி-தகாது. (உகூ)

(தா-ம்.) நல்ல கைகளையுடைய அர்ஜுனா! இந்த ஆத்மாவை நித்திய முண்டாகிறவனும், நித்திய மரணத்தை யடைகிறவனும், எண்ணுகிறாயோ, அப்படியிருந்தாலும் இதைக்குறித்து நீ துக்கிப்பதற்கு யோக்கியனன்று. (உகூ)

ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யுர்த்ருவம் ஜந்ம ம்ருதஸ்ய ச ।
தஸ்மாதபரிஹார்யேऽர்தே ந த்வம் ஶோசிதுமர்ஹஸி ॥ உஎ ॥

(ப-ம்.) ஜாதஸ்ய-பிறந்ததற்கு, ம்ருத்யுஃ - அழிவு, த்ருவஃ - நிச்சயம், ம்ருதஸ்யச - அழிவுற்றதற்கு, ஜந்ம த்ருவம்ஹி-பிறப்

பும் நிச்சயமே ? தஸ்மாத் - ஆகையால், அபரிஹார்யே-பரிஹரிக்கத்தகாத, அர்த்தே - விஷயத்தில், த்வம் சோசிதும் - நீ துக்கிப்பதற்கு, நார்ஹஸி - தகாதவனாயிருக்கிறாய். (உஎ)

(தா-ம்.) பிறப்பவனுக்கோ வென்றால் மரணம் நிச்சயம், மரணத்தை அடைந்தவனுக்கும் பிறப்பு நிச்சயம். ஆகையாலே நீ நீக்கத்தகாத விஷயத்தில் துக்கிப்பதற்கு தக்கவனல்லன். (உஎ)

𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌦𑍀𑌨𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑌧𑍍𑌯𑌾𑌨𑌿 𑌭𑌾𑌰𑌤 ।
𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌨𑌿𑌧𑌨𑌾𑌨𑍍𑌯𑍇𑌵 𑌤𑌤𑍍𑌰 𑌕𑌾 𑌪𑌰𑌿𑌦𑍇𑌵𑌨𑌾 ॥ உஅ ॥

(பத-ம்.) ஹே பாரத - ஓ பாண்டவா! பூதாநி - சரீரங்கள், அவ்யக்த ஆதீநி - அறியப்படாத பூர்வ (அவஸ்தையையுடையன), வ்யக்த மத்யாநி - புலப்பட்ட நடுவில் நிலையுடையன, அவ்யக்த நிதநாநி ஏவ - புலப்படாத அழிவுடையனவைகளே! தத்ர-அவ்விஷயத்தில், பரிதேவநா கா - சோக மென்ன? (உஅ)

(தா - ம்.) பரதவம்சத்திற் பிறந்தவனே! இப்படி முடிவாய்ச் சொல்லியிருப்பதால் இப்படித் தெளிந்த உனக்கு அது நிமித்தம் துக்கம் வேண்டியதில்லை. பிராணிகள் மூலப்ரகிருதியிலே, முதலில் உண்டாய், நடுக்காலத்தில் மனுஷ்யாதி சரீரங்களோடு காணப்பட்டுக் கடைசியில் மூலப்ரகிருதியிலேயே மறைந்திருக்கிறதுகள்·அது விஷயத்தில் என்ன துக்கம். (ஸ0-ரா) அவ்யக்தாதீநி - பிறவிக்கு முன் காணப்படாதது. (உஅ)

𑌆𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌵𑌤𑍍𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌕𑌶𑍍𑌚𑌿𑌦𑍇𑌨𑌮𑌾𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌵𑌦𑍍𑌵𑌦𑌤𑌿 𑌤𑌥𑍈𑌵
𑌚𑌾𑌨𑍍𑌯𑌃 । 𑌆𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌵𑌚𑍍𑌚𑍈𑌨𑌮𑌨𑍍𑌯𑌃 𑌶𑍃𑌣𑍋𑌤𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌵𑌾𑌪𑍍𑌯𑍇
𑌨𑌂 𑌵𑍇𑌦 𑌨 𑌚𑍈𑌵 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 ॥ உகூ ॥

(பத-ம்.) ஆச்சர்யவத் - ஆச்சரியம்போல் (இருக்கிற) ஏநம் - இவனை, கச்சித் பச்யதி - ஒருவன் பார்க்கிறான்; ததைவச - அப்படியே, அந்ய: - மற்றொருவன், ஆச்சர்யவத் - ஆச்சிரியமான, (இவனை) வததி - சொல்லுகிறான், ஆச்சர்யவத்-ஆச்சரியம்போலிருக்கும், ஏநம் - இவனை, அந்ய: கச்சித் ஏவ-எவனோ ஒருவன் தான், ச்ருணோதி - கேட்கிறான்; கச்சித் ச - ஒருவனும், ஏநம் - இவனை, ச்ருத்வாபிச - கேட்டும், நவேத ஏவ - அறியவேயில்லை. ()

(தா-ம்.) இந்த ஆத்ம சுவபாவத்தை ஒரு புண்ணியசாலியானவன் ஆச்சரியம்போல் பார்க்கிறான். இந்த ஆதமாவை மற்றொருவன் அயலாருடன் ஆச்சரியம்போலப் பேசுகிறான். அப்படியே வேறொருவனும் ஆச்சரியம்போல்கேட்கிறான். அப்படிக் கேட்டும் இத்தஜீவனை தத்வமாய் அறிந்தவன் ஒருவனுமில்லை. ()

𑌦𑍇𑌹𑍀 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌵𑌧𑍍𑌯𑍋𑌽𑌯𑌂 𑌦𑍇𑌹𑍇 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌭𑌾𑌰𑌤 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌨 𑌤𑍍𑌵𑌂 𑌶𑍋𑌚𑌿𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑌿 ॥ கூ0 ॥

(ப-ம்.) ஹேபாரத - ஓ அர்ச்சுன! ஸர்வஸ்ய தேஹே-எல்லாருடைய தேஹத்திலும், (இருக்கிற) அயம்தேஹீ - இவ்வாத்மா, நித்யம் - எப்போதும், அவத்ய: - கொல்லத்தகுந்தவனல்லன், தஸ்மாத் - ஆகையாலே, ஸர்வாணி பூதாநி ப்ரதி - ஒருப்பிராணிகளைக் குறித்தும், த்வம் சோசிதும்-சோகிக்க, நார்ஹஸி-தகாதவனாயிருக்கிறாய். (௩௦)

(தா-ம்.) ஓ அர்ஜ்ஜுனா! எல்லா சரீரமும் கொல்லப்பட்டபோதிலும் அந்த ஆத்மாவானவன் கொல்லத் தகுந்தவனல்லன். ஆகையால் சகல ப்ராணிகளைக் குறித்து நீ துக்கத்தை யடையவேண்டியதில்லை. (௩௦)

𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌮𑌪𑌿 𑌚𑌾𑌵𑍇𑌕𑍍𑌷𑍍𑌯 𑌨 𑌵𑌿𑌕𑌂𑌪𑌿𑌤𑌮𑌰𑍍𑌹𑌸𑌿 ।
𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌾𑌦𑍍𑌧𑌿 𑌯𑍁𑌦𑍍𑌧𑌾𑌚𑍍𑌛𑍍𑌰𑍇𑌯𑍋𑌽𑌨𑍍𑌯𑌤𑍍𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ॥௩௧॥

(ப-ம்.) ஸ்வதர்மம் - தன் தருமத்தை, அவேக்ஷ்யாபி-பார்த்தும், விகம்பிதும் - சலிக்க, நார்ஹஸி-(உனக்குத்) தகாது, ஹி - ஏனென்றால், க்ஷத்ரியஸ்ய - க்ஷத்திரியனுக்கு, தர்ம்யாத் - நியாயமாய்க்கிடைத்த,யுத்தாத் அந்யத்-யுத்தத்தைவிட வேறு, ஶ்ரேய: நவித்யதே - நன்மை யில்லை. (௩௧)

(தா-ம்.) நீ, உன் க்ஷத்திரிய தர்மத்தை ஆலோசித்து நடுங்க யோக்கியனல்ல, க்ஷத்திரியனுக்குத் தர்மமாயிருக்கிற யுத்தத்தைக் காட்டிலும் வேறு ச்ரேயஸ்ஸு இல்லை. (௩௧)

𑌯𑌦𑍃𑌚𑍍𑌛𑌯𑌾 𑌚𑍋𑌪𑌪𑌨𑍍𑌨𑌂 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌦𑍍𑌵𑌾𑌰𑌮𑌪𑌾𑌵𑍃𑌤𑌮𑍍 ।
𑌸𑍁𑌖𑌿𑌨𑌃 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌲𑌭𑌨𑍍𑌤𑍇 𑌯𑍁𑌦𑍍𑌧𑌮𑍀𑌦𑍃𑌶𑌮𑍍 ॥௩௨॥

(ப-ம்.) ஹே பார்த்த - ஓ அருச்சுன! யத்ருச்சயா - ப்ரயத்நமில்லாமலே, உபபந்நம் - வந்ததும், அபாவ்ருதம்-திறந்திருக்கிற, ஸ்வர்க த்வாரம் - சுவர்க்க வழியாயிருக்கின்ற, ஈத்ருசம் யுத்தம்-இவ்விதப்போரை, ஸுகிந:-பாக்யவான்களான, க்ஷத்ரியா: - க்ஷத்திரியர்கள், லபந்தே - அடைகின்றார்கள். (௩௨)

(தா-ம்.) ஓ அர்ஜ்ஜுனா! தானாய் வந்தும் திறக்கப்பட்ட ஸ்வர்க்கத்து வழியாயிருக்கிற இந்த யுத்தத்தை, சுகிகளாயிருக்கிற க்ஷத்திரியர்கள் அடைவார்கள். (௩௨)

𑌅𑌥 𑌚𑍇𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌿𑌮𑌂 𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌂 𑌸𑌂𑌗𑍍𑌰𑌾𑌮𑌂 𑌨 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑌸𑌿 ।
𑌤𑌤𑌃 𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌂 𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌂 𑌚 𑌹𑌿𑌤𑍍𑌵𑌾 𑌪𑌾𑌪𑌮𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑌿 ॥௩௩॥

(ப-ம்.) அத - இல்லாவிட்டால், த்வம் - நீ, தர்ம்யம்-நியாயமாய்க் கிடைத்த, இமம் ஸங்க்ராமம் - இந்த யுத்தத்தை, நகரிஷ்யஸி சேத் - செய்யா யாகில், தத: - அக்காரணத்தால், ஸ்வதா

மம் - தன் தருமத்தையும், கீர்திம் ச - கீர்த்தியையும், ஹித்வா - விட்டு, பாபம்-பாவத்தை, அவாப்ஸ்யஸி-அடையப்போகிறாய்.

(தா-ம்.) இனியாவது நீ தர்மத்தால் வந்திருக்கிற இந்த யுத்தத்தைப்பண்ணாமல் போவாயேயாகில், பிறகு உன் தர்மத்தையும் கீர்த்தியையும் போக்கடித்துக்கொண்டு பாபத்தை அடைவனாவாய். (௩௩)

அகீர்த்திம் சாபி பூதாநி கதயிஷ்யந்தி தேऽவ்யயாம் ।
ஸம்பாவிதஸ்ய சாகீர்த்திர் மரணாததிரிச்யதே ॥ ௩௪ ॥

(ப-ம்.) (கிம்) ச - மேலும், பூதாநி-பிராணிகள், தே - உனக்கு, அவ்யயாம் - அழிவில்லாத, அகீர்திம் ச - அபயசஸ்ஸையும், கதயிஷ்யந்தி - சொல்லப்போகின்றன; ஸம்பாவிதஸ்யச-எல்லாம் நேர்ந்திருக்கிற (புருஷனுக்கோ), அகீர்த்திః - அபகீர்த்தியானது, மரணாத் - மரணத்தைக் காட்டிலும், அதிரிச்யதே - அதிகமானது. (௩௪)

(தா-ம்.) க்ஷத்திரிய தர்மத்தை விடுகிறதால் உனக்கு அதிகமான அபகீர்த்தியை சகல ப்ராணிகளும் சொல்லுவார்கள். அப்படிப்பட்ட அபகீர்த்தியானது மரணத்தைக் காட்டிலும் அதிகம் (௩௪)

பயாத்ரணாதுபரதம் மம்ஸ்யந்தே த்வாம் மஹாரதாః ।
யேஷாம் ச த்வம் பஹுமதோ பூத்வா யாஸ்யஸி லாகவம் ॥ ௩௫ ॥

(ப-ம்.) மஹாரதாః-மகாரதர்களான (கர்ணாதிகள்,) த்வாம் - உன்னை, பயாத் - பயத்தினால், ரணாத் - யுத்தத்தினின்றும், உபரதம் - கைவாங்கினதாக, மம்ஸ்யந்தே - நினைப்பார்கள்; த்வம்-நீயோ, யேஷாம்-இந்த (கர்ணாதிகளுக்கு) பஹுமதః - வெகுமதிக்கப்பட்டவனாயிருந்து, லாகவம் - (இப்பொழுது) இலேசான தன்மையை, யாஸ்யஸி - அடையப்போகிறாய். (௩௫)

(தா-ம்.) கர்ணன் முதலானவர்களால் நீ பஹுமானம் பண்ணப்பட்டவனாக இருந்து, இப்படி அல்பஸ்வபாவத்தை அடைவாயேயாகில், அந்த மஹாரதர்கள் உன்னைச் சண்டையிலிருந்து பயத்தால் மறைந்தவனாக நினைப்பார்கள். (௩௫)

அவாச்யவாதாம்ஶ்ச பஹூந் வதிஷ்யந்தி தவாஹிதாః ।
நிந்தந்தஸ்தவ ஸாமர்த்யம் ததோ து:கதரம் நு கிம் ॥ ௩௬ ॥

தவ அஹிதாః - உன் சத்துருக்கள், தவ ஸாமர்த்யம் - உன் சாமர்த்தியத்தை, நிந்தந்தః - நிந்திப்பவர்களாய், பஹூந் - அனேகமான, அவாச்ய வாதாந் - சொல்லத்தகாத வார்த்தைகளை, வதி

ஷ்யந்தி - சொல்லப்போகிறார்கள், தத꞉ - அதைக்காட்டிலும், து꞉கதரம் கிந்நு - அதிகதுக்கதரம் என்ன இருக்கிறது? (௩௬)

(தா-ம்.) உன்னுடைய சத்ருருக்கள், உன் சாமர்த்யத்தை சிந்தித்து, அதிகமாகத் தூஷணைகளைச் சொல்லுவார்கள். அதைக் காட்டிலும் உனக்குத் துக்கமானது என்னயிருக்கிறது? (௩௬)

𑌹𑌤𑍋 𑌵𑌾 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑌿 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌂 𑌜𑌿𑌤𑍍𑌵𑌾 𑌵𑌾 𑌭𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍇 𑌮𑌹𑍀𑌮𑍍।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍁𑌤𑍍𑌤𑌿𑌷𑍍𑌠 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌯𑍁𑌦𑍍𑌧𑌾𑌯 𑌕𑍃𑌤𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌃 ॥௩௭॥

(ப-ம்.) ஹே கௌந்தேய-ஓ குந்தியின் மைந்த! ஹத꞉ வா - கொல்லப்பட்டாயாகிலும், ஸ்வர்கம் - சுவர்க்கத்தை, ப்ராப்ஸ்யஸே - அடைவாய்; ஜித்வா வா-ஜெயித்தா யாகிலும், மஹீம் போக்ஷ்யஸே - பூமியை அனுபவிக்கப்போகிறாய், தஸ்மாத் - ஆகையாலே, க்ருத நிச்சய꞉ (நிச்சயம் க்ருத்வா) - (நீ) நிச்சயம் பண்ணிக்கொண்டு, யுத்தாய உத்திஷ்ட - யுத்தம் செய்ய வெழுந்திரு (௩௭)

(தா-ம்.) ஓ அர்ஜுனா! மரணத்தை யடைந்தாலும் வீரஸ்வர்க்கத்தை யடைவாய். ஜெயித்தாலும் பூமியை யாளுவாய். ஆகையால் யுத்தத்தில் பிடிவாதமுள்ளவனாய் எழுந்திரு. (௩௭)

𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑍇 𑌸𑌮𑍇 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌲𑌾𑌭𑌾𑌲𑌾𑌭𑍌 𑌜𑌯𑌾𑌜𑌯𑍌 ।
𑌤𑌤𑍋 𑌯𑍁𑌦𑍍𑌧𑌾𑌯 𑌯𑍁𑌜𑍍𑌯𑌸𑍍𑌵 𑌨𑍈𑌵𑌂 𑌪𑌾𑌪𑌮𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑌿 ॥௩௮॥

(ப-ம்.) ஸுகதுக்கே-சுகதுக்கங்களை, ஸமே க்ருத்வா - ஸமமாகச் செய்து, லாபா லாபௌ - லாபாலாபங்களையும், ஜயா ஜயௌ - ஜயா ஜயங்களையும், (ஸமௌ க்ருத்வா)-சமமாக வெண்ணி, தத꞉-அதன்பிறகு, யுத்தாய - யுத்தத்தின் பொருட்டு, யுஜ்யஸ்வ - கூடு; ஏவம் - இப்படியானால், பாபம் - பாவத்தை, ந அவாப்ஸ்யஸி - அடையமாட்டாய். (௩௮)

(தா-ம்.) சுகதுக்கங்களையும், லாபநஷ்டங்களையும், ஜயாபஜயங்களையும், சரியாகச்செய்து அதின் பிறகு யுத்தம் செய்வதற்காக பிரயத்தனப்படு. இப்படிச் செய்யும்பக்ஷத்தில் பாபத்தை அடையமாட்டாய். (௩௮)

𑌏𑌷𑌾 𑌤𑍇𑌽𑌭𑌿𑌹𑌿𑌤𑌾 𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑍇 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌯𑍋𑌗𑍇 𑌤𑍍𑌵𑌿𑌮𑌾𑌂
𑌶𑍃𑌣𑍁। 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌯𑌯𑌾 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌕𑌰𑍍𑌮𑌬𑌨𑍍𑌧𑌂 𑌪𑍍𑌰𑌹𑌾
𑌸𑍍𑌯𑌸𑌿 ॥ ௩௯ ॥

(ப-ம்.) ஹே பார்த்த-ஓ அர்ச்சுனா! ஸாங்க்யே-ஸாங்க்யத்திலுள்ள (ஆத்ம) விஷயத்தில், ஏஷா புத்தி꞉ - இதுவரையிலும் சொன்ன புத்தியானது, தே-உனக்கு, அபிஹிதா - சொல்லப்பட்டது. யோகே - (கர்ம) யோகவிஷயத்தில், இமாம் - இந்த (புத்தி

யை), ச்ருணு-கேள்; யயா புத்யா-யாதொரு(அந்த) புத்தியோடு, யுக்த:த்வம்-கூடினு (யாகில்) நீ, கர்ம பந்தம் - கர்மத்தால் வரும் ஸம்ஸாரத்தை, ப்ரஹாஸ்யஸி - விட்டுவிடுவாய். (௩௯)

(தா-ம்.) ஓ அர்ஜுநனே! இந்தப் புத்தியானது ஸாங்கியத்தில் சொல்லப்பட்டது. யாதொரு புத்தியோடு கூடினவனாய் கர்மத்தாலுண்டான கட்டை விடப்போகிறாயோ, அப்பேர்க்கொற்ற யோகவிஷயமாகிய புத்தியைக்கேள். (௩௯)

நேஹாபிக்ரமநாஶோऽஸ்தி ப்ரத்யவாயோ ந வித்யதே ।
ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத் ॥ ௪௦ ॥

(ப-ம்.) இஹ - இதில் (கர்மயோகத்தில்) அபிக்ரம நாச:- ஆரம்ப மாத்திரத்திற்கும் அழிவு, நாஸ்தி - இல்லை, (இடையில் விட்டாலும்), ப்ரத்யவாய:-தோஷமும், நவித்யதே-இல்லை; அஸ்ய தர்மஸ்ய - இந் தருமத்தினுடைய, ஸ்வல்பம் அபி - அற்பமாக மும், மஹத: பயாத் - பெரும் பயத்தினின்றும், த்ராயதே - காப்பாற்றும். (௪௦)

(தா-ம்.) இந்தக் கர்மயோக விஷயத்திலே, ஆரம்பித்து நிர்விக்கினமில்லாமல் போனாலும் பாதகமில்லை. அதனால் தோஷமில்லை; இந்தக் கர்மயோகத்தினுடைய ஸ்வல்பபாகங்கூட அதிகப்பட்ட பயத்தில் நின்றும் ரக்ஷிக்கிறது. (௱௦) இந்தக் கர்மயோகமானது செய்யும் வரைக்கும் லாபம். முடியாத பக்ஷத்தில் பாதகமில்லை. (௪௦)

வ்யவஸாயாத்மிகா புத்திரேகேஹ குருநந்தந ।
பஹுஶாகா ஹ்யனந்தாஶ்ச புத்தயோऽவ்யவஸாயிநாம் ॥ ௪௧ ॥

(ப-ம்.) ஹே குருநந்தந - ஓ குருநந்தனு! இஹ - இதில் (கர்மயோகத்தில்), வ்யவஸாயாத்மிகா - நிச்சயரூபமான, புத்தி:- புத்தியானது, ஏகா ஏவ - ஒரேவிதம்; அவ்யவ ஸாயிநாம் - (ஆத்மஸ்வரூப) நிச்சயமில்லாதவருடைய, புத்தய:-புத்திகளோ, பஹு சாகா: - அனேகப் பிரகாரங்கள், அநந்தாஸ்ச - முடிவில்லாதனவுமாயிருக்கின்றன. (௪௧)

(தா-ம்.) வாராய் குருநந்தனனே! இந்தக் கர்மயோகத்தில் நித்திய கர்மமென்றும், காம்ய கர்மமென்றும் இரண்டு பாகமுண்டு. இதுகளில் பரமாத்மா சுதந்திரனென்றும், ஜீவாத்மா தாஸனென்றும், பரமாத்மாவினுடைய கைங்கரியமே ஜீவனுக்குப் புருஷார்த்தமென்றும், நிச்சியமாகிற வ்யவசாயமென்று சொல்லப் படுகின்ற முன்சொன்ன ஜீவபரமாத்மா விவேக மில்லாமையால் ஸ்வர்க்காதிகளான பலன்களைக்கோருகின்ற ஜீவவர்க்கங்களுடைய புத்தி விசேஷங்கள், பல பேதங்களாலே அநேகமுகங்களாகவும்,

அதிகமாகவுமிருக்கு மாகையால் இவ்விரண்டு கர்மங்களில் காமிய கர்மங்களைக் காட்டிலும் யோக்ஷகரமான நித்திய கர்மங்களே ஸ்ரேஷ்டம். (ஸப) பரமாத்மா ஜீவாத்மா ஒன்று. (௪௧)

யா மிமாம் புஷ்பிதாம் வாசம் ப்ரவதந்த்யவிபஸ்சித꞉।
வேதவாதரதா꞉ பார்த்த நான்யதஸ்தீதி வாதிந꞉ ॥௪௨॥

காமாத்மாந ஸ்வர்க்கபரா ஜந்மகர்மபலப்ரதாம் ।
க்ரியாவிஶேஷபஹுலாம் போகைஶ்வர்யகதிம் ப்ரதி ॥௪௩॥

போகைஶ்வர்யப்ரஸக்தாநாம் தயாபஹ்ருதசேதஸாம் ।
வ்யவஸாயாத்மிகா புத்தி꞉ ஸமாதௌ ந விதீயதே ॥௪௪॥

(ப-ம்.) ஹே பார்த்த ! - ஓ பார்த்தனே ! வேத வாதரதா꞉ - வேதவாக்யங்களில் ஆஸக்தியுள்ளவர்களும், காம ஆத்மாந꞉ - காம (புருஷார்த்த)த்தில் மனமுள்ளவர்கள், ஸ்வர்கபரா꞉ - சுவர்க்கத்தில் நாட்ட மூடையராய், அந்யத் நாஸ்தி - வேறு இல்லை, இதி வாதிந꞉ - என்று வாது செய்துக்கொண்டு, அவிபச்சித꞉ - அற்பமதிகளா (கையால்), போக ஐசுவர்ய கதிம் பிரதி - (சுவர்க்கா) னுபவ ஐசுவரிய கதியைக்குறித்து, புஷ்பிதாம் - பூத்துமாத்திரமிருக்கின்ற, ஜந்ம கர்ம பல ப்ரதாம் - பிறப்பென்னும் கருமபலத்தைத் தருகின்றதாய், க்ரியா விசேஷ பஹுளாம் - கருமவிசேஷத்தால் பிரசுரமாயிருக்கின்ற, யாம் இமாம் வாசம் - யாதொரு இந்த வாக்கை, ப்ரவதந்தி - சொல்லுகிறார்களோ, தயா - அந்த வாக்கினால், அபஹ்ருத சேதஸாம் - அபஹரிக்கப்பட்ட மனதையுடையரும், போக ஐசுவர்ய ப்ரஸக்தாநாம் - (சுவர்க்கமுதலியவற்றை) அநுபவிப்பமென்கிற ஐசுவரியத்தில் ஆஸக்தியுள்ளவர்களுடைய (ஜனங்களின்), ஸமாதௌ - மனதில், வ்யவஸாயாத்மிகா - நிச்சயரூபமான, புத்தி꞉ - புத்தியானது, நவிதீயதே - உண்டாகிறதில்லை. (௪௨-௪௩-௪௪)

(தா-ம்.) ஓ ! அர்ஜ்ஜுனா ! வேதத்தில் பலனைச் சொல்லுகிற முக்கியமான அர்த்தவாதத்தில் ப்ரீதியுடையவர்களும், வேறே விசேஷ பலனில்லை என்று சொல்லுகிறவர்களும், ஸ்வர்க்கமே மேலான ப்ரயோஜனமென்று எண்ணியிருக்கிறவர்களுமாகிய அவிவேகிகள், பிறப்பையும் கர்மத்தையும் கொடுக்கிறதாயும், அதிக வ்யாபாரத்தையுடைய போகைஸ்வர்யங்களைக் குறித்து, எந்த வார்த்தையைப் பேசுகிறார்களோ, அந்த வார்த்தையால் அபகரிக்கப்பட்ட மனதையுடையவர்களும், போகத்திலாசையுள்ளவர்களுமிட வ்யவசாய ரூபமான புத்தியானது, யோகத்தில் வைக்கப்படமாட்டாது. (ஸப-ரா.) ஸமாதௌ - அந்தக் காரணத்தில். (௪௨-௪௩-௪௪)

𑌤𑍍𑌰𑍈𑌗𑍁𑌣𑍍𑌯𑌵𑌿𑌷𑌯𑌾 𑌵𑍇𑌦𑌾 𑌨𑌿𑌸𑍍𑌤𑍍𑌰𑍈𑌗𑍁𑌣𑍍𑌯𑍋 𑌭𑌵𑌾𑌰𑍍𑌜𑍁𑌨 ।
𑌨𑌿𑌰𑍍𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑍍𑌥𑍋 𑌨𑌿𑌰𑍍𑌯𑍋𑌗𑌕𑍍𑌷𑍇𑌮 𑌆𑌤𑍍𑌮𑌵𑌾𑌨𑍍 ॥௪௫॥
𑌯𑌾𑌵𑌾𑌨𑌰𑍍𑌥 𑌉𑌦𑌪𑌾𑌨𑍇 𑌸𑌰𑍍𑌵𑌤𑌃 𑌸𑌂𑌪𑍍𑌲𑍁𑌤𑍋𑌦𑌕𑍇 ।
𑌤𑌾𑌵𑌾𑌨𑍍𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌵𑍇𑌦𑍇𑌷𑍁 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌸𑍍𑌯 𑌵𑌿𑌜𑌾𑌨𑌤𑌃 ॥௪௬॥

(ப-ம்.) வேதா: - வேதங்கள், த்ரைகுண்ய விஷயா:-ஸத்வரஜஸ்தமோ குணங்கள் விஷயமானவைகள்; ஹே அர்ஜுந - ஓ அர்ச்சுனு !, த்வம்து - நீயோ, நிஸ் த்ரைகுண்ய: - முக்குணங்களு மற்றவனாய், பவ-ஆகு; நிர் த்வந்த்வ: - (சீதம் உஷ்ணம் முதலிய) துவந்துவ மற்றவனாய், (பவ) - ஆகு; நித்ய ஸத்வ ஸ்த்த: - நித்தியமும் ஸத்துவகுணத்தில் இருந்து, நிர் யோக க்ஷேம: - யோக க்ஷேமங்க ளற்று, ஆத்மவாந் - ஆத்மஸ்வரூபத்தைத் தேடிக் கொண்டிரு, ஸர்வதா - முழுதும், ஸம்ப்லுத உதகே - நிறைந்த நீர்கொண்ட, உதபாநே - கிணறு ஜலஸ்த்தானத்தில், யாவாந் அர்த்த: - (ஸ்நாநமெடுத்தவனுக்கு) எவ்வளவுப் பிரயோஜனமோ, (அப்படி) உண்டாகிறது, ஸர்வேஷு வேதேஷு, எல்லா வேதங்களிலும், விஜாநத:-ஞானியான (மோக்ஷார்த்தியான), ப்ராம்ஹணஸ்ய-ப்ரஹ்மஜ்ஞானநிஷ்டனுக்கு,ப்ரதி-உண்டாகிறது. (௪௫-௪௬)

(தா-ம்.) ஹே ! அர்ஜ்ஜுனு ! வேதங்கள் மாயா விஷயமாயிருக்கிறதுகள். நீமாயா ஸ்வரூபத்தைவிட்டு, ஸத்வகுணத்தை யடைந்து, சுகதுக்கங்களைவிட்டு, யோகக்ஷேம மில்லாதவனாயும், ஸத்வஸ்வரூபத்தை யடைந்தவனாயு மாகக்கடவாய். நாலுபக்கத்திலும் ஜலத்தால் நிறைந்தகிணற்றில் எவ்வளவு பிரயோஜனமோ, தெரிந்த பிராம்மணனுக்கு எல்லா வேதங்களிலேயும் அவ்வளவு தான் பிரயோஜனம். (௪௫-௪௬)

𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑍇𑌵𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑌸𑍍𑌤𑍇 𑌮𑌾 𑌫𑌲𑍇𑌷𑍁 𑌕𑌦𑌾𑌚𑌨 ।
𑌮𑌾 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌹𑍇𑌤𑍁𑌰𑍍𑌭𑍂𑌰𑍍𑌮𑌾 𑌤𑍇 𑌸𑌙𑍍𑌗𑍋𑌽𑌸𑍍𑌤𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 ॥௪௭॥

(ப-ம்.) தே - (மோக்ஷார்த்தியான) உனக்கு, கர்மணி ஏவ - கர்மஸ்வரூப மாத்திரத்திலே, அதிகார: - அதிகாரம், பலேஷு - பலங்களில், கதாசந - ஒருக்காலும், மா - வேண்டாம், கர்ம பல ஹேது: - கருமத்துக்கும் பலத்துக்கும் ஹேதுவாக, மாபூ: - ஆகாதே; அகர்மணி - கர்மம் செய்யாமலிருப்பதில், தே ஸங்க: - உனக்கு ஸம்பந்தம், மாஸ்து - வேண்டாம். (௪௭)

(தா-ம்.) முமுக்ஷுவான உனக்கு உன்னுடைய க்ஷத்திரிய ஜாதிக்குரிய கர்மங்களில், அதிகாரமே தவிர, அந்த கர்ம பலங்களில் ஒருக்காலும் அதிகாரமில்லை. கர்ம பலங்களுக்கு காரணனாகாதே யுத்தம் செய்யா விஷயத்தில் ஸங்கத்தை விட்டுவிடு. (௪௭)

𑌯𑍋𑌗𑌸𑍍𑌥𑌃 𑌕𑍁𑌰𑍁 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌸𑌙𑍍𑌗𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌧𑌨𑌞𑍍𑌜𑌯 ।
𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑍋𑌃 𑌸𑌮𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌸𑌮𑌤𑍍𑌵𑌂 𑌯𑍋𑌗 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥௪௮॥

(ப-ம்.) ஹே தநஞ்சய - ஓ அர்ச்சுநா! ஸங்கம் த்யக்த்வா - அபிமானத்தைவிட்டு, ஸித்தி அஸித்யோ:-(பல) ஸித்தியிலும் அஸித்தியிலும், ஸம: பூத்வா - ஸமமாயிருந்து, யோக ஸ்த்த: - யோக நிஷ்டனாய்க்கொண்டு, கர்மாணி குரு-கருமங்களைச்செய், ஸமத்வம் - ஸமமாயிருப்பதே, யோக: (இதி) உச்யதே - யோகமென்று சொல்லப்படும். (௪௮)

(தா-ம்.) ஓ! அர்ஜ்ஜுனா! பற்றைவிட்டு ஸித்தித்தாலும் ஸித்திக்காமல் போனபோதிலும் இதுகளில் சமமாகி, யோகத்திலிருந்து கர்மங்களைச் செய். ஸமமாயிருக்கிற தன்மையானது, யோகமாக சொல்லப்படுகிறது. (௪௮)

𑌦𑍂𑌰𑍇𑌣 𑌹𑍍𑌯𑌵𑌰𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍋𑌗𑌾𑌦𑍍𑌧𑌨𑌞𑍍𑌜𑌯 ।
𑌬𑍁𑌦𑍍𑌧𑍌 𑌶𑌰𑌣𑌮𑌨𑍍𑌵𑌿𑌚𑍍𑌛 𑌕𑍃𑌪𑌣𑌾𑌃 𑌫𑌲𑌹𑍇𑌤𑌵𑌃 ॥௪௯॥

(ப-ம்.) ஹேதநஞ்சய! - ஓ அர்ச்சுநா!, புத்தியோகாத் - சமத்வ புத்தியுடன் கூடிய (கருமத்) தைக்காட்டிலும், கர்ம-(காமிய) கருமமானது, தூரேண அவரம்-மிகவும் இழிவானது, அத:- ஆகையால், புத்தௌ-ஜ்ஞாநத்தில், சரணம் அந்விச்ச-ரக்ஷகத்தை கோரு, பல ஹேதவ: - பலத்துக்கு ஹேதுவானவர்கள், க்ருபணா: - ஸம்ஸாரிகளாவார். (௪௯)

(தா-ம்.) ஓ! அர்ஜ்ஜுனா! ஸமரூபமான புத்தியோகத்தாலுண்டாகிய கர்மத்தைக் காட்டிலும் மற்றக் கர்மம் மிகவும் தாழ்ந்தது; புத்தியோகத்தாலுண்டான கர்மம், ஸம்ஸார துக்கத்தைப்போக்கி மோக்ஷத்தையடையச் செய்கிறது. மற்றொருகர்மம், ஸம்ஸாரத்தை யுண்டுபண்ணுகிறது. ஆகையால் மோக்ஷாபயோகியான புத்தியோகத்தை உடையவனைக்கெடுக்கின்ற கர்மங்களைச் செய்யாதே. (௪௯)

𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌜𑌹𑌾𑌤𑍀𑌹 𑌉𑌭𑍇 𑌸𑍁𑌕𑍃𑌤𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑍇 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌯𑍋𑌗𑌾𑌯 𑌯𑍁𑌜𑍍𑌯𑌸𑍍𑌵 𑌯𑍋𑌗𑌃 𑌕𑌰𑍍𑌮𑌸𑍁 𑌕𑍌𑌶𑌲𑌮𑍍 ॥௫௦॥

(ப-ம்.) புத்தி யுக்த: - புத்தியுடன் கூடியவன், இஹ - இந்த (ஜன்மத்தில்) ஸுக்ருத துஷ்க்ருதே உபே - புண்ணியம் பாவம் இரண்டையும், ஜஹாதி-விடுகிறான்; தஸ்மாத்-ஆகையால், யோகாய-(முன் சொன்ன புத்தி) யோகத்துக்காக, யுஜ்யஸ்வ - யத்தினம் செய்; யோக:-யோகந்தான், கர்மஸு-கருமங்களில், கௌசலம் - ஸாமர்த்தியம். (௫௦)

(தா-ம்.) புத்தியோகத்தோடு கூடியவனுப் கருமத்தைச் செய்பவன் புண்ணியபாவங்கள் இரண்டையும் விடுகிறானாக

யால், புத்தியோகத்திற்காக யத்தனம்பண்ணு. கருமங்கள் (௫௦) ஸ்வதர்மமாகிய கர்மங்கள் செய்து வரும்போது இந்தப் புத்தி யோகமானது, மிகவும் ஸாமர்த்தியத்தினால் ஸாதிக்கத்தக்கது. ()

𑌕𑌰𑍍𑌮𑌜𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌾 𑌹𑌿 𑌫𑌲𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌮𑌨𑍀𑌷𑌿𑌣𑌃 ।
𑌜𑌨𑍍𑌮𑌬𑌨𑍍𑌧𑌵𑌿𑌨𑌿𑌰𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌪𑌦𑌂 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑍍𑌯𑌨𑌾𑌮𑌯𑌮𑍍 ॥ ௫௧ ॥

(ப-ம்.) மநீஷிணஃ - ஞானிகள், புத்தி யுக்தாஃ - (முன்சொன்ன) புத்தியுடன்கூடி, கர்ம ஜம் - கர்மத்தாலுண்டான, பலம் த்யக்த்வா - பலனைவிட்டு, ஜந்ம பந்த விநிர்முக்தாஃ - ஜந்மமென்கிற பந்தத்தால் விடுபட்டவர்களாய், அநாமயம்-உபத்திரவ மற்ற, பதம் கச்சந்தி - பதவியை அடைகின்றார்கள். (௫௧)

(தா-ம்.) புத்தியோகத்தையுடைய பண்டிதர்கள், கர்மத்தாலுண்டாகும் பயனை விட்டு, ஜநநமரண ரூபமான ஸம்ஸாரத்தைக் கடந்தவர்களாய், துக்கமில்லாத மோக்ஷத்தை அடைகிறார்கள். (௫௧)

𑌯𑌦𑌾 𑌤𑍇 𑌮𑍋𑌹𑌕𑌲𑌿𑌲𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌵𑍍𑌯𑌤𑌿𑌤𑌰𑌿𑌷𑍍𑌯𑌤𑌿 ।
𑌤𑌦𑌾 𑌗𑌨𑍍𑌤𑌾𑌸𑌿 𑌨𑌿𑌰𑍍𑌵𑍇𑌦𑌂 𑌶𑍍𑌰𑍋𑌤𑌵𑍍𑌯𑌸𑍍𑌯 𑌶𑍍𑌰𑍁𑌤𑌸𑍍𑌯 𑌚 ॥ ௫௨ ॥

(ப-ம்.) யதா - எப்பொழுது, தே - உனக்கு, புத்திஃ - மனதானது, மோஹ கலிலம் - மோஹ (மென்னும்) தோஷத்தை, வ்யதிதரிஷ்யதி - தாண்டுகிறதோ, ததா - அப்பொழுது, ஸ்ருதஸ்ய-கேட்டதற்கும், ஸ்ரோதவ்யஸ்யச-கேட்கவேண்டிய அர்த்தத்துக்கும், நிர்வேதம் - வைராக்கியத்தை, கந்தா அஸி-அடைவாய். (௫௨)

(தா-ம்.) இவ்விதமான கர்மத்திலிருக்கின்ற உன் புத்தியானது, எப்பொழுது யோகத்தாலுண்டாகிய கலக்கத்தை விடுகிறதோ, அப்பொழுதுதான் எம்மிடத்தில் இதுவரையிலும் கேட்டதாயும், இனி கேட்கப்போகிறதுமான, அம்சத்தில் நீ தானாகவே வைராக்கியத்தை அடைவாய். (௫௨)

𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌵𑌿𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌨𑍍𑌨𑌾 𑌤𑍇 𑌯𑌦𑌾 𑌸𑍍𑌥𑌾𑌸𑍍𑌯𑌤𑌿 𑌨𑌿𑌶𑍍𑌚𑌲𑌾 ।
𑌸𑌮𑌾𑌧𑌾𑌵𑌚𑌲𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌸𑍍𑌤𑌦𑌾 𑌯𑍋𑌗𑌮𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑌿 ॥ ௫௩ ॥

(ப - ம்.) ஸ்ருதி விப்ரதிபந்நா - (என்னிடத்தில்) கேட்பதனால் மிகவும் தெளிவுற்றதாய், அசலா-ஏகரூபமாயிருக்கிற, தே புத்திஃ - உன் புத்தியானது, ஸமாதௌ-மனதில், யதா நிச்சலா - எப்பொழுது அசைவுறாமல், ஸ்தாஸ்யதி-நிலைக்கின்றதோ, ததா - அப்பொழுது, யோகம்-ஆத்மஜ்ஞானத்தை, அவாப்ஸ்யஸி- அடைவாய். (௫௩)

(தா-ம்.) (எமது) உபதேசத்தால் விசேஷமாய் ஸம்சய மார்த்தத்தை அறிந்து, ஒரே ரூபமாயிருக்கிற உன் புத்தியானது எப்பொழுது மனஸ்ஸில் ஆசையில்லாமல் நிற்கிறதோ அப்பொழுது ஆத்மக்ஞானமாகிய யோகத்தை அடைவாய். (௫௩)

அர்ச்சுனன் சொல்லுகிறான்.

ஸ்திதப்ரஜ்ஞஸ்ய கா பாஷா ஸமாதிஸ்தஸ்ய கேஶவ ।
ஸ்திததீ: கிம் ப்ரபாஷேத கிமாஸீத வ்ரஜேத கிம் ॥ ௫௪ ॥

(ப-ம்.) ஹே கேசவ - வாரீர் கேசவனே, ஸமாதிஸ்தஸ்ய - ஸமத்திருக்கிற, ஸ்திதப்ரஜ்ஞஸ்ய-ஸ்திதப்ரக்ஞனுக்கு, கா பாஷா- என்ன பெயர்? ஸ்திததீ:, நிச்சலப் பிரக்ஞையுள்ளவன், கிம் ப்ரபாஷேத - என்ன பேசுவான்? கிம் ஆஸீத - எப்படி ஆஸனமாகக்கொள்ளுவன்? கிம் வ்ரஜேத-என்னமாய் நடப்பன்? (௫௪)

(தா-ம்.) ஓ கேசவா! யோகத்திலிருக்கும் நிலைத்த புத்தியையுடையவனுக்கு என்ன குறிகள்? நிலைத்த புத்தியையுடையவன் எப்படிப்பேசுவன்? எப்படி யிருப்பன்? எப்படி நடப்பன்? (௫௪)

ஸ்ரீபகவான் சொல்லுகிறார்.

ப்ரஜஹாதி யதா காமாந் ஸர்வாந் பார்த மநோகதாந் ।
ஆத்மந்யேவாத்மநா துஷ்ட: ஸ்திதப்ரஜ்ஞஸ்ததோச்யதே ॥ ௫௫ ॥

(ப-ம்.) ஹே பார்த்த - ஓ அர்ச்சுனா, ஆத்மநா - மனதினால், ஆத்மநி ஏவ - தனக்குள் தானே, துஷ்ட: - ஸந்துஷ்டி யடைந்தவனாய், மனோ கதாந் - மனதிலுள்ள, ஸர்வாந் காமாந் - ஸமஸ்தமான காமங்களை, யதா ப்ரஜஹாதி - எப்பொழுது விடுகிறானோ, ததா - அப்பொழுது, ஸ்திதப்ரஜ்ஞ: இதி உச்யதே - சலிக்காத ப்ரஜ்ஞை யுள்ளவனென்று, என்று சொல்லப்படுகிறான். (௫௫)

(தா-ம்.) வாராய்! அர்ச்ஜுனா! எவன் எப்பொழுது மனதினால் ஆத்மக்ஞானத்தை அறிந்து சந்தோஷத்தை யுடையவனாய், மனதி லிருக்கிற எல்லாக்காமங்களையும் விடுகிறானோ, அவன் அப்பொழுது நிலைபெற்ற புத்தியை யுடையவனாகச் சொல்லப் படுகிறான். (௫௫)

து:கேஷ்வநுத்விக்நமநா: ஸுகேஷு விகதஸ்ப்ருஹ: ।
வீதராகபயக்ரோத: ஸ்திததீர்முநிருச்யதே ॥ ௫௬ ॥

(ப-ம்.) து:கேஷு-துக்கங்களில், அநுத்விக்நமநா:-க்லேசாபத்தையடையத்தான மனமுடையனாய், ஸுகேஷு - இன்பங்களில், விகத ஸ்ப்ருஹ: - ஆசையற்று, வீதராகபய க்ரோத: - ரா

கம் பயம் கோபம் அற்றவனாய், முநி: - (ஆத்மாவை) மனனஞ் செய்பவன், ஸ்திர தீ: உச்யதே - ஸ்திரதீ யென்னப்படுவான். ()

(தா-ம்.) துக்கங்களில் கலங்காத மனதை யுடையவனும், சுகங்களில் ஆசையற்றவனும், இராகத்வேஷ பயங்களைத் துறந்தவனுமாகிய புருஷன், நிலைத்த புத்தியையுடைய முனியாகச் சொல்லப்படுகிறான். (௫௬)

யஸ்ஸர்வத்ராநபிஸ்நேஹஸ்தத்தத்ப்ராப்ய ஶுபாஶுபம் ।
நாபிநந்ததி ந த்வேஷ்டி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ॥ ௫௭ ॥

(ப-ம்.) ய: எவன், ஸர்வத்ர - ஸமஸ்த வஸ்துக்களிலும், அநபிஸ்நேஹ: - அதிகச் சினேக பற்றவனோ? தத் தத் சுபா சுபம் - அந்தந்த சுபா சுபத்தை, ப்ராப்ய - அடைந்து, நாபிநந்ததி - சந்தோஷிக்கமாட்டானோ, ந த்வேஷ்டி - த்வேஷிக்கமாட்டானோ, தஸ்ய - அவனுக்கு, ப்ரஜ்ஞா - பிரக்ஞையானது, ப்ரதிஷ்டிதா - நிலைபெற்றதாம். (௫௭)

(தா-ம்.) யாதொருவன் எல்லா வஸ்துக்களிலும் (௱௦) (தேகங்களிலும் அதிகபாசம்) வைக்காதவனாய், அந்தந்த நன்மை தீமைகளுக்குரிய பயன்களை யடைந்து சந்தோஷிக்காமலும், த்வேஷத்தை அடையாமலும் இருக்கிறானோ, அவனுடைய புத்தியானது நிலைபெற்றது. (௫௭)

யதா ஸம்ஹரதே சாயம் கூர்மோऽங்கானீவ ஸர்வஶ: ।
இந்த்ரியாணீந்த்ரியார்த்தேப்யஸ்தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ॥ ௫௮ ॥

(ப-ம்.) யதா அயம் - எப்பொழுது இந்தப்புருஷன், இந்த்ரியாணி - இந்திரியங்களை, கூர்ம: - ஆமையானது, அங்காநி இவ - அவயவங்களைப்போல், ஸர்வச: - ஸமஸ்தமான, இந்த்ரியார்த்தேப்ய: - (சப்தாதி) விஷயங்களினின்றும், ஸம்ஹரதே - இழுக்கிறானோ, ததா - அப்பொழுது, தஸ்ய - அவனுடைய, ப்ரஜ்ஞா - பிரக்ஞையானது, பிரதிஷ்டிதா - நிலைபெற்றதாம். (௫௮)

(தா-ம்.) இந்த ஜீவனானவன், (௱௦) ஜ்ஞானநிஷ்டையில் ப்ரவர்த்திருக்கிற, ஆமை தன் அவயவங்களை யடக்குவதுபோல், இந்திரியங்களை விஷயங்களில் செல்லாமல் எப்பொழுது நன்றாய் அடக்குகிறானோ அப்பொழுது அவனுடைய புத்தியானது நிலைபெற்றது. (௫௮)

விஷயா விநிவர்தந்தே நிராஹாரஸ்ய தேஹிந: ।
ரஸவர்ஜம் ரஸோऽப்யஸ்ய பரம் த்ருஷ்ட்வா நிவர்ததே ॥ ௫௯ ॥

(ப-ம்.) நிராஹாரஸ்ய - ஆகாரமற்ற, தேஹிந: - புருஷனுக்கு, விஷயா: - சப்தாதிகள், ரஸவர்ஜம் - ஆசை நீங்கலாக, விநிவர்த்தந்தே - திரும்புகின்றன; அஸ்ய - இவனுக்கு, ரஸோபி - (அந்த) ஆசையும், பரம் த்ருஷ்ட்வா - ஆத்மஸ்வரூபத்தைப்பார்த்து, நிவர்ததே - நிங்குகின்றது. (௫௯)

(தா-ம்) (இந்திரியங்களுக்கு விஷயங்கள் ஆகாரமாகையாலே) அப்படிப்பட்ட ஆகாரத்தில் விமுகமான இந்திரியங்களையுடைய தேஹிக்கு ஆசை ஒன்று தவிர மற்ற விஷயங்கள் நீங்கிவிடுகின்றன. அப்படிப்பட்ட ஆசையும் ஆத்ம ஸ்வருபமான சுகத்தை அடைந்த பிறகு நீங்கிவிடுகிறது. (ஶ0) த்ருஷ்ட்வா - அறிந்து. (௫௯)

யததோ ஹ்யபி கௌந்தேய புருஷஸ்ய விபஶ்சித: ।
இந்த்ரியாணி ப்ரமாதீநி ஹரந்தி ப்ரஸபம் மந: ॥ ௬0 ॥

(ப-ம்.) ஹே கௌந்தே - ஓ அர்ச்சுனா !, யததோபி - (ஆத்மதரிசனத்துக்காக) யத்தனம் செய்தாலும், விபஸ்சித: - ஜ்ஞானமுள்ளவனும், ப்ரமாதீநி - பலவத்துக்களான, இந்த்ரியாணி-இந்திரியங்கள், மந: - மனதை, ப்ரஸபம் - பலாத்காரமாக, ஹரந்தி- இழுக்கின்றன. (௬0)

(தா-ம்.) ஆத்மஞான மில்லாதவனுக்கு விஷயத்தில் ஆசை ஒழிகிறதில்லை. அந்த ஆசைப்பற்றுமல் இந்திரியங்களை ஜயிக்க யத்தினிக்கின்ற புருஷனுடைய இந்திரியங்கள் கெட்ட சுபாவமுடையவைகளாய்மனதை பலாத்கரித்து அபகரித்துவிடுகின்றன.

தாநி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பர: ।
வஶே ஹி யஸ்யேந்த்ரியாணி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ॥ ௬௧ ॥

(ப-ம்.) தாநி ஸர்வாணி-அவைகளை யெல்லாம், ஸம் யம்ய - நன்றாய் அடக்கி, மத்பர: - நானே இலக்காக, யுக்த: - (ஸமத்வமென்னும்) யோகநிஷ்டனாய்க்கொண்டு, ஆஸீத - வஸிக்கக்கடவன்; யஸ்ய - எவனுக்கு, இந்த்ரியாணி - இந்த்ரியங்கள், வஶே - வசத்தில் (இருக்கின்றனவோ) தஸ்ய ப்ரஜ்ஞா-அவனுக்கு (த்தான்) பிரக்ஞை, ப்ரதிஷ்ட்டிதா - நிலைபெற்றிருக்கும். (௬௧)

(தா-ம்.) அப்பப்பட்ட இந்திரியங்களை யெல்லாம் கட்டி யோகியாகி என்னையே முக்கியமா யடைந்திருக்கவேண்டும். எவனுக்கு இந்திரியங்கள் ஸ்வாதீனமா யிருக்கின்றனவோ, அவன் நிலைபெற்றவன். (௬௧)

த்யாயதோ விஷயாந் பும்ஸ: ஸங்கஸ்தேஷூபஜாயதே ।
ஸங்காத் ஸஞ்ஜாயதே காம: காமாத் க்ரோதோऽபிஜாயதே ॥ ௬௨ ॥

க்ரோதாத்பவதி ஸம்மோஹ: ஸம்மோஹாத்ஸ்ம்ருதிவிப்ரம: ।
ஸ்ம்ருதிப்ரம்ஶாத்புத்திநாஶோ புத்திநாஶாத்ப்ரணஶ்யதி ॥ ௬௩

(ப-ம்.) விஷயாந் - (சப்தாதி) விஷயங்களை, த்யாயத: - சிந்தித்திருக்கின்ற, பும்ஸ: - புருஷனுக்கு, தேஷு - அவைகளில், ஸங்க: ஜாயதே - பற்று உண்டாகின்றது; ஸங்காத்-ஸங்கத்தால், காம: - ஆசையானது, ஸஞ்ஜாயதே - உண்டாகின்றது, காமாத் - ஆசையினால், க்ரோத: - கோபம், அபிஜாயதே-உண்டாகின்றது. க்ரோதாத்-கோபத்தினால், ஸம்மோஹாத்-அவிவேகத்தால், ஸ்ம்ருதி விப்ரம: நினைவுக்கு நழுவுத (லுண்டாம்), ஸ்ம்ருதி ப்ரம்சாத்-நினைவு நழுவினால், புத்தி நாச: - (வியவஸாய) புத்திநாசம் (பிறக்கும்); புத்தி நாசாத் - புத்தி நாசத்தால், ப்ரணஶ்யதி - ஸம்ஸாரத்துக்குள்ளே யகப்படுகின்றான். (௬௨) (௬௩)

(தா-ம்.) (விஷயங்களின் ஆசையைவிடாமலும், என்னிடத்தில் மனம் வைக்காமலும்) இந்திரியங்களைக் கட்டுகிறவனுக்கு, விஷய நினைவு விடமுடியாது. அதெப்படியென்றால் விஷயங்களைக் கோருகிற புருஷனுக்கு அவற்றில் பற்று உண்டாகிறது; பற்றினால் ஆசைபிறக்கிறது: ஆசையால் கோபமுண்டாகிறது; கோபத்தால் மோகம் பிறக்கிறது; மோகத்தால்நினைவுமாறுகிறது; நினைவுமாறுதலால் புத்தி கெடுகிறது: புத்திகெடுவதால் ஸம்ஸாரத்தில் விழுந்து கெட்டுப்போகிறான்: யுக்தியானது ஆத்மக்ஞான நிச்சயம். (௬௨-௬௩)

ராகத்வேஷவியுக்தைஸ்து விஷயாநிந்த்ரியைஶ்சரந் ।
ஆத்மவஶ்யைர்விதேயாத்மா ப்ரஸாதமதிகச்சதி ॥ ௬௪ ॥

(ப-ம்.) ராகத்வேஷ வியுக்தைஸ்து - ராகமும் த்வேஷமும் அற்ற, ஆத்மவஶ்யை:-தனக்கு ஸ்வாதீநங்களானவையும் ஆகிய இந்த்ரியை:-இந்த்ரியங்களால், விஷயாந்-விஷயங்களை, சரந்-திரஸ்கரிப்பவனும், விதேய ஆத்மா - வசப்பட்ட மனதோடு (கூடியவன்), ப்ரஸாதம்-தெளிவை, அதிகச் சதி-அடைகின்றான். (௬௪)

(தா-ம்.) (ஒருவன் கீழே சொல்லியவிதமாய்ச் சர்வேஸ்வரனாகிய என்னிடத்தில் மனம் வைத்து) இராகத்வேஷங்களற்று தனக்கு சுவாதீனப்பட்ட இந்திரியங்களைக்கொண்டு, விஷயங்களை அறிந்தவனாயினும் மனஸ்வாதீன முடையவன் தெளிவை அடைகிறான். (௬௪)

ப்ரஸாதே ஸர்வது:காநாம் ஹாநிரஸ்யோபஜாயதே ।
ப்ரஸந்நசேதஸோ ஹ்யாஶு புத்தி: பர்யவதிஷ்டதே ॥ ௬௫ ॥

(ப - ம்.) ப்ரஸாதே - தெளிவுண்டாகில், அஸ்ய - இவனுக்கு, ஸர்வ து:க்காநாம் - எல்லாத் துயரங்களுக்கும், ஹாநி:

உபஜாயதே - நாசம் பிறக்கிறது, ப்ரஸந்ந சேதஸ: - தெளிவுற்ற மனத்தனுக்கு, ஆசு - விரைவில், புத்தி:-பிரக்ஞையானது, பர்யவதிஷ்டதி - நிலைபெறுகின்றது. (சுரு)

(தா-ம்) கீழ்ச்சொன்னபடி மனந்தெளியும் பக்ஷத்தில் இவனுக்கு ப்ரக்ருதி ஸம்பந்தத்தாலுண்டாகிய எல்லாத் துக்கங்களும் அழிந்துவிடுகின்றன: தெளிந்த மனதை யுடையவனுக்குப் புத்தியும் சீக்கிரத்தில் நிலைபெறும். (சுரு)

நாஸ்தி புத்திரயுக்தஸ்ய நசாயுக்தஸ்ய பாவநா ||
நசாபாவயத: ஶாந்திரஶாந்தஸ்ய குத: ஸுகம் || சுசு ||

(ப-ம்.) அயுக்தஸ்ய - (என்னிடத்தில்) மனம் வையாதவனுக்கு, புத்தி: நாஸ்தி-சுத்தாத்ம ஸ்வரூபஜ்ஞானம் இல்லை, அயுக்தஸ்ய - அப்படி மனம் வையாதவனுக்கு, பாவநா நாஸ்தி-பாவனையில்லை:—ஆத்மாவிஷயத்தில் பகுத்தறிய வேண்டுமென்னுஞ் சிந்தையில்லை, அபாவயத: - பாவனை யற்றவனுக்கு, சாந்தி:ச ந - வைராக்கியமுமில்லை, அஶாந்தஸ்ய - அந்த சாந்தி யில்லாதவனுக்கு, ஸுகம் குத: - சுகம் ஏது? (சுசு)

(தா-ம்.) என்னிடத்தில் மனம் வைக்காதவனுக்கு (ஶா) திருப்தி யில்லாதவனுக்கு ஆத்மவிஷயக் ஞானமானது ஸித்திக்கிறதில்லை: அப்படிப்பட்டவனுக்குப் பாவனையுமில்லை: அப்படிப் பாவனை வரப்பெறாதவனுக்கு ஶாந்தியு முண்டாகிறதில்லை; ஶாந்தியில்லாதவனுக்குச் சுகம் எப்படிக் கிடைக்கும். (சுசு)

இந்த்ரியாணாம் ஹி சரதாம் யந்மநோ(அ)நுவிதீயதே ।
ததஸ்ய ஹரதி ப்ரஜ்ஞாம் வாயுர்நாவமிவாம்பஸி || சுஎ ||

(ப-ம்.) சரதாம் - விஷயங்களில் ப்ரவேசிக்கிற, இந்த்ரியாணாம் - இந்த்ரியங்களுக்கு, யத் மந: - எந்த மனமானது, அநுவிதீயதே - அநுஸரிப்பிக்கப்படுகிறதோ, தத் மந: - அந்த மனமானது, அஸ்ய ப்ரக்ஞாம் - இவன் புத்தியை, வாயு: - எதிர் காற்றானது, அம்பஸி நாவம் இவ - நீரில் ஓடத்தைப்போல், ஹரதி - அடித்துக்கொண்டு போகிறது. (சுஎ)

(தா-ம்.) விஷயங்களில் சஞ்சரிக்கும் சுவபாவமுடைய இந்திரியங்களை (ஶா) சுகமில்லை எவன் மனது அனுசரித்துச் செல்கிறதோ, அப்படிப்பட்டவனுடைய மனதானது ஆத்மக்ஞானத்தில் போகிற புத்தியை ஜலத்தில் போகிற கப்பலை எதிர்க்காற்றானது திருப்புவதுபோல் தடுத்துத்திருப்பி விடுகிறது. (சுஎ)

தஸ்மாத்யஸ்ய மஹாபாஹோ நிக்ருஹீதாநி ஸர்வஶ: ।
இந்த்ரியாணீந்த்ரியார்தேப்யஸ்தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா || சுஅ ||

(ப-ம்.) தஸ்மாத் - ஆகையினால், ஹே மஹாபாஹோ - ஓ பெருந்தோளாய்! யஸ்ய - எவனுடைய, ஸர்வஶ: இந்த்ரியாணி - எல்லா இந்த்ரியங்களும், இந்த்ரியார்த்தேப்ய:-விஷயங்களினின்று, ஸர்வஶ: - எல்லாப்ரகாரங்களாலும், நிக்ருஹீதாநி - விடுவிக்கப்படுகின்றனவோ, தஸ்ய - அவனுக்கு (த்தான்), ப்ரஜ்ஞா - பிரக்ஞை, ப்ரதிஷ்டிதா பவதி - நிலைபெற்றதாகிறது. (௬௮)

(தா-ம்.) ஓ! மஹாபாஹோ! எவனுடைய இந்திரியங்கள் விஷயங்களிலிருந்து நன்றாய் விடுவிக்கப்படுகின்றனவோ, அவனுடைய புத்தியே நிலையையுடையது. (௬௮)

யா நிஶா ஸர்வபூதாநாம் தஸ்யாம் ஜாகர்தி ஸம்யமீ |
யஸ்யாம் ஜாக்ரதி பூதாநி ஸா நிஶா பஶ்யதோ முநே: ||௬௯||

(ப-ம்) யா-எந்த:—ஆத்மவிஷயமான புத்தியானது, ஸர்வபூதாநாம்.- எல்லாப் பிராணிகளுக்கும், நிசா - இரவோ, தஸ்யாம்- அதில், ஸம்யமீ - யோகியானவன், ஜாகர்தி - விழித்திருக்கிறான், யஸ்யாம் - எந்த (சப்தாதிவிஷய புத்தியில்) ஸர்வாணி பூதாநி - எல்லாப்பிராணிகளும், ஜாக்ரதி - விழித்திருக்கின்றனவோ, ஸா - அது, பஶ்யத: - (ஆத்மஞானியான), முநே:-முனிக்கு, நிசா - இரவு (ராத்திரிபோல்). (௬௯)

(தா-ம்.) எந்த ஆத்மக்ஞானம் (சாமானியரான) எல்லாப் பிராணிகளுக்கும் இரவுபோல் பிரகாசிக்கவில்லையோ, அப்படிப் பட்ட ஆத்மக்ஞானத்திலும் இந்திரியக் கட்டை யுடையவன் தெளிவுடன் பிரகாசிக்கிறான்; எந்தப் புத்தியில் எல்லாப் பிராணிகளும் பிரகாசிக்கின்றனவோ, அந்தப் புத்தியானது (ஈசுவரனிடத்தில் மனப்பற்றுடைய) முனிக்கு இரவுபோல் பிரகாசிக்காது. (௬௯)

ஆபூர்யமாணமசலப்ரதிஷ்டம் ஸமுத்ரமாப: ப்ரவிஶந்தி யத்வத் | தத்வத்காமா யம் ப்ரவிஶந்தி ஸர்வே ஸ ஶாந்திமாப்நோதி ந காமகாமீ ||௭௦||

(ப-ம்.) யத்வத் - எப்படியானால், ஆபூர்யமாணம் - (தனக்குத்தானே) பூர்ணமாய்க்கொண்டு, அசலப்ரதிஷ்டம் - ஒரேமாதிரியாய் நிலைத்திருக்கும், ஸமுத்ரம் - கடலை, ஆப: ப்ரவிஶந்தி - தண்ணீர் (நதிகள்) ப்ரவேசிக்கின்றனவோ, தத்வத்-அப்படியே, ஸர்வே காமா: - எல்லாககாமங்களும், யம் - இந்த யோகியை, ப்ரவிஶந்தி- ப்ரவேசிக்கின்றனவோ, ஸ: - அவன், சாந்திம் - வைராக்கியத்தை, ஆப்நோதி-அடைகிறான், காமகாமீ-விஷயத்தை யபேக்ஷிப்பவன், ந - அதுக்காலும் அடையமாட்டான். (௭௦)

(தா-ம்.) தானாய் நிறைந்து தன்னிலையைக்கடவாத சமுத்திரத்தை; ஆற்றின் ஜலங்கள் எப்படிப் பிரவேசிக்கின்றனவோ, அதுபோல் எல்லாக்காமங்களும் ஆத்மக்ஞானத்தால் சந்துஷ்டனான, எவனை யடைகின்றனவோ அவன்தான், ஆத்மக்ஞானத்தாலுண்டாகிய திருப்தியை அடைகின்றான்; காமத்தில் விருப்பமுடையவன் சாந்தியை யடையமாட்டான். (எ0)

விஹாயகாமாந்ய꞉ ஸர்வாந் புமாம்ஶ்சரதி நிஸ்ப்ருஹ꞉ ।
நிர்மமோ நிரஹங்கார꞉ ஸ ஶாந்திமதிகச்சதி ॥ எக ॥

(ப-ம்.) ய꞉புமாந் - எந்த புருஷன், ஸர்வாந் காமாந்-எல்லா விஷயங்களையும், விஹாய - விட்டு, நிஸ்ப்ருஹ꞉ - ஆசையற்றவனாயும், நிர் மம꞉ - மமகார மற்றவனாயும், நிரஹங்கார꞉ - அஹங்காரமற்றவனாயும், சரதி - திரிகின்றானோ, ஸ꞉ - அவன், சாந்திம் அதிகச்சதி - சாந்தியை அடைவான். (எக)

(தா-ம்.) எந்தப் புருஷன் சப்தாதிகளான எல்லா விஷயங்களையும்விட்டு அவற்றில் ஆசையும், மமதையும் மில்லாதவனாயும் இருக்கிறானோ அவன்தான் சாந்தியை அடைகிறான். (எக)

ஏஷா ப்ராஹ்மீ ஸ்திதி꞉ பார்த்த நைநாம் ப்ராப்ய விமுஹ்யதி ।
ஸ்தித்வாஸ்யாமந்தகாலே(அ)பி ப்ரஹ்மநிர்வாணம்ருச்சதி ॥ எஉ ॥

(ப-ம்.) ஹே பார்த்த! - ஓ பார்த்தனே! ஏஷா - இது, ப்ராம்ஹீ - பிரம்மத்தை யடைவிக்குமதான, ஸ்திதி꞉-(ஞான) நிஷ்டை, ஏநாம் பராப்ய-இதையடைந்து, (புமாந்-புருஷன்), நவிமுஹ்யதி-மயக்கமுடன் (ஸம்ஸாரத்திலகப்படான்), அஸ்யாம் - இந்த (நிஷ்டையில்தானே), அந்தகாலே-அந்தரூபமான, ப்ரஹ்ம நிர்வாணம் (தன்) ஆத்மாவை, ருச்சதி - அடைகிறான். (எஉ)

(தா-ம்.) ஓ! அர்ஜுனா! இந்தப்பற்றில்லாத ஸ்திதியே ப்ரஹ்மத்தை யடையச் செய்கிறது. இந்த ஸ்திதியை அடைந்தவன் ஸம்சாரத்தை யடையமாட்டான். நீ இந்த ஸ்திதியிலேயே கடைசிவரையிலு மிருந்தால் நித்தியானந்த ரூபமாகிய பிரஹ்மத்தை அடைவாய். (எஉ)

இரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

ஸாங்க்யயோக꞉ ॥

## மூன்றாம் அத்தியாயம்.

---

அர்ஜ்ஜுன வாக்கியம்.

ஜ்யாயஸீ சேத்கர்மணஸ்தே மதா புத்திர்ஜநார்தந ।
தத்கிம் கர்மணி கோரே மாம் நியோஜயஸி கேஶவ ॥ க ॥

(ப-ம்.) ஹே ஜநார்தந - ஓ கிருஷ்ணா ! கர்மண: - கர்மத்தைக்காட்டிலும், புத்தி - ஞாநநிஷ்டையானது, ஜ்யாயஸீ-ஸ்ரேஷ்டை(யென்று), தே மதா சேத் - உமது திருவுள்ளமானால், தத்-அப்பொழுது, ஹே கேசவ - ஓ கேசவனே, கோரே - பயங்கரமான, கர்மணி - கருமத்தில், மாம் - என்னை, கிம் நியோஜயஸி - ப்ரவர்த்திக்கச் செய்கிறாய்? (௧)

(தா-ம்.) ஓ! கிருஷ்ணா! கர்மத்தைக்காட்டிலும் க்ஞானமே சிறந்ததன்று. உமக்கு திருவுள்ளமானால் ஹே! கேசவா! ஏன் என்னை பயங்கரமான கர்மத்தில் பிரவேசிக்கச் செய்கிறீர். (௧)

𑌵𑍍𑌯𑌾𑌮𑌿𑌶𑍍𑌰𑍇𑌣𑍇𑌵 𑌵𑌾𑌕𑍍𑌯𑍇𑌨 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌂 𑌮𑍋𑌹𑌯𑌸𑍀𑌵 𑌮𑍇 ।
𑌤𑌦𑍇𑌕𑌂 𑌵𑌦 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌯 𑌯𑍇𑌨 𑌶𑍍𑌰𑍇𑌯𑍋𑌽𑌹𑌮𑌾𑌪𑍍𑌨𑍁𑌯𑌾𑌮𑍍 ॥ ௨ ॥

(ப-ம்.) வ்யாமிஸ்ரேண - கலப்பான, வாக்யேந - வாக்கியத்தினால், மே புத்திம் - என்மனதை, மோஹயஸி இவ-மோஹிக்கச்செய்கிறாயென்று தோன்றுகின்றது; தத் - ஆகையால், ஏகம்-ஒரு(வார்த்தையாய்), வத - சொல்லும்; யேந-எதினால், அஹம் நிச்சித்ய - நான் நிச்சயித்துக்கொண்டு, ஸ்ரேய: - பரமபுருஷார்த்தத்தை, ஆப்நுயாம் - அடைவேன். (௨)

(தா-ம்.) சந்தேகமாயிருக்கிற வார்த்தையால், என்புத்தியை மோகிக்க செய்கிறீர்போல் தோன்றுகிறது. எதனால் நான் நன்மையை அடைவேனோ, அப்படிப்பட்ட ஒன்றையே நிச்சயம் செய்து சொல்லும். (௨)

ஸ்ரீகிருஷ்ணவாக்கியம்.

𑌲𑍋𑌕𑍇𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌦𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑌾 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌪𑍁𑌰𑌾 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾 𑌮𑌯𑌾𑌨𑌘 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑍇𑌨 𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍇𑌨 𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌮𑍍 ॥ ௩ ॥

𑌨 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌮𑌨𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌨𑍍𑌨𑍈𑌷𑍍𑌕𑌰𑍍𑌮𑍍𑌯𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌽𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 ।
𑌨 𑌚 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑌨𑌾𑌦𑍇𑌵 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌸𑌮𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ॥ ௪ ॥

(ப-ம்) ஹே அநக - ஓ குற்றமற்றவனே! அஸ்மின்லோகே - இவ்வுலகத்தில், மயா - என்னால், த்வி விதா - இரண்டு விதமான, நிஷ்டா - நிஷ்டை, புரா - முன்னே, ப்ரோக்தா - சொல்லப் பட்டது,ஸாங்க்யாநாம்-ஞானயோதிகாரிகளுக்கு, ஜ்ஞாநயோகேந-ஞானயோகத்தாலும், யோகிநாம் - கர்மயோகாதி காரிகளுக்கு, கர்மயோகேநச - கருமயோகத்தாலும், இதி - என்று, புருஷ: - புருஷன், கர்மாணாம் - கருமங்களை, அநாரம்பாத் - ஆரம்பியாமற் போவதினாலேயே, நைஷ்கர்ம்யம் - ஞாநநிஷ்டையை, நாச்நுதே-அடைகிறதில்லை; ஸந்யஸநாத் ஏவ - விட்டுவிடுவதனாலேயே, ஸித்திம் - நிஷ்டையை, நஸமதிகச்சதி ச - அடையமாட்டான்.(௩-௪)

(தா-ம்.) ஓ, தோஷமற்றவனே! முன்னாலேயே, இவ்வுலகத்தில் ஞானயோகத்தால் சாங்கியர்களுக்கும், கர்ம யோகத்தால் யோகிகளுக்கும், இரண்டு நிஷ்டைகள் என்னால் சொல்லப்பட்டிருக்கின்றன. புருஷன் கர்மங்களை ஆரம்பிக்காம லிருப்பதினால் மாத்திரம் ஞானநிஷ்டையை யடையமாட்டான். ஆரம்பித்த கர்மத்தை விடுவதினாலேயே சித்தியை "மோக்ஷத்தை" அடையமாட்டான். (ஸா) நிஷ்டா - அநுஷ்டான கர்மத்தை. (௩-௪)

𑌨 𑌹𑌿 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌕𑍍𑌷𑌣𑌮𑌪𑌿 𑌜𑌾𑌤𑍁 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌕𑍃𑌤𑍍 ।
𑌕𑌾𑌰𑍍𑌯𑌤𑍇 𑌹𑍍𑌯𑌵𑌶𑌃 𑌕𑌰𑍍𑌮 𑌸𑌰𑍍𑌵𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌜𑍈𑌰𑍍𑌗𑍁𑌣𑍈𑌃 ॥௫॥

(ப-ம்.) கஃசித்-எவனும், ஜாது-ஒருக்காலும், க்ஷணம் அபி-ஒரு க்ஷணமும், அகர்ம க்ருத்-கருமத்தைச் செய்யாதவனாய், ந திஷ்டதி ஹி - இருக்கிறானில்லை யன்றோ? ஹி - யாதொரு காரணத்தால், ஸர்வோபி - எல்லா புருஷனும், ப்ரக்ருதி ஜை: - பிரகிருதியாலுண்டான குணை:-குணங்களால், அவச:-பரவசனாய்க்கொண்டு, கர்ம - கருமத்தை, கார்யதே - செய்விக்கப்படுகிறான். (௫)

(தா-ம்.) இவ்வுலகில் எவனாவது, எந்த காலத்திலாவது, க்ஷணங்கூட கர்மம்செய்யாம லிருக்கமாட்டான். ஒவ்வொருவரும் பிரகிருதி குணத்தால் சுவாதீனமில்லாதவர்களாய் (பலவந்தமாய்) கர்மத்தை செய்விக்கப் படுகிறார்கள். (௫)

𑌕𑌰𑍍𑌮𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌸𑌂𑌯𑌮𑍍𑌯 𑌯 𑌆𑌸𑍍𑌤𑍇 𑌮𑌨𑌸𑌾 𑌸𑍍𑌮𑌰𑌨𑍍 ।
𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑍍𑌵𑌿𑌮𑍂𑌢𑌾𑌤𑍍𑌮𑌾 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌚𑌾𑌰𑌃 𑌸 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥௬॥

(ப-ம்.) ய: - எவன் (ஞானயோகத்திலிருந்தவன்), கர்ம இந்த்ரியாணி - கருமேந்திரியங்களை, ஸம்யம்ய - அடக்கி, விமூடாத்ம - ஸ்வரூப ஞானமின்றி, மனஸா-மனதினால், இந்த்ரி யார்த்தாந் - இந்த்ரிய விஷயங்களை, ஸ்மரந் - நினைத்துக்கொண்டு, ஆஸ்தே - இருக்கிறானோ, ஸ: - அவன், மித்யாசார:-பொய்யாசாரக்காரன், (இதி-என்று) உச்யதே - சொல்லப்படுவான். (௬)

(தா-ம்.) எவன் கர்மேந்த்ரியங்களைக் கட்டி மனதில் விஷயங்களை நினைத்துக்கொண் டிருக்கிறானோ, அப்படிப்பட்டவன் கள்ளாசாரமுடையவனென்று சொல்லப்படுகிறான். (௬)

𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌮𑌨𑌸𑌾 𑌨𑌿𑌯𑌮𑍍𑌯𑌾𑌰𑌭𑌤𑍇𑌽𑌰𑍍𑌜𑍁𑌨 ।
𑌕𑌰𑍍𑌮𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑍈𑌃 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌮𑌸𑌕𑍍𑌤𑌃 𑌸 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌯𑌤𑍇 ॥௭॥

(ப-ம்.) ஓ அர்ஜுனா-ஹே அர்ஜுனா! யஃது - எந்தக்ருஷ்ணனால், இந்த்ரியாணி - இந்த்ரியங்களை, மனஸா நியம்ய - மனதினால் அடக்கி, அஸக்த: - பலாபேக்ஷையற்றவனாய், கர்மேந்த்ரியை: - கர்மேந்த்ரியங்களால், கர்மயோகம் - கருமயோகத்தைச்(செய்ய),

ஆரபதே-தொடங்குகிறானோ! ஸ: விசிஷ்யதே - அவன் சிறந்தவனாகிறான். (௭)

வாராய் அர்ஜுனா! யாதொருவன் இந்திரியங்களை மனதால் கட்டி கர்மேந்திரியங்களினால், பலத்தில் ஆசைவைக்காமல் கர்மயோகத்தை ஆரம்பிக்கிறானோ அவனே சிரேஷ்டனாகிறான். (௭)

𑌨𑌿𑌯𑌤𑌂 𑌕𑌰𑍁 𑌕𑌰𑍍𑌮 𑌤𑍍𑌵𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌜𑍍𑌯𑌾𑌯𑍋 𑌹𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 ।
𑌶𑌰𑍀𑌰𑌯𑌾𑌤𑍍𑌰𑌾𑌪𑌿 𑌚 𑌤𑍇 𑌨 𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑍇𑌦𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 ॥ ௮ ॥

(ப-ம்.) த்வம்-நீ, நியதம் கர்ம - வகுத்த (நித்திய நைமித்திகாதி) கருமத்தை, குரு - செய், ஹி-ஏனென்றால்:—அகர்மண:-ஞாநயோகத்தைக் காட்டிலும், கர்ம - (பலாபேக்ஷயற்ற) கருமமே, ஜ்யாய:-ச்ரேஷ்டம்; கிஞ்ச - மேலும், அகர்மண:-கருமத்தை விட்ட, தே - உனக்கு, சரீர யாத்ராபி-(ஞானஸம்பாதனத்துக்கு உபயோகமான) தேஹ காரணமும், ந ப்ரஸித்யேத்-ஸித்திக்கமாட்டாது. (௮)

(தா-ம்.) நீ ப்ரக்ருதி சம்பந்தத்தை, விடாமல் காமத்தைச் செய்யக்கடவாய்;ஞானத்தைக்காட்டிலும் கர்மமேஉத்தமமானது. ஞானநிஷ்டையை அடைபவனுக்கு (அதற்குபயோகமான சரீர சம்ரக்ஷணை கூடசித்திக்கமாட்டாது. (௮)

𑌯𑌜𑍍𑌞𑌾𑌰𑍍𑌥𑌾𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌣𑍋𑌽𑌨𑍍𑌯𑌤𑍍𑌰 𑌲𑍋𑌕𑍋𑌽𑌯𑌂 𑌕𑌰𑍍𑌮𑌬𑌨𑍍𑌧𑌨𑌃 ।
𑌤𑌦𑌰𑍍𑌥𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌮𑍁𑌕𑍍𑌤𑌸𑌙𑍍𑌗𑌃 𑌸𑌮𑌾𑌚𑌰 ॥ ௯ ॥

(ப-ம்.) யஜ்ஞார்த்தாத் - விஷ்ணுவாராதனரூபமான, கர்மண: - கருமத்தைக் காட்டிலும், அந்யத்ர - மற்ற காம்ய(கருமங்களில்), அயம் லோக:-இந்த ஜனனமானது, கர்ம பந்த ந:-கருமத்தை பந்தநமாக உடையது; ஹே கௌந்தேய-ஓ அர்ச்சுனா! ததர்த்தம்-அந்த விஷ்ணுவாதாரமான, கர்ம-கருமத்தை, முக்தஸங்க:-பலாபேக்ஷையைவிட்டு, ஸமாசர - செய். (௯)

(தா-ம்) இவ்வுலகத்திற்கு யஞ்ஞார்த்தமானகர்மத்தைக்காண்டிலும், வேறுவிதமான (தன்பிரயோஜனமான) கர்மம்! பந்தத்தை யுண்டுபண்ணுகிறது (பந்தம் ஸம்ஸாரத்தை யுண்டாக்குகிறது) ஓ குந்திஸுதனே! யஞ்ஞத்தில் உபயோகமாகிய கர்மத்தையும் பலாபேக்ஷயில்லாமல் செய். (௯)

𑌸𑌹𑌯𑌜𑍍𑌞𑌾𑌃 𑌪𑍍𑌰𑌜𑌾𑌃 𑌸𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌪𑍁𑌰𑍋𑌵𑌾𑌚 𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑌿𑌃 ।
𑌅𑌨𑍇𑌨 𑌪𑍍𑌰𑌸𑌵𑌿𑌷𑍍𑌯𑌧𑍍𑌵𑌮𑍇𑌷 𑌵𑍋𑌽𑌸𑍍𑌤𑍍𑌵𑌿𑌷𑍍𑌟𑌕𑌾𑌮𑌧𑍁𑌕𑍍 ॥ ௧௦ ॥

(ப-ம்.) ப்ரஜாபதி:-பரமாத்மா, புரா-முன்பு, ஸஹ யஜ்ஞா:-யஜ்ஞங்களோடு கூடிய, ப்ரஜா:-பிரஜைகளை, ஸ்ருஷ்ட்வா - படை

த்து, ஹே ப்ரஜா: - ஓ பிரஜைகளே! அநேந - இந்தயக்ஞத்தால், ப்ரஸவிஷ்யத்வம் - விருத்தி அடையுங்கள்; ஏஷ: - இது, வ: - உங்களுக்கு, இஷ்ட காம துக் அஸ்து - இஷ்டமான பயன்களை நிறைக்கட்டும், (இதி உவாச - என்று சொன்னார். (௧௦)

(தா-ம்) சிருஷ்டி காலத்தில், ஸர்வேஸ்வரன் யஞ்ஞங்களுடன் பிரஜைகளை (ஜீவான்மாக்களை) தோன்றுவித்து, ஜீவர்காள், இந்த யக்ஞங்கள் உங்கள் அபிஷ்டத்தை (மோக்ஷத்தை) கொடுக்கக்கடவது என்று அருளினார். (௧௦)

தேவாந்பாவயதாநேந தேதேவா பாவயந்து வ: ।
பரஸ்பரம் பாவயந்த: ஶ்ரேய: பரமவாப்ஸ்யத ॥ ௧௧ ॥

(ப-ம்.) ஹேப்ரஜா:-ஓ பிரஜைகளே! அநேந-இந்த (யக்ஞத்தால், தேவாந் - தேவர்களை, பாவயத-ஆராதியுங்கள்; தே தேவா:- அத்தேவர்கள், வ: பாவயந்து - உங்களை போஷித்துக் கொண்டிருப்பார்களாக, பரஸ்பரம் - ஒருவர்க்கொருவர், பாவயந்த: - உபகரித்துக்கொண்டு, பரம் ஶ்ரேய: - மேலான க்ஷேமத்தை, அவாப்ஸ்யத - அடையுங்கள். (௧௧)

(தா-ம்.) யக்ஞத்தால் தேவர்களை திருப்திசெய்வீர்களானால், அவர்கள் உங்களை இரக்ஷிக்கக்கடவர்கள். இவ்விதம் பரஸ்பரம் விருத்தி பண்ணிக்கொண்டு நீங்கள் மேலான சிரேயஸ்ஸை (மோக்ஷத்தை) அடைவீர்கள். (௧௧)

இஷ்டாந்போகாந்ஹி வோ தேவா தாஸ்யந்தே யஜ்ஞபாவிதா: । தைர்தத்தாநப்ரதாயைப்யோ யோ புங்க்தே ஸ்தேந ஏவ ஸ: ॥ ௧௨ ॥

(ப-ம்.) யஜ்ஞ பாவிதா: - யக்ஞத்தால் ஆராதிக்கப்பட்ட, தேவா:-தேவர்கள், வ: - உங்களுடைய, இஷ்டாந்-இஷ்டமான, போகாந் - போகங்களை, தாஸ்யந்தே - கொடுக்கப் போகிறார்கள்; தை: தத்தாந் - அவர்களால் கொடுக்கப்பட்டவைகளை, ஏப்ய: அப்ரதாய - இவர்களுக்குக் கொடாமல், ய: புங்க்தே - எவன் புசிக்கிறானோ, ஸ: ஸ்தேந ஏவ - அவன் திருடனே யாவான். (௧௨)

(தா-ம்.) யக்ஞத்தால் பூஜிக்கப்பட்ட தேவர்கள், (மேன்மேலும் தம்மாராதனத்திற் குபயோகப்படும்படி.) உங்களுக்கிஷ்டமான, போகங்களைக் கொடுப்பார்கள். அவர்கள்கொடுத்த போகங்களை, அவர்களுக்குக்கொடாமல் (அவர்களைப் பூஜிக்காமல்) தானே புசிப்பவனெவனோ அவனே திருடன். (௧௨)

யஜ்ஞஶிஷ்டாஶிந: ஸந்தோ முச்யந்தே ஸர்வகில்பிஷை: ।
புஞ்ஜதே தே த்வகம் பாபா யே பசந்த்யாத்மகாரணாத் ॥ ௧௩ ॥

(ப-ம்.) யக்ஞ சிஷ்ட சிநஃ - (பரமபுருஷாராதனமான) யாகத்தில் மீதியை புசிம்பவர்களான, ஸந்தஃ-ஸத்துக்கள் ஸர்வ கில்பிஷைஃ-ஆத்மஜ்ஞானத்துக்கு ஸகல பாவங்களாலும், முச்யந்தே - விடுபடுகிறார்கள்; யேது - எவர்களானால், ஆத்ம காரணாத் - ஆத்மார்த்தமாக, பசந்தி - பாகம் செய்கிறார்களோ, தே பாபாஃ-அப்பாவிகள், அகம் - பாவத்தை, புஞ்ஜதே - அநுபவிக்கிறார்கள். ()

(தா-ம்.) "பகவதாராதனரூபமாகிய" யக்ஞத்தைச் செய்து, அதின் மிச்சத்தை புசிக்கின்ற சத்புருஷர்கள், (ஆத்மஞானவிரோதிகளால்) எல்லா பாபங்களில் நின்றும் விடுபடுகிறார்கள். தனக்காகவே (பகவதாராதனத்திற்கென்று நினைக்காமல்) சமையல் செய்பவர்களெவர்களோ, அந்த பாபிகள் பாபத்தையே புசிக்கிறார்கள். இந்த போஜனம் பாபரூபமாய் முடிவதினால், அது பாபமாகவே சொல்லப் படுகிறது. அப்படிப்பட்டவர்கள் ஆத்ம ஞானமில்லாமல், நரகத்திற் கிடமாவார்கள் என்று கருத்து. (கங)

அந்நாத்பவந்தி பூதாநி பர்ஜந்யாதந்நஸம்பவஃ |
யஜ்ஞாத்பவதி பர்ஜந்யோ யஜ்ஞஃ கர்மஸமுத்பவஃ || கச ||

(ப - ம்.) அந்தாத் - அன்னத்தால், பூதாநி-ஸகலப் பிராணிகளும், பவந்தி - உண்டாகின்றன; அந்ந ஸம்பவஃ - அன்னம் உண்டாகிறது, பர்ஜந்யாத்-மழையினால், பர்ஜந்யஃ-மேகத்தின்மூலமாய் மழையானது, யஜ்ஞாத்-யஜ்ஞத்தினின்றும்; யஜ்ஞஃ-யஜ்ஞமோ, கர்ம ஸமுத்பவஃ-கருமத்தினின்று முண்டானது. (சக)

(தா - ம்.) அன்னத்தில் நின்றும் பிராணிகளுண்டாகிறார்கள். வருஷத்தில் நின்றும் அன்னமுண்டாகிறது. யக்ஞத்தில் நின்றும் வருஷமுண்டாகிறது. கன்மத்தில் நின்றும் யக்ஞ முண்டாகிறது. (கச)

கர்ம ப்ரஹ்மோத்பவம் வித்தி ப்ரஹ்மாக்ஷரஸமுத்பவம் |
தஸ்மாத்ஸர்வகதம் ப்ரஹ்ம நித்யம் யஜ்ஞே ப்ரதிஷ்டிதம் ||கரு||

(ப-ம்.) கர்ம-அக்ஷரமென்று சொல்லப்படுகிற கருமமானது ப்ரஹ்ம உத்பவம்-(பிரகிருதி பரிணாமரூபமான) சரீரத்தாலுண்டானதென்று, வித்தி-அறி; ப்ரஹ்ம-சரீரமானது, அக்ஷர ஸமுத்பவம்-ஜீவனால் உண்டானது; தஸ்மாத் - ஆகையால், ஸர்வ கதம்-ஸர்வ புருஷார்த்தங்களுக்கும் ஸாதகமான, ப்ரதிஷ்டிதம் - நின்றிருக்கின்றது யஜ்ஞத்துக்கு மூலமாயிருக்கின்றது. (கரு)

(தா-ம்.) பிரஹ்ம (பிரகிருதிவிகார ரூபமான சரீரம்) த்தில் நின்றும் கர்மமுண்டாகிறது. அந்த சரீரம் அக்ஷரமென்று சொல்லப்படுகிற ஜீவாத்மாவில் நின்றும் முண்டாகின்றது (என்பதால்

ஜீவனில்லாத சரீரம் எவ்வித் கர்மத்துக்கு முபயோகப் படா தாகையால் சன்மத்திற்குச் சாதனமாகிய சரீரம் ஜீவாத்மாவி னிடத்திலேயே உண்டாகின்றதெப்படி)ஆகையால் எலோரிடத் திலும் வியாபித்திருக்கிற பிரகிருதி ரூபமான சரீரம் எப்பொழு தும் யக்ஞத்தையே ஆதாரமாயுடையது. (கரு)

ஏவம் ப்ரவர்த்திதம் சக்ரம் நாநுவர்த்தயதீஹய꞉ ।
அகாயுரிந்த்ரியாராமோ மோகம்பார்த ஸஜீவதி ॥ கசு ॥

(ப-ம்.) ஹே பார்த்த - வாராய் அர்ச்சுனா! ஏவம் - இந்தப் பிரகாரம், ப்ரவர்த்திதம் - (பரமபுருஷனால்) ஏற்படுத்தப்பட்ட, சக்ரம் - சக்கிரத்தை, இஹ - லோகத்தில், ய꞉ எவன், நாநுவர்த யதி - பிரவர்த்திப்பிக்கிற தில்லையோ, ஸ꞉ - அவன், ஆகாயு꞉-பாப (ஸ்வரூபமான) ஜீவனமுடையவன், இந்த்ரிய ஆராம꞉-இந்த்ரியங் களால் ரமித்துக்கொண்டு, மோகம் - வியர்த்தமாய், ஜீவதி-ஜீவிக் கிறான். (கசு)

(தா-ம்,) இப்படி உண்டுபண்ணப் பட்டிருக்கிற இச்சக்கிர த்தை, எவன் அநுசரிக்க வில்லையோ, அப்படிப்பட்டவன் பாபத்திற்கிடமாகிய ஆயுளையுடையவன். இந்திரியங்களே இவ னுக்கு யோகஸ்தானங்கள். ஓ பார்தா! ஆத்மார்த்தமான, ஞான யோகாதி கன்மங்களில் விடாமுயற்சியாகவிருந்து நற்பயனையடை யாதவன் வீணாகப்பிழைத்திருக்கிறான். (கசு)

யஸ்த்வாத்மரதிரேவஸ்யா தாத்மத்ருப்தஸ்ச மாநவ꞉ ।
ஆத்மந்யேவ ச ஸந்துஷ்டஸ் தஸ்ய கார்யம் நவித்யதே ॥ கஎ ॥

(ப-ம்.) ய꞉து மாநவ꞉-எந்த மனிதனால், ஆத்மரதிரேவ-தன க்குள்ளே ரமித்துக்கொண்டும், ஆத்ம த்ருப்த꞉-ஆத்மாவில்தானே திருப்தியடைந்தும், ஆத்மந்யேவ ஆத்மா, ஸந்துஷ்ட꞉ச-ஸந்தோஷ முற்றவனாயும், ஸ்யாத-ஆவனோ, தஸ்ய-அவனுக்கு, கார்யம்-செய் யவேண்டுவது, நவித்யதே-ஸாதன (ஒன்று)மில்லை. (கஎ)

(தா-ம்) யாதொருவ தானாகவே ஆத்மவிலாசமுண்டாய் (அ ன்னபானாதிகளி லாசையில்லாமல் ஆத்மாவினிடத்திலேயே சுக மடைந்திருக்கிறானோ, அப்படிப்பட்டவனுக்கு ஆத்மஞானத்தின் பொருட்டுசெய்யவேண்டிய ஸாதனமொன்றுமில்லை. (கஎ)

நைவ தஸ்ய க்ருதேநார்த்தோ நாக்ருதேநேஹ கஸ்சந ।
நசாஸ்ய ஸர்வபூதேஷு கஸ்சிதர்த்தவ்யபாஸ்ரய꞉ ॥ கஅ ॥

(ப-ம்.) தஸ்ய-அவனுக்கு, க்ருதேந-செய்யப்பட்ட, கர்மணா- கருமத்தால், அர்த்த꞉ - பிரயோஜனம், ந ஏவ-இல்லை; அக்ருதேந - செய்யப்படாததினால், க꞉சந-யாதொரு,அநர்த்த꞉ச ந-கேடுமில்லை,

இஹ - லோகத்தில், அஸ்ய - இவனுக்கு, ஸர்வ பூதேஷு - ஸகல பூதங்களிலும், அர்த்த வ்யபாஸ்ரய: - (ஒரு) ப்ரயோஜனத்துக் காகப் பற்றவேண்டியதாய், கஃசித் - யாதொரு, பதார்த்த: அபி - வஸ்துவும், நச - இல்லை. (௧௮)

(தா-ம்) அப்படிப்பட்டவனுக்கு (தானாகவே ஆத்ம தரிசன முடையவனுக்கு) ஆத்ம தரிசனத்திற்காக ஸ்தாநஞ்செய்தபோதிலும் செய்யாமலிருந்தபோதிலும் எவ்வித சாதகமுமில்லை, பாதகமுமில்லை. அவனுக்கு ஆத்மாவைக்காட்டிலும் வேறு ப்ரக்ருதி விகாரமான வஸ்துக்களெல்லாவற்றிலும் பிரயோஜன ரூபமாகிய விஷமேதுமில்லை. (ஆகையாலதுகளை விலக்கத்தக்க ஸ்தானம் அப்படிப்பட்டவனுக்கு நிஷ்பலமென்படி.) (௧௮)

𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌸𑌕𑍍𑌤𑌃 𑌸𑌤𑌤𑌂 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌸𑌮𑌾𑌚𑌰 ।
𑌅𑌸𑌕𑍍𑌤𑍋 𑌹𑍍𑌯𑌾𑌚𑌰𑌨𑍍𑌕𑌰𑍍𑌮 𑌪𑌰𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌪𑍂𑌰𑍁𑌷𑌃 ॥ ௧௯ ॥

(ப-ம்.) தஸ்மாத் - ஆகையால், அஸக்த: - ஒட்டாமலிருந்து கொண்டு, ஸததம் - எப்போதும், கார்யம் - (அவசியம்) செய்ய வேண்டிய, கர்ம ஸமாசர - கருமத்தைச்செய், அஸக்த: - பற்றில்லாதவனாய், கர்ம ஆசரந் - கருமஞ்செய்யும், புருஷ: - புருஷன், பரம் - பரமாத்துமாவை, ஆப்னோதி - அடைகிறான். (௧௯)

தா-ம். ஆகையால் (தானாயாத்மஜ்ஞான முண்டானவனுக்கு மாத்திரம் ஸாதனத்தைத் தேடவேண்டியதில்லை) ஸாதனாபேக்ஷையை யுடையவனுக்கு, ஆத்மஜ்ஞானத்தோடு கூடிய கர்ம யோகமே சுகமான ஸாதனம். பலத்திலாசை யில்லாதவனாய் எப்பொழுதும் கர்மத்தைச்செய். பலத்திலாசை யில்லாமல், கர்மத்தைச் செய்பவன் ஆத்மாவையடைந்து விடுகின்றான். (௧௯)

𑌕𑌰𑍍𑌮𑌣𑍈𑌵 𑌹𑌿 𑌸𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌮𑌾𑌸𑍍𑌥𑌿𑌤𑌾 𑌜𑌨𑌕𑌾𑌦𑌯𑌃 ।
𑌲𑍋𑌕𑌸𑌂𑌗𑍍𑌰𑌹𑌮𑍇𑌵𑌾𑌪𑌿 𑌸𑌂𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌕𑌰𑍍𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑌿 ॥ ௨௦ ॥

(ப-ம்.) ஜநகாதய: - ஜநகர் முதலானோர், கர்மணைவ - கர்ம யோகத்தாலேயே, ஸம்ஸித்திம்- (மோக்ஷரூப) ஸித்தியை, ஆஸ்த்திதா: - அடைந்தார்கள் ; ஹி - அல்லவா? லோக ஸங்க்ரஹம்- ஜனங்களுக்கு (தர்மப் பிரவர்த்தன ரூபமான) அனுக்கிரகத்தை, ஸம்பச்யந் அபி - (தன்பயனைப்) பார்த்தாவது, கர்துமேவ அர்ஹஸி - செய்வதற்கு யோக்கியனாகிருக்கிறான். (௨௦)

(தா-ம்.) கர்மயோகத்தினாலேயே ஜனகர் முதலானவர்கள் ஆத்மதிருப்தி ரூபமாகிய ஸித்தியை யடைந்தார்கள். உலக நடவடிக்கையைத் தள்ளக்கூடாதென்பதையோ சிந்தித்து, நீ கர்மத்தைச் செய்யத்தக்கவன். (௨௦)

யத்யதாசரதி ச்ரேஷ்டஸ்தத்ததேவேதரோஜந: |
ஸயத்ப்ரமாணம் குருதே லோகஸ்ததநுவர்த்ததே || உக ||

(ப-ம்.) ச்ரேஷ்ட: - பிரஸித்த (புருஷன்), யத் யத் கர்ம - எந்தெந்த கருமத்தை, ஆசரதி - செய்கிறானோ, இதர: - முழுதுந்தெரிந்ததல்லாத, ஜந: - ஜனமும், தத் தத் ஏவ - அவ்வவற்றையே, (ஆசரதி) - செய்கிறது; ஸ: - அந்தச் (சிரேஷ்டன்), யத் ப்ரமாணம் - எவ்வளவு அங்கத்தோடு, குருதே - செய்கிறானோ, லோக: - (இதர) ஜனமும், தத ஏவ - அவ்வளவு அங்கத்தோடு கூடியே, அநுவர்த்ததே - அநுட்டிக்கின்றது. (உக)

(தா-ம்.) ஞானனுஷ்டானத்திற் சிறந்தவனெதைச் செய்கிறானோ அதையேதான் மற்றவர்களும் செய்வார்கள். அவனெப்பிரமாணத்தைக் கொண்டு கர்மத்தைச் செய்கிறானோ, அவைகளெல்லாவற்றையும் உலகமநுசரிக்கும், ஞானவான்கூட உலகத்திற்காக கர்மத்தைச் செய்யவேண்டியதென்று கருத்து. (உக)

நமேபார்த்தாஸ்தி கர்த்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சந |
நாநவாப்தமவாப்தவ்யம் வர்த்த ஏவச கர்மணி || உஉ ||

(ப-ம.) ஹே பார்த்த! - ஓ அர்ச்சுனா! மே - எனக்கு, கர்தவ்யம - செய்யவேண்டும கருமம, நாஸ்தி-இல்லை; த்ரிஷு லோகேஷு-மூவுலகங்களிலும, அநவாப்தம - அடையப்படாததும், அவாப்தவ்யம - அடையவேண்டுவதும, கிஞ்சந - கொஞ்சமும் இல்லை (அப்படியிருக்கச்செய்தே,) கர்மணி - கருமத்தில், வர்த்த ஏவ - இருக்கவே இருக்கிறேன். [அனுட்டிக்கிறேனென்றபடி.] (உஉ)

(தா-ம.) ஓ பரதனே! ஸர்வேச்வரனும், அவாப்த ஸமஸ்த காமனும், ஸர்வஜ்ஞனுமிருக்கிற எனக்கு இம்மூவ்வுலகிலும் செய்யத்தக்கது கொஞ்சமாவது இல்லை. இதுவரையிலு மடையாமல் (காமத்தால) கர்மத்திலேயே இருக்கிறேன். (உஉ)

யதிஹ்யஹம் நவர்த்தேயம்ஜாது கர்மண்யதந்த்ரித: |
மம வர்த்மாநுவர்த்தந்தே மநுஷ்யா: பார்த்த ஸர்வச: || உங ||

(ப-ம்.) ஹே பார்த்த! - வாராய் பார்த்தனே! அஹம்-நான், ஜாது - ஒருககால, அதந்த்ரித: - ஆலஸ்யமில்லாதவனாய், கர்மணி - கர்மத்தில், நவர்த்தேயம யதி - இல்லாமற் போவேனே யாகிலும், ஸர்வச: மநுஷ்யா: - எல்லாமனுஷ்யரும், மம - என்னுடைய, வர்த்ம - மார்க்கத்தை, அநுவர்த்தந்தே - அநுஸரிப்பார்கள். (உங)

(தா-ம்.) ஓ பார்த்த! சர்வேஸ்வரனான யான், ஒரு வேளை யாதும்; சோம்பலில்லாமல் (அந்தந்த ஜாதிக்குரிய) கர்மங்களில்

விருப்பேனேயாகில் மனிதர்கள எவ்விதத்திலும் ஒழுங்கில்லாமல் புழுகளித்து விடுவார்கள். (உங)

உத்ஸீதேயு: இமே லோகா ந குர்யாம் கர்ம சேதஹம் |
ஸங்கரஸ்ய ச கர்தா ஸ்யாமுபஹந்யாமிமா: ப்ரஜா: ||உச||

(ப-ம்.) அஹம் - நான், கர்ம-(குலோசிதமான) கருமத்தை, நகுர்யாம சேத் - செய்யேனே யாகில, இமே லோகா: - இபபிரா ணிகள, உதஸீதேயு: - நசிததுபபோவாகள; ஸங்கரஸ்ய - அவ்ய வஸ்த்தைககும், காததா ஸ்யாம - காததா வாகுவேன்; இமா: ப்ர ஜா: - இநதப பிரஜைகளை, உபஹந்யாம - கெடுததவனுவேன். ()

(தா-ம்.) யான் ஜாதிககுரிய காமததைச செய்யாமற் போ வேனேயாகில, உலகமெலலாம. கெடடுவிடும. ஜாதிபேதமில்லாத ஸாங்கரியததையு முணடு பணணினவனுகிறேன; இநத ஜனங் களைக கெடுததவனுகவுமாகிறேன. (உச)

ஸக்தா: கர்மண்யவித்வாம்ஸோ யதா குர்வந்தி பாரத |
குர்யாத் வித்வாம்ஸ்ததாஸக்தஸ்சிகீர்ஷுர்லோகஸங்க்ரஹம் ||உரு||

(ப-ம.) அவித்வாம்ஸ: - அற்பஞானிகள, கர்மணி - கருமத் தில், ஸக்தாஸ்ஸந்த: - பறறின வாகளாய, யதா குர்வந்தி - எபபடி செய்கிறுர்களோ, ததா - அபபடி, வித்வாந் - ஆதமஞானியும், அஸ க்த: - பற்றிலலாதவனுய; லோக ஸங்கரஹம - லோக அனுககிர ஹததை, சிகீர்ஷு: - செயயககோரியவனுய், குர்யாத - (கர்ம யோகம) செய்யககடவன. (உரு)

(தா-ம்.) ஓ பரதவமசததிற பிறநதவனே! ஆதம ஞானமில் லாத அவித்து வானகள காமததில அதிகார முளளவர்களாய் கர்மயோகததையே ஆதமதரிசனததிறகுச சாதனமாகவெண்ணி எபபடி செய்துவருகிறுாகளோ' அபபடியே (ஆதமஸ்வரூபத்தை நன்ருயறிநது காமயோக மவசியமிலலாத ஞானயோகாதி காரி யான) விததுவானும, உலக க்ஷேமததிறகாக கர்மயோகததைச செய்யவேண்டும. (உரு)

ந புத்திபேதம் ஜநயேதஜ்ஞாநாம் கர்மஸங்கிநாம் |
ஜோஷயேத்ஸர்வகர்மாணி வித்வாந் யுக்தஸ்ஸமாசரந் ||உசு||

(ப-ம்.) அஜ்ஞாநாம - ஆதமஞாந ஹீனர்களான, கர்ம ஸங்கி நாம் - கருமாதிகாரிகளுககு, புததி பேதம-புததி வித்தியாஸத்தை, ந ஜநயேத்-உண்டுபண்ணககடவனல்லன;வித்வாந்-ஞானியா (யிரு ந்தபோதிலும்), யுக்த: - (அவசியம் செய்யவேண்டுமென்னும் புத் தியோடு) கூடியவனுய், கர்மாணி - கருமங்களை,ஸமாசரந் - நன்கு செய்துகொண்டு, ஜோஷயேத் - பிரீதி பண்ணககடவன். (உசு)

(தா-ம்.) ஆத்மஞானத்தை நன்றாய் அறியாமல் கர்மயோகத்திலேயே அன்புடைய சிஷ்டர்களுக்கு, கர்மயோகத்தைக்காட்டிலும் ஆத்மஞானத்திற்கு வேறு சாதனமிருக்கிறதென்று கூறி புத்தி பேதத்தை யுண்டுபண்ணக்கூடாது. ஞானயோக சாதனமுள்ளவன் கூட கர்மயோகமே ஆத்மஞானத்திற்குச் சாதனமென்கிற எண்ணத்துடன் கர்மங்களைச் செய்துகொண்டு அனைவருக்கும் கர்மத்தி லன்பை யுண்டு பண்ணவேண்டும். (௨௬)

ப்ரக்ருதே: க்ரியமாணானி குணை: கர்மாணி ஸர்வச: |
அஹங்கார விமூடாத்மா கர்த்தாஹமிதி மந்யதே ||௨௭||

(ப-ம்.) அஹங்கார விமூடாத்மா - அஹங்காரத்தால் மறைந்த ஸ்வரூபத்தையுடையவன், ப்ரக்ருதே: - பிரகிருதியினது, குணை: - குணங்களால், க்ரியமாணானி - செய்யப்படுகிற, ஸர்வச: கர்மாணி - ஸகல கருமங்களையும், அஹம் கர்தா - 'நானே செய்கிறேன்' இதி மந்யதே - என்று மதிக்கிறான். (௨௭)

(தா-ம்.) ஸத்துவராஜஸ்தமோ ரூபமாகிய பிரகிருதியின் குணத்தாலுண்டு பண்ணப்படுகின்ற கர்மங்களைக்குறித்து, அகங்காரத்தால் மதிகெட்டவன், நானே செய்கிறேனென்று நினைக்கின்றான். (௨௭)

தத்வவித்து மஹாபாஹோ குணகர்ம விபாகயோ: |
குணா குணேஷு வர்த்தந்த இதி மத்வா ந ஸஜ்ஜதே ||௨௮||

(ப-ம்.) ஹே மஹா பாஹோ - ஓ பெருந்தோளாய்! குணகர்ம விபாகயோ: - குணகருமங்களின் பிரிவுகளின், தத்வ வித் - உண்மை யறிந்தவனோ, குணா: - குணங்கள், குணேஷு - (தம்) காரியங்களில், வர்தந்தே - பிரவர்த்திக்கின்றன, இதி மத்வா - என்று நினைத்து, ந ஸஜ்ஜதே - பற்றுகிறதில்லை. (௨௮)

(தா-ம்.) வாராய் பெரிய புஜமுடையவனே! ஸத்துவமுதலான குணங்களுடையவும், அதற்குரிய கர்மங்களுடையவுமான தாரதம்மியங்களில் தத்துவத்தை யறிந்தவன் அந்தந்த ஸத்துவாதி முக்குணங்கள் தம்தம்மிட குணரூப காரியங்களிலிருக்கிறதென்று நினைத்து அகங்காரத்தை யடையமாட்டான். (௨௮)

ப்ரக்ருதேர்குணஸம்மூடா: ஸஜ்ஜந்தே குணகர்மஸு |
தானக்ருத்ஸ்நவிதோ மந்தான் க்ருத்ஸ்நவிந்ந விசாலயேத் ||௨௯||

(ப-ம்.) ப்ரக்ருதே: - பிரகிருதியின் — சரீரத்தின், குண ஸம்மூடா: - குணங்களால் மயங்கினவர்களோ, குண கர்மஸு - குணத்தால் (வரும்) கர்மங்களிலே, ஸஜ்ஜந்தே - பற்றுவார்கள்; அத: - ஆகையால், அக்ருத்ஸ்ந வித: - முழுதும் அறிந்தவரல்லாத,

நாக்மந்தாந் - அந்த மந்த மதிகளின்; க்ருத்ஸ்ந வித் - முழுவதும் (ஆத்மஸ்வரூபத்தை) அறிந்தவன், ந விசாலயேத் - கலக்கச்செய்யக்கூடவனல்லன். (உகூ)

(தா-ம்.) பிரகிருதியின் குணத்தால் பிரமித்து, கர்மாதிகாரிகளாயு மிருக்கிறார்கள். அப்படி நன்றாயறியாத மந்தர்களை, நன்றாய் தெரிந்தவன், தன்ஞானத்தால் சலிப்பிக்கக்கூடாது. (உகூ)

[Grantha verse line, illegible] ।
[Grantha verse line, illegible] ॥௩௰॥

(ப-ம்.) அத்யாத்ம சேதஸா - ஆத்மாவையே நாடிய மனதினால், ஸர்வாணி கர்மாணி-எல்லாக் கருமங்களையும், மயி ஸந்யஸ்ய- என்னிடத்தில் ஸமர்ப்பித்து, நிராசீ: - நிஷ்காமனாய்,நிர்மம:-மமகார மற்றவனாய், விகதஜ்வர: பூத்வா - தாபத்தை (விசனத்தை) விட்டவனாய், யுத்யஸ்வ — யுத்தம்செய். (௩௰)

(தா-ம்.) ஆத்மஞானத்துடன் கூடிய மனதோடு [எல்லா ப்ராணிகளுக்கும்] அந்தர்யாமியாகிய என்னிடத்தில் கர்மங்களையெல்லாம் சமர்பணம் செய்து [என்றால் கர்மங்களுக்கெல்லாம் ஈசுவரனே கர்த்தா காரயிதாவென்று நினைத்து] பயனை விரும்பாமல் கர்மத்தில் மமதையை விட்டு துக்கமில்லாதவனாய், யுத்தம் செய். (௩௰)

[Grantha verse line, illegible] ।
[Grantha verse line, illegible] ॥

(ப-ம்.) யே - எந்த, மாநவா: - மனிதர்கள், இதம் - இந்த, மே மதம் - என் ஸித்தாந்தத்தை, நித்யம் - எப்போதும், அநுதிஷ்டந்தி - அனுட்டிக்கிறார்களோ; (யேச) - பின்னும் எவர்கள், ஶ்ரத்தாவந்த: - சிரத்தையுடையர்களோ; (யேச) பின்னுமெவர்கள், அநஸூயந்த: - அசூயை கொள்ளார்களோ; தே அபி - அவர்களும், கர்மபி:-கருமங்களால், முச்யந்தே-விடுபடுகிறார்கள்.

(தா-ம்.) எந்த மனிதர்கள் என்னிட இந்தஅபிப்பிராயத்தை அநுஷ்டிக்கின்றார்களோ, எவர்கள் அநுஷ்டிக்காவிடினும் இந்த சாஸ்திரப்பொருளில் சிரத்தையுடையவர்களா யிருக்கிறார்களோ, எவர்கள் சிரத்தை யில்லாவிடினும் இஃது சாஸ்திரத்தின் பொருளல்லவென்று தோஷத்தையாவது சொல்லாம லிருக்கிறார்களோ, அவர்களெல்லாம் ஸம்சாரத்துக்குக் காரணமாகிய புண்ணிய பாப கர்மங்களெல்லாவற்றினும் விடுபடுகிறார்கள். (௩௧)

[Grantha verse line, illegible] ।
[Grantha verse line, illegible] ॥௩௨॥

(ப-ம்.) யே மாநவா: - எந்தமனிதர்கள், மம இதம் மதம் - எனது இச் சித்தாந்தத்தை, ந அநுதிஷ்டந்தி - அநுஷ்டிக்கிறார்களில்லையோ, யேச - பின்னும் எவர்களானால், அப்யஸூயந்த: - அசூயை கொண்டவராய், வர்தந்தே - இருக்கிறார்களோ, தாந் - அந்த, ஸர்வஜ்ஞாந விமூடாந் - ஒரு ஞானமு(மில்லாத) மூடர்களை, நஷ்டாந் - ஸத்தை யிழந்து; அசேதஸ:-புத்திபில்லாதவர்களாய், வித்தி - அறி. (௩௨)

(தா-ம்.) எவர்கள் இந்த என்னிடமதத்தை அநுஷடிக்காமலும், சித்தை யில்லாமலும், அஸூயையைப் படுகிறார்களோ, அப்படிப்பட்டவர்களை, எல்லாஞ் ஞானவிஷயங்களினும் மூடர்களாயும், நஷ்டர்களாயும், புத்தியற்றவர்களாயும், "மனதின் பிரயோஜனமானது வஸ்துக்களின் தத்துவத்தை யறிதல், அதில்லாமையால் மனமில்லாத வர்களாயும், வேறுவிதமான ஞான முடையவர்களாயு மிருக்கிறார்கள். (௩௨)

ஸத்ருஶம் சேஷ்டதே ஸ்வஸ்யா: ப்ரக்ருதேர் ஜ்ஞாநவாநபி|
ப்ரக்ருதிம் யாந்தி பூதாநி நிக்ரஹ: கிம் கரிஷ்யதி ||௩௩||

(ப-ம்.) ஜ்ஞாநவாந் அபி - ஞானவானான போதிலும், ஸ்வஸ்யா: - தனது, பிரக்ருதே: - (பழைய) வாஸனைக்கு, ஸத்ருசம் - தக்கபடி (விஷயங்களில்) சேஷ்டதே - வியாபிரிக்கிறான்; (ஏனெனில்) பூதாநி - (தேவர் மனிதர் முதலிய) பூதங்கள், ப்ரக்ருதிம் - (பழைய) வாஸனையையே, யாந்தி - அநுஸரிக்கின்றன; நிக்ரஹ:- (சாஸ்திரத்தால் பண்ணும்) நிர்பந்தம், கிம் கரிஷ்யதி-என் செய்யமாட்டும்? (௩௩)

(தா-ம்.) ஞானத்தை யுடையவன்கூட தன் பிரகிருதிக்கு தக்கபடி விஷயத்தில் பிரவேசித்து விடுகிறான். (பிரகிருதியுடன் சேர்ந்திருக்கிற) ஜந்துக்கள் (அநாதிகாலத்தால் கிட்டின) வாஸனையை யநுசரித்திருக்கிறது. அதைக் குறித்து சாஸ்திரங்களின் நிஷேதம் என்னசெய்யும். (௱) நிக்ர:-சாஸ்திர நிஷேதமானது.

இந்த்ரியஸ்யேந்த்ரியஸ்யார்தே ராகத்வேஷௌ வ்யவஸ்திதௌ|
தயோர்ந வஶமாகச்சேத் தௌ ஹ்யஸ்ய பரிபந்திநௌ ||௩௪||

(ப-ம்.) இந்த்ரியஸ்ய-ஞானேந்திரியத்தினுடையவும், இந்த்ரியஸ்ய - கர்மேந்திரியத்தினுடையவும், அர்த்தே - (சப்தாதி) விஷயத்தில், ராக த்வேஷௌ - காமக்குரோதங்கள், வ்யவஸ்த்திதௌ - நியமேந உண்டாகின்றன; தயோ: - அவைகளுக்கு, வசம்-வசமாயிருக்கையை, நஆகச்சேத் - அடையக்கடவனல்லன்; ஹி - ஏனெனில், தௌ - அவைகள், அஸ்ய - இந்த (ஞானிக்கு), பரிபந்திநௌ - விரோதிகள். (௩௪)

(தா-ம்.) சப்தம் முதலான ஞானேந்திரிய விஷயங்களிலாவது, வாக்கு முதலான கர்மேந்திரிய விஷயங்களில் இராகமும், உலோபமும், பரிகரிக்கப்பட்டிருக்கிறதுகள். அந்தக் காமக் குரோதங்களுக்கு வசப்படக்கூடாது. அவ்விரண்டுகளு மிவனுக்குச் சத்துருக்கள். (௩௪)

𑌶𑍍𑌰𑍇𑌯𑌾𑌨𑍍 𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑍋 𑌵𑌿𑌗𑍁𑌣𑌃 𑌪𑌰𑌧𑌰𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑍍𑌵𑌨𑍁𑌷𑍍𑌠𑌿𑌤𑌾𑌤𑍍 ।
𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑍇 𑌨𑌿𑌧𑌨𑌂 𑌶𑍍𑌰𑍇𑌯𑌃 𑌪𑌰𑌧𑌰𑍍𑌮𑍋 𑌭𑌯𑌾𑌵𑌹𑌃 ॥௩௫॥

(ப-ம்.) ஸ்வ தர்ம: - தன் தருமமான (கர்மயோகம்), விகுண: அபி - அங்கமழிந்ததாலும், ஸ்வநுஷ்ட்டிதாத் - நன்கு அநுஷ்டிக்கப்பட்ட, பர தர்மாத் - பிறரின்தருமமான (ஞானத்தைக்காட்டிலும்), ஶ்ரேய: - சிறந்தது; பரதர்ம: - பிறரின் தரும (மான ஞாநயோக) மோ, பயாவஹ: - பயங்கரமானது. (௩௫)

(தா-ம்.) நன்றாய்ச் செய்யப்படுகின்ற வேறு தர்மத்தைக் காட்டிலும் ஸ்வதர்மம் குணமில்லாமலிருந்தபோதிலும், சிறந்தது. தன் தருமத்திலிருந்து ஒரே ஜன்மத்தில் பலத்தை யடையாவிடினும் அது கூட மேலானது. பரதர்மம் பயத்திற்குக் காரணமாகும். (௩௫)

### அர்ஜ்ஜுன வாக்கியம்.

𑌅𑌥 𑌕𑍇𑌨 𑌪𑍍𑌰𑌯𑍁𑌕𑍍𑌤𑍋𑌽𑌯𑌂 𑌪𑌾𑌪𑌂 𑌚𑌰𑌤𑌿 𑌪𑍂𑌰𑍁𑌷𑌃 ।
𑌅𑌨𑌿𑌚𑍍𑌛𑌨𑍍𑌨𑌪𑌿 𑌵𑌾𑌰𑍍𑌷𑍍𑌣𑍇𑌯 𑌬𑌲𑌾𑌦𑌿𑌵 𑌨𑌿𑌯𑍋𑌜𑌿𑌤𑌃 ॥௩௬॥

(ப-ம்.) ஹே வார்ஷ்ணேய - ஓ விருஷ்ணி வம்சத்தில் பிறந்தவரே!, அத - அனந்தரம், அயம் புருஷ:-இந்த புருஷன், அநிச்சந் அபி - நினைக்கவும் நினையாமல், கேந-என்னகாரணத்தால், பரயுக்த: - ஏவப்பட்டவனாய்க்கொண்டு, பலாத் - வலுவில், நியோஜித: இவ - நியமிக்கப்பட்டவன்போல், பாபம் - அநர்த்தத்தை, சரதி - அனுட்டிக்கிறான். (௩௬)

(தா-ம்.) ஓ விருஷ்ணி குலத்தில்ஜனித்தவனே! இந்தப்புருஷன், ஞானயோகத்தில் பிரவர்த்தித்தவன் தான் விரும்பாமலே, எதனால் பலவந்தமாய்ப் ப்ரேரேபிக்கப் பட்டவன்போல பாபத்தை விஷயாநுபவத்தைச் செய்கிறான. (௩௬)

### ஸ்ரீகிருஷ்ணவாக்கியம்.

𑌕𑌾𑌮 𑌏𑌷 𑌕𑍍𑌰𑍋𑌧 𑌏𑌷 𑌰𑌜𑍋𑌗𑍁𑌣𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌃 ।
𑌮𑌹𑌾𑌶𑌨𑍋 𑌮𑌹𑌾𑌪𑌾𑌪𑍍𑌮𑌾 𑌵𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑍇𑌨𑌮𑌿𑌹 𑌵𑍈𑌰𑌿𑌣𑌮𑍍 ॥௩௭॥

(ப-ம்.) ஏஷ: - (நீகேட்ட) இந்த (காரணமானது), ரஜோகுண ஸமுத்பவ: - ரஜோகுணத்தால் உண்டான, காமஏவ-காமமே; ஏஷ: - இதுதான், க்ரோத: - கோப (மாவதும்), (அது) மஹா

அசந: - பெரும் ஆஹாரங்கொள்ளும், மஹா பாப்மா-பெரிய பாவியானது; அத: - ஆகையால், ஏநம் - இந்த (காமத்தையே), இஹ - (இந்த ஞானயோகத்தில்) வைரிணம்-விரோதியாக, வித்தி - அறி. (௩௭)

(தா-ம்.) இரஜோ குணத்தாலுண்டு பண்ணப்படுகிற, காமம் இது. (விஷயத்திலாசை) இதுவே. குரோதம் விஷயபோகத்திற்குத் தடை நேரிட்டபோது கர்மமே கோபமாக முடிகிறது. எல்லாவற்றையும் புசித்து விடுகின்ற மஹாபாபம். இதையே இவ்விடத்தில் சத்துருவென்று தெரிந்துகொள். (௩௭)

𑌧𑍂𑌮𑍇𑌨𑌾𑌵𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌵𑌹𑍍𑌨𑌿𑌰𑍍𑌯𑌥𑌾𑌦𑌰𑍍𑌶𑍋 𑌮𑌲𑍇𑌨 𑌚 ।
𑌯𑌥𑍋𑌲𑍍𑌬𑍇𑌨𑌾𑌵𑍃𑌤𑍋 𑌗𑌰𑍍𑌭𑌸𑍍𑌤𑌥𑌾 𑌤𑍇𑌨𑍇𑌦𑌮𑌾𑌵𑍃𑌤𑌮𑍍 ॥௩௮॥

(ப-ம்.) யதா வஹ்நி: - எப்படி நெருப்பானது, தூமேந ஆவ்ரியதே - புகையால் சூழப்படுகிறதோ; யதா ஆதர்ச: - எப்படி கண்ணாடியானது, மலேநச - அழுக்காலும் (மறைக்கப்படுகிறதோ); யதா கர்ப்ப: - எப்படி கருவானது, உல்பேநயையினால், ஆவ்ருத: - மூடப்பட்டிருக்கிறதோ; ததா - அப்படி, இதம் - இந்த (பிராணிஸமூகமானது), தேந - அக் (கருமத்தால்), ஆவ்ருதம் - சூழப்பட்டிருக்கிறது. (௩௮)

(தா-ம்.) நெருப்புப் பொகையினாலும், கண்ணாடி அழுக்கினாலும், கருவு "குழந்தை" ஜராயுவினாலும், மறைககப் பட்டிருக்கிறதுபோல், காமத்தினால் இந்தப் பிராணி வரக்கம் மறைக்கப் பட்டிருக்கின்றது. (௩௮)

𑌆𑌵𑍃𑌤𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍇𑌤𑍇𑌨 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌵𑍈𑌰𑌿𑌣𑌾 ।
𑌕𑌾𑌮𑌰𑍂𑌪𑍇𑌣 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌦𑍁𑌷𑍍𑌪𑍂𑌰𑍇𑌣𑌾𑌨𑌲𑍇𑌨 𑌚 ॥௩௯॥

(ப-ம்.) ஹேகௌந்தேய - ஓ குந்திபுத்திர! ஜ்ஞாநிந:-ஞான (குணமான) ஜந்துவின், ஜ்ஞாநம் - (ஆகம) ஞானமானது, துஷ்பூரேண - நிறைக்க முடியாததும், அநலேநச-திருப்தியடையாததுமான, காமரூபேண - காமமென்னும், நித்ய வைரிணா - (இந்த) நித்திய விரோதியாலே, ஆவ்ருதம்-மூடப்பட்டிருக்கிறது. (௩௯)

(தா-ம்.) ஓ குந்திசுதனே! துர்லபமான விஷயங்களை யடைவது திருப்தியில்லாத, காமமாகிய இந்த நித்திய சத்துருவினால், ஞானியினுடைய ஆத்ம ஞானமானது மறைக்கப்பட் டிருக்கின்றது. (௩௯)

𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌮𑌨𑍋 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑌸𑍍𑌯𑌾𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ।
𑌏𑌤𑍈𑌰𑍍𑌵𑌿𑌮𑍋𑌹𑌯𑌤𑍍𑌯𑍇𑌷 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌾𑌵𑍃𑌤𑍍𑌯 𑌦𑍇𑌹𑌿𑌨𑌮𑍍 ॥௪௦॥

(ப-ம்.) அஸ்ய-இதற்கு, இந்த்ரியாணி - புலன்களும், மந: - மனதும், புத்தி: - அத்யவஸாயமும், அதிஷ்டாநம் - அதிஷ்ட

டாக உபகரணமென்று, உச்யதே - சொல்லப்படுகிறது; ஏஷ: - (இக்கர்மமானது) ஏதை: - இவைகளைக்கொண்டு, ஜ்ஞாநம் - (ஆத்ம ஞானத்தை, ஆவ்ருத்ய - மறைத்து, தேஹிநம் - சரீரமெடுத்த வனை, விமோஹயதி - பல்படி மயக்குகிறது. (சப)

(தா-ம்.) இந்திரியங்கள் மனது, புத்தி, இதுகள் காமத்திற்கு வழியாகச் சொல்லப்படுகின்றது. இதுகளால், ஞானத்தை மறைத்துக் கொண்டு இத்தக் காமம், புருஷனை மோகிக்கும்படி செய்கிறது. (சப)

தஸ்மாத்த்வமிந்த்ரியாண்யாதௌ நியம்ய பரதர்ஷப ।
பாப்மாநம் ப்ரஜஹிஹ்யேநம் ஜ்ஞாநவிஜ்ஞாநநாசநம் ॥சக॥

(ப-ம்.) ஹே பரதர்ஷப! - ஓ பரதவம்ச சிரேஷ்டனே! தஸ்மாத் - அக்காரணத்தாலே, த்வம் - நீ, ஆதௌ - ஆரம்பத்தில், இந்த்ரியாணி - புலன்களை, நியம்ய - அடக்கி - ஜ்ஞாந விஜ்ஞாந நாசநம் - (ஆத்மஸ்வரூப) ஞானத்தையும், (அதின் விவேக) ஞானத்தையும் போக்கடிக்கின்ற, ஏநம் பாப்மாநம் - இந்தப் பாவியை, ப்ரஜஹிஹி - நன்றாய் சொல்லு. (சக)

(தா-ம்.) ஆகையால், ஓ பரத சிரேஷ்டனே! நீ இந்திரியங்களை யடக்கி இந்திரிய "ஞானம்" "விஞ்ஞானம்" இதுகளைக் கெடுக்கின்றன. இந்தப் பாபத்தை "கர்மத்தை" நாசஞ்செய். (சக)

இந்த்ரியாணி பராண்யாஹுரிந்த்ரியேப்ய: பரம் மந: ।
மநஸஸ்து பரா புத்திர்யோ புத்தே: பரதஸ்து ஸ: ॥சஉ॥

(ப-ம்.) இந்த்ரியாணி - புலன்களை, பராணி - பிரதானமாக, ஆஹு: - சொல்லுகின்றனர்; இந்த்ரியேப்ய: - புலன்களைக்காட்டிலும், மந: - மனதை, பரம் - பிரதான (மென்பார்கள்); மநஸ: - மனதைக்காட்டிலும், புத்தி: - அத்தியவஸாயமானது, பரா - பிரதானம் (என்பார்கள்); ய: - எது, புத்தே: அபி - அத்தியவஸாயத்தைப் பார்க்க, பரத: து - பிரதானமான தென்றாலே, ஸ: - அது (அந்தக் காமம்.) (சஉ)

(தா-ம்.) ஞானத்தைக் கெடுப்பதற்கு இந்ரியங்களே முக்கியங்களெனப்படும். மனம் இந்திரியங்களைக் காட்டிலும், முக்கியமானது. புத்தியைக்காட்டிலும காமம் முக்கியமானது. (ப஠)பரமாத்மா. (சஉ)

(ரா) ஞானத்திற்கு முக்கிய விரோதி இந்திரியங்கள், அவைகளை விட அதிக விரோதி மனசு, அதைவிட அதிக விரோதி புத்தி, அதை விட மேலானவும், அதிகமாகவும் விரோதி காமம் என்று தாத்பர்யம்.

## இராகவேந்திர சுவாமிகள் செய்திருக்கிற வ்யாக்கியானமாகிய கீதாவிருத்தி.

இந்திரியங்கள் அதைக்காட்டிலும் பெரியவை என்றால்(தேகத்தைக் காட்டிலும்) என்பதைச் சேர்த்துக்கொள்ளவேண்டும். இந்திரியங்களுக்கு அபிமானி தேவதைகளான சந்திரன், குபேரன், சூரியன், வருணன், அஸ்வனி தேவதைகள், அக்கினி, இந்திரன், ஜயந்தன், யமன், தக்ஷன் இவர்களைக்காட்டிலும் விஷயாபிமானி தேவதைகளான ஸௌபர்ணி, வாருணி, பார்வதி இவர்கள் சிரேஷ்டமானவர்கள், இவர்களைக் காட்டிலும் மனோபிமானி தேவதைகளான கருடன், சேஷன், ருத்திரன் இவர்கள் சிரேஷ்டமானவர்கள், இவர்களைக்காட்டிலும் புத்தி அபிமானி தேவதையான சரஸ்வதி சிரேஷ்டமானவள், இவளைக்காட்டிலும் மகத்தத்துவாபிமானியாகிய ப்ரம்மா சிரேஷ்டர். அந்தப் பிரம்மாவைக் காட்டிலும் ப்ரக்ருதி அபிமானிதேவதையான இலக்ஷ்மி சிரேஷ்டமானவள். இலக்ஷ்மியைக்காட்டிலும் சகலகுண பரிபூர்ணரான விஷ்ணு சிரேஷ்டமானவர். இவருக்குப் பெரியவர் ஒருவருமில்லை. அவர்கள்தான் அடையத்தகுந்தவர். இந்த வ்யாககியானத்திற்கு ஆதாரமாய், கடோபநிஷத் வாக்கியத்தையும், அதின் பாஷியத்தையும் குறிப்பிடுகிறார். கடோபநிஷத் ௩-வது வல்லி ௧௦-௧௧ வாக்கியங்கள், இந்த்ரியேப்ய: பரா ஹ்யர்த்தா அர்த்தேப்யஶ்ச பரம் மந:। மநஸஸ்து பரா புத்திர் புத்தேராத்மா மஹாந் பர:। மஹத: பரமவ்யக்தமவ்யக்தாத் புருஷ: பர:। புருஷாந்ந பரம் கிஞ்சித் ஸா காஷ்டா ஸா பரா கதி:॥

ஏவம் புத்தே: பரம் புத்த்வா ஸம்ஸ்தப்யாத்மாநமாத்மநா।
ஜஹி ஶத்ரும் மஹாபாஹோ காமரூபம் துராஸதம்॥ ௪௩॥

(ப-ம்.) ஹே மஹாபாஹோ - பெருந்தோளாய்! ஏவம் - இந்தப்படி, புத்தே: அபி - அத்தியவஸாயத்தைக் காட்டிலும், பரம் - பிரதானமாக, காமம் புத்வா - காமத்தை யறிந்து, ஆத்மாநம் - மனதை, ஆத்மநா - அத்தியவஸாயத்தால், ஸம்ஸ்தப்ய - அசையாமல் நிறுத்தி, துராஸதம் - ஜயிக்கவரிய, காமரூபம் சத்ரும் - காமமென்னும் பகையை, ஜஹி - ஜயிக்கப்பார். (௪௩.)

(கா-ம்.) ஓ பெருத்த புஜமுடையவனே! இப்படி புத்தியைக் காட்டிலும் பலத்தையுடையது காமனென்று நினைத்து, புத்தியினால் மனதை "கன்மயோகத்தில்" நிறுத்தி, இந்தக் காமமென்கிற பகைவனை நிர்மூலப் படுத்துவாயாக. (௪௩.)

**கர்மயோக:**

**ஸ்ரீ க்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:**

**மூன்றாவது அத்தியாயம் முற்றிற்று.**

# நான்காவது அத்தியாயம்.

## ஜ்ஞாநயோகம்.

### ஸ்ரீக்ருஷ்ணவாக்கியம்.

இமம் விவஸ்வதே யோகம் ப்ரோக்தவாநஹமவ்யயம்|
விவஸ்வாந் மநவே ப்ராஹ மநுரிக்ஷ்வாகவேऽப்ரவீத்|| க||

(ப-ம்.) அஹம்-நான், அவ்யயம்-நாசமில்லாத, இமம் யோகம்-இந்த (கரும) யோகத்தை, விவஸ்வதே-சூரியனுக்கு, ப்ரோக்தவாந்-உபதேசித்தேன்; விவஸ்வாந்-சூரியன், மநவே - மனுவுக்கு, ப்ராஹ-உபதேசித்தார்; மநு:-மனுவானவர், இக்ஷ்வாகவே-இக்ஷ்வாகுவுக்கு, அப்ரவீத்-உபதேசித்தார். (க)

(தா-ம்) யான் இச்சிறந்த ஞானயோகத்தை முன் சூரியனுக்குரைத்தேன். சூரியன், தன்புத்திரனாகிய மனுசக்கிரவர்த்திக்குக்கூறினன் மனுசக்கிரவர்த்தி இக்ஷ்வாகுமஹாராஜனுக்குசொன்னார். (க)

ஏவம் பரம்பராப்ராப்தமிமம் ராஜர்ஷயோ விது:|
ஸ காலேநேஹ மஹதா யோகோ நஷ்ட: பரந்தப|| உ||

(ப-ம்) ஹே பரந்தப! - வீராய் பகைவரை வெல்லுவோய்! ஏவம்-இம்மாதிரி, பரம்பரா ப்ராப்தம்-பரம்பரையாய் வந்த, இமம்-இந்தஜ்ஞானயோகத்தை, ராஜர்ஷய:-இராஜரிஷிகள், விது:-அறிந்தார்கள்; ஸ: யோக:-அப்படிப்பட்ட யோகமானது, இஹ-உலகத்தில், மஹதா காலேந-நெடுங்காலமாய், நஷ்ட:-அற்றுப்போயிற்று. (உ)

(தா-ம்.) இவ்வண்ணம் பரம்பரையா யோதிக்கொண்டுவந்த இந்தயோகத்தை இராஜர்ஷிகளறிவார்கள். ஓ பரந்தபனே! அஃதுவெகுகாலமானதாலத்தகைய யோக மிப்பொழுது க்ஷீணமடைந்தது போல் காணப்படுகிறது. (உ)

ஸ ஏவாயம் மயா தேऽத்ய யோக: ப்ரோக்த: புராதந:|
பக்தோऽஸி மே ஸகா சேதி ரஹஸ்யம் ஹ்யேததுத்தமம்|| ௩||

(ப-ம்.) ஸ:-(அப்படிப்பட்ட) புராதந: - பிராசீனமான, அயம் யோக: ஏவ-இந்த யோகமே, மே பக்த:-எனக்குப் பக்தனும், ஸகா ச-தோழனுமாய், அஸி இதி-இருக்கின்றாய் என்று, தே அத்ய-உனக்கு இப்பொழுது, மயாப்ரோக்த:-என்னால் உபதேசிக்கப்பட்டது, ஏதத் - இது, உத்தமம் ரஹஸ்யம்ஹி - உத்தமமான இரஹஸியமன்றோ? (௩)

(தா-ம்.) அநாதியான அந்த யோகத்தையே நீ எனக்கு பக்தனும் நேசனுமிருப்பதால் யானுனக்கறிவித்தேன். இஃது மிகவும் இரகசியம்; இதை யான் தவிர வேறொருவர் அறிவதற்கும் பிறருக்கோதிவைப்பதற்கு முடியாதென்றறிக. (௩)

அர்ச்சுனவாக்கியம்.

𑌅𑌪𑌰𑌂 𑌭𑌵𑌤𑍋 𑌜𑌨𑍍𑌮 𑌪𑌰𑌂 𑌜𑌨𑍍𑌮 𑌵𑌿𑌵𑌸𑍍𑌵𑌤𑌃 ।
𑌕𑌥𑌮𑍇𑌤𑌦𑍍𑌵𑌿𑌜𑌾𑌨𑍀𑌯𑌾𑌂 𑌤𑍍𑌵𑌮𑌾𑌦𑍌 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌵𑌾𑌨𑌿𑌤𑌿 ॥ ௪॥

(ப-ம்.) (ஹே க்ருஷ்ண)-வாரீர் கண்ணு! பவதஃ ஜந்ம-தேவரீருடைய அவதாரம், அபரம்-பின்னிட்டது; விவஸ்வதஃ-சூரியனுடைய, ஜந்மது-பிறப்போ, பரம்-முன்னிட்டது; த்வம்-நீர், ஆதௌ - ஆதியில், ப்ரோக்தவாந் இதி-உபதேசித்தீர் என்று, ஏதத் கதம் - இதையெப்படி? விஜாநீயாம்-அறிகுவன். (௪)

(தா-ம்) சூரியனுடைய வுற்பத்தி முந்தியும் உம்முடையயுற்பத்தி பிந்தியுமாக விருக்க நீவிர் பிரதமத்தில் இதை சூரியனுக்கோதிவைத்தீரென்பதையானுண்மையென நம்புவதெப்படி? (௪)

ஸ்ரீகிருஷ்ண வாக்கியம்.

𑌬𑌹𑍂𑌨𑌿 𑌮𑍇 𑌵𑍍𑌯𑌤𑍀𑌤𑌾𑌨𑌿 𑌜𑌨𑍍𑌮𑌾𑌨𑌿 𑌤𑌵 𑌚𑌾𑌰𑍍𑌜𑍁𑌨 ।
𑌤𑌾𑌨𑍍𑌯𑌹𑌂 𑌵𑍇𑌦 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌨 𑌤𑍍𑌵𑌂 𑌵𑍇𑌤𑍍𑌥 𑌪𑌰𑌂𑌤𑌪 ॥ ௫॥

(ப-ம்.) ஹே அர்ச்சுந-ஓ அருச்சுனு! தவச - உன்னைப்போலமே-எனக்கும், பஹூநி ஜந்மாநி-பல பிறவிகள், வ்யதீதாநி - கழிந்தன; ஹே பரந்தப-ஓ பரந்தபனே! தாநி ஸர்வாணி-அந்த ஜன்மங்களெல்லாவையும், அஹம் வேத-நான் அறிவேன், த்வம்-நீ, நவேத்த-அறியாய். (௫)

(தா-ம்.) ஓ அர்ஜுனு! இதுவரையிலும் எனக்களவற்ற ஜன்மமாயின, உந்தனுக்கு மவ்வாறே வெகுஜன்மமாயிற்று. ஏ பார்த்தா! அவை யாவையும் யானறிவேன் உனக்கது தெரியாது. (௫)

𑌅𑌜𑍋𑌽𑌪𑌿 𑌸𑌨𑍍𑌨𑌵𑍍𑌯𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑍋𑌽𑌪𑌿 𑌸𑌨𑍍 ।
𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌸𑍍𑌵𑌾𑌮𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌯 𑌸𑌂𑌭𑌵𑌾𑌮𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌮𑌾𑌯𑌯𑌾 ॥ ௬॥

(ப-ம்.) அஜஃ-பிறப்பற்றவதாய், அவ்யய ஆத்மாஸந்அபி - நசியாத ஸ்வரூபியாயினும், பூதாநாம்-பிராணிகளுக்கு, ஈச்வரஃ ஸந்அபி-ஈசனாயினும், ஸ்வாம் ப்ரக்ருதிம்-சொந்தமான பிரகிருதியை, அதிஷ்டாய-அதிஷ்டித்து, ஆத்மமாயயா - என்னுடைய ஸங்கல்பத்தால், ஸம்பவாமி-அவதரிக்கிறேன். (௬)

(தா-ம்) யான் பிறப்பிறப்பற்றவனும் அகில ஜீவன்களுக்கீசுவரனுமிருந்தபோதிலும், எனது ஈஸ்வர ஸ்வரூபத்தைத்தொடர்ந்தே ஆன்மசங்கற்பத்தாலுதிக்கிறேன். (சு)

யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர்பவதி பாரத |
அப்யுத்தாநமதர்மஸ்ய ததாத்மாநம் ஸ்ருஜாம்யஹம்|| எ||

(ப-ம்.) ஹே பாரத-ஓ அருச்சுனா! தர்மஸ்ய - தருமத்திற்கு, யதா-எப்பொழுது, க்லாநி:பவதி-வாட்ட முண்டாகிறதோ, அதர்மஸ்ய-அதருமத்திற்கு, யதா - எப்பொழுது, அப்யுத்தாநம் - கிளர்ச்சி, (பவதி)-உண்டாகின்றதோ, ததா ஆத்மாநம்-அப்பொழுது என்னை, ஸ்ருஜாமி-அவதரிப்பிக்கிறேன். (எ)

(தா-ம்.) ஏ பார்த்தனே! எப்பொழுது வேதத்திற்கூறிய தர்மத்திற்கு தீங்கும் அதர்மத்திற்கு விருத்தியுமுண்டாகிறதோ அப்பொழுது என்னை யானே படைத்துக்கொள்ளுகிறேன். (எ)

பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம்|
தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே|| அ||

(ப-ம்) ஸாதூநாம்-பரமவைதிகதருமத்தை அநுட்டிப்பவர்களின், பரித்ராணாய-ஸம்ரக்ஷணத்துக்காகவும், துஷ்க்ருதாம் - துஷ்கர்மாக்களின், விநாசாயச - அழிவுக்காகவும், தர்ம ஸம் ஸ்தாபநார்த்தாய-வைதிகத்தருமத்தை நிலை நாட்டுவதற்காகவும், யுகேயுகே-யுகந்தோறும், ஸம்பவாமி-அவதரிக்கிறேன். (அ)

(தா-ம்) நன்மனதுடைய சாதுக்களைப் பாதுகாப்பதற்குங்கொடியவர்களைத் தண்டிப்பதற்கும் வைதிகதர்மத்தை நிலைபெறநாட்டுவதற்கும் யுகந்தோறும் உதிக்கின்றேன். (அ)

ஜந்ம கர்ம ச மே திவ்யமேவம் யோ வேத்தி தத்வத: |
த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோர்ஜுந|| கூ||

(ப-ம்) ஏவம்-இப்படிப்பட்ட, மே-என்னுடைய, திவ்யம் ஜந்ம-திவ்வியமான பிறப்பையும், கர்ம-கருமத்தையும், தத்வத:- உள்ளபடியே, ய:வேத்தி-எவன் அறிகிறானோ, ஹே அர்ஜுந!-ஓ அருச்சுனா! ஸ:-அவன், தேஹம் த்யக்த்வா-சரீரத்தைவிட்டு, புந: ஜந்ம-ஜனன மரணரூப ஸம்ஸாரத்தை, ந ஏதி-அடைகிறதில்லை; மாம் ஏதி - என்னையே அடைகிறான். (கூ)

(தா-ம்) அர்ஜுனனே! என்னிட ஜந்மமும் கன்மமும் பிரகிருதி

சம்பந்த மற்றதென்றெவனுணர்வமையறிகிறானோ அவன் சரீரத்தை விட்டபின் மீண்டு மிக்கன்மபூமியில் ஜனிக்கிறதில்லை. (௯)

வீதராகபயக்ரோதா மந்மயா மாமுபாஶ்ரிதா: |
பஹவோ ஜ்ஞாநதபஸா பூதா மத்பாவமாகதா: || ௧௦ ||

(ப-ம்) ஜ்ஞாநதபஸா-ஞானத் தவத்தினால், பூதா:-பரிசுத்தர்களான, பஹவ:-வெகுபெயர்கள், மாம்உபாஶ்ரிதா:-என்னை அடைந்தவர்களாய், வீதராகபயக்ரோதா:-காமம் பயம் கோபமிவையற்று மந்மயா:-என்மயமாய்க்கொண்டு, மத்பாவம்-என்னுடைய ஸாயுஜ்ஜியத்தை, ஆகதா:-அடைந்தார்கள். (௰)

(தா-ம்) அருந்தவத்தினாற் சுத்தர்களான அனேகஞானிகள் இராகம் பயம் மோகம் இதுகளை நிர்மூலப்படுத்தி எந்தன் தன்மையை அடைந்து எந்தனை பஜித்து முத்தியைப் பெற்றனர்கள். (௰)

யே யதா மாம் ப்ரபத்யந்தே தாம்ஸ்ததைவ பஜாம்யஹம் |
மம வர்த்மாநுவர்தந்தே மநுஷ்யா: பார்த ஸர்வஶ: || ௧௧ ||

(ப-ம்.) ஹே பார்த்த-வாராய் அர்ச்சுனா! யே யதா - எவர்கள் எப்படி, மாம் ப்ரபத்யந்தே-என்னை ஆஶ்ரயிக்கிறார்களோ, தாந் அஹம்-அவர்களை யான், ததாஏவ-அப்படியே, பஜாமி-அடைகிறேன், அருள்கிறேன்; மநுஷ்யா:-மனிதர்கள், மம வர்த்ம-எனது மார்க்கத்தை, ஸர்வஶ:-ஸாவப்பிரகாரத்தாலும், அநுவர்தந்தே- அநுஸரிக்கின்றார்கள். (௧௧)

(தா-ம்) பார்த்தனே! எவரெவ்வண்ணம் என்னை பாவிக்கிறார்களோ, அவ்வண்ணமே யானவர்கட்கருட்செய்கின்றேன். (௧௧)

காங்க்ஷந்த: கர்மணாம் ஸித்திம் யஜந்த இஹ தேவதா: |
க்ஷிப்ரம் ஹி மாநுஷே லோகே ஸித்திர்பவதி கர்மஜா || ௧௨ ||

(ப-ம்.) இஹ-உலகத்தில்(உள்ளவர்), கர்மணாம்-கருமங்களின், ஸித்திம்-பலனை, காங்க்ஷந்த:-அபேக்ஷிக்கவர்களாய், தேவதா:-தேவர்களை, யஜந்தே-ஆராதிக்கின்றார்கள்; ஹி-ஏனென்றால், மாநுஷே லோகே-மனுஷ்யலோகத்தில், கர்மஜா ஸித்தி:-கருமப்பயனானது, க்ஷிப்ரம் பவதி-துரைவில் உண்டாகிறது. (௧௨)

(தா-ம்) இவ்வுலகின்கண்ணே கன்மங்கட்குத்தக்க ஸ்வர்காதிசுகத்தை விரும்பினோர் இந்திரன் முதலிய தேவர்களை யாசிக்கின்றனர்கள், ஏனெனின் இம்மண்ணுலகில் சன்மத்திற்குரிய நற்பயன் சீக்கிரத்திற் சித்திக்கின்றதாலென்க. (௧௨)

𑌚𑌾𑌤𑍁𑌰𑍍𑌵𑌰𑍍𑌣𑍍𑌯𑌂 𑌮𑌯𑌾 𑌸𑍃𑌷𑍍𑌟𑌂 𑌗𑍁𑌣𑌕𑌰𑍍𑌮𑌵𑌿𑌭𑌾𑌗𑌶𑌃।
𑌤𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌮𑌪𑌿 𑌮𑌾𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍॥ ௧௩

(ப-ம்) சாதுர் வர்ண்யம்-நான்கு வருணமும், குண கர்ம விபாகசஃ-குண கருமங்களின் பிரிவாய், மயா ஸ்ருஷ்டம்-என்னால் ஸ்ருஷ்டிக்கப்பட்டது; தஸ்ய-அதற்கு, கர்தாரம் அபி - கர்த்தாவாயிருக்கச் செய்தே, அகர்தாரம்-கர்த்தாவல்லேனென்பதாகவும், அவ்யயம்-நாசமற்றவனாகவும், மாம் வித்தி-என்னை அறி. (௧௩)

(தா-ம்) ஸத்துவ ரஜஸ் தமோகுணங்களையும், சாந்தி, குரோதம், மோஹம், உலோபம் இதுகளையும் பகுத்து உலகமெல்லாம் என்னால் படைக்கப்பட்டன; எல்லாவற்றிற்கும் யானே காரணனாகவிருந்தாலும், ஒன்றிற்கும் காரணனல்லனென்றும், நித்தியனென்றும் எந்தனை யுணரக்கடவாய். (௧௩)

𑌨 𑌮𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌲𑌿𑌮𑍍𑌪𑌨𑍍𑌤𑌿 𑌨 𑌮𑍇 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑍇 𑌸𑍍𑌪𑍃𑌹𑌾।
𑌇𑌤𑌿 𑌮𑌾𑌂 𑌯𑍋𑌽𑌭𑌿𑌜𑌾𑌨𑌾𑌤𑌿 𑌕𑌰𑍍𑌮𑌭𑌿𑌰𑍍𑌨 𑌸 𑌬𑌧𑍍𑌯𑌤𑍇॥ ௧௪

(ப-ம்) கர்மாணி-கருமங்கள், மாம்-என்னை, ந லிம்பந்தி-ஒட்டுகிறதில்லை, மே-எனக்கு, கர்ம பலே-கருமப் பயனில், ஸ்ப்ருஹா ந-இச்சை இல்லை, இதி-என்று, யஃ மாம்-எவன் என்னை, அபிஜாநாதி-அறிகிறானோ, ஸஃ அவன் கர்மபிஃ-கருமங்களால், நபத்யதே-கட்டுப்படுகிறதில்லை. (௧௪)

(தா-ம்) சிருஷ்டி முதலிய கன்மங்களென்னைச்சாரமாட்டாது. சிருஷ்டி முதலியகன்மங்களின்பயனிலுமெனக்கு விருப்பங்கிடையாது இவ்வண்ணமென்னை யெவனுய்த்துணருகின்றானோ அவனுக்கு ஞானயோகத்திற்கு வைரியான ஜன்மாந்தர தீவினைகளொழியும். (௧௪)

𑌏𑌵𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌕𑍃𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌪𑍂𑌰𑍍𑌵𑍈𑌰𑌪𑌿 𑌮𑍁𑌮𑍁𑌕𑍍𑌷𑍁𑌭𑌿𑌃।
𑌕𑍁𑌰𑍁 𑌕𑌰𑍍𑌮𑍈𑌵 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌪𑍂𑌰𑍍𑌵𑍈𑌃 𑌪𑍂𑌰𑍍𑌵𑌤𑌰𑌂 𑌕𑍃𑌤𑌮𑍍॥

(ப-ம்) ஏவம் ஜ்ஞாத்வா-இப்படி அறிந்து, பூர்வைஃமுமுக்ஷுபிஃ-முந்திய மோக்ஷகாமர்களால, கர்ம க்ருதம்-கருமயோகம் செய்யப்பட்டது; தஸ்மாத் த்வம்-ஆகையால் நீ, பூர்வைஃக்ருதம்-முன்னோர்களால் செய்யப்பட்ட, பூர்வதரம் கர்ம ஏவ - ப்ராசீந கருமத்தையே, குரு-செய். (௧௫)

(தா-ம்) இவ்வாறு என்னையறிந்த முன்னோர்களான முமுக்ஷுக்கள்கூட கர்மங்களையே அநுஷ்டித்தனர்கள். ஆதலால் முன்னோர்

களான சூரியன் மநு முதலானோர் செய்த கன்மத்தைநீயு மநுஷ்டிப்பாயாக. (௧௫)

கிம் கர்ம கிமகர்மேதி கவயோப்யத்ர மோஹிதா:|
தத்தே கர்ம ப்ரவக்ஷ்யாமி யஜ்ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸேऽசுபாத்||

(ப-ம்) கர்ம கிம்-கருமம் எப்படிப்பட்டது? அகர்ம கிம் - அகர்ம்ம எப்படிப்பட்டது? இதி-என்று, அத்ர-இவ்விஷயத்தில், கவய: அபி-வித்வான்களும், மோஹிதா:-மயக்கமுற்றார்கள்; தத்தே-அதை உனக்கு, ப்ரவக்ஷ்யாமி-சொல்லுகிறேன்; யத் ஜ்ஞாத்வா-யாதொன்றை அறிந்து (அநுபவித்து), அசுபாத்-சம்சாரபந்தமான பாபத்திலிருந்து, மோக்ஷ்யஸே-விடுபடுவாய். (௧௬)

(தா-ம்) முமுக்ஷுக்கள் (முக்தியைவிரும்புவோர்) அநுஷ்டிக்கவேண்டிய கன்மமெது? அகர்மமெது? என்கிற விஷயத்திற் கற்றோர்கள்கூட சந்தேகிக்கிறார்கள். அப்படி ஆன்மஞான சம்பந்தமான கன்மத்தை யுனக்குரைக்கின்றேன்; அதை யுள்ளுநன்றி யுணரப்பெற்றுத் துன்பக்கடலான சம்சாரபந்தத்தை யொழிப்பாயாக. (௧௬)

கர்மணோ ஹ்யபி போத்தவ்யம் போத்தவ்யம் ச விகர்மண:|
அகர்மணஸ்ச போத்தவ்யம் கஹநா கர்மணோ கதி:|| ௧௭||

(ப-ம்) ஹி-ஏனென்றால், கர்மண:-கருமயோகத்துக்கு, போத்தவ்யம்-அறியத்தக்கது, விகர்மண:-(அதற்குச் சாதனமான பற்பல) கருமத்துக்கும், போத்தவ்யம்-அறிந்து கொள்ளவேண்டியது, அகர்மணச்ச-ஞானத்துக்கும், போத்தவ்யம்-அறிந்து கொள்ளவேண்டியது, கர்மண: கதி:-கருமத்தின் கதியானது, கஹநா-அறிவரியது. ()

(தா-ம்) கன்மத்திலும், அதற்கங்கமான விகாமமென்னும் நித்தியநைமித்திக கன்மங்களிலும், அகர்மமென்கிற ஞானயோகத்திலுமறியத்தக்கவைகள் பலவுளவாங்கனமாயின், கன்மத்தின் முறைமைகளை தெரிந்துக்கொள்ளுதற்கு முடியாது. (௧௭)

கர்மண்யகர்ம ய: பச்யேதகர்மணி ச கர்ம ய:|
ஸ புத்திமாந் மநுஷ்யேஷு ஸ யுக்த: க்ருத்ஸ்நகர்மக்ருத்|| ௧௮||

(ப-ம்) ய: கர்மணி-யாவனொருவன் கருமத்தில், அகர்ம-(ஆத்ம) ஞானத்தை, பச்யேத்-பார்க்கிறானோ; அகர்மணி-ஞானத்தில், கர்மச-கருமத்தையும், பச்யேத்-பார்க்கிறானோ, ஸ: புத்திமாந்-அவன் புத்

திசாலி; ஸ:-அவன், மநுஷ்யேஷு-மனிதரிடையில், யுக்த:- (மோக்ஷ)யோக்கியன்; (ஸ: ஏவ) அவனே, க்ருத்ஸ்நகர்ம க்ருத்-எல்லாக் கருமத்தையும் செய்தவன். (கஅ)

(தா-ம்) யாதாமொருவன் கன்மத்தில் ஞானத்தையும், கர்மத்தையும், பாவிக்கின்றனோ அவனேஞானியெனப்படுவன். அவனே மானிடருள் முத்திபெறத்தக்கவன். அவனே வைதிக கன்மங்கள்யாவையுஞ்செய்து முடித்தவன். (கஅ)

யஸ்ய ஸர்வே ஸமாரம்பா: காமஸங்கல்பவர்ஜிதா:।
ஜ்ஞாநாக்நி தக்தகர்மாணம் தமாஹு: பண்டிதம் புதா:॥ கக॥

(ப-ம்) யஸ்ய-எந்த (மோக்ஷார்த்திக்கு), ஸர்வே ஸமாரம்பா:-எல்லாக் கருமங்களும். காம ஸங்கல்ப வர்ஜிதா:-அபேக்ஷையும் சங்கற்பமும் அற்றவைகளோ, தம்-அவனை, புதா: - (தத்வ)மறிந்தவர்கள், பண்டிதம்-வித்வானென்றும், ஜ்ஞாநாக்நி தக்த கர்மாணம்-அறிவென்னும் தீயினால பொசுக்கப்பட்ட வினையுற்றவனென்றும், ஆஹு:-சொல்லுகிறார்கள். (கக)

(தா-ம்) எவனிட கன்மம் யாவற்றும் பயனைக்கருதியும்,சங்கற்பத்தை யுட்கொண்டு மில்லையோ, அப்படிப்பட்ட வநுபவத்தினைதான் ஞானமென்னும் பெருஞ்சுடரால் கொளுத்தப்பட்ட தீயவினையை யுடையவனென்றுன்றோர் கூறுவார். (கக)

த்யக்த்வா கர்மபலாஸங்கம் நித்யத்ருப்தோ நிராஸ்ரய:।
கர்மண்யபிப்ரவ்ருத்தோऽபி நைவ கிஞ்சித் கரோதி ஸ:॥ உ0॥

(ப-ம்.) ய:-யாவனொருவன், கர்ம பலாஸங்கம்-கருமப் பயனில் பற்றை, த்யக்த்வா-விட்டு, நித்ய த்ருப்த:-நித்யமான (ஆத்மாவில்)திருப்தியடைந்தவனும், நிராஸ்ரய:-(சரீராதிகளில்) இது ஆஸ்ரயம் (என்கிற புத்தி)யற்றவனுகிறனோ, ஸ:-அவன், கர்மணி-கருமத்தில், அபி ப்ரவ்ருத்த: அபி-ஊற்றத்தோடு முயன்றபோதிலும், கிஞ்சித் அபி - கொஞ்சமும்; நகரோதி ஏவ-செய்கிறனில்லையே. (உ0)

(தா-ம்) கன்மத்தினது பயனை விரும்பாது நித்திய வஸ்துவின் கண்ணே மனதைத் தாக்கினவனும், அநித்தியமான பிரகிருதியின் குணத்தை யாதாரமாக எண்ணுமது முள்ளவனெவனே, அவன் கன்மத்திற் பிரவேசித்தவனுயினும், எத்தகைய கன்மத்தையுஞ் செய்தவனன்று. (உ0)

நிராஶீர்யதசித்தாத்மா த்யக்தஸர்வபரிக்ரஹ꞉|
ஶாரீரங்கேவலங்கர்ம குர்வந்நாப்நோதி கில்பிஷம்|| உக||

(ப-ம்.) நிராசீ꞉-ஆசையற்றவனாய், யத சித்த ஆத்மா-அடக்கிய மனதும் சித்தமுமுடையனாய், த்யக்த ஸர்வபரிக்ரஹ꞉ - விடப்பட்ட ஸகல விஷயங்களுமுடையனாய், சாரீரம் கேவலம்-சரீரத்துக்குமாத்திரம்வேண்டிய, கர்ம-கருமத்தை, குர்வந்அபி - செய்துவந்த போதிலும், கில்பிஷம்-ஸம்ஸாரபந்தத்தை, நாப்நோதி-அடையமாட்டான்.

(தா-ம்) பலத்திலாசை யற்றவனும் மனதையும் இந்திரியங்களையும் கட்டினவனும், பிரகிருதிவஸ்துக்களிலகப்பாவத்தையொழித்தவனும், சரீரத்தைச்சார்ந்த கன்மத்தைமாத்திரஞ் செய்கிறவனுமிருக்கிறவன் பாவத்தையடையான். (உக)

யத்ருச்சாலாபஸந்துஷ்டோ த்வந்த்வாதீதோ விமத்ஸர꞉|
ஸம꞉ ஸித்தாவஸித்தௌ ச க்ருத்வாபி ந நிபத்யதே|| உஉ||

(ப-ம்.) யத்ருச்சா லாப ஸந்துஷ்ட꞉-விரும்பாமல் கிடைத்த ஆஹாரபதார்த்தால த்ருப்தியடைந்தவனும், த்வந்த்வ அதீத꞉-சுகதுக்கங்களைக் கடந்தவனாய்ப் பொறுத்தவனாய், விமத்ஸர꞉-அசூயையற்றவனும், ஸித்தௌ-லாபத்திலும்; அஸித்தௌ ச - அலாபத்திலும், ஸம꞉-ஸம(புத்தியாயிருக்கும் புருஷன்), கருத்வாபி - செய்தும், நபத்யதே-கட்டுப்படுகிறதில்லை. (உஉ)

(தா-ம்) முயற்சியின்றி அதுவாய்க்கிடைத்த வஸ்துவினுள்ளக்கிளர்ச்சியுடன் திருப்தியடைந்து சீதோஷ்ணமென்னு மின்பதுன்பத்தை விடுத்து பிறரிடத்திற் பொறாமையின்றி தனக்கு நேரிடுந்தீங்குகள் யாவற்றையும் வினையின் பயனென்றொதுக்கி இலாபநஷ்டங்களிற் சமபுத்தி வகித்தவன கன்மத்தைச் செய்தாலும் ஸம்சாரபந்தத்திலகப்படான். (உஉ)

கதஸங்கஸ்ய முக்தஸ்ய ஜ்ஞாநாவஸ்திதசேதஸ꞉|
யஜ்ஞாயாசரத꞉ கர்ம ஸமக்ரம் ப்ரவிலீயதே|| உங||

(ப-ம்) ஜ்ஞாந அவஸ்தித சேதஸ꞉ - (ஆத்ம) ஞானத்தில் ஊன்றிய மனமுடையனாய், கத ஸங்கஸ்ய-விஷயத்தில் ஆசையற்று, முக்தஸ்ய-காமக்ரோதங்களை விட்டவனாய், யஜ்ஞாய - யாகத்துக்காக,

ஆசரதஃ-பகவத் பரீத்யர்த்தமாகவே செய்கிறவனுடைய, கர்ம - (புண்ணியபாவமென்கிற) கருமம், ஸமக்ரம்-முழுதும், ப்ரவிலீயதே-நசித்துப்போகும். (௨௩)

(தா-ம்.) மெஞ்ஞானத்தில் ஸ்திரபுத்திவைத்து அதற்கு வேறுபாடான வஸ்துக்களில் விருப்பமின்றி பிரகிருதி சம்பந்தத்தை வேரறுத்தவன்செய்யும் யாகாதிகன்மங்களால் புண்ணியபாபமான பிராசீநகன்மங்கள் யாவும் நசிக்கும். (௨௩)

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌰𑍍𑌪𑌣𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌹𑌵𑌿𑌰𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌗𑍍𑌨𑍌 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌾 𑌹𑍁𑌤𑌮𑍍 ।
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵 𑌤𑍇𑌨 𑌗𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌕𑌰𑍍𑌮𑌸𑌮𑌾𑌧𑌿𑌨𑌾 ॥ ௨௪ ॥

(ப-ம்) ப்ரம்ஹார்பணம் - பிரமஸ்வரூப ஸ்ருக்முதலியவற்றையுடைய, ப்ரம்ஹஹவிஃ - பிரமஸ்வரூபமான அவிஸ்ஸானது, ப்ரம்ஹணா-பிரமஸ்வரூப (கர்த்தாவால்), ப்ரம்ஹஅக்நௌ-பிரமஸ்வரூப அக்கினியில், ஹுதம்-ஓமம்பண்ணப்பட்டது, இதி - என்று, ப்ரம்ஹகர்ம ஸமாதிநா-பிரமஸ்வரூபம் கருமமென்கிற நினைவுள்ள, தேந-அவனால்; ப்ரம்ஹ ஏவ-பிரம்ம (ஸ்வரூபஆத்மாவே) கந்தவ்யம்-அடையத்தக்கதாகும். (௨௪)

(தா-ம்) பிர்மமாகிய சாதனவஸ்துவுடன்கூடிய பிர்மமென்னும் ஹோமத்திரவியமானது பிர்மமென்கிற அக்கினியிற் பிர்மரூபியான கர்த்தனால் ஹோமஞ்செய்யப்படுகின்றது. அப்படிப்பட்ட பிர்மரூபமான கர்மத்தைத் தியானிப்போருக்கு பிர்மரூபமான ஆன்மஞானம் லபிக்கும். (௨௪)

𑌦𑍈𑌵𑌮𑍇𑌵𑌾𑌪𑌰𑍇 𑌯𑌜𑍍𑌞𑌂 𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇 ।
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌗𑍍𑌨𑌾𑌵𑌪𑌰𑍇 𑌯𑌜𑍍𑌞𑌂 𑌯𑌜𑍍𑌞𑍇𑌨𑍈𑌵𑍋𑌪𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑌿 ॥ ௨௫ ॥

(ப-ம்.) அபரே-சில, யோகிநஃ-(கரும) நிஷ்டர்கள், தைவம்ஏவ-தேவதார்ச்சனரூபமான, யஜ்ஞம்-யக்ஞத்தை, பர்யுபாஸதே - அநுட்டிக்கிறார்கள்; அபரே-சிலர், யஜ்ஞம்-யக்ஞத்துக்குச் சாதனமான (அவிஸ்ஸை), யஜ்ஞேந ஏவ-யக்ஞத்தின் உபகரணமான (ஸ்ருகாதியால்), ப்ரம்ஹ அக்நௌ - பிரமஸ்வரூப அக்கினியில், உபஜுஹ்வதி-ஓமம் செய்கிறார்கள். (௨௫)

(தா-ம்) சிலயோகிகள் தேவார்ச்சனரூபமான யஞ்ஞத்தையே கர்மமென்றநுஷ்டிக்கின்றனவர்கள், மற்றுஞ் சிலர் பிர்மமென்னுமக்கினியில் யஞ்ஞசாதனத்தினாலேயே யஞ்ஞத்தை "ஹவிஸ்ஸை" ஹோமஞ்செய்கிறார்கள். (௨௫)

ஶ்ரோத்ராதீநீந்த்ரியாண்யந்யே ஸம்யமாக்நிஷு ஜுஹ்வதி।
ஶப்தாதீந்விஷயாநந்ய இந்த்ரியாக்நிஷு ஜுஹ்வதி॥ ௨௬॥

(ப-ம்.) அந்யே-(பின்னும்) சிலர், ஸ்ரோத்ராதீநி-காது முதலிய, இந்த்யாணி-இந்திரியங்களை, ஸம்யம அக்நிஷு-அடக்குவதென்கிற அக்கினிகளில்; ஜுஹ்வதி-ஓமஞ்செய்கிறார்கள்; அந்யே-(பின்னும்) சிலர், சப்தாதீந் விஷயாந்-சப்தாதிவிஷயங்களை, இந்த்ரிய அக்நிஷு இந்திரியங்களென்றும் அக்கினிகளில், ஜுஹ்வதி - ஓமம் செய்கிறார்கள். (௨௬)

(தா-ம்) சிலர், செவிமுதலிய இந்திரியங்களை நிக்கிரகமென்னும் அக்னியில் ஹோமஞ்செய்கிறார்கள், இன்னுஞ் சில யோகிகள் சப்தஸ்பர்சாதி இந்திரியங்களையே அக்கினியில் ஹோமஞ் செய்கிறார்கள். (௨௬)

ஸர்வாணீந்த்ரியகர்மாணி ப்ராணகர்மாணி சாபரே।
ஆத்மஸம்யமயோகாக்நௌ ஜுஹ்வதி ஜ்ஞாநதீபிதே॥ ௨௭॥

(ப-ம்) அபரே-(பின்னும்) சில,யோகிந:-யோகிகள், ஸர்வாணி-எல்லா, இந்த்ரிய கர்மாணி-இந்திரியங்களின் செயல்களையும்,ப்ராண கர்மாணிச-பிராண வியாபாரங்களையும், ஜ்ஞாந தீபிதே-ஞானத்தால்சொலிக்கின்ற, ஆத்ம ஸம்யமயோக அக்நௌ-மனதை அடக்குவதென்னும் யோகத்தீயில், ஜுஹ்வதி-ஓமம் செய்கிறார்கள். (௨௭)

(தா-ம்) மற்றுஞ் சிலர், இந்திரியங்களின்றொழில்களையும், பிராணாதிகளின்றொழில்களையும், ஜ்வலிக்கும் மனோநிக்கிரகமென்னும் அக்கினியில் ஆகுதிசெய்கிறார்கள். (௨௭)

த்ரவ்யயஜ்ஞாஸ்தபோயஜ்ஞா யோகயஜ்ஞாஸ்ததாபரே।
ஸ்வாத்யாயஜ்ஞாநயஜ்ஞாஶ்ச யதய: ஸம்ஶிதவ்ரதா:॥ ௨௮॥

(ப-ம்.) ஸம்சித வ்ரதா:-திடசங்கற்பமுள்ள, யதய: - கருமயோகிகளான(சிலர்), த்ரவ்யயஜ்ஞா: - திரவியத்தால் யக்ஞஞ்செய்பவர்கள்; தபோயஜ்ஞா:-தவமே யாகமாயுடையவர்கள் (சிலர்), ததா - அப்படியே, அபரே-பின்னும் சிலர், யோக யக்ஞா:-யோகமே (புண்ணியக்ஷேத்திராதிகளுக்குப்போவதே) யக்ஞமாயிருக்கிறார்கள்; (அபரேச)-பின்னும் சிலர், ஸ்வாத்யாயஜ்ஞாந யஜ்ஞா:ச-வேதாப்பியாஸமும்(அதின்) அர்த்தஞானமுமே யக்ஞமாயிருக்கிறார்கள். (௨௮)

(தா-ம்) திருடமான விரதத்தையுடைய சிலபேர்கள் திரவியத்தையே யஞ்ஞமாயுடையவர்கள். மற்றுஞ் சிலர், தவத்தையே யாகமாயுடையவர்கள். இன்னுஞ்சிலர், யோகங்களையே யாகமாயுடைய

வர்கள். சிலர், வேதாத்தியயனத்தையே யஞ்ஞமாயுடையவர்கள் சிலர், வேதார்த்த ஞானத்தையே யஞ்ஞமாயுடையவர்கள். (ஸ0)ஸ ம்சிதவ்ரதா꞉ காயக்கிலேசம்முதலிய சாந்திராயணமுடையோர். ()

அபாநே ஜுஹ்வதி ப்ராணம் ப்ராணேऽபாநம் ததாபரே ।
ப்ராணாபாநகதீ ருத்த்வா ப்ராணாயாமபராயணா꞉ ॥
அபரே நியதாஹாரா꞉ ப்ராணாந்ப்ராணேஷு ஜுஹ்வதி ।

(ப-ம்) அபரே-(பின்னும்) சிலர், ப்ராணாபாநகதிருத்வா - ப்ராணாபானவாயுக்களுடைய நடைகளைத்தடுத்து, ப்ராணாயாம பராயணா꞉-பிராணாயாமநிட்டையுற்றவராய், அபாநே-அபாநத்தில், பிராணம்-பிராணனை, ஜுஹ்வதி-ஓமம் செய்கிறார்கள்; ததா - அப்படியே, அபரே-பின்னும் சிலர், ப்ராணே-பிராணனில், அபாநம் - அபானத்தை, (ஜுஹ்வதி)-ஓமம் செய்கின்றனர். (அபரே)-(பின்னும்) சிலர், நியதாஹாரா꞉-மிதமான ஆகாரஞ் செய்துகொண்டு,ப்ராணேஷு(வேவ)-பிராணன் களிலேயே, ப்ராணாந் - பிராணன்களை, ஜுஹ்வதி-ஓமம் செய்கிறார்கள். (உக-உகூ)

(தா-ம்) பிராணாயாமத்தையே சிலர், ஆகாரநியமத்துடன்,அபானவாயுவில் பிராணவாயுவை ஹோமஞ்செய்கிறார்கள். என்பதால், பூரகமென்னும் பிராணாயாமத்தைச் செய்கிறார்கள். "இன்னுஞ்சிலர் பிராணவாயுவில் அபானவாயுவை ஹோமஞ்செய்கிறார்கள். என்றால், இரேசகமென்னும் பிராணாயாமத்தைச் செய்கிறார்கள்." மற்றுஞ் சிலர், பிராணாபானங்களிரண்டு வாயுக்களின் வழிகளையுந்தகைந்து பிராணவாயுவை பிராணவாயுவிலேயே ஹோமஞ் செய்கிறார்கள். "இதனால் பிராணவாயுவை வெளியிடாமலும், உள்ளுக்கிழுக்காமலும்; ஸ்தம்பித்து கும்பகமென்னும், பிராணாயாமத்தைச் செய்கிறார்கள்." (உக- கூ)

ஸர்வேऽப்யேதே யஜ்ஞவிதோ யஜ்ஞக்ஷபிதகல்மஷா꞉ ॥ க0॥
யஜ்ஞஶிஷ்டாம்ருதபுஜோ யாந்தி ப்ரஹ்ம ஸநாதநம் ।
நாயம் லோகோऽஸ்த்யயஜ்ஞஸ்ய குதோऽந்ய꞉ குருஸத்தம ॥

(ப-ம்.) ஏதே-இவர்கள், ஸர்வே அபி-எல்லாரும், யஜ்ஞ விதஃ-யக்ஞநிட்டை யுடையவர்களாய், யஜ்ஞக்ஷபித கல்மஷா꞉ - யக்ஞங்களால்போக்கப்பட்ட பாபங்களுடையராய், ஹே குருஸத்தம - வராய் அருச்சுன! யஜ்ஞ சிஷ்ட அம்ருதபுஜ꞉-யக்ஞத்தில் மிகுந்த (அன்னமுதலிய) அமுதத்தை உண்டவர்களாய், ஸநாதநம் பிரம்ஹ-சாச்சுவதமான பிரம்மத்தை, யாந்தி-அடைகின்றனர்; அயஜ்ஞஸ்ய-யக்

ஞுமற்றவனுக்கு, அயம்-(சுவர்க்காதிரூபமான) இந்த, லோகஃ-லோ
கத்தி(லுள்ளபுருஷார்த்தமானது), நாஸ்தி-கிடையாது; அந்யஃ-(இ
தற்குப் புறம்பான) மோக்ஷமானது, குதஃ-எப்படி (யுண்டாகும்). ()

(தா-ம்) இவர்களைத்தனரும் யஞ்ஞத்தை யறிந்தவர்களாயும், ய
ஞ்ஞத்தாற் பாபத்தை யொழித்தவர்களாயும், யஞ்ஞசேஷமாகியவ
முதை சரீரத்தை இரக்ஷிப்பதற்காகவுண்டு, சாசுவதமான பிரமத்தை
யுமடைகிறார்கள் ஓ குருவம்சத்திற் பிறந்தவர்களுட்சிறந்த அர்ஜ்ஜு
னு! யஞ்ஞமில்லாதவனுக்கு இவ்வுலகம் லபிக்காது, மோக்ஷங்கிடை
ப்பதேது? (௩௰-௩௧)

𑌏𑌵𑌂 𑌬𑌹𑍁𑌵𑌿𑌧𑌾 𑌯𑌜𑍍𑌞𑌾 𑌵𑌿𑌤𑌤𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌮𑍁𑌖𑍇 ।
𑌕𑌰𑍍𑌮𑌜𑌾𑌨𑍍𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌤𑌾𑌨𑍍𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍇𑌵𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌵𑌿𑌮𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍇 ॥

(ப-ம்.) ஏவம்-இப்படிப்பட்ட, பஹுவிதாஃ-பலவிதங்களான,
யக்ஞாஃ-யக்ஞங்கள், ப்ரம்ஹணஃ-வேதத்தினுடைய, முகே-முகத்தி
ல், விததாஃ-விவரிக்கப்பட்டன; தாங்ஸர்வாந்-அவைகளெல்லாம், கர்
மஜாந்-கருமத்தாலுண்டானவை(யென்று), வித்தி-அறி, ஏவம்-இந்
தப்பிரகாரம், ஜ்ஞாத்வா - அறிந்து (அநுட்டித்து), விமோக்ஷ்யஸே-
சம்ஸாரபந்தத்திலிருந்து விடுபடுவாய். (௩௨)

(தா-ம்) இப்படி பலவிதங்களான கன்மயோகங்கள் பிரமத்தி
னது முகத்தில் வேதரூபமாகவிருக்கிறது. அப்படிப்பட்ட கர்ம
யோகங்கள் யாவும்; நித்தியநைமித்திக கர்மங்களாலுண்டானதெ
ன்றுணர்க. இவ்வண்ண முணர்ந்தபின் முத்திபெறுவாய். (௩௨)

𑌶𑍍𑌰𑍇𑌯𑌾𑌨𑍍𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌮𑌯𑌾𑌦𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑌜𑍍𑌞𑌃 𑌪𑌰𑌂𑌤𑌪 ।
𑌸𑌰𑍍𑌵𑌂 𑌕𑌰𑍍𑌮𑌾𑌖𑌿𑌲𑌂 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇 𑌪𑌰𑌿𑌸𑌮𑌾𑌪𑍍𑌯𑌤𑍇 ॥ ௩௩ ॥

(ப-ம்) பரந்தப-(ஓ அருச்சுனா!) த்ரவ்யமயாத்-திரவியமயமான,
யஜ்ஞாத்-யக்ஞத்தைக்காட்டிலும், ஜ்ஞாந யக்ஞஃ-ஞானமயமானயக்
ஞம், ஶ்ரேயாந்-சிரேஷ்டம்; ஹே பார்த்த-ஓ அருச்சுனா! ஸர்வம்-ஸ
ர்வப்பிரகாரமாயிருக்கின்ற, அகிலம் கர்ம-எல்லாக்கருமமும், ஜ்ஞா
நே-ஆத்மஞானத்தில், பரிஸமாப்யதே-அந்தர்பூதமாயிருக்கிறது. ()

(தா-ம்) ஓ பரந்தபனே! பார்த்தனே! திரவ்யத்தாற்செய்யப்ப
டுகிற யஞ்ஞத்தைவிட ஞானஸ்வரூபமானயஞ்ஞமே மேலானது. கர்
மங்களத்தனையும், நிஶ்ஶேஷமாய் ஞானத்திலேயே முடிவை யடை
கின்றது. (௩௩)

𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌪𑍍𑌰𑌣𑌿𑌪𑌾𑌤𑍇𑌨 𑌪𑌰𑌿𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑍇𑌨 𑌸𑍇𑌵𑌯𑌾 ।
𑌉𑌪𑌦𑍇𑌕𑍍𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃 ॥ ௩௪ ॥

𑌯𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌨 𑌪𑍁𑌨𑌰𑍍𑌮𑍋𑌹𑌮𑍇𑌵𑌂 𑌯𑌾𑌸𑍍𑌯𑌸𑌿 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵 |
𑌯𑍇𑌨 𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌯𑌶𑍇𑌷𑍇𑌣 𑌦𑍍𑌰𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑌥𑍋 𑌮𑌯𑌿 || ௩௫

(ப-ம்.) தத்-அந்த (ஆத்ம ஞானத்தை), ப்ரணிபாதேந - நமஸ்காரத்தாலும், பரிப்ரச்நேந-பல்படியான கேள்வியினலும், ஸேவயா (ச)-சிச்சுரூஷையாலும், வித்தி-அறி; தத்வ தர்சிநः-தத்துவ மறிந்த, ஜ்ஞாநிநः-பண்டிதர்கள், தே -உனக்கு, ஜ்ஞாநம் - (ஆத்ம) ஞானத்தை, உபதேக்ஷ்யந்தி-உபதேசிப்பர்கள். (௩௪)

(ப-ம்) ஹே பாண்டவ-ஓ பாண்டவனே! யத்(ஜ்ஞாநம்) - எந்த ஞானத்தை, ஜ்ஞாத்வா-அறிந்து, புநः-மறுபடியும், ஏவம் - இம்மாதிரி, மோஹம்-அக்ஞானத்தை, ந யாஸ்யஸி-அடையமாட்டாய்; யேந-எந்த(ஞானத்தால்), பூதாநி அசேஷேண - எல்லாப்பூதங்களையெல்லாம், ஆத்மநி-உன்னிடத்தில ஆத்மாவில் தானே, த்ரக்ஷ்யஸி-பார்ப்பாய்; அதோ-அனந்தரம், மயி-என்னிடத்தில், ப்ரணிபாதேந - சாஷ்டாங்கதண்டம் ஸமர்பித்தலுலேயும், பரிப்ரச்சேந - கேட்பதினுலேயும், ஸேவயா-ஆசாரியசேவையினுலேயும், வித்தி-அறி. (௩௫)

(தா-ம்) அத்தகைய ஞானத்தை வணக்கத்தாலும், வினவினலும், பணிவிடையாலுமறிந்துகொள். ஆன்ம சொரூபத்தையறிந்தஞானிகள் அந்த ஞானத்தையுனக்குபதேசிப்பார்கள். ஓ பாண்டவா! அப்படிப்பட்ட ஞானத்தையறிந்து மீண்டும் நீ இவ்வண்ணம் சந்தேகிக்காய், அவ்வறிய ஞானத்தால் எல்லா பிராணிகளையும் உன்னிடத்தும், என்னிடத்து மிருப்பதாக் காண்பாய் என்பதால்; "பிரகிருதி சம்பந்தத்தைவிட ஆன்மசொரூபமெல்லாம் ஞானவடிவாகிச் சமமாய்த்தோற்றுமென்க." (௩௪-௩௫)

𑌅𑌪𑌿 𑌚𑍇𑌦𑌸𑌿 𑌪𑌾𑌪𑍇𑌭𑍍𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑌾𑌪𑌕𑍃𑌤𑍍𑌤𑌮𑌃 |
𑌸𑌰𑍍𑌵𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌪𑍍𑌲𑌵𑍇𑌨𑍈𑌵 𑌵𑍃𑌜𑌿𑌨𑌂 𑌸𑌨𑍍𑌤𑌰𑌿𑌷𑍍𑌯𑌸𑌿 || ௩௬ ||

(ப-ம்)த்வம்-நீ, ஸர்வேப்ய: பாபேப்ய:-எல்லாப்பாவிகளினும் பாபக்ருத்தம:-அதிகப்பாவியாக, அஸிசேத்அபி-இருந்தாயாகிலும், ஸர்வம் வ்ரஜிநம்-எல்லாப்பாவத்தையும், ஜ்ஞாந ப்லவேநஏவ-(ஆத்ம)ஞானமென்னும் ஓடத்தாலேயே, ஸந்தரிஷ்யஸி-நன்கு தாண்டிவிடுவாய். (௩௬)

(தா-ம்.) எல்லாப்பாபிகளைவிட நீ அதிக பாதகனுகவிருந்தபோதிலும், ஸமஸ்தமான பாபமென்னு மலைகடலை ஆத்துமஞானமாகிற ஓடத்தால் தாண்டிவிடுவாய். (௩௬)

𑌯𑌥𑍈𑌧𑌾𑌂𑌸𑌿 𑌸𑌮𑌿𑌦𑍍𑌧𑍋𑌽𑌗𑍍𑌨𑌿𑌰𑍍𑌭𑌸𑍍𑌮𑌸𑌾𑌤𑍍𑌕𑍁𑌰𑍁𑌤𑍇𑌽𑌰𑍍𑌜𑍁𑌨 |

ஜ்ஞாநாக்நிஸ் ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே ததா॥ ௩௭॥

(ப-ம்) ஹே அர்ஜுந-வாராய் அர்ச்சுனா! யதா-எப்படி, ஸமித்த:-நன்றாய் ஜொலிக்கின்ற, அக்நி:-நெருப்பானது, ஏதாம்ஸி - கட்டைகளை, பஸ்மஸாத் குருதே-பஸ்மமாய்ச் செய்கிறதோ, ததா-அப்படி, ஜ்ஞாநஅக்நி:-ஞானத்தீயானது, ஸர்வ கர்மாணி-எல்லாக் கருமங்களையும், பஸ்மஸாத் குருதே-பஸ்மமாய்ச் செய்யும். (௩௭)

(தா-ம்) அர்ச்சுனா! நன்கு எரிகின்ற அக்கினி எவ்வாறுகாஷ்டங்களை பஸ்பமாக்குகிறதோ அவ்வாறே ஆன்மஞானமாகிற அக்கினி ஜந்மாந்திர தீவினைகள் யாவையும் சாம்பலாக்கும். (௩௭)

நஹி ஜ்ஞாநேந ஸத்ருஸம் பவித்ரமிஹ வித்யதே।
தத்ஸ்வயம் யோகஸம்ஸித்த: காலேநாத்மநி விந்ததி॥ ௩௮॥

(ப-ம்.) ஹி-யாதொருகாரணத்தால், இஹ-லோகத்தில், ஜ்ஞாநேந-ஞானத்தோடு, ஸத்ருசம்-ஸமானமாய், பவித்ரம்-பரிசுத்திகரமான(வஸ்து), நவித்யதே-இல்லை; தத் - அந்த (ஞானத்தை), யோகஸம்ஸித்த:-யோகத்தால் ஸித்திபெற்றவன்; காலேந-கால வளவில், ஆத்மநி-ஆத்மாவில், ஸ்வயம்-தான், விந்ததி-அடைகிறான். (௩௮)

(தா-ம்) ஆத்ம ஞானத்துக்குச் சமதையான பரிசுத்தவஸ்து இவ்வுலகி லொன்றுமில்லை. அப்படிப்பட்ட ஆன்மஞானம் யோகசித்தியடைந்தவனுககுக் கிரமமாய் ஆன்மாவினிடத்தில் தானுகவே விளங்குகிறது. (௩௮)

ஸ்ரத்தாவாம்ˮல்லபதே ஜ்ஞாநம் தத்பர: ஸம்யதேந்த்ரிய:।
ஜ்ஞாநம் லப்த்வா பராம் ஸாந்திமசிரேணாதிகச்சதி॥ ௩௯॥

(ப-ம்.) ஸ்ரத்தாவாந்-விசுவாஸமுடையனுய், தத்பர:-அதில்(தானே) ஊன்றியவனுய், ஸம்யதேந்த்ரிய:-(விஷயத்தினின்றும்) திருப்பப்பட்ட இந்திரியங்களையுடைய(புருஷன்), ஜ்ஞாநம் லபதே-ஞானத்தையடைகிறான்; ஜ்ஞாநம் லப்த்வா-ஞானத்தை அடைந்து, பராம் சாந்திம்-மேலான சுகத்தை, அசிரேண-சீக்கிரமாகவே, அதிகச்சதி-அடைகிறான். (௩௯)

(தா-ம்) ஞானமார்க்கத்தையே முக்கியமாயடைந்து சிரத்தையுடையவனுய் இந்திரியநிக்கிரகஞ் செய்கிறவன் ஞானத்தையடைந்த பின்பு மேலான மோக்ஷமென்னும் சாந்தியை அடைகிறான். (௩௯)

அஜ்ஞஸ்சாஸ்ரத்ததாநஸ்ச ஸம்ஸயாத்மா விநஸ்யதி।
நாயம் லோகோஸ்தி ந பரோ ந ஸுகம் ஸம்ஸயாத்மந:॥ ௪௦॥

(ப-ம்) அஜ்ஞ:ச-ஞானமற்றவனும், அஸ்ரத்ததாந:ச-விசுவா

ஸமற்றவனும், ஸம்சய ஆத்மா-ஸந்தேஹமான மனப்பொருந்திய வனுயு(மிருப்பவன்), விநச்யதி - கெட்டுப்போகிறான்; ஸம்சய ஆத்ம நஃ-ஸந்தேஹ மனமுற்றவனுக்கு; அயம் லோகஃ(அபி)-இந்த லோக மும், ந அஸ்தி-இல்லை, பரஃந(அஸ்தி) - பரலோகமுமில்லை, ஸுகம்-(மோக்ஷரூபமான)சுகமும், ந(ஸ்தி)-இல்லை. (சு0)

(தா-ம்) ஆன்ம ஞானமற்றவனும், ஞானத்தைப் பெருக்குவதி லாவலில்லாதவனும், உபதேசத்தாலடைந்த ஞானத்திற்சந்தேகமன துடையவனும் கெடுவான் அத்தகையசந்தேகிக்கு இந்த பிராசினவு லகும், பரலோகமும், தர்மார்த்தகாமரூபமாகிய சதுர்வித புருஷார் த்தமும், சுகமும் மோக்ஷமுமில்லை. (சு0)

யோகஸந்ந்யஸ்தகர்மாணம் ஜ்ஞாநஸஞ்சிந்நஸம்ஶயம் |
ஆத்மவந்தம் ந கர்மாணி நிபத்நந்தி தநஞ்ஜய || சுக||

(ப-ம்.) யோக ஸந்யஸ்த கர்மாணம்-(எல்லாக்கருமமும் பிரம ஸ்வரூப மென்கிற) நினைவினால் விடப்பட்ட கர்மமுடையவனாய்,ஜ்ஞா நஸம்சிந்ந ஸம்சயம்-ஞானத்தால் அறுப்பட்டஸந்தேகமுடையனாய், ஆத்மவந்தம்-சிறந்த மனமுடையனாயிருக்கும் (புருஷனை), ஹே தந ஞ்ஜய-ஓ தனஞ்சயனே! கர்மாணி-கருமங்கள், நநிபத்நந்தி-இஷ்டாநி ஷ்டபலங்களில் கட்டுப்படுத்தமாட்டாது. (சுக)

(தா-ம்) ஓ தனஞ்சயா! யோகத்தால ஞானரூபமாகியகாமயோ கமுண்டாகி ஆன்ம ஞானத்தா லாத்மவிஷயசந்தேகந்தைத்துலைத்து அசைவற்ற மனதுடையவனை ஜன்மாந்திரவினைகள் பிடிக்காது. ()

தஸ்மாதஜ்ஞாநஸம்பூதம் ஹ்ருத்ஸ்தம் ஜ்ஞாநாஸிநாத்மந: |
சித்த்வைநம் ஸம்ஶயம் யோகமாதிஷ்டோத்திஷ்ட பாரத || சுஉ||

(ப-ம்) ஹே பாரத-ஓ அருச்சுனா! தஸ்மாத் - ஆகையால், அஜ் ஞாந ஸம்பூதம்-அக்ஞானத்தால் உண்டாய், ஹ்ருத்ஸ்த்தம்-ஹ்ருதய த்தில் இருக்கும், ஏநம் ஆத்மநஃஸம்சயம் - இந்த ஆத்ம ஸந்தேஹத் தை, ஜ்ஞாந அஸிநா-ஞானமென்னுங் கத்தியால், சித்வா - வெட்டி (யெறிந்து), யோகம்-கருமயோகத்தை, ஆதிஷ்ட்ட-அனுட்டிக்கக்க டவாய், உத்திஷ்ட்ட-எழுந்திரு. (சுஉ)

(தா-ம்) ஆகையால், அஞ்ஞானத்தாலுண்டாகி மனதிலிருக்கி ன்ற அவ்வாத்மவிஷயமான சந்தேகத்தை மெஞ்ஞானமாகிறகத்தி யால் சேதித்து கர்மயோகத்தைச்செய். ஓ பாரத! எழுந்திரு. (சுஉ)

ஸ்ரீகீதாஸூ விஸ்வரூபஸந்தர்ஶநயோகமென்னும்
நான்காவது அத்தியாயம் முற்றிற்று.

# ஐந்தாவது அத்தியாயம்.

---

## கர்மஸந்ந்யாஸயோக:.

### அர்ச்சுனவாக்கியம்.

ஸந்ந்யாஸம் கர்மணாம் க்ருஷ்ண புநர்யோகம் ச ஶம்ஸஸி।
யச்ச்ரேய ஏதயோரேகம் தந்மே ப்ரூஹி ஸுநிஶ்சிதம்॥ க॥

(ப-ம்) ஹே க்ருஷ்ண-ஓ கிருஷ்ணா! புந:-மறுபடியும், கர்மணாம்-கர்மங்களின், ஸந்யாஸம் - விடுதல் என்கிற; ஞானத்தையும், சம்ஸஸி-கொண்டாடுகிறீர்; யோகம்ச-கருமயோகத்தையும், (சம்ஸஸி) புகழ்கின்றீர்; ஏதயோ:-இரண்டினுள்ளே, ஶ்ரேய:-சிரேஷ்டமாக, யத் ஏகம் அஸ்தி-யாதொன்றுண்டோ, தத்-அதை, மே - எனக்கு, ஸுநிச்சிதம் ப்ரூஹி - நன்றாய் நிச்சயிக்கப்படும்படிச் சொல்லுவாயாக. (க)

(தா-ம்.) ஓ கிருஷ்ணா! கர்மசன்னியாஸத்தை "ஞானயோகத்தைச்" செய்யென்று சொல்லுகின்றீர் மறுபடியும் கர்மயோகத்தைச்செய்யென்றும் சொல்லுகின்றீர் இவ்விரண்டுகளில் சிறந்ததான ஒன்றையே, நன்றாய்நிச்சயித்து எனக்குச்சொல்லும். (க)

### ஸ்ரீகிருஷ்ண வாக்கியம்.

ஸந்ந்யாஸ: கர்மயோகஶ்ச நி:ஶ்ரேயஸகராவுபௌ।
தயோஸ்து கர்மஸந்ந்யாஸாத்கர்மயோகோ விஶிஷ்யதே ॥

(ப-ம்) ஸந்யாஸ:- கர்மங்களை விடுதல் என்கிற ஜ்ஞானயோகமும், கர்மயோகஶ்ச - கருமயோகமும், உபௌ - இரண்டும், நிஶ்ரேயஸகரௌ-மோக்ஷ ஸாதனமானவைகள்; தயோ:மத்யே-அவற்றினிடையில், கர்ம ஸந்யாஸாத்-கருமத்தியாகத்தைக் காட்டிலும், கர்மயோ॥ து-கருமயோகமே, விசிஷ்யதே-சிறப்புற்றது. (௨)

(தா-ம்) ஞானயோகம், கர்மயோகம் இவ்விரண்டுகளும் மோட்சஹேதுக்கள் ஆங்ஙனமாயினும், ஞானயோகத்தைக்காட்டிலும்கர்மயோகமே சிறந்தது. (௨)

ஜ்ஞேய: ஸ நித்யஸந்ந்யாஸீ யோ ந த்வேஷ்டி ந காங்க்ஷதி ।
நிர்த்வந்த்வோ ஹி மஹாபாஹோ ஸுகம் பந்தாத்ப்ரமுச்யதே ॥

(ப-ம்) ஹே மஹா பாஹோ - ஓ பெரியதோளாள்களையுடைய அர்ச்சுனா, ய:-எந்த, நகாங்க்ஷதி - (ஆத்மாவைத்தவிரமற்றொன்றையும்) விரும்பானோ; நத்வேஷ்டி-பகைக்கமாட்டானோ, நிர்த்வந்த்வ:-

த்வந்த்வர்கள் இல்லாதவன்; ஸஃ-அவன், நித்ய ஸந்யாஸீ-நித்தியம் ஞானயோகநிஷ்ட(னென்று) ஜ்ஞேயஃ-தெரிந்துகொள்ளத் தகுந்தவன், (ஸஃ)-அவன், ஸுகம்-வருத்தமின்றி, பந்தாத்-ஸம்ஸாரத்தினின்று, ப்ரமுச்யதே-விடுபடுகிறான். (௩)

(தா-ம்) ஓ மஹாபாஹோ! யாவனொருவன் ஆசையில்லாமலும், த்வந்துவமென்கின்ற சுகதுக்கமில்லாமலும் இருக்கிறானோ, அவன் நித்தியசன்னியாசி "நித்தியஞானயோகத்திலிருப்பவன்" என்று அறியத்தக்கவன், அவன் சம்சாரத்திலிருந்து சுலபமாய் விடப்படுகிறான். (௩)

ஸாங்க்யயோகௌ ப்ருதக்பாலா: ப்ரவதந்தி ந பண்டிதா:|
ஏகமப்யாஸ்தித: ஸம்யகுபயோர்விந்ததே பலம்|| ௪||

(ப-ம்) பாலாஃ-அஜ்ஞர்கள், ஸாங்க்ய யோகௌ - (ஞானகர்ம) யோகங்களை, ப்ருதக்-தனிப்பட்டவைகளாக, ப்ரவதந்தி-சொல்லுகிறார்கள்; பண்டிதாஃ-பண்டிதர்களோ, ந-சொல்லமாட்டார்கள், உபயோஃ-இவ்விரண்டினுள், ஏகம் ஆஸ்த்திதஃஅபி-ஒன்றை அனுட்டித்தாலும், ஸம்யக்பலம்-நல்லபயனை (ஆத்மஸாக்ஷாத்காரத்தை), விந்ததே-அடைகிறான். (௪)

(தா-ம்) ஞானயோகம், கருமயோகம் இவ்விரண்டுகளும் வேறுகளென்று பூர்ணமில்லாதவர்கள் சொல்லுகிறார்கள். இவ்விரண்டுகளில் ஒன்றையாவது நன்றாய்ச்செய்கிறவன் ஒரேபலத்தை யடைகிறான். (௪)

யத்ஸாங்க்யை: ப்ராப்யதே ஸ்தாநம் தத்யோகைரபி கம்யதே|
ஏகம் ஸாங்க்யம் ச யோகம் ச ய: பஶ்யதி ஸ பஶ்யதி| ௫||

(ப-ம்.) ஸாங்க்யைஃ-ஜ்ஞாநநிஷ்டர்களால்; யத்ஸ்தாநம்-எந்தவிடம், ப்ராப்யதே-அடையப்படுகின்றதோ, தத்-அது, யோகைரபி-(கரும)யோகிகளாலும், கம்யதே-அடையப்படும், ஸாங்க்யம்ச-ஞாநயோகத்தையும், யோகஞ்ச-கர்மயோகத்தையும், ஏகம்-ஒன்றாக, யஃ பச்யதி-எவன் பார்க்கிறானோ, ஸஃ-அவனே, பஸ்யதி-அறிந்தவன்.()

(தா-ம்) ஸாங்கியயோகத்தைச் செய்கின்றவனால் அடையப்படும் பலமெதுவோ, அதுவே கர்மயோகத்தைச் செய்கின்றவனாலும் அடையப்படுகின்றது. ஒரேவிதமாகிய பலத்தைக்கொடுப்பதினால் ஞானயோகமும், கர்மயோகமும் ஒன்றாகவே யிருக்கிறதென்று எவன்தெரிந்துகொள்கிறானோ, அவனே தெரிந்துகொண்டவன் என்றால் பண்டிதன். (௫)

ஸந்ந்யாஸஸ்து மஹாபாஹோ து:கமாப்துமயோகத: |
யோகயுக்தோ முநிர்ப்ரஹ்ம நசிரேணாதிகச்சதி || ௬ ||

(ப-ம்.) ஹே மஹாபாஹோ - பெரியபுஜத்தையுடைய ஓ அர்ஜுநா! ஸந்யாஸஸ்து-ஜ்ஞாநயோகமானால், அயோகத:-கர்மயோகமின்றி, ஆப்தும்-அடைவதற்கு, துக்கம்-கஷ்டம்; யோகயுக்த:-கர்மயோகத்தோடுகூடினவனாய், முநி:-(ஆத்மாவை)மனனஞ்செய்பவன், நசிரேண-தாமதமின்றி, ப்ரம்ஹ-ஆத்மாவை, அதிகச்சதி - அடைகின்றான். (௬)

(தா-ம்) ஓ மஹாபாஹோ! ஆனால் கர்மயோகமின்றி ஞானயோகத்தை யடைவது கடினம். கர்மயோகம் நிறைந்தமுனி "அத்தியாத்மபரன்" மாத்திரம் சீக்கிரமாய் ஆத்மாவையடைகிறான். (௬)

யோகயுக்தோ விசுத்தாத்மா விஜிதாத்மா ஜிதேந்த்ரிய: |
ஸர்வபூதாத்மபூதாத்மா குர்வந்நபி ந லிப்யதே || ௭ ||

(ப-ம்.) யோகயுக்த:-(கரும)யோகநிஷ்டன், விசுத்த ஆத்மா-பரிசுத்தமான மனமுள்ளவனும், விஜித ஆத்மா-ஜயிக்கப்பட்ட மனமுடையனும், ஜித இந்த்ரிய: - ஜயிக்கப்பட்ட இந்த்ரியங்களுடையனும், ஸர்வபூத ஆத்மபூத ஆத்மா-ஸமஸ்த ப்ராணிகளுடைய ஆத்மாக்களும் ஒரே ஆகாரமுள்ளவர்களென்கிற ஜ்ஞாநமுள்ளவனும் ஆகியபுருஷன், குர்வந் அபி-செய்துவந்தானாகிலும், நலிப்யதே-ஒட்டப்படுவதில்லை. (௭)

(தா-ம்) "பகவதாராதன ரூபமாகிய" கர்மயோகத்தில், நிஷ்டையுண்டாக்கி பரிசுத்தமான மனதையுடையவனாய், மனதையும், இந்திரியங்களையும், ஜயித்து தனதான்மாவையும், எல்லாப்பிராணிகளிட ஆன்மாவையும், ஒரே ரூபமாக நினைக்கிறவன், கர்மத்தைச்செய்தபோதிலும் அகங்காராதிகள் அவனையடையாது. (௭)

நைவ கிஞ்சித்கரோமீதி யுக்தோ மந்யேத தத்த்வவித் |
பச்யஞ்ஶ்ருண்வந்ஸ்ப்ருசஞ்ஜிக்ரந்நச்நந்கச்சந்ஸ்வபஞ்ச்வஸந் ||
ப்ரலபந்விஸ்ருஜந்க்ருஹ்ணந்நுந்மிஷந்நிமிஷந்நபி |
இந்த்ரியாணீந்த்ரியார்த்தேஷு வர்த்தந்த இதி தாரயந் || ௯ ||

(ப-ம்) தத்வவித்-ஆத்மஸ்வரூபம் அறிந்தவன், யுக்த:-(கர்ம)நிஷ்டனாய்க்கொண்டு, பச்யந்-பார்க்கும்பொழுதும்; ச்ருண்வந்-கேட்கும்பொழுதும், ஸ்ப்ருசந்-பரிசிக்கும்பொழுதும், ஜிக்ரந்-மோகரும்பொழுதும்; அச்நந்-புசிக்கும்பொழுதும், கச்சந் - நடக்கும்பொழுதும், ஸ்வபந்-உறங்கும்பொழுதும், ச்வஸந்-மூச்சுவிடும்பொழுதும்,

ப்ரலபந்-பேசும்பொழுதும், விஸ்ருஜந்-விடும்பொழுதும், க்ருஹ்ண ந்-எடுக்கும்பொழுதும், உந்மிஷந்-கண்திறக்கும்பொழுதும், நிமிஷ ந் அபி - கண்களை மூடும்பொழுதும், இந்த்ரிய அர்த்தேஷு-தங்கள் தங்கள் கார்யங்களில், இந்த்ரியாணி-அந்தந்த இந்த்ரியங்கள், வர்த ந்தே-ப்ரவர்த்திக்கின்றன, இதி-என்று, தாரயந் - நிச்சயிக்கிறவனு ய், கிஞ்சித்-சிறிதும், நைவகரோமி-(நான்) செய்யவில்லை; இதி மந் யேத-நினைப்பான்.                                                    (அ-௯)

(தா-ம்) தத்துவமறிந்தயோகி பார்த்தாலும், கேட்டாலும், தொ ட்டாலும், வாசனையறிந்தாலும், புசித்தாலும், நடந்தாலும், தூங்கி னுலும், சுவாசத்தைவிட்டாலும், பேசினுலும், விட்டாலும், பிடித் தாலும், கண்களைத் திறந்தாலும், மூடினுலும், அந்தந்த இந்திரியங் கள், தங்கள் தங்கள் காரியங்களில் பிரவேசித்திருக்கிறதுகளென்று நிச்சயித்தவனுய், தானென்றையும்செய்யவில்லையென்றுநினைப்பான்.

ப்ரஹ்மண்யாதாய கர்மாணி ஸங்கம் த்யக்த்வா கரோதி ய꞉।
லிப்யதே ந ஸ பாபேந பத்மபத்ரமிவாம்பஸா॥                                    ௧௦॥

(ப-ம்) ய꞉-எவன், கர்மாணி - (எல்லாக்) கருமங்களையும், ப்ர ஹ்மணி-பிரகிருதியில், ஆதாய-வைத்து, ஸங்கம்-பலாபேக்ஷையை, த்யக்த்வா-விட்டு, கரோதி-கர்மங்களைச் செய்கிறுனே, ஸ꞉ - அவன், அம்பஸா-ஜலத்தால், பத்மபத்ரம் இவ-தாமரை யிலையைப்போல், பாபேந-பாவத்தால், நலிப்யதே-பூசப்படமாட்டான்.                    (௰)

(தா-ம்.) கர்மங்களை பிரகிருதியினிடத்தில்வைத்து பலத்தில்ப ற்றைவிட்டு எவன் கர்மத்தைச்செய்கிறுனே, அவனை தாமரையிலை யில் ஜலம்போல் பிரகிருதிசம்பந்தங்களான புண்யங்கள் தொடாது. (ஸ0) ஸங்கம்-மோக்ஷபலனில்கூட இச்சையை.                    (௰)

காயேந மநஸா புத்த்யா கேவலைரிந்த்ரியைரபி।
யோகிந꞉ கர்ம குர்வந்தி ஸங்கம் த்யக்த்வாத்மஶுத்தயே॥                    ௧௧॥

(ப-ம்.) யோகிந꞉-கருமயோகிகள், ஸங்கம் [illegible], த்யக்த்வா-விட்டு, ஆத்மசுத்தயே-ஆத்மசுத்திக்காக, காயேந-சரீரத் தாலும், மநஸா-மனதினுலும், புத்த்யா-புத்தியினுலும், கேவலை꞉-சுத்த மான, இந்த்ரியை꞉ அபி-இந்த்ரியங்களாலும், கர்ம-கர்மத்தை, குர் வந்தி-செய்கின்றனர்.                    (௧௧)

(தா-ம்) யோகிகள், சரீரத்தினுலும், மனதினுலும், புத்தியினு லும், கேவலமான இந்திரியங்களாலும், ஜனித்த பலனில் ஆசையை விட்டு, ஆத்மாவின் பூர்வகர்மபந்த நிவர்த்திரூபமாகிய ஆத்மசுத்திக்

காரக் கர்மத்தைச் செய்கிறார்கள். (ஸ) ஆத்மஸுத்தயே - மனம் பிரம்ஞானத்தால் பரிசுத்தப்படும்பொருட்டு. (௧௧)

𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌨𑍈𑌷𑍍𑌠𑌿𑌕𑍀𑌮𑍍 ।
𑌅𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌕𑌾𑌮𑌕𑌾𑌰𑍇𑌣 𑌫𑌲𑍇 𑌸𑌕𑍍𑌤𑍋 𑌨𑌿𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 ॥ ௧௨ ॥

(ப-ம்) யுக்தஃ-யோகியானவன், கர்ம பலம் த்யக்த்வா-கருமபலங்களில் ஆசையைவிட்டு, நைஷ்டிகீம்-ஸ்திரமான, சாந்திம்-ஆத்மாநுபவரூபமான ஆனந்தத்தை, ஆப்நோதி-அடைகிறான்; அயுக்தஃ-ஆத்மாநுபவத்தினின்றுந் திரும்பியவன், காம காரேண-காமத்தால் பிரவர்த்திப்பதனால், பலே-பலனில், ஸக்தஃ - பற்றுடையனாய், நிபத்யதே-கட்டுப்படுகிறான். (௧௨)

(தா-ம்) ஆத்மயோகமுடையவன், கர்மபலத்தைவிட்டுகுறைவில்லாத ஆத்மாநுபவ சுகத்தையடைகிறான். ஆத்மதரிசனத்தில் விமுகனாயிருப்பவன், மோகத்தால் பலனை விரும்பி கர்மங்களைச்செய்து சம்சாரபந்தத்தை யனுபவிக்கிறான். (௧௨)

𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌮𑌨𑌸𑌾 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑍇 𑌸𑍁𑌖𑌂 𑌵𑌶𑍀 ।
𑌨𑌵𑌦𑍍𑌵𑌾𑌰𑍇 𑌪𑍁𑌰𑍇 𑌦𑍇𑌹𑍀 𑌨𑍈𑌵 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌨 𑌕𑌾𑌰𑌯𑌨𑍍 ॥ ௧௩ ॥

(ப-ம்) வஶீ-இந்த்ரியஜயமுள்ளவன், தேஹீ-புருஷன், மநஸா-மனதினால், ஸர்வகர்மாணி-எல்லாக் கருமங்களையும், நவ த்வாரே-ஒன்பது துவாரங்கள்பெற்ற, புரே-பட்டணத்தில, (சரீரத்தில்), ஸந்யஸ்ய-விட்டு, நைவ குர்வந்-(தான்)செய்யாமலும், நகாரயந்-(பிறரைச்)செய்விக்காமலும், ஸுகம ஆஸ்தே-சுகமாகயிருக்கிறான் (௧௩)

(தா-ம்) சரீரியானவன் கர்மங்களை யெல்லாம் மனதினால் ஒன்பது வழியோடுகூடிய சரீரமாகிற நகரில விட்டு தான் வசியனாயிருந்துக்கொண்டும், தேகசம்பந்தமான பிரயத்தினத்தைச் செய்யாதவனாயும், செய்விக்காதவனாயுமிருந்து சுகத்தையடைகிறான். (௧௩)

𑌨 𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌂 𑌨 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌲𑍋𑌕𑌸𑍍𑌯 𑌸𑍃𑌜𑌤𑌿 𑌪𑍍𑌰𑌭𑍁𑌃 ।
𑌨 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌸𑌂𑌯𑍋𑌗𑌂 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌸𑍍𑌤𑍁 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 ॥ ௧௪ ॥

(ப-ம்) ப்ரபுஃ - ஸ்வாபாவிகமான ஸ்வரூபத்தோடிருக்கிற ஆத்மா, லோகஸ்ய-ஜனத்தினது, கர்த்ருத்வம் - கர்த்ருத்வத்தையாவது, கர்மாணி - கருமங்களையாவது, நஸ்ருஜதி - உண்டாகமாட்டான், கர்மபல ஸம்யோகம்-கருமப்பயனின் ஸம்பந்தத்தையாவது, நஸ்ருஜதி-உண்டுபண்ணுகிறதில்லை; ஸ்வபாவஸ்து-பிரகிருதிவாஸனை, ப்ரவர்த்ததே காரணமாகின்றது. (௧௪)

(தா-ம்) இவ்வுலகத்தினது கர்த்தருத்வத்தையாவது, கர்மங்க

யாவது, கர்மபல சம்பந்தத்தையாவது, கர்மஸிருஷ்டியையாவது ஆன்மா உண்டுபண்ணுகிறதில்லை. ஸ்வபாவமென்கிற ஐச்வரசக்தியாகிய மாயையே காரணமாகிறது. (கச)

நாதத்தே கஸ்யசித் பாபம் நசைவ ஸுக்ருதம் விபு:|
அஜ்ஞாநேநாவ்ருதம் ஜ்ஞாநம் தேந முஹ்யந்தி ஜந்தவ:|| கரு||

(ப-ம்.) விபு:-எல்லாவற்றிலுமிருக்கிற (ஆத்மா), கஸ்யசித் - ஒருவனுடைய, பாபம்-பாவத்தையும், நாதத்தே - கொண்டுபோவதில்லை; கஸ்யசித்-ஒருவனுடைய,ஸுக்ருதம்-புண்ணியத்தையும், நசைவ ஆதத்தே-கொண்டுபோவதில்லை;அஜ்ஞாநேந-அஜ்ஞாநத்தால்,ஜ்ஞாநம்-ஆத்மஸ்வரூபமானது, ஆவ்ருதம்-மூடப்பட்டது, தேந-அதனால் ஜந்தவ:-ஜீவர்கள், முஹ்யந்தி-மோஹத்தையடைகின்றனர். (கரு)

(தா-ம்) விபுவான ஆத்மா, ஒருவன் பாபத்தையாவது, புண்ணியத்தையாவது, கிரகிக்கின்றவனல்ல. ஞானவிரோதியான பூர்வ கர்மத்தினால் ஞானம் மூடப்பட்டிருக்கிறது. அதனால் பிராணிகள் மோகத்தையடைகிறார்கள். "இதனால் ஆத்மாவுக்கு புண்ணியபாபம் சம்பந்தமில்லை; இருப்பதுபோல் உலகம் பிரமிக்கிறது என்று பொருள்படுகிறது." (கரு)

ஜ்ஞாநேந து ததஜ்ஞாநம் யேஷாம் நாசிதமாத்மந:|
தேஷாமாதித்யவஜ்ஜ்ஞாநம் ப்ரகாசயதி தத்பரம்|| கசு||

(ப-ம்) யேஷாம்து-எவர்களுக்கானால், ஆத்மந:ஜ்ஞாநேந-ஆத்ம ஞானத்தால், தத்அஜ்ஞாநம்-அவ்வஞ்ஞானம், நாசிதம்-நாசம்செய்யப்பட்டதோ, தேஷாம்-அவர்களுக்கு, தத்-அந்த (ஸ்வபாவமான) பரம்-சிறந்த, ஜ்ஞாநம்-ஜ்ஞாநம், ஆதித்யவத் - சூரியன்போல, ப்ரகாசயதி-(எல்லாவற்றையும்) ப்ரகாசிக்கச்செய்வான். (கசு)

(தா-ம்) எவர்களுக்கு ஆத்மஞானத்தால் அந்த அஞ்ஞானமானது நசிப்பிக்கப்படுகிறதோ, அவர்களுடைய அப்படிப்பட்ட சிறந்த ஞானம் சூரியன்போ லெல்லாவற்றையும்பிரகாசிக்கச்செய்கின்றது.

தத்புத்தயஸ்ததாத்மாநஸ்தந்நிஷ்டாஸ்தத்பராயணா:|
கச்சந்த்யபுநராவ்ருத்திம் ஜ்ஞாநநிர்தூதகல்மஷா:|| கஎ||

(ப-ம்) தத் புத்தய:-ஆத்மாவினிடத்திலேயே புத்தியுள்ளவர்களும், தத் ஆத்மாந:-அதே ஆத்மாவினிடத்திலேயே மனமுள்ளவர்களும், தந்நிஷ்டா:-அதில (தானே)நிலைநின்றுகொண்டும், தத்பராயணா:-அதையே பரமப்ரயோஜநமென்று நினைப்பவர்களும் ஆகிய ஜ

ஞானிகள், ஜ்ஞாநநிர்தூதகல்மஷா: - ஞானத்தால் போக்கப்பட்ட பாவத்தையுடையாராய், அபுநராவ்ருத்திம்-மறுபடி (ப்ரக்ருதிக்கு) திரும்பாத (ஆத்மஸ்வரூபத்தை), கச்சந்தி-அடைகின்றார்கள். (௧௭)

(தா-ம்) அந்த ஆத்மாவினிடத்திலேயே புத்தியுடையவர்களாயும், அவ்வாத்மாவினிடத்திலேயே மனதையுடையவர்களாயும், அவ்வான்ம ஞானாப்யாசத்தில் ஆஸக்தியுடையவர்களாயும், ஆத்மாவையே முக்கியப் பிரயோஜனமாகவும் நினைப்பவர்கள் ஞானத்தால் பாபங்களையெல்லாம், போக்கடித்துக்கொண்டு மறுபிறப்பில்லாத சுத்தாத்மஸ்வரூபத்தை அடைகிறார்கள். (௧௭)

𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌿𑌨𑌯𑌸𑌂𑌪𑌨𑍍𑌨𑍇 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍇 𑌗𑌵𑌿 𑌹𑌸𑍍𑌤𑌿𑌨𑌿 ।
𑌶𑍁𑌨𑌿 𑌚𑍈𑌵 𑌶𑍍𑌵𑌪𑌾𑌕𑍇 𑌚 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌾𑌃 𑌸𑌮𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃 ॥ ௧௮ ॥

(ப-ம்) பண்டிதா:-ஆத்மஜ்ஞாநிகள், வித்யா விநய ஸம்பந்நே-வித்தையும் வணக்கமும் கூடியவனிடத்தும், ப்ராஹ்மணே - பிராம்மணனிடத்தும், கவி-பசுவினிடத்தும், ஹஸ்திநி - யானையினிடத்தும், சுநிசைவ-நாயினிடத்தும், ச்வபாகே-சண்டாளனிடத்தும் (உள்ள ஆத்மஸ்வரூபத்தில்), ஸமதர்சிந:-ஸமமாய்ப் பார்ப்பார்கள். (௧௮)

(தா-ம்) ஆத்மஞானிகள் கல்வியினாலும், விநயத்தாலும், நிறைந்தவனிடத்திலேயும், கேவலப்பிராமணனிடத்திலேயும், பசு, யானை, நாய் இவைகளிடத்திலேயும், நாயைத்தின்கின்ற சண்டாளனிடத்திலும், ஞானரூபியான ஆத்மாக்கள் ஒரேவிதமாயிருப்பதினால் சமமாய்ப் பார்ப்பார்கள். (௧௮)

𑌇𑌹𑍈𑌵 𑌤𑍈𑌰𑍍𑌜𑌿𑌤𑌃 𑌸𑌰𑍍𑌗𑍋 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌸𑌾𑌮𑍍𑌯𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 𑌮𑌨𑌃 ।
𑌨𑌿𑌰𑍍𑌦𑍋𑌷𑌂 𑌹𑌿 𑌸𑌮𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌿 𑌤𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌃 ॥ ௧௯ ॥

(ப-ம்.) யேஷாம்-எந்த புருஷர்களுடைய, மந: - மனதானது, ஸாம்யே-ஸமத்வத்தில், ஸ்திதம்-இருக்கிறதோ, தை:-அவர்களாலே, இஹைவ-உலகத்தில் தானே, ஸர்க:-ஸம்ஸாரமானது, ஜித:-ஜயிக்கப்பட்டது. ஹி-யாதொரு காரணத்தால், நிர்தோஷம்-பிரகிருதிஸம்பந்தமற்றதும், ஸமம்-ஸமானகாரமுமான (ஆத்மாவானது) ப்ரஹ்ம-பிரமமோ, தஸ்மாத்-ஆகையால், தே - அவர்கள், ப்ரஹ்மணி ஸ்திதா (ஏவ)-பிரம்மத்திலிருப்பவர்களே. (௧௯)

(தா-ம்) எவர்களுக்கு, எல்லா ஆத்மாக்களும், ஸமமென்கிறபாவத்தில் மனதிருக்கிறதோ, அவர்களால் கர்மாநுஷ்டானகாலத்திலேயே, சம்சாரம் ஜெயிக்கப்பட்டது. பிரகிருதி சம்பந்ததோஷமின்

நிசமமான ஆத்மஸ்வரூபமே பிர்மம் ஸமமான மனதையுடையவர்க ளே பிர்மத்தினிடத்திலிருப்பவர்கள். (கக)

நப்ரஹ்ருஷ்யேத்ப்ரியம்ப்ராப்ய நோத்விஜேத்ப்ராப்யசாப்ரியம்
ஸ்திரபுத்திரஸம்மூடோ ப்ரஹ்மவித்ப்ரஹ்மணி ஸ்திதஃ உ०॥

(ப-ம்) புமாந்-புருஷனானவன், ப்ரியம் - இஷ்டத்தை, ப்ராப்ய-அடைந்து, நப்ரஹ்ருஷ்யேத்-மகிழ்வுறக்கடவனல்லன்; அப்ரியம்-பிரதிகூலத்தை, ப்ராப்ய-அடைந்து, நோத்விஜேத்-பயப்படக்கூடாது, ஸ்திரபுத்திஃ-ஆத்மாவில் நிலைத்தபுத்தியுடையவன்; அஸம்மூடஃ-மோஹமற்றவனாயும், ப்ரஹ்மவித் - ஆத்மஸ்வரூபத்தையறிந்தவனும், ப்ரஹ்மணி-ஆத்மஜ்ஞானத்திலேயே. ஸ்திதஃ-நிஷ்டையுள்ளவனாவான். ()

(தா-ம்) ஆத்மாவில ஸ்திரபுத்தியுடையவனாயும் சரீரமே ஆத்மாவென்கிற பிரமயில்லாதவனாயும் ஆத்மஸ்வரூபத்தையறிந்திருக்கிற ஆத்மாப்பியாச நிஷ்டன் பிரியமான வஸ்துவைப்பார்த்து சந்தோஷிக்கமாட்டான். பிரியமில்லாத வஸ்துவைக்கண்டு துக்கிக்கமாட்டான். (உ0)

பாஹ்யஸ்பர்சேஷ்வஸக்தாத்மா விந்தத்யாத்மனி யத்ஸுகம்|
ஸப்ரஹ்மயோகயுக்தாத்மா ஸுகமக்ஷயமச்நுதே॥ உக॥

(ப-ம்) யஃ-எவன், பாஹ்யஸ்பர்சேஷு-ஆத்மாவைப்பார்க்கிலும்வேறான விஷயானுபவங்களில், அஸக்த ஆத்மா-பற்றற்றமனமுடையவனாய், ஆத்மநி(ஏவ)-ஆத்மாவில்தானே, ஸுகம் விந்ததி-சுகத்தை அடைகிறானோ; ஸஃ-அவன், ப்ரஹ்மயோக யுக்த ஆத்மா-பிரம்ம அப்பியாஸத்துடன் கூடிய மனமுடையனாய், அக்ஷயம்ஸுகம்- அழியாதசுகத்தை(மோக்ஷத்தை), அச்நுதே-அனுபவிக்கிறான். (உக)

(தா-ம்) ஆத்மாவைக்காட்டிலு மிதரவஸ்துவில் யோகத்தினாலாசையற்ற மனமுடையவனாய் ஆத்மாவினிடத்திலேயேஎவன்சுகத்தையநுபவித்துக்கொண்டிருக்கிறானோ அவனே பிர்மத்தியானத்தோடு கூடிய மனமுடையவனாய் சாஸ்வதமாகிய சுகத்தை "பிர்மாநந்தத்தை"யடைகிறான். (உக)

யே ஹி ஸம்ஸ்பர்சஜா போகா து:கயோநய ஏவ தே|
ஆத்யந்தவந்த: கௌந்தேய ந தேஷு ரமதே புத:॥ உஉ॥

(ப-ம்.) ஸம்ஸ்ப்ரசஜாஃ-(விஷயத்துக்கும் இந்திரியத்துக்கு முண்டான) ஸம்பந்தத்தாலுண்டான, யேஹி போகாஃ-எந்த போகங்களானால், ஆத்யந்தவந்தஃ-உத்பத்திநாசங்களுள்ளவை, ஸந்தி-இருக்கின்றனவோ, தே-அவை, துஃகயோநயஃ-துக்கஹேதுகளே, அதஃ-

ஆகையால், ஹேகௌந்தேய ஓ குந்திபுத்திர! தேஷு - அவைகளில், புதஃ-பண்டிதன், நரமதே-ரமிக்கமாட்டான். (உஉ)

(தா-ம்.) ஓ குந்திபுத்திரா! எந்த ஸுகங்கள் விஷயேந்திரியசம்பந்தத்தாலுண்டாகின்றதுகளோ, அவைகளெல்லாம் துக்கஹேதுகரங்களாயும், உற்பத்தி நாசங்களையுடையதுகளாயுமிருக்கிறதுகள். அவைகளில் ஆத்மஞானமுடையவன் திருப்தியடையான். (உஉ)

ஶக்நோதீஹைவ ய: ஸோடும் ப்ராக் ஶரீரவிமோக்ஷணாத்|
காமக்ரோதோத்பவம் வேகம் ஸ யுக்த: ஸ ஸுகீ நர:|| உங||

(ப-ம்.) ய:நர:-எந்த நரன், சரீர விமோக்ஷணாத்-சரீரத்தைவிடுவதற்கு, ப்ராக்-முன்னே, இஹைவ-இங்கேயே, காமக்ரோத உத்பவம்- காமத்தாலும் கோபத்தாலும் உண்டான, வேகம் - வேகத்தை, ஸோடும்-ஸஹிக்க, சக்னோதி-ஸமர்த்தனாகிறான்; ஸ:யுக்த:-அவனே ஆத்மானுபவத்துக்கு யோக்யனும்; ஸ-அவனே, ஸுகீ - சுகத்தையடைபவன். (உங)

(தா-ம்) எவன் சரீரத்தைவிடுவதற்கு முன்யோகஞ் செய்யும்போதே காமக்ரோதத்தாலுண்டாகிற வேகத்தையடக்கவல்லவனாகிறானோ அவனே ஆத்மாநுபவத்திற்குத் தக்கவன். அவனுக்கே ஆத்மாவினால் சுகமுண்டு. (உங)

யோ(அ)ந்த:ஸுகோ(அ)ந்தராராமஸ்ததாந்தர்ஜ்யோதிரேவ ய:|
ஸ யோகீ ப்ரஹ்மநிர்வாணம் ப்ரஹ்மபூதோ(அ)திகச்சதி|| உச||

(ப-ம்.) ய:-எந்த யோகி, அந்த:ஸுக:-அந்தராத்மாவில் சுகிப்பவனும், அந்த:ஆராம:உள்ளத்தில் (தானே)ரமிப்பவனும், ததா-அப்படியே, அந்த:ஜ்யோதி:-உள்ளே ஞானச்சோதி (யுடையவனும், ய:-எவனிருக்கிறானோ, ஸ:- அந்த, ப்ரஹ்மபூத:-பிரம்ம நிஷ்டனை, யோகீ-யோகியானவன், ப்ரஹ்மநிர்வாணம்-ஆத்மாநுபவச்சுகத்தை, அதிகச்சதி-அடைகிறான். (உச)

(தா-ம்) எவன் அந்தராத்மாவினிடத்தில் சுகமுடையவனும் அந்தராத்மாவினிடத்திலேயே த்ருப்தியுடையவனும் ஆத்மஞானமுடையவனு மிருக்கிறானோ அந்த யோகி பிர்மஸ்வரூபமுடையவனாய் ஆத்மாநுபவ ஸுகத்தையடைகிறான். (உச)

லபந்தே ப்ரஹ்மநிர்வாணம்ருஷய: க்ஷீணகல்மஷா:|
சின்னத்வைதா யதாத்மான: ஸர்வபூதஹிதே ரதா:|| உரு||

(ப-ம்) சின்ன த்வைதா:-சேதிக்கப்பட்ட சீதோஷ்ணாதித்வந்தவர்கள் உள்ளவர்களும், யதஆத்மாந:-அடங்கிய மனதுடையவரும், ஸ

ர்வபூத ஹிதே-ஸகலப் பிராணிகளுடைய இதத்திலும், ரதா:-ஆஸக்தியுடையருமான, ருஷய:-ஆத்மஸாக்ஷாத்காரம்பண்ணுமவர்கள், க்ஷீணகல்மஷா:-அழிந்த பாவமுடையராய், ப்ரஹ்மநிர்வாணம்-ஆத்மாநுபவச் சுகத்தை, லபந்தே-அடைகின்றனர். (உரு)

(தா-ம்) சீதோஷ்ணாதித்வந்த்வங்களைவிட்டு ஆத்மாவில்மனதை நிறுத்தி எல்லாப்பிராணிகளிடத்திலும் அன்புடையவர்களான இருஷிகள் "ஆத்மஞானிகள்" பாபங்களைப் போக்கடித்தவர்களாய்பிரமாநந்தத்தை யடைகின்றார்கள். (உரு)

காமக்ரோதவியுக்தாநாம் யதீநாம் யதசேதஸாம்।
அபிதோ ப்ரஹ்மநிர்வாணம் வர்ததே விதிதாத்மநாம்॥ உசு॥

(ப-ம்) காமக்ரோத வியுக்தாநாம்-காமக்ரோதங்களால் விடப்பட்டவர்களுக்கு, யதீநாம்-யோகாப்யாசம் செய்வோர்களும், யத சேதஸாம்-அடக்கியமனமுடையவரும், விஜித ஆத்மநாம் - ஜயிக்கப்பட்டமனமுடையவர்களுமான, புருஷாணாம் - புருஷர்களுக்கு, நிர்வாணம்-சுகரூபமான, ப்ரஹ்ம-ஆத்மஸ்வரூபமானது, அபித:வர்ததே-எங்கும் இருக்குமே. (உசு)

(தா-ம்) காமக்குரோதங்களில்லாதவர்களாயும், யோகாப்பியாஸத்தைச் செய்கிறவர்களாயும், ஸாவதானமனதையுடையவர்களாயுமிருந்து மனதை ஜயித்தவர்களுக்கு பிரமாநுபவரூபமாகிய சுகம் கையிலிருக்கிறது. (ஈம) அதிசீக்கிரத்திலேயே. (உசு)

ஸ்பர்சாந்க்ருத்வா பஹிர்பாஹ்யாம்ஸ் சக்ஷுச்சைவாந்தரே ப்ருவோ:। ப்ராணாபானௌ ஸமௌ க்ருத்வா நாஸாப்யந்தரசாரிணௌ॥ யதேந்த்ரியமனோபுத்திர் முநிர்மோக்ஷபராயண:। விகதேச்சாபயக்ரோதோ ய: ஸதா முக்த ஏவ ஸ:॥ உஎ॥

(ப-ம்) ய:-எந்தயோகி, பாஹ்யாந்-புறம்புண்டான, ஸ்பர்சாந்-விஷயானுபவங்களை, பஹி:க்ருத்வா-வெளியே விட்டுவிட்டு, சக்ஷு: ச ஏவ-கண்ணையும், ப்ருவோ:-அந்தரே-நடுவிலபுருவங்களின், க்ருத்வா-நிறுத்தி, நாஸாப்யந்தர சாரிணௌ-மூக்குக்குள் ஸஞ்சரிக்கின்ற, ப்ராண அபானௌ-பிராணபானங்களை, ஸமௌ-ஸமகதியாக, க்ருத்வா-செய்து, யத இந்த்ரியமனோபுத்தி:-நியமிக்கப்பட்ட இந்த்ரியங்களும்மனமும்உள்ளவனும், விகதஇச்சாபயக்ரோத:-போயிருக்கிற இச்சை பயம் கோபம் இவையுடையனும், மோக்ஷபராயண:-மோக்ஷமே ப்ரயோஜநமாக நினைப்பவனும், முநி:-(ஆத்மாவை) மனனம்செ

ய்வதே தொழிலா(யிருக்கிருனே), ஸः-அவன், ஸதா-எப்போதும், முக்தஃ ஏவ-முக்தனே. (உஎ-உஅ)

(தா-ம்) பாஹ்யவிஷயங்களை வெளியிலே நிறுத்திவிட்டுக்கண்களைப் புருவங்களின் நடுவில் வைத்து மூக்கில் சஞ்சரிக்கின்றபிராணுபானங்களை சரியாய் சஞ்சரிக்கச்செய்து இந்திரியங்கள் மனது புத்தி இவைகளைக்கட்டி மோக்ஷத்தையே பிரயோஜனமாகவுடையவனும், ஆசை, பயம், கோபம் இவைகளைவிட்டு ஆத்மஞானப்பியாசம் பண்ணுகிறவனெவனே, அவனெக்காலத்திலும் முக்தனுகவே யிருக்கிருன். (உஎ-உஅ)

𑌭𑍋𑌕𑍍𑌤𑌾𑌰𑌂 𑌯𑌜𑍍𑌞𑌤𑌪𑌸𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑌲𑍋𑌕𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌮𑍍।
𑌸𑍁𑌹𑍃𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌮𑌾𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌮𑍃𑌚𑍍𑌛𑌤𑌿॥

(ப-ம்.) (யோகீ)-யோகியானவன், மாம்-என்னை, ஸர்வலோகமஹேச்வரம்-ஸகல லோகங்களுக்கும் பெரிய ஆண்டவனும், ஸர்வபூதாநாம்-எல்லாப்பிராணிகளுக்கும், ஸுஹ்ருதம்-ஹிதனும், யக்ஞதபஸாம்-யக்ஞங்களுக்கும் தவங்களுக்கும், போக்தாரம்-அனுபவிப்பவனும், ஜ்ஞாத்வா-அறிந்து, சாந்திம் - பரமாநந்தத்தை, ருச்சதி-அடைகிறுன். (உ௯)

(தா-ம்) தபோயஞ்ஞங்களா லாராதிக்கப்படுகின்றவனுகவும், உலகங்களுக்கெல்லாம் கர்த்தனுகவும் பிராணிகளுக்கெல்லாம் ஹிதனுகவும் இருக்கிறவன் என்னையறிந்தபின் சுகத்தையடைகிறுன். (ஶப) ஸுஹ்ருதம் ஜீவகாருண்யமுடையவன். (உ௯)

ஸ்ரீகீதாஸு விஶ்வரூபஸந்தர்ஶநயோகமென்னும்
ஐந்தாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## ஆறுவது அத்தியாயம்.

ஸ்ரீக்ருஷ்ண வாக்கியம்.

𑌆𑌤𑍍𑌮𑌸𑌂𑌯𑌮𑌯𑍋𑌗𑌃.

𑌅𑌨𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌃 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌂 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌰𑍋𑌤𑌿 𑌯𑌃।
𑌸 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍀 𑌚 𑌯𑍋𑌗𑍀 𑌚 𑌨 𑌨𑌿𑌰𑌗𑍍𑌨𑌿𑌰𑍍𑌨 𑌚𑌾𑌕𑍍𑌰𑌿𑌯𑌃॥ க॥

(ப-ம்.) யஃ-யாவனொருவன், கர்மபலம் - கருமப் பலனை, அநாஶ்ரிதஃ-அபேக்ஷிக்காமல், கார்யம்-செய்யவேண்டியதான, கர்ம-கரு

மத்தை, கரோதி-செய்கிறானோ, ஸ:-அவனே, ஸந்யாஸீச-கர்மங்கள் இல்லாதவனும், யோகீச-கரும நிஷ்டனும்;(மற்றப்படி), நிரக்நி:ந-அக்நினியற்றவனும் அல்ல; அக்ரிய:ச ந - கருமஞ் செய்யாதவனு மல்ல. (க)

(தா-ப்) கர்மத்தின் பிரயோஜனத்தை அபேக்ஷிக்காமல் வேதத்தில் அநுஷ்டிக்கும்படி விதித்த நித்தியநைமித்திக கர்மத்தை எவன் விடாமல செய்கிறானோ, அவனே சந்யாசியாயும், "ஞானயோகபரனும்" கன்மயோகபரனும் ஆகிறான். அக்கினிகிருத்தியத்தைக்கை விட்டதினாலேயே கர்மாநுஷ்டானத்தை யொழித்தவனும், சந்யாசியாயும், யோகியாயுமாவது ஒருபொழுதுமில்லை. (க)

யம்ஸந்ந்யாஸமிதிப்ராஹுர்யோகம்தம்வித்திபாண்டவ|
நஹ்யஸந்ந்யஸ்தஸங்கல்போயோகீபவதிகஶ்சந|| உ||

(ப-ம்) ஹே பாண்டவ!-வாராய் அருச்சுனா!, யம்-எதை; ஸந்யாஸம் இதி-ஸன்னியாஸமென்று, ப்ராஹு:-சொல்லுகிறார்களோ, தம் யோகம்-அதை யோகமாகவும், வித்தி-அறி, ஹி-ஏனெனில், க:சந யோகீ-எந்த யோகியும், அஸந்யஸ்த |ஸங்கல்ப:-விடப்படாத ஸங்கல்பத்தையுடையவனாய் (அதாவது தேஹாத்மாபிமானத்தை விடாமல்), நபவதி-இருப்பதில்லை. (உ)

(தா-ம்) ஒ பாண்டவா ! எதை ஞானயோகமென்று கூறுகின்றார்களோ அதை கர்மயோகமென்றே தெரிந்துகொள். எவனும் ஆசையைத் துலைக்காமல் யோகியாகிறதில்லை. (உ)

ஆருருக்ஷோர்முநேர்யோகம்கர்மகாரணமுச்யதே|
யோகாரூடஸ்யதஸ்யைவஶம:காரணமுச்யதே|| ௩||

(ப-ம்) யோகம்-ஜ்ஞாநயோகத்தை, ஆருருக்ஷோ:-அடையவிரும்பிய, முநே:-முனிக்கு, கர்ம-கருமயோகமே, காரணம்-ஸாதனமென்று, உச்யதே-சொல்லப்படுகின்றது; யோகாரூடஸ்ய-யோகமடைந்த, தஸ்யஏவ-அவனுக்கே, சம:-கர்மங்களை விடுதல், காரணம் உச்யதே-சொலலப்படுகின்றது. (௩)

(தா-ம்) ஞானயோகத்தை யாச்ரயித்து ஒன்றினயோகிக்குக் கன்மயோகங் காரணமெனப்படும். ஞானமார்க்கத்தைக் கடந்த அவனுக்குக் கர்மத்தை நிவ்ருத்தி செய்வது காரணமாகிறதென்று சொல்லப்படுகிறது. (௩)

யதாஹிநேந்த்ரியார்தேஷுநகர்மஸ்வநுஷஜ்ஜதே|
ஸர்வஸங்கல்பஸந்ந்யாஸீயோகாரூடஸ்ததோச்யதே|| ௪||

(ப-ம்) யதா(யঃ)-எப்பொழுது எந்த (யோகி), இந்த்ரிய அர்த்தேஷு-விஷயங்களிலும், கர்மஸு - கருமங்களிலும், ந அநுஷஜ்ஜதே-ஆஸக்தியடையானோ, ததா ஹி-அப்பொழுதுதான், ஸர்வ ஸங்கல்ப ஸந்யாஸீ-ஸர்வ காமத்தையும் விட்ட, யோக ஆரூடঃ - ஜ்ஞான யோகம் அடைந்தவ(னென்று), உச்யதே-சொல்லப்படுகிறான். (ச)

(தா-ம்.) எப்பொழுது இந்திரியவிஷயங்களிலும். கர்மயோகங்களிலும், மனம் சம்பந்தப்படவில்லையோ, அப்பொழுது தான் எல்லாகோரிக்கைகளையும் விட்ட அவன் யோகியெனப்படுகிறான். (ச)

உத்தரேதாத்மநாத்மாநம் நாத்மாநமவஸாதயேத்|
ஆத்மைவ ஹ்யாத்மநோ பந்துராத்மைவ ரிபுராத்மந:||

(ப-ம்) ஆத்மநா-மனதினால், ஆத்மாநம்-(தன்) ஆத்மாவை, உத்தரேத்-கரையேற்றவேண்டும், ஆத்மாநம்-ஆத்மாவை, ந அவஸாதயேத்-அல்லல் படுத்தக்கடவனல்லன், ஹி-ஏனெனில், ஆத்மந: - தனக்கு, ஆத்மா ஏவ-மனதே, பந்து:-துணை, ஆத்மந:-ஆத்மாவுக்கு, ஆத்மா ஏவ-மனதே, ரிபு: பகை. (ரு)

(தா-ம்) ஆத்மாவை மனதினால் மேன்மைப்படுத்தவேண்டும். ஆன்மாவைக்கீழ்ப்படிக்குச் செல்லும்படி செய்யலாகாது. ஆன்மாவுக்கு மனமேபந்து. மனமேதான் வைரியாகிறது. (ரு)

பந்துராத்மாத்மநஸ்தஸ்ய யேநாத்மைவாத்மநா ஜித:|
அநாத்மநஸ்து ஶத்ருத்வே வர்தேதாத்மைவ ஶத்ருவத்|| சு||

(ப-ம்) யேந-எவனால், ஆத்மநா ஏவ-தன்னாலேயே, ஆத்மா ஜித:-மனம் ஜயிக்கப்பட்டதோ, தஸ்ய ஆத்மந:-அவன் ஆத்மாவுக்கு, ஆத்மா பந்து:-மனமே பந்துவாகும், அநாத்மநஸ்து-மனத்தை ஜெயிக்காதவனுக்கோ, ஆத்மா ஏவ-மனமே, ஶத்ருவத் - பகைபோல, சத்ருத்வே-சத்ருத்வத்தில், வர்தேத-இருக்கும். (சு)

(தா-ம்) எவனால் தன் மனம் தானாகவேவெற்றி பெறப்படுகிறதோ, அவனுன்மாவுக்கு மனம் பந்துவாயும் மனதைவெல்லாதவனுக்கு அம்மனமே சத்ருவுப்போல் விரோதியாகவுமிருக்கின்றது. (சு)

ஜிதாத்மந: ப்ரஶாந்தஸ்ய பரமாத்மா ஸமாஹித:|
ஶீதோஷ்ணஸுகது:கேஷு ததா மாநாபமாநயோ:|| எ||

(ப-ம்) சீதஉஷ்ண ஸுகதுக்கேஷு-குளிர்ச்சி வெப்பம் இன்பம்துன்பம் (இவைகளில்), ததா-அப்படியே, மாந அவமாநயோ:-மானவமானங்களிலும், ஜித ஆத்மந: - ஜெயித்த மனத்தனுப், ப்ரசாந்த

ஸ்ய-அடங்கியிருப்பவனுடைய, (மனதில்)ஆத்மா-ஆத்மஸ்வரூபமான து, பரம் ஸமாஹிதஃ-மிகவும் சுகஸ்வரூபமாயிருக்கிறான். (எ)

(தா-ம்) சீதோஷ்ணம், இன்பதுன்பம், பெருமை சிறுமை, இவ்விஷயங்களில் மனதைமென்று சலிக்காமல் நிறுத்தி பொறுமையுடனிருப்பவனுக்கு மனதின்கண்ணே ஆன்மாவியவும் சுகஸ்வரூபமாயிருக்கும். (எ)

ஜ்ஞாநவிஜ்ஞாநத்ருப்தாத்மா கூடஸ்தோ விஜிதேந்த்ரிய꞉।
யுக்த இத்யுச்யதே யோகீ ஸமலோஷ்டாஶ்மகாஞ்சந꞉॥ அ॥

(ப-ம்.) ஜ்ஞாந விஜ்ஞாநத்ருப்த ஆத்மா - ஸ்வரூப ஜ்ஞானத்தாலும் விசேஷஞானத்தாலும் திருப்தியடைந்த மனத்தனும், கூடஸ்தஃ-(ஞானமே வடிவான) ஆத்மாவிலிருப்பவனும், விஜிதேந்த்ரியஃ-ஜயிக்கப்பட்ட இந்த்ரியங்களுள்ளவனும், ஸமலோஷ்ட அச்ம காஞ்சநஃ-ஸமமான மண்கட்டி கல் பொன்களையுடைய, யோகீ-கர்ம யோகியானவன், யுக்த இதி - தக்கவனென்று, உச்யதே - சொல்லப்படுவான். (அ)

(தா-ம்.) ஆன்ம ஞானத்தினாலும் விஞ்ஞானமென்னும் பிரகிருதியைவிட ஆன்மா வேறென்கிற அறிவினாலேயும், திருப்தியடைந்த மனதுடையவனும், கூடஸ்தனும், ஜிதேந்திரியனும், மண், பொன், சிலை, அதுகளில் சமபுத்தியுடையவனுமுள்ளவன் ஞான யோகத்துக்குத் தகுந்தவனெனப்படுவான். (அ)

ஸுஹ்ருந்மித்ரார்யுதாஸீநமத்யஸ்தத்வேஷ்யபந்துஷு।
ஸாதுஷ்வபி ச பாபேஷு ஸமபுத்திர்விஶிஷ்யதே॥ கூ॥

(ப-ம்,) ஸுஹ்ருத்-ஸுஹ்ருத்துக்களும், அரி-அநர்த்தத்தைவிரும்புவோர்களும், மித்ர-ஸமவயதான தோழர்கள், உதாஸீந-உறவு பகை யிரண்டுக்கும் காரணமில்லாமையாலே இரண்டு மற்றவர், மத்யஸ்த-ஸ்வபாவமாகவே இரண்டுமற்றவர், த்வேஷ்ய-ஸ்வபாவமாகவே பகைப்பவர், பந்துஷு-ஸ்வபாவமாகவே இதஞ்செய்புமவர்கள் ஆகிய இவர்களிடத்திலும், ஸாதுஷு அபி-ஸாதுக்களிடத்தும், பாபேஷு ச-பாபிகளிடத்தும், ஸமபுத்திஃ-ஸமபுத்தியுடையவன்,விசிஷ்யதே-விசேஷாதிகாரியாகிறான். (கூ)

(தா-ம்) தனக்கு நன்மையை விரும்புவோன், சினேகிதன், பகைகேசம் இதுகளற்ற மத்தியஸ்தன், இயற்கையான விரோதி, சுற்றத்தார், ஸத்புருடன், பாபிஷ்டி; இவர்களிடத்தில் சமபுத்தியுள்ளவனே உத்தமனவன். (கூ)

𑌯𑍋𑌗𑍀 𑌯𑍁𑌞𑍍𑌜𑍀𑌤 𑌸𑌤𑌤𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌰𑌹𑌸𑌿 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 |
𑌏𑌕𑌾𑌕𑍀 𑌯𑌤𑌚𑌿𑌤𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌨𑌿𑌰𑌾𑌶𑍀𑌰𑌪𑌰𑌿𑌗𑍍𑌰𑌹𑌃 || ௰ ||

(ப-ம்.) யோகீ-கருமயோகநிஷ்டன், ஸததம்-எப்போதும் (அதாவது நாடோறும் யோககாலத்தில்), ரஹஸி - ஏகாந்ததேசத்தில், ஸ்த்திதஃ-இருந்து; ஏகாகீ-ஒண்டிக்காரனாய், யதசித்த ஆத்மா-அடக்கப்பட்ட சித்தமு மனமுமுடையனாய், நிராசீஃ-நிரபேக்ஷனாய், அபரிக்ரஹஃ-மமதை யொழித்தவனாய், ஆத்மாநம்-ஆன்மாவை, யுஞ்ஜீத-யுக்தமாகக்கடவன். (௰)

(தா-ம்) கர்மயோகநிஷ்டன் நிர்ஜனப்பிரதேசத்தில் ஏகாகியாகவிருந்து மனதை நித்தியவஸ்து விசாரத்தில் நிறுத்தி ஆத்மஞானத்துக் கந்நிய விஷயங்களிலாசையில்லாமல் எந்த வஸ்துவிலும் அஹம்பாவத்தை நீக்கினவனாய் எக்காலும் மனதை ஆன்மாவினிடத்திற் சேர்க்கவேண்டும். "என்பதால் பரப்பிரமஸ்வரூபத்தைக் காண்பதற்குப் பிரயத்தினப்படவேணுமென்று பொருள்." (௰)

𑌶𑍁𑌚𑍌 𑌦𑍇𑌶𑍇 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌪𑍍𑌯 𑌸𑍍𑌥𑌿𑌰𑌮𑌾𑌸𑌨𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 |
𑌨𑌾𑌤𑍍𑌯𑍁𑌚𑍍𑌛𑍍𑌰𑌿𑌤𑌂 𑌨𑌾𑌤𑌿𑌨𑍀𑌚𑌂 𑌚𑍈𑌲𑌾𑌜𑌿𑌨𑌕𑍁𑌶𑍋𑌤𑍍𑌤𑌰𑌮𑍍 || ௧௧ ||
𑌤𑌤𑍍𑌰𑍈𑌕𑌾𑌗𑍍𑌰𑌂 𑌮𑌨𑌃 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌯𑌤𑌚𑌿𑌤𑍍𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌕𑍍𑌰𑌿𑌯𑌃 |
𑌉𑌪𑌵𑌿𑌶𑍍𑌯𑌾𑌸𑌨𑍇 𑌯𑍁𑌞𑍍𑌜𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑍋𑌗𑌮𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌯𑍇 || ௧௨ ||

(ப-ம்) சுசௌ தேசே-பரிசுத்த ஸ்தானத்தில் ஆத்மநஃ-தனக்கு, ஸ்திரம்-உரப்பானதும், நாதி உச்ச்ரிதம்-அதிக உயரமில்லாததும், நாதி நீசம்-அதிக தாழ மில்லாததும், சேலாஜிநகுசஉத்தரம்-துணி மான்தோல் தர்ப்பைகள் மேல் போர்த்ததுமான, ஆஸநம்-ஆஸனத்தை, ப்ரதிஷ்டாப்ய-ஸ்தாபித்து, தத்ர-அதில், மநஃ-மனதை; ஏகாக்ரம்க்ருத்வா-ஒன்றைநாடியதாகச் செய்து, யத சித்த இந்த்ரிய க்ரியஃ-அடக்கப்பட்ட சித்தம் இந்திரியமிவற்றின் வியாபாரத்தையுடையனாய், ஆஸநே-ஆஸனத்தில், உபவிச்ய-உட்கார்ந்து, ஆத்ம விசுத்தயே-ஆத்மாவின் சுத்தியின்பொருட்டு, யோகம் யுஞ்ஜ்யாத்-யோகஞ் செய்யக்கடவன். (௧௧-௧௨)

(தா-ம்) பரிசுத்தமானவிடத்தில் உறுதியாயும், அதிக உயர்வு தாழ்வின்றியும், வஸ்திரம், புலித்தோல், தர்பம், இதுகள்மேற்போர்த்த வோராசனத்தைபோட்டுக்கொண்டு, "என்பதால் ஆசனத்தின் மீது தர்பத்தையும், அதின்மீது புலித்தோலையும், அதினமீது வஸ்திரத்தையும் விரித்து" அவ்வாசனத்தின் மீதுட்கார்ந்து மனத்தின் றொழில்களையும், இந்திரியங்களின் றொழில்களையு முள்ளடக்கி மன

தை ஒரே வஸ்துவிற்செல்லும்படி செய்துக்கொண்டு (சித்தசுத்தி) சம்சாரபந்த நிவ்ருத்திக்காகவும் ப்ரம்ம ஸ்வரூபத்தை யறிவதற் காகவும் யோகத்தையாரம்பிக்கவேண்டும். (௧௧-௧௨)

𑌸𑌮𑌂 𑌕𑌾𑌯𑌶𑌿𑌰𑍋𑌗𑍍𑌰𑍀𑌵𑌂 𑌧𑌾𑌰𑌯𑌨𑍍𑌨𑌚𑌲𑌂 𑌸𑍍𑌥𑌿𑌰𑌃 ।
𑌸𑌂𑌪𑍍𑌰𑍇𑌕𑍍𑌷𑍍𑌯 𑌨𑌾𑌸𑌿𑌕𑌾𑌗𑍍𑌰𑌂 𑌸𑍍𑌵𑌂 𑌦𑌿𑌶𑌶𑍍𑌚𑌾𑌨𑌵𑌲𑍋𑌕𑌯𑌨𑍍 ॥ ௧௩ ॥
𑌪𑍍𑌰𑌶𑌾𑌨𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌗𑌤𑌭𑍀𑌰𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌾𑌰𑌿𑌵𑍍𑌰𑌤𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 ।
𑌮𑌨𑌃 𑌸𑌂𑌯𑌮𑍍𑌯 𑌮𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑍋 𑌯𑍁𑌕𑍍𑌤 𑌆𑌸𑍀𑌤 𑌮𑌤𑍍𑌪𑌰𑌃 ॥ ௧௪ ॥

(ப-ம்) காய சிரோக்ரீவம்-உடல் தலை கழுத்துகளை, ஸமம்-ஸமமாகவும், அசலம்-அசையாது, ஸ்திரம்-உறுதியாகவும், தாரயந்-நிறுத்திக்கொண்டு, ஸ்வம் நாஸிகாக்ரம்-தனது மூக்கு நுனியை, ஸம்ப்ரேக்ஷ்ய-பார்த்து, திசச்ச-திசைகளையும், அநவலோகயந்-பாராமல் இருக்கிறவனும், ப்ரசாந்த ஆத்மா-அடங்கிய மனதோடு, விகத பீ:-பயமற்று, ப்ரம்மசாரி வ்ரதே-பிரமத்தை நாடுகிற விரதத்தில், ஸ்தித:-இருந்தவனாய், மந: ஸம்யம்ய-மனதைத்திருப்பி, மத் சித்த:-என்னைச் சிந்திப்பவனாய், மத்பர:-என்னையே ஆசிரயித்திருப்பவனுமாய், யுக்த: ஸாவதானமாய், ஆஸீத-இருக்கக்கடவன். (௧௩-௧௪)

(தா-ம்) உடலையும், சிரசையும், கழுத்தையும், சிரமம் நேரிடும் போது கூட அசையாமற் செய்துக்கொண்டு தனது இரண்டு புருவத்துக்கும் இடையிலுள்ள ஞானஸ்தானமென்னும் சுழிமுனையை ஞானேந்திரியத்தாற்பார்த்தும், திக்குகளைக் கட்புலனாற்பாராமலும், ஆநந்த மனதுடையவனும் நிர்ப்பயனும், பிரமசர்ய விரதத்திலிருப்பவனும், என்னிடத்திற் சித்தத்தை வைத்தவனும், ஸாவதானத்துடனு மிருந்துக்கொண்டு என்னையே ஆச்ரயித்திருக்கவேண்டும்.

𑌯𑍁𑌞𑍍𑌜𑌨𑍍𑌨𑍇𑌵𑌂 𑌸𑌦𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌯𑍋𑌗𑍀 𑌨𑌿𑌯𑌤𑌮𑌾𑌨𑌸𑌃 ।
𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌂 𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌣𑌪𑌰𑌮𑌾𑌂 𑌮𑌤𑍍𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌮𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ॥ ௧௫ ॥

(ப-ம்) ஏவம் ஸதா-இப்படி எப்போதும், ஆத்மாநம் யுஞ்ஜந்-மனதை(நம்மிடத்தில்) நிறுத்திய, நியத மாநஸ:-நியமிக்கப்பட்ட மனமுள்ளவனும், யோகீ-யோகியானவன், மத் ஸம்ஸ்தாம்-என்னிடத்தில் நிலையென்கிற, நிர்வாண பரமாம்-ஆநந்தத்தின் எல்லையான, சாந்திம்-சாந்தியை, அதிகச்சதி-அடைகிறான். (௧௫)

(தா-ம்) இப்படிக்கு எக்காலும் சித்தத்தை ஆன்மாவினிடத்தில் நிறுத்தி பரிசுத்த மனதுடைய யோகியானவன் சுகப்பெருக்காய் என்னிடத்திலிருக்கும்படியான சாந்தியென்னும் பரமாநந்தத்தை யடைவன். (௧௫)

நாத்யஸ்நதஸ்து யோகோ(அ)ஸ்தி நசைகாந்தமநஸ்நத꞉।
நசாதிஸ்வப்நஸீலஸ்ய ஜாக்ரதோ நைவசார்ஜுந॥ கசு॥

(ப-ம்) ஹே அர்ஜுந-வாராய அருச்சுனா! அதி அச்நத꞉து-அதிகமாய் புசிப்பவனுக்கு, யோக꞉ நாஸ்தி-யோகம் இல்லை, ஏகாந்தம-சுத்தமாய், அநச்நத꞉ச-உண்ணாதவனுக்கும், ந-இல்லை, அதிஸ்வப்நசீலஸ்யச-அதிக தூக்கமானவனுக்கும், ந-இல்லை, ஜாக்ரத꞉-விழித்துக்கொண்டேயிருப்பவனுக்கும், ந ஏவ-இல்லேயேயில்லை. (கசு)

(தா-ம்) ஓ அர்ஜுனா! அதிக ஆகாரத்தையுட்கொண்டவனுக்கும், இரகசியமாய் புசிக்காதவனுக்கும், விசேஷமாய்த்தூங்குகிறவனுக்கும், விழித்துக்கொண்டிருப்பவனுக்கும், ஞானயோகம் கைகூடாது. (கசு)

யுக்தாஹாரவிஹாரஸ்ய யுக்தசேஷ்டஸ்ய கர்மஸு।
யுக்தஸ்வப்நாவபோதஸ்ய யோகோபவதி து꞉கஹா॥ கஎ॥

(ப-ம்.) யுக்த ஆஹார விஹாரஸ்ய-மிதமான ஆஹாரமும் ஸஞ்சாரமுமுடையனும், கர்மஸு-கருமங்களில், யுக்த சேஷ்டஸ்ய-மிதமான வியாபாரமுடையனும, யுக்த ஸ்வப்ந அவபோதஸ்ய - மிதமான தூக்கமும் விழிப்பு முள்ளவனுமானவனுக்கு, து꞉கஹா-துக்கத்தைப்போக்கடிக்கிற, யோக꞉ பவதி-யோகம் சித்திக்கும். (கஎ

(தா-ம்) உசிதமான ஆகாரமும், உசிதமான வெளிசஞ்சாரமும் கர்மத்திலுசிதமான பரிஸ்ரமும், உசிதமான நித்திரையும், விழித்துக்கொள்ளுகலுமுள்ளவனுக்குச் சம்சாரதுக்கம் விலகி ஞானயோகஞ்சித்திக்கின்றது. (கஎ

யதாவிநியதம் சித்தமாத்மந்யேவாவதிஷ்டதே।
நிஸ்ப்ருஹஸ்ஸர்வகாமேப்யோ யுக்தஇத்யுச்யதே ததா॥ கஅ

(ப-ம்.) யதா சித்தம்-எப்பொழுது மனது, விநியதம்-அடக்கப்பட்டதாய், ஆத்மநி ஏவ-ஆத்மாவில் தானே, அவதிஷ்டதே-இருக்குமோ, ததா-அப்பொழுது, ஸர்வ காமேப்ய꞉ - எல்லாப் பண்டங்களிலும், நிஸ்ப்ருஹ꞉-ஆசையற்று, யுக்த꞉ இதி-(யோகத்துக்குத்) தக்கவனென்று, உச்யதே-சொல்லப்படுவான். (கஅ

(தா-ம்) எப்பொழுது மனம் ஆன்மாவினிடத்தில் லயித்து நிசலமாகவிருக்கிறதோ அப்பொழுது தான் எல்லாவஸ்துகளிடத்திலும் விருப்பமற்றவனெனவும், யோகாப்பியாசத்துக் குரியவனெனவும் கூறப்படுகிறான். (ஸ) ஆத்மந்யேவ, தனதுசெஞ்ஞான சொரூபத்திலேயே. (க

𑌯𑌥𑌾 𑌦𑍀𑌪𑍋 𑌨𑌿𑌵𑌾𑌤𑌸𑍍𑌥𑍋 𑌨𑍇𑌙𑍍𑌗𑌤𑍇 𑌸𑍋𑌪𑌮𑌾 𑌸𑍍𑌮𑍃𑌤𑌾 |
𑌯𑍋𑌗𑌿𑌨𑍋 𑌯𑌤𑌚𑌿𑌤𑍍𑌤𑌸𑍍𑌯 𑌯𑍁𑌞𑍍𑌜𑌤𑍋 𑌯𑍋𑌗𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 || ௧௯ ||

(ப-ம்) நிவாதஸ்த: தீப:-காற்றில்லாதவிடத்துள்ள தீபம், யதா ந இங்கதே-எப்படி சலிக்கிறதில்லையோ; யத சித்தஸ்ய-மனோனிருத்தியற்று, ஆத்மநி-ஆத்மாவில், யோகம்-யோகத்தை, யுஞ்ஜத:-செய்கின்ற, யோகிந:-யோகஞ்செய்பவனுடைய, ஆத்மந:-ஆத்மாவுக்கு, ஸா உபமா ஸ்ம்ருதா-அது உவமையாக வெண்ணப்பட்டது. (௧௯)

(தா-ம்) காற்றில்லாவிடத்தில் வைத்த தீப மெவ்வண்ணம் அசைவற்றுப் பிரகாசிக்குமோ, அவ்வண்ணமே மனதை நிலைநிறுத்தி ஆன்ம விசாரஞ் செய்பவனுக்கு ஸாந்நித்தியமாகிறது, "ஆன்மஸ்வரூபம் நன்கு பிரகாசிக்கிறது." (௧௯)

𑌯𑌤𑍍𑌰𑍋𑌪𑌰𑌮𑌤𑍇 𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌨𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌂 𑌯𑍋𑌗𑌸𑍇𑌵𑌯𑌾 |
𑌯𑌤𑍍𑌰 𑌚𑍈𑌵𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌤𑍁𑌷𑍍𑌯𑌤𑌿 || ௨௦ ||
𑌸𑍁𑌖𑌮𑌾𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌿𑌕𑌂 𑌯𑌤𑍍𑌤𑌦𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌗𑍍𑌰𑌾𑌹𑍍𑌯𑌮𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌮𑍍 |
𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌯𑌤𑍍𑌰 𑌨 𑌚𑍈𑌵𑌾𑌯𑌂 𑌸𑍍𑌥𑌿𑌤𑌶𑍍𑌚𑌲𑌤𑌿 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑌃 || ௨௧ ||
𑌯𑌂 𑌲𑌬𑍍𑌧𑍍𑌵𑌾 𑌚𑌾𑌪𑌰𑌂 𑌲𑌾𑌭𑌂 𑌮𑌨𑍍𑌯𑌤𑍇 𑌨𑌾𑌧𑌿𑌕𑌂 𑌤𑌤𑌃 |
𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌸𑍍𑌥𑌿𑌤𑍋 𑌨 𑌦𑍁𑌃𑌖𑍇𑌨 𑌗𑍁𑌰𑍁𑌣𑌾𑌪𑌿 𑌵𑌿𑌚𑌾𑌲𑍍𑌯𑌤𑍇 ||
𑌤𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌦𑍍𑌦𑍁𑌃𑌖𑌸𑌂𑌯𑍋𑌗𑌵𑌿𑌯𑍋𑌗𑌂 𑌯𑍋𑌗𑌸𑌂𑌜𑍍𑌞𑌿𑌤𑌮𑍍 |
𑌸 𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑍇𑌨 𑌯𑍋𑌕𑍍𑌤𑌵𑍍𑌯𑍋 𑌯𑍋𑌗𑍋𑌨𑌿𑌰𑍍𑌵𑌿-𑌣𑍍𑌣𑌚𑍇𑌤𑌸𑌾 ||

(ப-ம்.) யோகஸேவயா-யோகஞ் செய்வதனால், நிருத்தம்-விஷயங்களிலிருந்து திருப்பப்பட்ட, சித்தம் - மனமானது, யத்ர உபரமதே-எதில் ரமிக்குமோ, யத்ர ச ஏவ-எதில் தானே, ஆத்மநா ஆத்மாநம்-மனதினால் ஆத்மாவை, பஶ்யந்-பார்த்துக்கொண்டு, ஆத்மநி-ஆத்மாவில், துஷ்யதி-இன்புறுகின்றனோ, யத் தத்-யாதொன்று, அதீந்த்ரியம்-புலன்களுக்கெட்டாததோ, புத்திக்ராஹ்யம்-புத்தியால் அறியக்கூடியதோ, ஆத்யந்திகம் ஸுகம்-மிகவும் ஸுகரூபமோ, யத்ர வேத்தி-எதில் அனுபவிக்கிறானோ, யத்ர ஸ்தித: அயம்-எதில் இருக்குமிவன், தத்வத:-சுகானுபவத்தினின்றும், ந ஏவ சலதி - சலிக்கவே மாட்டானோ, யம் லப்த்வா - எதை யடைந்தபிறகு, அபரம் லாபம்-வேறு லாபத்தை, தத: அதிகம்-அதைவிட அதிகமாக, ந மந்யதே - மதிக்கமாட்டானோ, யஸ்மிந் ஸ்தித:-எதில் இருப்பவன், குருணா து:கேந அபி-பெருந்துயரத்தாலும், ந விசால்யதே - சலிக்கவேமாட்டானோ, தம்-அதை, து:க ஸம்யோக வியோகம் - துக்க ஸம்பந்தமற்ற,

யோகஸம்ஜ்ஞிதம்-யோகமென்பதாக, வித்யாத் - அறிக்கடவன், ஸ: யோக:-அந்த யோகமானது, நிச்சயேந-(இப்படிப்பட்டதென்கிற) நிச்சயத்தோடு, அநிர்விண்ண சேதஸா - ஸந்துஷ்ட மனதோடு, யோக்தவ்ய:-செய்யத்தக்கது. (௨௰-௨௧-௨௨-௨௩)

(தா-ம்) யோகாப்பியாசத்தால் விஷயாதிகளில் நின்றும் திருப்பப்பட்ட சித்தம் எதனிடத்தில் சுகித்து நிற்கின்றதோ எதனிடத்தில் மனம் ஆன்மாவைப் பார்த்துக்கொண்டு ஆன்மாவினிடத்திலேயே திருப்தியடைகின்றதோ, இந்திரியாதிகளுக்கெட்டாததாயும், அறிவினால் அறியத்தக்கதாயுமுள்ள பரமசுகத்தை எதனிடத்தில் நிலைநின்று காண்கின்றானோ, எதுகிடைத்தபின் மீண்டும் அதைவிட மேலானலாபம் வேறுதோன்றாதோ எதனிடத்திலிருப்போன் மகாதுக்கத்தினாற்கூட அசைக்கப்படானோ அப்படிப்பட்ட துக்கநிவர்த்தியே யோகமெனப்படுகின்றதென்றறிதல் வேண்டும். அத்தகைய யோகத்தை திருப்தியுள்ள மனதோடும் ஸ்திரபுத்தியோடும் அநுஷ்டிக்கவேண்டும். (ஸ௦) யம்-எந்தஆத்மலாபத்தை. (௨௰-௨௧-௨௨-௨௩)

𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌪𑍍𑌰𑌭𑌵𑌾𑌨𑍍𑌕𑌾𑌮𑌾𑌂𑌸𑍍𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑌶𑍇𑌷𑌤𑌃 |
𑌮𑌨𑌸𑍈𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍍𑌰𑌾𑌮𑌂 𑌵𑌿𑌨𑌿𑌯𑌮𑍍𑌯 𑌸𑌮𑌨𑍍𑌤𑌤𑌃 || ௨௪ ||
𑌶𑌨𑍈𑌃 𑌶𑌨𑍈𑌰𑍁𑌪𑌰𑌮𑍇𑌦𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 𑌧𑍃𑌤𑌿𑌗𑍃𑌹𑍀𑌤𑌯𑌾 |
𑌆𑌤𑍍𑌮𑌸𑌂𑌸𑍍𑌥𑌂 𑌮𑌨𑌃 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌨 𑌕𑌿𑌂𑌚𑌿𑌦𑌪𑌿 𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑍇𑌤𑍍 || ௨௫ ||

(ப-ம்) ஸங்கல்ப ப்ரபவாந்-கோரிக்கையாலுண்டாகும், காமாந்-விஷய ஆசைகளை, ஸர்வாந்-எல்லாவற்றையும், அசேஷத: த்யக்த்வா-முழுதும் விட்டு, இந்த்ரிய க்ராமம்-புலன் கூட்டத்தை, ஸமந்தத:-எப்புறத்தினின்றும், மநஸா ஏவ விநியம்ய-மனதினால் தானே அடக்கி, சநை: சநை:-மெள்ள மெள்ள, த்ருதி க்ருஹீதயா - தைரியத்தால அடையப்பட்ட, புத்யா-புத்தியினாலே, உபரமேத்-(ஸகலத்தினின்றும்) நீங்கக்கடவன்; மந:-மனதை, ஆத்மஸம்ஸ்த்தம்-ஆத்மாவில்நிலைக்க, க்ருத்வா-செய்து, கிஞ்சித் அபி-சிறிதொன்றையும், நசிந்தயேத்-சிந்திக்கக்கடவனல்லன். (௨௪-௨௫)

(தா-ம்) சங்கற்பத்தாலுதித்த புத்திர மித்திராதி விஷயபாகங்களியாவும் நிச்சேஷமாய் மனதினாலொதிக்கி இந்திரிய சமூகங்களை நான்கு பக்கத்திலும் ஸ்பர்சஜங்களென்னும் சப்தாதி விஷயங்களில் நின்றும் மனதினால் நிவர்த்திசெய்து கொஞ்சங்கொஞ்சமாய் விவேகத்துடன்கூடிய அறிவினால் ஆன்மஞானத்திற் கந்நியமான விஷயாதிகளில் நின்றும் திரிப்பி மனதை ஆன்மாவினிடத்தில் நிறுத்தினபி

ன்பு மீண்டும் ஒன்றையுஞ் சிந்திக்கக்கூடாது. (ம)மநஃ மனம் பரப்பி ரமனிடத்தில் நிலைபெற்றிருக்கும்படி. (௨௪-௨௫)

யதோ யதோ நிஶ்சரதி மநஶ்சஞ்சலமஸ்திரம் ।

ததஸ்ததோ நியம்யைததாத்மந்யேவ வஶம் நயேத் ॥ ௨௬ ॥

(ப-ம்.) சஞ்சலம்-சஞ்சல ஸ்வபாவ மாகையாலே. அஸ்திரம்-நிலைக்காத, மநஃ-மனது, யதஃ யதஃ-எங்கெங்கு, நிச்சரதி - ஸஞ்சரிக்கின்றதோ, ததஃ ததஃ-அந்தந்தவிஷயங்களிலிருந்து, ஏதத் - இப்(மனதை), நியம்ய-அடக்கி, ஆத்மநி ஏவ-ஆத்மாவில் தானே, வசம்நயேத்-வசப்படுத்தக்கடவன். (௨௬)

(தா-ம்) சஞ்சலஸ்வபாவமுடைய தாதலால் ஆன்மாவினிடத்தில்மனம் ஸ்திரமாகவிருக்காமல் எங்கெங்தமார்க்கமாய் சஞ்சரிக்குமோ, அந்தந்த மார்க்கத்தில் நின்றும் அதை திருப்பி ஆன்மாவினிடத்திலேயே பிரவேசிக்கும்படி செய்தல்வேண்டும். (௨௬)

ப்ரஶாந்தமநஸம் ஹ்யேநம் யோகிநம் ஸுகமுத்தமம் ।
உபைதி ஶாந்தரஜஸம் ப்ரஹ்மபூதமகல்மஷம் ॥ ௨௭ ॥

(ப-ம்) ப்ரசாந்த மநஸம்-அசையாத மனதுடையனும், அகல்மஷம்-கலக்கமற்று, சாந்த ரஜஸம்-ரஜோகுணமுமொழித்து, ப்ரஹ்மபூதம்-ஸ்வஸ்வரூபமாய்நின்ற, ஏநம் யோகிநம்-இந்த யோகியை, உத்தமம் ஸுகம்-உத்தம ஸுகமான(மோக்ஷம்), உபைதிஹி-அடைகிறதென்பது வேதப்ரஸித்தமாயிருக்கிறது. (௨௭)

(தா-ம்) ஆன்மஞானத்தில் உறுதியான மனதோடிருப்பதினால் பாவத்தையொழித்து சுத்தாத்மஸ்வரூபியாய் விளங்காநின்ற அந்த யோகியை சுகமடைகின்றது. (௨௭)

யுஞ்ஜந்நேவம் ஸதாத்மாநம் யோகீ விகதகல்மஷஃ ।
ஸுகேந ப்ரஹ்மஸம்ஸ்பர்ஶமத்யந்தம் ஸுகமஶ்நுதே ॥ ௨௮ ॥

(ப-ம்) ஏவம் ஸதா-இப்படி எப்போதும், ஆத்மாநம் - ஆத்மாவைக்(குறித்து), யுஞ்ஜந்-யோகத்திலிருக்கின்ற, யோகீ-யோகியானவன்; விகத கல்மஷஃ-பாபங்களற்றவனாய், ப்ரஹ்ம ஸம்ஸ்பர்சம்-பிர்ம்மாநுபவரூபமான, அத்யந்தம் ஸுகம்-மிகுந்த சுகத்தை, ஸுகேந-வருத்தமின்றி, அச்நுதே-அநுபவிக்கிறான். (௨௮)

(தா-ம்) இவ்வாறு எக்காலம் பிர்மஞானத்திலிருந்துகொண்டு ஜன்மாந்திர தீவினைகளைத் தலைத்த யோகியானவன் பிர்மஞானாநந்தமென்னும் அபரிமிதசுகத்தை ஆயாசமில்லாமலேயநுபவிக்கின்றான்.

ஸர்வபூதஸ்தமாத்மானம் ஸர்வபூதானி சாத்மனி ।
ஈக்ஷதே யோகயுக்தாத்மா ஸர்வத்ர ஸமதர்சன: ॥ ௨௯ ॥

(ப-ம்) ஆத்மானம்-தன்னை, ஸர்வபூதஸ்தம்-எல்லாப்பூதங்களிலு மிருப்பதாகவும், ஸர்வபூதானி-எல்லாப் பூதங்களையும், ஆத்மநிச-பூதங்களிலுமிருக்கிறதாகவும், யோக யுக்த ஆத்மா-யோகத்தில நின்றமனதுடையவன், ஸர்வத்ர-எல்லாவிடத்தும், ஸமதர்சன:-ஸமமானபார்வையுடையனும், ஈக்ஷதே-பார்க்கிறான். (௨௯)

(தா-ம்) யோகத்தினால் இராஜோகுணம் நாசமடைந்தபின் சுத்தமானமனதுடன் ஸமஸ்தப்பிராணிகளிடத்திலும் சமதிருஷ்டியுடையவனாய், தனது ஆன்மாவை ஸர்வபூதங்களிலுமிருப்பதாயும், ஸர்வபூதங்களுடைய ஆத்மா தன்னிடத்திலிருப்பதாயும் காண்கின்றான். ()

யோ மாம் பச்யதி ஸர்வத்ர ஸர்வம் ச மயி பச்யதி ।
தஸ்யாஹம் ந ப்ரணச்யாமி ஸ ச மே ந ப்ரணச்யதி ॥ ௩௦ ॥

(ப-ம்.) ய: மாம்-எவன் என்னை, ஸர்வத்ரபச்யதி-எங்கும் பார்க்கிறானோ, ஸர்வம்ச-எல்லாவற்றையும், மயி பச்யதி-என்னில் பார்க்கிறானோ, தஸ்ய அஹம்-அவனுக்கு நான், நப்ரணச்யாமி-காணாமற்போவதில்லை, ஸச மே-அவனும் எனக்கு, நப்ரணச்யதி-காணாமற் போவதில்லை. (௩௦)

(தா-ம்) எவன், எல்லாவற்றிலும், எத்தனையும், என்னிடத்தில், எல்லாவற்றையும் பார்க்கிறானோ, அவனுக்குயானும் எந்தனுக்கவனும், நசிக்கிறதில்லை. (௩௦)

ஸர்வபூதஸ்திதம் யோ மாம் பஜத்யேகத்வமாஸ்தித: ।
ஸர்வதா வர்த்தமானோ(அ)பி ஸ யோகீ மயி வர்த்ததே ॥ ௩௧ ॥

(ப-ம்.) ய: மாம்-யாவனொருவன் என்னை, ஸர்வபூத ஸ்திதம்-சகலபூதங்களிலுமிருக்கிற; ஏகத்வம் ஆஸ்த்தித:-ஒருமையடைந்து, பஜதி-ஸேவிக்கிறானோ, ஸர்வதா-எந்தநிலையில், வர்த்தமாந: அபி-இருந்தாலும, ஸ: யோகீ-அந்த யோகி, மயி வர்த்ததே-என்னிடத்தில் இருக்கிறான். (நித்தியமுக்தனாகச் சொல்லப்படுகிறான்) (௩௧

(தா-ம்) எவன் பேதபுத்தியன்றி ஸர்வப் பிராணிகளிடத்திலும் எந்தனை பஜிக்கின்றானோ அப்படிப்பட்டயோகி எவ்வித வ்யாபாரத்திற் பிரவேசித்தபோதிலும் எந்தனிடத்திலேயே யிருக்கின்றான். (

ஆத்மௌபம்யேன ஸர்வத்ர ஸமம் பச்யதி யோ(அ)ர்ஜுந ।
ஸுகம் வா யதி வா து:கம் ஸ யோகீ பரமோ மத: ॥ ௩௨

(ப-ம்) ஆத்ம ஔபம்யேந - ஆத்மாக்களுக்குண்டான ஸாம்யத்தைக்கொண்டு, ஹே அர்ஜுந-ஓ அர்ஜுநனே, ஸர்வத்ர-எங்கும், ஸுகம் வா யதிவா து:கம்-இன்பத்தையோ துன்பத்தையோ, ஸமம்-ஸமமாக, ய: பச்யதி-எவன் பார்க்கிறானோ, ஸ:-அவன், பரம: யோகீ-மேலான யோகி, மத: (என்று) எண்ணப்படுவான். (௩௨)

(தா-ம்) ஓ அர்ஜுநா! சுகதுக்கங்களை தனது போல்ஸர்வப் பிராணிகளிடத்திலும் சமமாய்ப் பார்க்கிறவனெவனோ அவனே பரம யோகியென்றெண்ணப்படுகிறான். (௩௨)

அர்ஜுனவாக்கியம்.

யோயம் யோகஸ்த்வயா ப்ரோக்த: ஸாம்யேந மதுஸூதந ।
ஏதஸ்யாஹம் ந பச்யாமி சஞ்சலத்வாத் ஸ்திதிம் ஸ்திராம் ॥ ௩௩ ॥

(ப-ம்.) ஹே மதுஸூதந-மதுஸூதனனே! த்வயா-தேவரீரால், ஸாம்யேந-ஸாம்யமாக, ய: அயம் யோக: - யாதொன்றிந்தயோகம், ப்ரோக்த:-சொல்லப்பட்டதோ, சஞ்சலத்வாத்-(மனம்) சலிப்புற்றதாகையால், ஏதஸ்ய-இந்த யோகத்தினுடைய, ஸ்திராம் - நிலையான, ஸ்திதிம் - நிலைமையை, அஹம் - நான், நபச்யாமி - பார்க்கிறேனில்லை. (௩௩)

(தா-ம்.) ஓ கிருஷ்ணா! ஸர்வபூதங்களையும் சமமாய்ப்பார்ப்பதினால் எந்தயோகம் உமாறு கூறப்பட்டதோ அத்தகைய இந்தயோகம் எந்தனுக்கு சஞ்சலப்படுவதால் இதற்கு ஸ்திரமான அவஸ்தை இன்னதென்று தெரியவில்லை. (௩௩)

சஞ்சலம் ஹி மந: க்ருஷ்ண ப்ரமாதி பலவத்த்ருடம் ।
தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே வாயோரிவ ஸுதுஷ்கரம் ॥ ௩௪ ॥

(ப-ம்) ஹே க்ருஷ்ண-ஓ கண்ணா! சஞ்சலம்-சலிக்கும் ஸ்வபாவமான, மந:-மனது, பலவத்-வலுவில்(புருஷனை), த்ருடம் ஹி-விஷயங்களில் கெட்டியாயும், ப்ரமாதி-கலங்கச் செய்கிறதாயும், தஸ்ய-அதினுடைய, நிக்ரஹம்-ஜயத்தை, அஹம்-நான், வாயோரிவ-காற்றினதுபோல, ஸுதுஷ்கரம்-மிகவும் செய்ய வரியதென்று, மந்யே-நினைக்கின்றேன். (௩௪)

(தா-ம்.) ஓ கிருஷ்ணா! மனதோ சஞ்சலஸ்வபாவமுடையது. இன்னும் பலாத்காரமாய் அபகரிக்கப் படும்படியானதும் அதிகபலமுடையது மாதலால் "காற்றை அசையாமல் நிற்கச்செய்வதுபோல்" சாத்தியமென்று யான் எண்ணுகின்றேன். (௩௪)

ஸ்ரீகிருஷ்ண வாக்கியம்.

𑌅𑌸𑌂𑌶𑌯𑌂 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌮𑌨𑍋 𑌦𑍁𑌰𑍍𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌂 𑌚𑌲𑌮𑍍 |
𑌅𑌭𑍍𑌯𑌾𑌸𑍇𑌨 𑌤𑍁 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑍇𑌣 𑌚 𑌗𑍃𑌹𑍍𑌯𑌤𑍇 ||

(ப-ம்) ஹே மஹாபாஹோ-ஓ பலசாலியே!, சலம்-சலிக்குந்தன்மையுடையதான; மந:-மனமானது, துர்நிக்ரஹம்-அடக்கமுடியாததுதான், அஸம்சயம்-ஸம்சயமில்லை, ஹே கௌந்தேய-ஓ குந்தியின் மைந்தா! அப்யாஸேந-அப்பியாசத்தாலும், வைராக்யேண ச-வைராக்கியத்தாலும், க்ருஹ்யதே-அடக்கப்படும். (௩௫)

(தா-ம்) ஓ அர்ஜுனா! மனதை நிலைநிறுத்தமுடியாதென்பதில் ஐயமில்லை. அப்படியிருந்தபோதிலும் அப்பியாசத்தாலும் பிரகிருதி வஸ்துக்களில் தோஷாரோபணம் அவைகளில் விருப்பமின்றியிருத்தல்முதலிய வைராக்கியத்தால், மனம் சுத்தப்படும். (௩௫)

𑌅𑌸𑌂𑌯𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 𑌯𑍋𑌗𑍋 𑌦𑍁𑌷𑍍𑌪𑍍𑌰𑌾𑌪 𑌇𑌤𑌿 𑌮𑍇 𑌮𑌤𑌿𑌃 |
𑌵𑌶𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 𑌤𑍁 𑌯𑌤𑌤𑌾 𑌶𑌕𑍍𑌯𑍋𑌽𑌵𑌾𑌪𑍍𑌤𑍁𑌮𑍁𑌪𑌾𑌯𑌤𑌃 || ௩௬ ||

(ப-ம்) அஸம்யத ஆத்மநா - ஸ்வாதீனப்படுத்திக் கொள்ளாத மனதையுடைய, யோக:-யோகமானது, துஷ்ப்ராப:-அடையக் கூடியதல்ல, இதி - என்று, மே-என்னுடைய, மதி:-நிர்ணயம், வச்ய ஆத்மநா- வசப்பட்ட மனதுடையனும், யததா து-யத்தினம் செய்பவனாலோ, உபாயத:-உபாயமாய், அவாப்தும்-அடைய, சக்ய: - சாத்தியமானது. (௩௬)

(தா-ம்) மனக்கட்டின்றி யோகம் சித்திக்காதென்றுளென்கருத்து பற்பல வுபாயத்தால் மனதை யடக்கினவனுக்குக் கர்மப்பிரயத்தினத்தால் பரமபொருள் சுலபமாய்ப்புலப்படும். (௩௬)

அர்ஜுன வாக்கியம்.

𑌅𑌯𑌤𑌿𑌃 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑍋𑌪𑍇𑌤𑍋 𑌯𑍋𑌗𑌾𑌚𑍍𑌚𑌲𑌿𑌤𑌮𑌾𑌨𑌸𑌃 |
𑌅𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌯𑍋𑌗𑌸𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌕𑌾𑌂 𑌗𑌤𑌿𑌂 𑌕𑍃𑌷𑍍𑌣 𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 || ௩௭ ||

(ப-ம்) ச்ரத்தயா உபேத:-சிரத்தையோடு கூடியவன், அயதி:-யத்தினமில்லாத பக்ஷத்தில், யோகாத்-யோகத்தினின்றும், சலிதமாநஸ:-சலிப்புற்றமனத்தனாய், யோகஸம்ஸித்திம்-யோகஸித்தியை, அப்ராப்ய-அடையாமல், ஹே க்ருஷ்ண!-ஓ பகவானே, காம்கதிம் கச்சதி-என்னகதி யடைகிறான். (௩௭)

(தா-ம்) ஏ கிருஷ்ணா! சிரத்தை யுடையவன்கூட முயற்சியின் குறைவால் யோகத்தினது சித்தியைப் பெறாமல் மனம் யோகத்திலிருந்து சலித்தபிறகு என்கெதியடைவன்? (௩௭)

கச்சிந்நோபயவிப்ரஷ்டச் சிந்நாப்ரமிவ நஶ்யதி |
அப்ரதிஷ்டோ மஹாபாஹோ விமூடோ ப்ரஹ்மண: பதி ||

(ப-ம்) உபய விப்ரஷ்டஃ-கர்மயோக இரண்டிலும் நழுவிய (இவன்), சிந்ந அப்ரம் இவ-துண்டுபட்ட மேகம் போல, கச்சித் ந நஶ்யதி-கெட்டுப்போகாமலிருக்கிறானா? மஹா பாஹோ-ஓ விக்ரமசாலியே! அப்ரதிஷ்டஃ-(கருமமும்) கைபுகாமல், ப்ரஹ்மணஃ பதி-பிரமத்தின் வழியிலும், விமூடஃ-மூடனானவன். (உ௮)

(தா-ம்) ஏ முகுந்தா! கர்மபலங்களான ஸ்வர்காதி போகங்களினும், தான் ஆரம்பித்த பிரமஞான மார்க்கத்திலும் பயிற்சியடையாத உபயப்பிரஷ்டன் (ஞானமார்க்கத்திலும், கர்மமார்க்கத்திலும் தேர்ச்சியடையாதவன்) கண்டப்பட்ட மேகம்போல நசிக்காமற் போவனோ? (க௮)

ஏதந்மே ஸம்ஶயம் க்ருஷ்ண சேத்துமர்ஹஸ்யஶேஷத: |
த்வதந்ய: ஸம்ஶயஸ்யாஸ்ய சேத்தா நஹ்யுபபத்யதே || ௩௯ ||

(ப-ம்.) ஏதம் மே ஸம்சயம்-இந்த என் ஸந்தேகத்தை, ஹே க்ருஷ்ண-ஓ கண்ணபிரானே! அசேஷதஃ-முழுதும், சேத்தும் அர்ஹஸி-நீர் போக்கவேண்டும், ஹி-ஏனெனில், அஸ்ய ஸம்சயஸ்ய-இச்சந்தேகத்தை, த்வத் அந்யஃ - உம்மைத்தவிர மற்றொருவன், சேத்தா-போக்கவல்லனாய், ந உபபத்யதே-ஏற்படான். (௩௯)

(தா-ம்) ஏ கிருஷ்ணா! எந்தனுக்கு இப்படிப்பட்ட சந்தேகங்களை நிஶ்ஶேஷமா யொழிக்கவேண்டும். இச்சந்தேகங்களை நிவர்த்திசெய்கிறவன் உம்மைத்தவிர வேறொருவருமில்லை. (௩௯)

ஸ்ரீக்ருஷ்ணவாக்கியம்.

பார்த நைவேஹ நாமுத்ர விநாஶஸ்தஸ்ய வித்யதே |
நஹி கல்யாணக்ருத்கஶ்சித் துர்கதிம் தாத கச்சதி || ௪௦ ||

(ப-ம்) ஹே பார்த்த!-ஓ அர்ஜுனா! இஹ - இந்த லோகத்திலும், தஸ்ய விநாசஃ-அந்த யோகப்ரஷ்டனுக்கு, நைவ வித்யதே-இல்லவேயில்லை, அமுத்ர-பரலோகத்திலும், நைவ - இல்லை, ஹே தாத-வாராய் அண்ணா! கல்யாணக்ருத்-சுபமான (யோகத்தைச்) செய்து (நழுவிய), கச்சித்-எவனும், துர்கதிம்-கெடுதியை; ந ஹி கச்சதி - அடையமாட்டானன்றோ? (௪௦)

(தா-ம்) ஏ பார்த்தா! அப்படிப் பட்டவனுக்கு இஹத்திலும், பரத்திலும், நாசமொருபொழுதுமில்லை. அர்ஜுனா! நற்கன்மத்தைச்செய்தவனொருவனும் துர்க்கதியை யடையான். (௪௦)

ப்ராப்ய புண்யக்ருதாம் லோகாநுஷித்வா ஶாஶ்வதீ: ஸமா:।
ஶுசீநாம் ஶ்ரீமதாம் கேஹே யோகப்ரஷ்டோऽபிஜாயதே॥

(ப-ம்) யோகப்ரஷ்டஃ-யோகத்தினின்று நழுவியவன், புண்யக்ருதாம்-புண்ணியவான்களின, லோகாந்-உலகங்களை, ப்ராப்ய - அடைந்து, சாச்வதீ:-சாசுவதமான, ஸமாஃ-(பல) வருஷங்கள், உஷித்வா-(அங்கே) வாஸஞ்செய்து, சுசீநாம்-பரிசுத்தாளான, ஸ்ரீமதாம்-ஸ்ரீமான்களின், கேஹே-கிருஹத்தில், அபிஜாயதே-பிறக்கிறான்.(சக)

(தா-ம்) யோகப்பிரஷ்டன் புண்ணியஞ் செய்தவர்களுடைய லோகம்சென்று வெகுகாலம் சுகியாகவிருந்து பரிசுத்தர்களாயும் யோகாப்பியாசமுடையவர்களுடைய கிரஹத்தில் மீண்டும் ஜனிக்கின்றான். (சக)

அதவா யோகிநாமேவ குலே பவதி தீமதாம்।
ஏதத்தி துர்லபதரம் லோகே ஜந்ம யதீத்ருஶம்॥ சஉ॥

(ப-ம்.) அதவா-இல்லையென்றால், யோகிநாம் - யோகிகளான, தீமதாம்-புத்திமான்களின், குலே ஏவ-வம்சத்தில்தானே, பவதி-பிறக்கின்றான், ஈத்ருசம்-இப்படிப்பட்ட, யத்ஜந்ம-யாதொரு ஜன்மமுண்டோ, ஏதத்ஹி-இதுதான்; லோகே - உலகத்தில் (பிராணிகளுக்கு), துர்லபதரம்-மிகவும் அலபமானது. (சஉ)

(தா-ம்) அப்படி யோகபரிபாகத்தை யடைந்தவன் சமீப்பானேயாகில யோகிகளாயும்,ஞானவந்தர்களாயுமிருக்கிறவர்களுடையகிரஹத்தில் பிறக்கின்றான். லோகத்தில் இப்படிப்பட்ட ஜன்மமுண்டாவது வெகுகடினம். (சஉ

தத்ர தம் புத்திஸம்யோகம் லபதே பௌர்வதேஹிகம்।
யததே ச ததோ பூய: ஸம்ஸித்தௌ குருநந்தந॥ சங

(ப-ம்) ஹே குருநந்தந-ஓ குருவம்சதிலகமே! தத்ர-அந்தஜந்மத்தில்; பௌர்வதைஹிகம்-முன் தேஹத்திலுண்டான, தம் புத்திஸம்யோகம்-அந்த புத்தியோகத்தை, லபதே-அடைகிறான், ததஃ-அதனால், ஸம்ஸித்தௌ-(யோக) ஸித்தியில், பூயஃயததே-மீண்டும் யத்னம் செய்கிறான். (சங

(தா-ம்) ஓ அர்ஜுனா! அவ்விடத்திலும், பூர்வதேஹசம்பந்தமான அந்தயோகி விஷயத்திலேயே புத்தி, சம்பந்தப்பட்டு அங்கிருந்து மறுபடியும் யோகசித்தியில் முயலுகின்றான். (ஸம்) பூயஃ - அதிகமாய். (சங

பூர்வாப்யாஸேந தேநைவ ஹ்ரியதே ஹ்யவஶோऽபி ஸ:।
ஜிஜ்ஞாஸுரபி யோகஸ்ய ஶப்தப்ரஹ்மாதிவர்ததே॥ ௪௪॥

(ப-ம்) பூர்வ அப்யாஸேந-முன்பு பழக்கமான, தேந ஏவ-அதினாலேயே, ஸ:-அவன், அவச: அபி-ஸ்வாதீன மற்றவனாயினும், ஹ்ரியதே-கொண்டுபோகப்படுகிறான், யோகஸ்ய - யோகத்தை, ஜிஜ்ஞாஸு: அபி-அறிய முயன்றவனும், சப்தப்ரஹ்ம - வேதோக்த கர்மபலனை, அதிவர்த்ததே-கடக்கிறான். (௪௪)

(தா-ம்) அப்படிப்பட்டவன் யோகத்திலிச்சை யில்லாதவனாயினும் முன் அப்பியசிக்கப்பட்ட அந்த யோகத்தின் வலுவாலிழுக்கப்பட்டவனாகிறான். யோகத்தை நன்கறியக்கருதினவன்தான் பிரகிருதி சம்பந்தத்தை யதிக்கிரமித்து நிற்பன். (௪௪)

ப்ரயத்நாத்யதமாநஸ்து யோகீ ஸம்ஶுத்தகில்பிஷ:।
அநேகஜந்மஸம்ஸித்தஸ்ததோ யாதி பராம் கதிம்॥ ௪௫॥

(ப-ம்) தத:-இப்படியாகையாலே, அநேகஜந்ம ஸம்ஸித்த:-பலபிறவிகளில் (இப்படி) பிறந்து, ஸம்சுத்த கில்பிஷ: - துலக்கப்பட்ட பாவமுடையனாய், ப்ரயத்நாத்-பெருமுயற்சியாய், யதமாந: - யத்தனம் செய்கின்ற, யோகீ து-யோகியானவன், தத:-அதினின்றும், பராம்கதிம்-ப்ரஹ்மஸாயுஜ்யத்தை, யாதி-அடைகிறான். (௪௫)

(தா-ம்) வெகு ஜன்மங்களாற் சம்பாதிக்கப்பட்ட புண்ணியங்களினாற் பாபத்தை யொழித்தவனாய் விடாமுயற்சிபெற்று யோகாப்பியாசஞ்செய்யும் யோகி அந்தஜன்மத்தில் நின்றும் பரகதியை "பிரமாநுபவத்தை" யடைகிறான். (௪௫)

தபஸ்விப்யோऽதிகோ யோகீ ஜ்ஞாநிப்யோऽபி மதோऽதிக:।
கர்மிப்யஶ்சாதிகோ யோகீ தஸ்மாத்யோகீ பவார்ஜுந॥ ௪௬॥

(ப-ம்) தபஸ்விப்ய:-தவசிகளைக்காட்டிலும், யோகீ அதிக:-யோகி சிறந்தவன, ஜ்ஞாநிப்ய: அபி-ஞானிகளைக்காட்டிலும், அதிக: மத:-சிறந்தவனாக வெண்ணப்படுவான், கர்மிப்ய: ச-கருமஞ்செய்பவரினும், யோகி அதிக:-யோகி சிறந்தவன், தஸ்மாத்-ஆகையால், அர்ஜுந-ஓ அர்ச்சுனா, யோகீ பவ-நீயோகி யாகுவாய். (௪௬)

(தா-ம்) அர்ஜ்ஜுனா! தவஞ்செய்கிறவன், ஆத்மஞான முடையோன், பயனைக்கருதி கன்மஞ்செய்கிறவன், இவர்களைவிடயோகியே சிறந்தவன். ஆதலால் நீயும் யோகியாய்விடு. (௪௬)

யோகிநாமபி ஸர்வேஷாம் மத்கதேநாந்தராத்மநா।
ஶ்ரத்தாவாந்பஜதே யோ மாம் ஸ மே யுக்ததமோ மத:॥ ௪௭॥

(ப-ம்.) யோகிநாம்-யோகிகளான, ஸர்வேஷாம் அபி-எல்லாருக்குள்ளும், மத்கதேந அந்தராத்மநா-என்னையடைந்தசிந்தையினால், யஃஶ்ரத்தாவாந்-எவன் சிரத்தையோடு, மாம் பஜதே-என்னைச்சேவிக்கிறானோ, ஸஃ மே-அவன் எனக்கு, யுக்ததமஃ-மிகவும் யுக்தனாக, மதஃ-எண்ணப்படுவான். (சஎ)

(தா-ம்) யோகிகளுக்குள், என்னிடத்தில் மனதை நிறுத்தி எவன்பக்தியுடன் என்னை பஜிக்கின்றானோ, அவனே மேலானயோகிகளிலும் சிறந்தவனென்பது என் கருத்து. (சஎ)

ஸ்ரீகீதாஸு-விஶ்வரூபஸந்தர்ஶநயோகமென்னும்

ஆறாவது அத்தியாயம் முற்றிற்று.



## ஏழாவது அத்தியாயம்.



### விஜ்ஞாநயோகஃ.

### ஸ்ரீகிருஷ்ண வாக்கியம்.

மய்யாஸக்தமநாஃபார்த்த யோகம்யுஞ்ஜந்மதாஶ்ரயஃ|
அஸம்ஶயம்ஸமக்ரம்மாம்யதாஜ்ஞாஸ்யஸிதச்ச்ருணு|| க||

(ப-ம்) ஹே பார்த்த-வாராய் அர்ச்சுனா! மயி - என்னிடத்தில், ஆஸக்த மநாஃ-பற்றிய மனத்தனாய், மத் ஆஶ்ரயஃ-என்னை ஆதாரமாகப்பற்றி, யோகம் யுஞ்ஜந்-யோகம் செய்யாநின்றுகொண்டு, மாம்-என்னை, அஸம்சயம்-ஸம்சயமின்றி, ஸமக்ரம் - ஸகலமும், யதா ஜ்ஞாஸ்யஸி - எப்படி அறிவாயோ, தத் ஶ்ருணு - அந்த ஜ்ஞானத்தை கேள். (க)

(தா-ம்) ஏ பார்த்தா ! எந்தனிடத்தில் மனதை நிலைநிறுத்தி அன்புடன் நிமிஷங்கூட பகவானைவிட்டு நீக்குவதை சகிக்காதவனாய் என்னை ஆசிரித்து யோகாப்பியாசஞ்செய்து எந்தனை சந்தேகமின்றி முற்றுமெவ்வண்ண முணர்வாயோ, அதைக்கேள்மின். (க)

ஜ்ஞாநம்தேஹம்ஸவிஜ்ஞாநமிதம்வக்ஷ்யாம்யஶேஷதஃ |
யஜ்ஜ்ஞாத்வாநேஹபூயோந்யஜ்ஜ்ஞாதவ்யமவஶிஷ்யதே|| உ

(ப-ம்) அஹம் தே-நான் உனக்கு, இதம்-இந்த, ஜ்ஞாநம்-ஞானத்தை, ஸவிஜ்ஞாநம்-விஜ்ஞானத்தோடு கூட, அஶேஷதஃ-குறைவின்றி முழுதும், வக்ஷ்யாமி-சொல்லுகிறேன், யத் ஜ்ஞாத்வா-யாதொ

ன்றை அறிந்து, இஹ-என்விஷயத்தில், பூய: ஜ்ஞாதவ்யம்-மறுபடி அறியவேண்டுவதாய், அந்யத் ந அவசிஷ்யதே - வேறு மிஞ்சமாட்டாது. (உ)

(தா-ம்) யான் உந்தனுக்கு ஸமஸ்த சேதநாசேதனங்களுக்கு விலக்ஷணீயமானபகவத்ஸ்வரூப விசேஷஞானத்துடன் கூடியஇந்த பிரஞானத்தைச் சம்பூரணமாய்க் கூறுகின்றேன். இதை யறிந்தபி ன்பு இன்னும அறியத்தக்கதை வேறொன்று இவ்விடத்தில் விசேஷமிருக்காது. (உ)

[Sanskrit verse in Grantha script, 2 lines] ௩||

(ப-ம்.) மநுஷ்யாணும்-மனிதர்களின், ஸஹஸ்ரேஷு - ஆயிரத்தில், கச்சித்-ஒருவன், ஸித்தயே-ஸித்தியின்பொருட்டு, யததி-யத்தினம் செய்கிறான், யததாம்-(அப்படி) யத்தனம் செய்து, ஸித்தாநாம் அபி-ஸித்திபெற்றவருக்குள்ளும், கச்சித்-ஒருவனே, தத்வத:-உள்ளபடியே, மாம் வேத்தி-என்னை அறிகிறான். (௩)

(தா-ம்) ஆயிரக்கணக்கான மனிதர்களிலே எவனோஒருவன்ஞானசித்தியின்பொருட்டு பிரயத்தனப்படுகின்றான். பிரயத்தனப்பட்டவர்களுள் எவனோ ஒருவன் எந்தனையறிந்து அநேகருக்குள்எவனோ ஒருவன் உண்மையை யறிகின்றான். (௩)

[Sanskrit verse in Grantha script, 2 lines] ௪

(ப-ம்.) பூமி: ஆப:-பூமி ஜலம், அநல: வாயு:-நெருப்பு காற்று கம்-ஆகாசம், மந:-மனது, புத்தி: அஹங்கார:-புத்தி அஹங்காரம், இதி இயம்-என்கிற இந்த, மே ப்ரக்ருதி:-என்னுடைய பிரகிருதியானது, அஷ்டதா பிந்நா-எட்டுவகையாய்ப் பிரிக்கப்பட்டது. (௪)

(தா-ம்.) பிருதிவி, அப்பு, தேஜஸ், வாயுவு, ஆகாயம், மனம், புத்தி, அஹங்காரம் என்கிற எண்வகைப்படும் உபபிரகிருதி, யெல்லாம்என்னிடத்திலுண்டானதென் றுணர்க. (௪)

[Sanskrit verse in Grantha script, 2 lines] ௫||

(ப-ம்.) ஹே மஹாபாஹோ-ஓ பெருந்தோளாய்! இயம் அபரா-முன் சுலோகத்தில்குறித்த எட்டுவிதப்ரக்ருதிக்ருஷ்டமானது, ப்ரக்ருதி:-பிரகிருதி, இத:து அந்யாம்-இதைக்காட்டிலும் வேறுபட்

டதோ, மே பராம்-என்னுடைய மேலான, ஜீவபூதாம் - ஜீவரூபமான, ப்ரக்ருதிம்-பிரகிருதியென்று, வித்தி-தெரிந்துக்கொள், யயா-யாதொன்றால், இதம் ஜகத் - இஜ்ஜகமானது, தார்யதே - தரிக்கப்படுகின்றது. (ரு)

(தா-ம்) அசேதனமான இப்பிரகிருதி சிறந்ததன்று, இதைவிட மேலான என் பிரகிருதிவேறொன்று ஜீவரூபமாகவிருக்கின்றது. அதனால்தான் இப்பிரபஞ்சம் தரிக்கப்படுகிறதென்றறிக. (ரு)

ஏதத்யோநீநி பூதாநி ஸர்வாணீத்யுபதாரய|
அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜகத: ப்ரபவ: ப்ரளயஸ்ததா|| ௬||

(ப-ம்) ஸர்வாணி பூதாநி-எல்லாப்பூதங்களும், ஏதத் யோநீநி இதி-இவற்றினின்று முண்டானவை, உபதாரய-தெரிந்துகொள், க்ருத்ஸ்நஸ்ய ஜகத:-எல்லா வுலகத்துக்கும், அஹம் ப்ரபவ:-நான் உத்பத்திகாரணம், ததா ப்ரளய:-அப்படியே நாசகாரணமும். (௬)

(தா-ம்) இந்த ஸமஸ்தப் பிராணிகளும் மேற்கூறிய இரண்டுபிரகிருதிகளே காரணமாயுடையதுகளென்று நிச்சயிக்கவும்; அவ்விரண்டு பிரகிருதிகளுக்கும் யானே காரணனாகவிருந்துகொண்டு இப்பிரபஞ்சத்தையெல்லாம் படைக்கவும், அழிக்கவும் சார்க்கவுமுடையவனாகிறேன். (௬)

மத்த: பரதரம் நாந்யத்கிஞ்சிதஸ்தி தநஞ்ஜய |
மயி ஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணா இவ|| ௭||

(ப-ம்) ஹே தநஞ்சய!-வாராய் தனஞ்சயனே!, மத்த: பரதரம்-என்னிலும் மேலான, அந்யத் கிஞ்சித்-வேறொன்றும், நாஸ்தி - கிடையாது, இதம் ஸர்வம்-இதெல்லாம், ஸூத்ரே மணிகணா இவ - நூலில மணி ஸமூஹம்போல, மயி ப்ரோதம்-என்னில் கோர்க்கப்பட்டிருக்கிறது. (௭)

(தா-ம்) ஏ அர்ஜுநா! என்னைவிட மேலானவஸ்துவேறொன்றுமில்லை இதெல்லாம் தந்துவில் (நூலில்) கோர்த்தமணிபோல்என்னிடத்தில் கோர்க்கப்பட்டிருக்கிறது. (௭)

ரஸோஹமப்ஸு கௌந்தேய ப்ரபாஸ்மி சசிஸூர்யயோ:|
ப்ரணவ: ஸர்வவேதேஷு சப்த: கே பௌருஷம் ந்ருஷு|| அ||

(ப-ம்) ஹே கௌந்தேய-வாராய் குந்திபுத்திர! அப்ஸு-நீரில், அஹம்ரஸ:-நான் ரஸம்; சசி ஸூர்யயோ: - சந்திர சூரியர்களில், ப்ரபா அஸ்மி-ஒளியாகிறேன்; ஸர்வ வேதேஷு - எல்லா வேதகங்

ளிலும், ப்ரணவ:-பிரணவமாகிய ஓம்காரம், கே சப்த: - ஆகாயத்தில் சத்தம், ந்ருஷு-மனிதரில், பௌருஷம் - புருஷஸ்வரூபம், அஹம ஸ்மி-நானுகவே இருக்கிறேன். (அ)

(தா-ம்) ஏ பார்த்தா! யான் ஜலங்களுக்கு உருசியாயும், சூரிய சந்திரர்களுக்கு ஒளியாயும், வேதங்களுக்கெல்லாம் பிரணவமாயும், ஆகாயத்திற்கு சப்தமாயும், புருடர்களுக்குப் பௌருஷமாயும் இருக்கிறேன். (அ)

புண்யோ கந்த: ப்ருதிவ்யாம் ச தேஜஸ்சாஸ்மி விபாவஸௌ ।
ஜீவனம் ஸர்வபூதேஷு தபஸ்சாஸ்மி தபஸ்விஷு ॥ ௯ ॥

(ப-ம்.) ப்ருதிவ்யாம் ச-மண்ணில், புண்ய: கந்த: - நல்ல மணம், விபாவஸௌ ச-சூரியனில, தேஜ: அஸ்மி - தேஜஸ்ஸாகிறேன், ஸர்வ பூதேஷு-எல்லாப்பிராணிகளிலும், ஜீவனம்-உயிர்நிலை, தபஸ்விஷு ச-தவசிகளில், தப: அஸ்மி-தவமாகிறேன். (௯)

(தா-ம்) பூமிக்குப்புண்ணிய சுகந்தமாயும், சூரியனுக்குத்தேஜோ ரூபமாயும், பிராணிகளுக்கெல்லாம் ஜீவனமாயும், தபஸ்விகளுக்குத் தபஸ்ஸாயும் இருக்கிறேன். (௯)

பீஜம் மாம் ஸர்வபூதானாம் வித்தி பார்த்த ஸனாதனம் ।
புத்திர்புத்திமதாமஸ்மி தேஜஸ்தேஜஸ்விநாமஹம் ॥ ௧௦ ॥

(ப-ம்) ஹே பார்த்த!-வாராய் பார்த்தனே!, ஸர்வ பூதாநாம்-எல்லாப் பிராணிகளுக்கும், மாம்-என்னை, ஸநாதநம் - நித்தியனை, பீஜம் வித்தி-வித்தாகவறி, புத்திமதாம்-புத்திமான்களுக்கு, புத்தி: அஸ்மி-புத்தியாகிறேன், தேஜஸ்விநாம் - தேஜஸ் உள்ளவருக்கு, அஹம் தேஜ:-நான் தேஜஸ். (௰)

(தா-ம்) பார்த்தா! இப்படி ஸமஸ்தவஸ்துவுக்கும்ஸார்வதமான பீஜம் (வித்து) என்று என்னையறிக, புத்திமான்களுக்கு புத்தியாயும் தேஜோவான்களுக்கு தேஜஸ்ஸாயும் இருக்கிறேன். (௰)

பலம் பலவதாம் சாஹம் காமராகவிவர்ஜிதம் ।
தர்மாவிருத்தோ பூதேஷு காமோஸ்மி பரதர்ஷப ॥ ௧௧ ॥

(ப-ம்.) பலவதாம்ச-பலவான்களுக்கு, அஹம்-நான், காமராக விவர்ஜிதம்-காமம் ராகம் அற்ற, பலம்-பலம், ஹே பரதர்ஷப-ஓ பர தச்சிரேஷ்ட! பூதேஷு-பிராணிகளில், தர்மா விருத்த:-தருமத்தோடு விரோதிக்காத, காம: அஸ்மி-காமமாகிறேன். (௧௧)

(தா-ம்) அர்ஜுனு! பலவான்களுக்குயான் காமம், இராகம்,

இதுசனிர்வாத பலமாயும், பிராணிகளுக்கு தர்ம விருத்தமல்லாத காமமாகவும்; (கோரிக்கையாக) இருக்கிறேன். (கக)

யெசெவெவஸாஃவிகாஹாவா ராஜஸாஹ்ஸா ஊஸாஹூயெ|
உத்தஹவெகிதாநிஸிநக்வஹஂஒதஷ-ஒசஉயி|| கஉ||

(ப-ம்) ஸாத்விகா:-ஸாத்துவிகங்களாயும், ராஜஸா: - ராஜஸங்களாயும், தாமஸா:-தாமஸங்களாயும், யேசயேச பாவா: - யாவையாவை விஷயங்களுண்டோ, தாந்-அவ்வவைகளை, மத்த ஏவ இதி-என்னிடத்தினின்றுமென்றே, வித்தி-அறி. தேஷ்வயி-அவை என்னிடத்தில் (இருக்கின்றன), அஹந்து - நானோ, தேஷு - அவற்றின் கண் (இல்லை). (கஉ)

(தா-ம்) ஸாத்விகம், இராஜஸம், தாமஸம், இதுகளுக்குவஸ்து வெகுவோ, அவையெல்லாம் எந்தனுலேயே உண்டுபண்ணப்பட்டதென்றுணர்க. என்னிடத்தில் வஸ்துக்களை ஆசிரித்திருக்கின்றதுகளேயன்றி யான் வஸ்துக்களை ஆச்ரயித்தவனன்று. (ஶ0) ஸாத்விகா: ஸத்துவகுணத்தாலுதித்த சமதமாதிகள். (கஉ)

த்ரிஙிம ஃணஉஒெபஹைாஒெவெரஙியை வ-ஜிஷ ஂஜமக|
ஒசா ஹிதஂ நாஙிஜா நாகிஉா ஒெஹூபாஉவ்யய|| கங||

(ப-ம்) குணமயை:-குண விகாரங்களான, ஏபி: த்ரிபி: பாவை:- இம்மூன்று பாவங்களாலும; மோஹிதம்-மயக்கப்பட்ட, இதம் ஜகத் ஸர்வம், இஜ்ஜகமெல்லாம், ஏப்ய: பரம் - இந்த த்ரிகுணங்களைக்காட்டிலும் மேற்படு, அவ்யயம்-ஏகரூபனுமிருக்கும், மாம் ந அபிஜாநாதி-என்னை அறிகிறதில்லை. (கங)

(தா-ம்) இம்மூன்று பகுதிகளான ஸத்துவ, ரஜ, ஸ்தமோகுணங்களினது வஸ்துகளினுல் மோஹமடைந்திருக்கிற இப்பிரபஞ்சமெல்லாவற்றிற்கும் சிறந்தவனும், எக்காலத்திலும் ஏகரூபனுமிருக்கின்ற எந்தனை யறியாது. (கங)

ஒெஙிவீஹெஹூஷா மஹணஉயீஉஉாயா ஷஈ ர கூயா|
உாஒெவெயெவ ஈபஷ்ூஒெதஉாயாஒெ தாஂ தரஂகஒெத|| கச||

(ப-ம்) குணமயீ-குணஸ்வரூபையான, ஏஷா மம மாயா-இந்த என் மாயையானது, தைவீஹீ - தேவஸம்பந்தையாதலின், துரத்யயா-ஒருவராலும் கடக்கவரியது, மாம் ஏவ-என்னையே, யே ப்ரபத்யந்தே-யாவர் பற்றுகிறார்களோ, தே ஏதாம் மாயாம் - அவர்கள் இம்மாயையை, தரந்தி-கடக்கின்ருர்கள். (கச)

(தா-ம்) ஸத்துவ ரஜஸ் தமோகுண மயமான எந்தனுக்குக்கிரீடார்த்தமான இந்த மாயையை அதிக்கிரமிப்பதற்குச் சாத்தியமன்று. எந்தனைப் போற்றிப் பணிபுகிறவர்கள் மாத்திரம் இம்மாயையை அதிக்கிரமிப்பார்கள். (கச)

ந மாம் து³ஷ்க்ருதிநோ மூடா⁴: ப்ரபத்³யந்தே நராத⁴மா:।
மாயயாபஹ்ருதஜ்ஞாநா ஆஸுரம் பா⁴வமாஶ்ரிதா:॥ கரு॥

(ப-ம்.) மூடா:-விபரீதபுத்திகளும், நராதமா:-என்வழி திரும்ப மாட்டாதவர்களும், மாயயா-வஞ்சகயுக்திகளால், அபஹ்ருத ஜ்ஞாநா: அபஹரிக்கப்பட்ட வறிவுடையோர்களும், ஆஸுரம்பாவம்-அசுரத்தன்மையை, ஆஶ்ரிதா: - அடைந்தவர்களுமான, துஷ்க்ருதிந:-பாவத்தொழில்புரியுமவர்கள், மாம்-என்னை, நப்ரபத்யந்தே - ஆஶ்ரயிக்கமாட்டார்கள். (கரு)

(தா-ம்) மூடர்கள், விபரீதஞானத்தால் பகவச்சேஷமான ஆத்துமா சரீராதிகளை மமதையால் தங்களுக்கு விசேஷமென்றெண்ணுபவர்கள் "நராதமாம் சாமான்னியமாய்ப் பிரம ஸர்வரூபஞானமுதித்திருந்தும் ஆஸக்தியில்லாதவர்கள்" மாயையால் அபஹரிக்கப்பட்டஞானிகள், பகவத்ஸ்வரூப ஞானமுண்டாயிருந்தும் குயுக்திகளினால் அதற்கு மறுப்புரைப்போர் "ஆஸுராபிப்பிராயமுள்ளவர்களெனின் பகவத்வேஷமுள்ளவர்கள்" இவர்கள் ஒருவரைவிட ஒருவர்விசேஷபாபிகள். மேற்கூறிய இந்த நான்கு வகுப்பாரும் அதிபாதகர்கள். இவர்கள் என்னை யடையார்கள். (ஸ்ரீ) ஆஸுரம்பாவம், பரபீடை, சொற்றமொற்றமுதலிய தன்மை. (கரு)

சதுர்விதா⁴ ப⁴ஜந்தே மாம் ஜநா: ஸுக்ருதிநோ(அ)ர்ஜுந।
ஆர்தோ ஜிஜ்ஞாஸுரர்தா²ர்தீ² ஜ்ஞாநீ ச ப⁴ரதர்ஷப⁴॥ கசு॥

(ப-ம்) ஹே பரதர்ஷப-ஓ பரதவம்சத்திலுதித்த அர்ச்சுனா! ஆர்த்த:-ஆர்த்தன், ஜிஜ்ஞாஸு:-ஜிஜ்ஞாஸு, அர்த்தார்த்தி- அர்த்தார்த்தி, ஜ்ஞாநீ-ஞானி(என்கிற); ஜ்ஞாநீச - ப்ரஹ்மஞானியும், சதுர்விதா:-நான்குவகையினரான, ஸுக்ருதிந:ஜநா:-புண்ணியசாலி ஜனங்கள், மாம் பஜந்தே என்னைச் சேவிக்கின்றனர். (கசு)

(தா-ம்) ஏ அர்ஜ்ஜுனா! செல்வங்குறைந்து மீண்டும் செல்வத்தைக் கோருகின்ற ஆர்த்தகன், செல்வத்திலிருந்துகொண்டே மறுபடியும் செல்வத்தை விரும்புகின்ற அர்த்தார்த்தீ, பிரகிருதிவிலக்ஷணமான ஜீவாத்தும ஸ்வரூபப்பிராப்தியை இச்சிக்கின்ற ஜிக்ஞாஸியும், பரமாத்மசேஷத்வக்ஞானமுள்ள ஞானி என்கிற இந்நான்கு

பகுதியாரும் புண்ணியகிருத்தியமுள்ளவர்கள். இவர்கள். என்னை யடைவார்கள். (கசு)

தேஷாம் ஜ்ஞாநீ நித்யயுக்த ஏகபக்திர் விசிஷ்யதே।
ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த்தமஹம் ஸ ச மம ப்ரிய:॥ கஎ॥

உதாரா: ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்।
ஆஸ்தித: ஸ ஹி யுக்தாத்மா மாமேவாநுத்தமாம் கதிம்॥ கஅ॥

(ப-ம்) தேஷாம்-அவர்களுக்குள், ஜ்ஞாநீ-ஞாநியானவன், நித்யயுக்த:-நித்தியமும் கூடியும், ஏகபக்தி:-ஒரே பக்தியாயும் (இருப்பதுபற்றி), விசிஷ்யதே-சிறப்பிக்கப்படுவான், ஹி - ஏனெனில்:—ஜ்ஞாநிந:-ஞாநிக்கு, அஹம்-நான், அத்யர்த்தம் ப்ரிய: - மிகவும் பிரியன், ஸச-அவனும், மம ப்ரிய:-எனக்குப்பிரியன். (கஎ)

(ப-ம்) ஏதே ஸர்வே ஏவ-இவர்கள் எல்லோருமே, உதாரா:-வண்மையுடையோர்; ஜ்ஞாநீது-ஞானியோ, ஆத்மா ஏவ-(எனது)ஆத்மாவென்றே, மேமதம்-என்னுடைய மதம், ஹி-என்னால், ஸ:-அவன், யுக்தாத்மா (ஸந்)-என்னிடத்தில் மனதை நிலையாக நிறுத்தினவன், மாமேவ-என்னையே, அநுத்தமாம்-சர்வோத்தமமான, கதிம்-ப்ராப்ய ஸ்தானமான, ஆஸ்தித:-அடைந்தவனாயிருக்கிறான். (கஅ)

(தா-ம்) மேற்கூறிய நான்கு வகுப்பாரும் நன்மையை துடையவர்களே. ஆயினும் ஞானிமாத்திரம் என் ஆத்மாவென்று என் கருத்து ஏதுபற்றி யெனின் ஞானியானவன் மனதை என்னிடத்தில் நிறுத்தி என்னையே அடையவேணுமென்று நிச்சயித்திருப்பதாலென்க.()

பஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந்மாம் ப்ரபத்யதே।
வாஸுதேவஸ்ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:॥ கக॥

(ப-ம்) பஹூநாம் ஜந்மநாம்-பலஜன்மங்களுக்கு, அந்தே - கடைசியில், ஜ்ஞாநவாந்-ஞானியாய், மாம் ப்ரபத்யதே - என்னை அடைகிறான், வாஸுதேவ:-வாசுதேவனே, ஸர்வம் இதி-எல்லாமென்கிற, ஸ:மஹாத்மா-அப்படிப்பட்ட மஹாத்மா, ஸுதுர்லப:-மிகவும் அரியன். (கக)

(தா-ம்) அன்றியும், ஞானியானவன் அநேக ஜன்மங்களைக்கடந்தபிறகு ஸர்வமும் பரமேஸ்வரஸ்வரூபமென்கிற அறிவுதித்து என்னை ஆசிரிக்கின்றான. அப்படிப்பட்ட புண்ணியாத்துமா மிகவுமரிது. (கக)

காமைஸ்தைஸ்தைர்ஹ்ருதஜ்ஞாநா: ப்ரபத்யந்தேऽந்யதேவதா:।
தம் தம் நியமமாஸ்தாய ப்ரக்ருத்யா நியதா: ஸ்வயா॥ உ0॥

(ப-ம்.) (புருஷா꞉)-புருஷர்கள், ஸ்வயா ப்ரக்ருத்யா - தம்(பாப) வாஸனையோடு, நியதா꞉-நித்தியமும் கூடி, தை꞉ தை꞉ - அந்தந்த, காமை꞉-விஷயங்களால், ஹ்ருதஜ்ஞாநா꞉ - அபஹரிக்கப்பட்ட அறிவுடையர்களாய், அந்ய தேவதா꞉-இதர தேவர்களை, தம் தம்-அந்தந்த, நியமம்-நியமத்தை, ஆஸ்த்தாய-அடைந்து, ப்ரபத்யந்தே - ஆஶ்ரயிக்கிறார்கள். (௨௰)

(தா-ம்) பெரும்பான்மையாய் ஜனங்கள் தங்கள் தங்கள் கர்ம வாஸனா ரூபமான பிரகிருதியினால் கட்டப்பட்டு அந்தந்த பிரகிருதி விஷயங்களான கோரிக்கைகளால் பிர்மஞானம் அபஹரிக்கப்பட்டு அந்தந்த நியமங்களில் இதர தேவதைகளை பஜிக்கின்றார்கள். (௨௰)

𑌯𑍋 𑌯𑍋 𑌯𑌾𑌂 𑌯𑌾𑌂 𑌤𑌨𑍁𑌂 𑌭𑌕𑍍𑌤𑌃 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾𑌰𑍍𑌚𑌿𑌤𑍁𑌮𑌿𑌚𑍍𑌛𑌤𑌿 |
𑌤𑌸𑍍𑌯 𑌤𑌸𑍍𑌯𑌾𑌚𑌲𑌾𑌂 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌂 𑌤𑌾𑌮𑍇𑌵 𑌵𑌿𑌦𑌧𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 || ௨௧ ||

(ப-ம்.) ய꞉ய꞉ பக்த꞉ - எந்தெந்த பக்தன், யாம் யாம் தநும்-எந்தெந்த மூர்த்தியை, ஶ்ரத்தயா-சிரத்தையுடன், அர்சிதும் இச்சதி-அர்ச்சிக்கக் கோருகிறானோ, தஸ்யதஸ்ய-அவனவனுடைய, தாம் ஏவ ஶ்ரத்தாம்-அந்த சிரத்தையையே, அசலாம்-திடமாக, அஹம் விததாமி-நான் செய்கிறேன். (௨௧)

(தா-ம்) எவனெவன் எந்தெந்த தேவதையை பக்திசிரத்தையோடு பூஜிக்கக்கருதுகின்றானோ, அவனவனுக்கும் அந்தபக்திசிரத்தையை யானே இடையூறின்றி செய்கிறேன். (௨௧)

𑌸 𑌤𑌯𑌾 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾 𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌤𑌸𑍍𑌯𑌾𑌰𑌾𑌧𑌨𑌮𑍀𑌹𑌤𑍇 |
𑌲𑌭𑌤𑍇 𑌚 𑌤𑌤𑌃 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍𑌮𑌯𑍈𑌵 𑌵𑌿𑌹𑌿𑌤𑌾𑌨𑍍𑌹𑌿 𑌤𑌾𑌨𑍍 || ௨௨ ||

(ப-ம்) ஸ꞉-அவன்; தயா ஶ்ரத்தயா யுக்த꞉ - அந்த சிரத்தையுடன் கூடி, தஸ்ய-அத்தேவதையின், ஆராதநம - ஆராதனத்தை, ஈஹதே-விரும்புகிறான், தத꞉-அதனால், தாந்-அந்த, காமாந் ஏவ-அபீஷ்டங்களையே, மயா-என்னால், விஹிதாந்-அளிக்கப்பட்டவைகளாக, லபதே-அடைகின்றான். (௨௨)

(தா-ம்) எவன் எந்த சிரத்தையுடையவன் எந்த தேவதையை ஆராதிப்பதற்கு பிரயத்தினப்படுகிறானோ, அந்த ஆராதனத்தாலும் அபீஷ்டங்களான கோரிக்கைகள் என்னாலேயே பரிபூரணஞ்செய்யப்பட்டு கிருதார்த்தனாகிறான். (௨௨)

𑌅𑌨𑍍𑌤𑌵𑌤𑍍𑌤𑍁 𑌫𑌲𑌂 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌤𑌦𑍍𑌭𑌵𑌤𑍍𑌯𑌲𑍍𑌪𑌮𑍇𑌧𑌸𑌾𑌮𑍍 |
𑌦𑍇𑌵𑌾𑌨𑍍𑌦𑍇𑌵𑌯𑌜𑍋 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌾 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌮𑌾𑌮𑌪𑌿 || ௨௩ |

(ப-ம்) தேஷாம் அல்பமேதஸாம்-அவவற்பமதிகளுக்கு, தத் பலம்-அந்தப்பயனானது, அந்தவத்-முடிவுள்ளதாய், பவதி-கிடைக்கின்றது, தேவ யஜ:-தேவர்களை ஆராதிப்பவர். தேவாந் யாந்தி-தேவர்களை அடைகின்றனர். மத்பக்தா:அபி - எனது பக்தர்களும், மாம் யாந்தி-என்னைச் சேருகின்றனர். (௨௩)

(தா-ம்) ஆனால் அற்பபுத்தியுடைய அப்படிப்பட்டவர்களுக்கு அந்த பலம் ஸ்வலப்பமாயும், நசிக்கத்தக்கதாயுமிருக்கும். இதரதேவதைகளை பூசிப்பார் இதரதேவதைகளை யடைவார்கள். என்னை பஜிப்போர் என்னையடைகுறார்கள். (௩)

அவ்யக்தம் வ்யக்திமாபந்நம் மந்யந்தே மாமபுத்தய:|
பரம் பாவமஜாநந்தோ மமாவ்யயமநுத்தமம்|| ௨௪||

(ப-ம்) அவ்யயம்-அழிவற்றதும், அநுத்தமம் - உத்தமமுமான, மம பரம் பாவம்-எனதுமேலான கொள்கையை, அஜாநந்த:-அறியாத, அபுத்தய:-அறிவீனர்கள், மாம்-என்னை, அவ்யக்தம்-முன் பிரகாசியாமல, வ்யக்திம்-பிரகாசத்தை, ஆபந்நம் - (பிறகு) அடைந்ததாக, மந்யந்தே-நினைக்கின்றார்கள். (௨௪)

(தா-ம்) அழிவில்லாதவன யான்! நித்தியன், ஸர்வோத்தமன்; என்று என்பர ஸ்வரூபத்தை யறியாது யான் இதற்குமுன் பிரகாசிக்காமல் இபபிறப்பிறருன் பிரகாசிக்கின்றேனென்பான். (௨௪)

நாஹம் ப்ரகாஶ: ஸர்வஸ்ய யோகமாயாஸமாவ்ருத:|
மூடோऽயம் நாபிஜாநாதி லோகோ மாமஜமவ்யயம்|| ௨௫||

(ப-ம) யோகமாயா ஸமாவ்ருத:-யோக மாயையால் மூடப்பட்ட, அஹம்-நான், ஸர்வஸ்ய-எல்லாருக்கும், நப்ரகாச:-பிரகாசிப்பவனல்லேன், மூட: அயம் லோக:-மூடமான இந்த ஜனம், மாம்-என்னை, அஜம்-பிரப்பில்லெயன்றும், அவ்யயம்-அழிவற்றவனென்றும், ந அபிஜாநாதி-அறிகிறதில்லை. (௨௫)

(தா-ம்) ஏ அர்ஜுனா! யோகமாயையால் மறைக்கப்பட்ட யான்எல்லோருக்கும் புலப்படுகிறவனன்று. மூடமான இவ்வுலகம் என்னை பிறப்பிறப்பற்றவனென்றறியாது. (௨௫)

வேதாஹம் ஸமதீதாநி வர்த்தமாநாநி சார்ஜுந|
பவிஷ்யாணி ச பூதாநி மாம் து வேத ந கஶ்சந|| ௨௬||

(ப-ம்) ஹே அர்ஜுந-ஓ அர்ச்சுனா!, ஸமதீதாநி-கடந்தவைகளும், வர்த்தமாநாநிச-நிகழ்வனவும், பவிஷ்யாணி-வருமவைகளுமான, பூதாநி-பூதங்களை, அஹம்வேத-நான் அறிவேன், மாம்து - என்னை

யோ, ந கச்சந வேத-லோகானுக்ரஹமாய் க்ருஷ்ணவதாரஞ்செய்தவ னகி ஒருவனும் அறியமாட்டார்கள். (உகூ)

(தா-ம்) அர்ஜுநா! யான் பூத, பவிஷ்யத், வர்த்தமானமென் னுமுக்காலத்தையு முணர்ந்தவன். என்னைமாத்திரம் எவனு மறி யான். (உகூ)

இச்சாத்வேஷஸமுத்தேந த்வந்த்வமோஹேந பாரத ।
ஸர்வபூதாநி ஸம்மோஹம் ஸர்கே யாந்தி பரந்தப ॥ உஎ ॥

(ப-ம்) ஹே பாரத-ஓ பாரதனே!, இச்சாத்வேஷ ஸமுத்தேந- இச்சை துவேஷங்களால் உண்டான, த்வந்த்வ மோஹேந - இன்ப துன்பங்களிலுண்டான மயக்கத்தாலே, ஹே பரந்தப-ஓ பகைவனை த் தவிப்போனே, ஸர்வபூதாநி-எல்லாப்பிராணிகளும், ஸர்கே - சிரு ஷ்டிகாலத்தில, ஸம்மோஹம் யாந்தி-மயக்கமுறுகின்றன. (உஎ)

(தா-ம்) எ அருந்தவமுடைய அர்ஜுநா! இன்பத்துன்ப முத லிய இச்சாத்துவேஷத்திலுண்டான அறிவின்மையால் பிராணிக ளெல்லாம் ஜநிக்கும்போதே மோஹத்தையடைகின்றன. (உஎ)

யேஷாம் த்வந்தகதம் பாபம் ஜநாநாம் புண்யகர்மணாம் ।
தே த்வந்த்வமோஹநிர்முக்தா பஜந்தே மாம் த்ருடவ்ரதா: ॥ உஅ ॥

(ப-ம்) புண்யகர்மணாம்-புண்ணியஞ் செய்தவரான, யேஷாம் ஜ நாநாம்-எந்த ஜனங்களுடைய, பாபம்-பாவமானது, அந்த கதம்-அ ழிவுற்றதோ, தே-அவர்கள், த்வந்த்வ மோஹ நிர்முக்தா:-துவந்து வத்தில் மோஹத்தினின்று விடுபட்டு, த்ருடவ்ரதா:-திடமான ஸங் கல்பத்தோடு, மாம் பஜந்தே-என்னை பஜிக்கின்றனர். (உஅ)

(தா-ம்) புண்ணியகாரியஞ்செய்த எந்த ஜனங்களுக்கு பாபம் க்ஷீணதசை யடைந்திருக்கிறதோ அவர்கள் திருட பக்தியுடையவர் களாய் இந்த இன்பதுன்பத்தாலுதித்தப் பிரமையையொழித்து எ ன்னை யடைவார்கள். (உஅ)

ஜராமரணமோக்ஷாய மாமாச்ரித்ய யதந்தி யே ।
தே ப்ரஹ்ம தத்விது: க்ருத்ஸ்நமத்யாத்மம் கர்ம சாகிலம் ॥ உகூ ॥

(ப-ம்.) மாம் ஆச்ரித்ய-என்னை ஆச்சிரயித்து, யதந்தி-யத்தன ம்செய்கிறார்களோ, தே-அவர்கள், தத்ப்ரஹ்ம-அப்பிரம்மத்தையும், க்ருத்ஸ்நம்-முழு, அத்யாத்மம்-அத்யாத்மத்தையும், அகிலம்கர்மச- ஸகலகருமத்தையும், விது:அறிவார்கள். (உக)

(தா-ம்) எவன் ஜநநமரண துக்கத்தை யொழிப்பதற்கு (என்ப

தால் ஆத்மஞான ஸாக்ஷாத்காரத்திற்கு) பிரயத்தனப்படுகிருனே, அவன் அந்த பரப்ரம்மத்தையும் தனது ஆத்மாவையும், ஸமஸ்தகர்ம த்தையு மறிகின்ருன். (உகூ)

ஸாதிபூதாதிதைவம் மாம் ஸாதியஜ்ஞம் ச யே விது:|
ப்ரயாணகாலேऽபி ச மாம் தே விதுர்யுக்தசேதஸ:|| ௩௦||

(ப-ம்.) யே மாம்-எவர்கள் என்னை, ஸாதிபூதாதிதைவம் - அதிபூதம் அதிதைவம இவற்ருேடு கூடியவனையும், ஸாதியக்ஞம்ச-அதியக்ஞத்தோடு கூடியவனையும், விது:-அறிகிருர்களோ, தே-அவர்கள் ப்ரயாணகாலேऽபி-மரணகாலத்திலும், யுக்தசேதஸ:(என்ருேடு) கூடியமனத்தராய், மாம்விது:-என்னை அறிவர்கள். (௩௰)

(கா-ம்.) எந்தனை எவர்கள் அதிபூதமென்னும் பிரகிருதிஸம்பந்தத்திற்கும் அதிதைவதமென்னும் ஆத்ம ஸம்பந்தத்திற்கும், அதியக்ஞமென்னும் கர்மஸம்பந்தத்திற்கும் ஆதாரபூதனென்றுணர்கிருர்களோ, அப்படிப்பட்ட யோகிகள் பிராணப்பிரயாண ஸமயத்திற்கூடஎந்தனை மறவார்கள். (௩௰)

ஸ்ரீகீதாஸு விஸ்வரூபஸந்தர்ஶனயோகமென்னும்

எழாவது அத்தியாயம் முற்றிற்று.

## எட்டாவது அத்தியாயம்.

அக்ஷரபரப்ரஹ்மயோக:.

அர்ஜுனவாக்கியம்.

கிம் தத்ப்ரஹ்ம கிமத்யாத்மம் கிம் கர்ம புருஷோத்தம |
அதிபூதம் ச கிம் ப்ரோக்தமதிதைவம் கிமுச்யதே|| ௧||

அதியஜ்ஞ: கதம் கோऽத்ர தேஹேऽஸ்மின்மதுஸூதன |
ப்ரயாணகாலே ச கதம் ஜ்ஞேயோऽஸி நியதாத்மபி:|| ௨||

(ப-ம்) ஹே புருஷோத்தம-வாரீர் புருஷோத்தம, தத்ப்ரஹ்ம கிம்-அந்தப்பிரம்மமாவதென்? அத்யாத்மம்கிம்-அத்தியாத்மமாவதென்? கர்மகிம்-கருமமாவதென்? அதிபூதம்ச - அதிபூதமென்று, கிம்ப்ரோக்தம்-எதுசொல்லப்பட்டது? கிம் அதிதைவம்-எது அதிதைவமென்று, உச்யதே-சொல்லப்படுகிறது. (௧)

(ப-ம்) ஹேமதுஸூதந-ஓ மதுசூதனு! அஸ்மிந் தேஹே-இ

ச்சரீரத்தில், அதியக்ஞஃ-அதியக்ஞன் எவன்? அத்ர கதம்ஜ்ஞேயஃ- இவ்விஷயத்தில் எப்படி அறியப்படுவான்? நியத ஆத்மபிஃ-நிக்கிரஹிக் கப்பட்ட அந்தக் கரணமுடையவரால், ப்ரயாணகாலே-மரணகால த்தில், கதம் ஜ்ஞேயஃ அஸி-எப்படி அறியப்படுகிறீர்? (உ)

(தா-ம்) ஏ புருஷோத்தமா! பிரம்மமென்பது யாது? அத்தியாத் மகமென்றாலென்ன? கர்மமென்பதென்ன? அதிபூதமாவது எப்ப டிப்பட்டது? மதுஸூதனா! அதிதைவமென்பது யாது? இச்சரீரங்களிலதியக்ஞனெவன்? பிராண ம்போகிற காலத்தில ஸ்திர சித்தமுடையவர்களா லெவ்வண்ண ம றியப்படுகிறீர்? (க-உ)

ஸ்ரீகிருஷ்ண வாக்கியம்.

அக்ஷரம் ப்ரஹ்ம பரமம் ஸ்வபாவோऽத்யாத்மமுச்யதே।
பூதபாவோத்பவகரோ விஸர்க்க: கர்மஸம்ஜ்ஞித:॥ ௩॥

(ப-ம்) பரமம் அக்ஷரம்-மேலான அக்ஷரம், ப்ரஹ்ம பிரம்மமெ னப்படும், ஸ்வபாவஃ-ஸ்வபாவமானது, அத்யாத்மம் உச்யதே-அத் தியாத்மமென்னப்படும், பூதபாவ உத்பவகரஃ-பிராணித்தன்மையை உண்டுபண்ணுமதான, விஸர்கஃ-விஸர்கமானது, கர்மஸம்ஜ்ஞிதஃ-கரு மமென்னப்படும். (௩)

(தா-ம்) பிரமமென்பது சிறந்த அக்ஷரம். "என்றால் பிரகிருதிஸ ம்பந்தமில்லாத ஆத்மஸமூகம்" அத்யாத்மமென்பது பிரகிருதி. ஸம ஸ்தபிராணிகளுடைய வுற்பத்திக்குமகாரணமான விஸர்க்கமென் னும் பீஜத்தை க்ஷேத்திரத்தில் விடுவதைக்கர்மமென்று சொல்லப் படும். (௩)

அதிபூதம் க்ஷரோ பாவ: புருஷஶ்சாதிதைவதம்।
அதியஜ்ஞோऽஹமேவாத்ர தேஹே தேஹப்ருதாம் வர॥ ௪॥

(ப-ம்.) அதிபூதம்-அதிபூதமாவது; க்ஷரஃபாவஃ - க்ஷரிக்குந்தன் மையது, அதிதைவதம்-அதிதைவதமாவது, புருஷஃ - புருஷன்; தே ஹப்ருதாம் வர-சரீரிகளுக்குள் சிறந்தோனே! அத்ர தேஹே - இத் தேஹத்தில், அதியஜ்ஞஃ-அதியக்ஞமாவது, அஹம்ஏவ-நானே. (௪)

(தா-ம்) ஏ அர்ஜுனா! அதிபூதமென்பது பரிணமிப்பட்ட வஸ் து. ஸமஸ்ததேவதைகளுக்கும் அந்தராத்மாவான புருடனே அதி தைவம். இச்சரீரங்களில் ஸகல யக்ஞங்களினாலும் ஆராதிக்கப்படுகி றவனான யானே அதியஞ்ஞன். (௪)

அந்தகாலே ச மாமேவ ஸ்மரன்முக்த்வா கலேவரம்।

யः ப்ரயாதி ஸ மத்பாவம் யாதி நாஸ்த்யத்ர ஸம்ஶயः ॥ ௫ ॥

(ப-ம்) அந்தகாலேச-மரணகாலத்திலும், மாம் ஏவ ஸ்மரந்-என்னையே சிந்தித்துக்கொண்டு, களேபரம்-சரீரத்தை, முக்த்வா-விட்டு, யः ப்ரயாதி-எவன் மரிக்கிறானோ, ஸः-அவன், மத்பாவம்-எனது தன்மையை, யாதி-அடைகின்றான், அத்ர-இவ்விஷயத்தில் ஸம்சயः நாஸ்தி-ஸம்சயமில்லை. (௫)

(தா-ம்) அந்திமகாலத்தில் எந்தனை தியானித்துக்கொண்டே சரீரத்தை விட்டவன் எந்தன் ஸ்வரூபத்தையே யடைகிறானென்பதில்சந்தேகமில்லை. (௫)

யம் யம் வாபி ஸ்மரன் பாவம் த்யஜத்யந்தே கலேவரம் ।
தம் தமேவைதி கௌந்தேய ஸதா தத்பாவபாவிதः ॥ ௬ ॥

(ப-ம்) ஹே கௌந்தேய-ஓ குந்திபுத்திர, அந்தே- இறுதியில், யம்யம் வாபிபாவம்-எந்தெந்த பாவத்தை, ஸ்மரந்-சிந்தித்துக்கொண்டு, களேபரம்-சரீரத்தை, த்யஜதி-விடுகிறானோ, ஸதா-எப்போதும், தத்பாவபாவிதः-அத்தன்மையையே சிந்தித்துக்கொண்டு, தம்தம்ஏவ-அவ்வவற்றையே, ஏதி-அடைகிறான். (௬)

(தா-ம்) ஏ அர்ஜுனா! புருடனெக்காலும் ஒரு வஸ்துவையினைத்து அத்தன்மைத்தனமாகவே மனதின்கண் வியாபித்துப் பிராணாந்திமத்திலெப்பொருளை ஸ்மரித்து தேகத்தைவிடுகிறானோ, அவன் மீண்டும் அத்தன்மையே யடைகிறான். (௬)

தஸ்மாத்ஸர்வேஷு காலேஷு மாமனுஸ்மர யுத்ய ச ।
மய்யர்பிதமனோபுத்திர்மாமேவைஷ்யஸ்யஸம்ஶயः ॥ ௭ ॥

(ப-ம்) தஸ்மாத்-ஆகையால், ஸர்வேஷு காலேஷு - எல்லாக் காலங்களிலும், மாம் அநுஸ்மர-என்னைச் சிந்திப்பாய், யுத்யச-யுத்தமும் செய்வாய், மயி-என்னிடத்தில், அர்பித மநோபுத்திः -ஸமர்ப்பிக்கப்பட்ட மனதும் புத்தியுமுடைய (நீ), மாம் ஏவ-என்னையே, ஏஷ்யஸி-அடைவாய், அஸம்சயः-ஸந்தேகமின்று. (௭)

(தா-ம்) ஆதலின் முக்காலத்திலும் எந்தனை ஸ்மரித்துக்கொண்டிருப்பாயாக. இப்பொழுது நீ அஞ்சாமற் போர்புரியனதையும், அறிவையும், எந்தனிடத்தில் வைத்தால் எந்தனையே யடைவாயென்பதிற் சமுசயமில்லை. (௭)

அப்யாஸயோகயுக்தேன சேதஸா நான்யகாமினா ।
பரமம் புருஷம் திவ்யம் யாதி பார்தானுசிந்தயன் ॥ ௮ ॥

(ப-ம்.) அப்யாஸ யோகயுக்தேந, அப்பியாஸத்தோடும் யோகத்தோடுங்கூடி, நாந்யகாமிநா புறம்பே செல்லாத, சேதஸா-மனதினால், திவ்யம்-அப்ராக்ருதனாய், பரமம் புருஷம் - பரமபுருஷனாயிருக்கும்(என்னை) அநுசிந்தயந் (அந்தியகாலத்தில்) சிந்திப்பவன், ஹே பார்த்த-ஓ அர்ச்சுனா, யாதி-(என்னை) அடைகிறான். (அ)

(தா-ம்) ஏ பார்த்தா! உபாஸனை, பரிசய முதலிய வப்பியாசத்தினாலும், தியானரூபமான சமாதியென்னும் யோகவிசேடத்தினாலும், அந்நிய விடங்களிற் பிரவேசிக்காத மனத்தினாலும், அநாதியான பரமபுருடனைச் சிந்திப்பவன் என்னையடைவான். (அ)

𑌕𑌵𑌿𑌂 𑌪𑍁𑌰𑌾𑌣𑌮𑌨𑍁𑌶𑌾𑌸𑌿𑌤𑌾𑌰 𑌮𑌣𑍋𑌰𑌣𑍀𑌯𑌾𑌂𑌸𑌮𑌨𑍁𑌸𑍍𑌮𑌰𑍇
𑌦𑍍𑌯𑌃 । 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌧𑌾𑌤𑌾𑌰𑌮𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌰𑍂𑌪 𑌮𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌵𑌰𑍍𑌣𑌂 𑌤𑌮𑌸𑌃
𑌪𑌰𑌸𑍍𑌤𑌾𑌤𑍍 ॥ ௯ ॥

𑌪𑍍𑌰𑌯𑌾𑌣𑌕𑌾𑌲𑍇 𑌮𑌨𑌸𑌾𑌽𑌚𑌲𑍇𑌨 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌯𑍋𑌗𑌬𑌲𑍇
𑌨 𑌚𑍈𑌵 । 𑌭𑍍𑌰𑍁𑌵𑍋𑌰𑍍𑌮𑌧𑍍𑌯𑍇 𑌪𑍍𑌰𑌾𑌣𑌮𑌾𑌵𑍇𑌶𑍍𑌯 𑌸𑌮𑍍𑌯𑌕𑍍 𑌸 𑌤𑌂
𑌪𑌰𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌮𑍁𑌪𑍈𑌤𑌿 𑌦𑌿𑌵𑍍𑌯𑌮𑍍 ॥ ௰ ॥

(ப-ம்) கவிம்-ஸர்வஜ்ஞனாய், புராணம் - புராதனனாய், அநுசாஸிதாரம்-ஆளுமவனாய், அணோ: அணீயாம்ஸம் - அணுவுக்கு அணுவாய், ஸர்வஸ்ய-எல்லாவற்றிற்கும், தாதாரம் - சிருஷ்டி கர்த்தாவாய், அசிந்த்ய ரூபம்-சிந்திக்கவரிய ரூபமுடையனாய், தமஸ: பரஸ்தாத்-பிரகிருதிக்குப் புறம்பே, ஆதித்யவர்ணம்-சூரியனை(ப்போன்ற) நிறமுடையனானவனை, ப்ரயாணகாலே-மரணகாலத்தில், பக்த்யா-பக்தியோடு, யுக்த:-கூடியவன், யோகபலேந - யோகபலத்தால், அசலேந மநஸா-அசைவுறுதமனதினால், ப்ருவோ: மத்யே-புருவங்களுக்கிடையில், ப்ராணம்-பிராணனை, ஸம்யக், ஆவேச்ய - நன்றாய் நிறுத்தி, ய: அநுஸ்மரேத்-எவன் இடைவிடாதுசிந்திக்கிறானோ,ஸ:-அவன், தம்திவ்யம்-அந்த திவ்யமான, பரம் புருஷம்-பரமபுருஷனை, உபைதி-அடைகிறான். (௯-௰)

(தா-ம்) ஸர்வஞ்யனாயும், ஆதியந்தமில்லாதவனாயும், பிரபஞ்சத்தைப் படைப்பவனாயும், அணுவுக்கணுவாயும், ஆத்மாவுக்கு அந்தர்யாமியாயும், ஸர்வலோகாதிகாரியாயும், அசிந்தியரூபனாயும், சூரியன்போன்ற பிரகாசமுடையவனாயும் இருளுக்கு வெகுதூரனாயுமிருக்கிற என்னை எவன் இடைவிடாமல் தியானிக்கின்றானோ: அப்படி

ப்பட்ட சாது பிராணப்ரயாணகாலத்தில் திருடசித்தத்தோடும், பக்தியோடும், யோகபலத்தோடுங்கூடினவனாய், இரண்டு புருவத்திற்குமிடையிலுள்ள சுழுமுனையின்கண் பிராணவாயுவை நன்கு நிறுத்தி திவ்யமங்களஸ்வரூபியான அப்பரமபுருடனை ஆசிரயிப்பான்.(௱௦)

திவ்யம்-ஸிருஷ்டி ஸ்திதிஸம்ஹாராதி அற்புத கர்மமுடையவர்.
(௱ப) ஸம்யக்-ஜாக்கிரதையாய். (கூ-ம)

யதக்ஷரம் வேதவிதோ வதந்தி விசந்தி யத்யதயோ வீதரா
கா: | யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி தத்தே பதம் ஸங்க்ரஹே
ண ப்ரவக்ஷ்யே|| ௧௧||

(ப-ம்) யத்-எத்தையானால், அக்ஷரம்-அஸ்தூலத்வம்முதலியகுணங்களுடையதாக, வேதவித:-வேதமறிந்தவர்கள், வதந்தி-சொல்லுகின்றார்களோ, வீதராகா:-நிஷ்காமரான, யதய:-யத்னசீலர்கள், யத்-எந்த (அக்ஷரத்தை), விசந்தி-பிரவேசிக்கின்றார்களோ, யத்இச்சந்த:-எந்த (அக்ஷரத்தை) இச்சிப்பவர்கள், ப்ரஹ்மசர்யம்-பிரம்மசரியத்தை, சரந்தி-அனுஷ்டிக்கிறார்களோ, தத் பதம்-அந்த ஸ்வரூபத்தை, தே-உனக்கு, ஸங்க்ரஹேண-ஸங்கிரஹமாக, ப்ரவக்ஷ்யே-சொல்லுகிறேன். (௧௧)

(தா-ம்) எந்த நித்திய வஸ்துவை வேதமுணர்ந்தோர் கூறுகின்றார்களோ, எதனிடத்தில் இராகத்வேஷமற்ற யதிகள் பிரவேசிக்கிறார்களோ, எதைக்கருதி பிரமசரியமென்னும் இந்திரிய நிக்கிரஹானுஷ்டானத்தைச் செய்கிறார்களோ, அப்படிப்பட்ட ப்ராப்யஸ்வரூபத்தை யுந்தனுக்குச் சுருக்கமாயுரைக்கின்றேன். (௧௧)

ஸர்வத்வாராணி ஸம்யம்ய மனோ ஹ்ருதி நிருத்ய ச|
மூர்த்ந்யாதாயாத்மன: ப்ராணமாஸ்திதோ யோகதாரணாம்||
ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரந்மாமநுஸ்மரந் |
ய: ப்ரயாதி த்யஜந்தேஹம் ஸ யாதி பரமாம் கதிம்|| ௧௩||

(ப-ம்.) ஸர்வத்வாராணி- எல்லாத்துவாரங்களையும், ஸம்யம்ய-அடக்கி, மன:-மனதை, ஹ்ருதி - இருதயத்திலிருக்கும், (என்னிடத்தில்) நிருத்யச-மடுத்து, யோகதாரணம் - யோகமென்னும் தாரணையை, ஆஸ்த்தித:-அடைந்தவனாய், ஓம் இதி-ஓம் என்கிற, ஏகாக்ஷரம் ப்ரஹ்ம-ஏகாக்ஷரப் பிரம்மத்தை, வ்யாஹரந்-சொல்லிக்கொண்டு, மாம் அநுஸ்மரந்-என்னை இடைவிடாதுசிந்தித்து, ஆத்மன:பிராணம்-தன்பிராணனை, மூர்த்நி ஆதாய - தலையில்வைத்து, தேஹம் த்யஜந்-

சரீரத்தைவிட்டு, யஃ ப்ரயாதி-எவன் போகிறானோ, ஸஃ - அவன்பர மாம்கதிம்-பரமகதியை, யாதி-அடைகின்றான். (கஉ-கங)

(தா-ம்) ஸர்வ இந்திரியங்களையு முள்ளடக்கி இருதயத்தின்க ண்மனதை நிலைபெற நிறுத்திப்ராணவாயுவை சிரசின்கண்ணுடியோ கமென்னும் தாரணத்தை "நிச்சல ஞானத்தை" யனுஷ்டித்து ஓமெ ன்னும் ஏகாக்ஷர ரூபமான பரப்ரம்மத்தை யுச்சரித்துக்கொண்டும், என்னை ஸ்மரித்துக்கொண்டுமே தேகத்தைவிட்டவன் பரமகதியை "ஸாயுஜ்ஜியபதவியை" யடைகிறான். (கஉ-கங)

அநந்யசேதாஃ ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யஶஃ।
தஸ்யாஹம் ஸுலபஃ பார்த்த நித்யயுக்தஸ்ய யோகிநஃ॥ கச॥

(ப-ம்) நித்யசஃ-தினந்தோறும் ஸததம்-எப்பொழுதும், மாம்-எ ன்னை, அநந்யசேதாஃ-வேறுசிந்தையின்றி, யஃ ஸ்மரதி-எவன் நினைக் கிறானோ, ஹேபார்த்த. ஓ அருச்சுந! நித்யயுக்தஸ்ய-நித்தியம் யோ கம்புரிகின்ற; தஸ்ய யோகிநஃ-அந்த யோகிக்கு, அஹம் ஸுலபஃநா ன்சுலபன். (கச)

(தா-ம்) பார்த்தா! எவன் தினந்தோறும், வேறுமனதின்றி இ டைவிடாமல் என்னை பஜிக்கிறானோ, அந்த நித்தியோபாஸனசீல னுன ஞானயோகிக்கே யான் சுலபமாயறியப்பாலனுகிறேன். (ஶ0) ஸததம்-இடைவிடாமல். (கச)

மாமுபேத்ய புநர்ஜந்ம து꞉காலயமஶாஶ்வதம்।
நாப்நுவந்தி மஹாத்மாநஃ ஸம்ஸித்திம் பரமாம் கதாஃ॥ கரு.

(ப-ம்) மாம் உபேத்ய-என்னை அடைந்து, துஃகாலயம்-துயர த்துக்கிடமாயும், அசாசுவதம்-அஸ்த்திரமாயுமிருக்கின்ற, ஜந்ம-பிர வியை, புநஃ-மறுபடியும், ந ஆப்நுவந்தி - அடையமாட்டார்கள், (ய தஃ)-ஏனெனில், மஹாத்மாநஃ - பெருமனத்தரான (அவர்கள்) பர மாம்-உத்தமமான, ஸம்ஸித்திம்-பலஸித்தியை:—(என்னை), கதாஃ-அ டைந்தாலோ, புநஃ ஜந்ம-மறுபடியும் பிறவி, நவித்யதே-கிடையாது.

(தா-ம்) சிறந்த சித்திபெற்ற மகான்கள் என்னையடைந்தபின்பு துக்காஸ்பதமாயும், அனித்தியமாயுமுள்ள ஜனனமரணகஷ்டத்தை மீண்டுமடையார்கள். (கரு)

ஆப்ரஹ்மபுவநால்லோகா: புநராவர்திநோऽர்ஜுந|
மாமுபேத்ய து கௌந்தேய புநர்ஜந்ம ந வித்யதே|| கசு||

(ப-ம்) அர்ஜுந-ஓ அர்ச்சுனா! ஆப்ரஹ்மபவநாத்-பிரமலோகப ரியந்தமுள்ள, லோகா:-உலகங்கள், புநராவர்திந: - திரும்புதலுடை யவைகள்; கௌந்தேய - ஓ குந்திபுத்திர ! மாம் உபேத்யது - என் னை அடைந்தாலோ, புந: ஜந்ம-மறுபடியும் பிறவி, நவித்யதே - கி டையாது. (கசு)

(தா-ம்) அர்ஜ்ஜுனா! ப்ரம்மலோகம் வரையிற்போகாமல் வேறு லோகஞ்சென்றோர்க்கு மறுபிறப்புண்டு எந்தனை யடைந்தபின்பு மா த்திரம் மறுபிறப்பில்லை. (கசு)

ஸஹஸ்ரயுகபர்யந்தமஹர்யத்ப்ரஹ்மணோ விது:|
ராத்ரிம் யுகஸஹஸ்ராந்தாம் தேऽஹோராத்ரவிதோ ஜநா: ||

(ப-ம்) யேஜநா:-எந்த ஜனங்கள், அஹோராத்ரவித:-பகலிரவுக ளையறிந்திருக்கிறார்களோ, தே-அவர்கள், ப்ரஹ்மண:-நான்முகனுக் கு, யத் அஹ:-எதினை (யென்றால்), தத்-அது, ஸஹஸ்ரயுகபர்யந்த ம்-ஆயிரயுகங்களின் முடிவுஎன்று, விது:-சொல்வர்கள். (கஎ)

(தா-ம்) இராப்பகலென்கிற விபாகமுணர்ந்த ஜனங்கள் நமது ஆயிரம் நான்குயுகத்தை ப்ரம்மனுக்கோர் பகலென்றும், இன்னும வ்வளவு சதுர்யுகம் சென்றால் அது அப்பிர்மனுக்கோர் இரவென் றுங்கூறுவார்கள். (கஎ)

அவ்யக்தாத்வ்யக்தய: ஸர்வா: ப்ரபவந்த்யஹராகமே|
ராத்ர்யாகமே ப்ரலீயந்தே தத்ரைவாவ்யக்தஸம்ஜ்ஞகே|| கஅ||

(ப-ம்.) அஹராகமே-பகல்வரும்பொழுது, வ்யக்தய: ஸர்வா:) வியக்திக ளெல்லாம், அவ்யக்தாத்-அவ்வியக்தத்தினின்றும், ப்ரபவ ந்தி-உண்டாகின்றன; ராத்ரியாகமே-இரவு வரும்பொழுது, அவ்யக் தஸம்ஜ்ஞகே-அவியக்தமென்று பெயருடைய, தத்ரைவ அவ்விடத் தில்தானே ப்ரலீயந்தே-லயிக்கின்றன. (கஅ||

(தா-ம்) பகலினது ஆரம்பத்தில் பிரகிருதி ஸ்வரூபியானபிர்ம னிடத்தில் நின்றும் உலகமெல்லா முற்பத்தியாகின்றது. பிரமனு

கு இரவினது ஆரம்பத்தில் பிரகிருதி ரூபியான அப்பிர்மனிடத்தே யாவும் லயப்படுகின்றன. (கஅ)

ஸ்ரீதமூராஜஸுவனவாயறமூறுஸ்வாறமூறுஸ்வாவ லீயதெ।
ராத்ஹூாமலெவஶூவாமுவெூலவதூஹாாமஹெ॥ கக॥

(ப-ம்) ஹேபார்த்த-ஓ பார்த்தா, ஸஏவ அயம் பூதக்ராமஃ-அந்தஇந்த பூதஸமூஹமே, அவசஃ-பரவசமாய்க்கொண்டு, பூத்வா பூத்வா-உண்டாகி யுண்டாகி, ப்ரலீயதே-அழிகின்றது, அஹராகமே-பகல்வரும்பொழுது, ப்ரபவதி-உண்டாகின்றது. (கக)

(தா-ம்) பார்த்தா! அப்பிராணி சமூகமே கர்மவசத்தாற்பிறந்து பிறந்து நசிக்கின்றன. இராத்திரியின்றொடர்பிற்பிறப்பதும், பகலினதுதொடர்பிற் பிறப்பது மியர்க்கையாயின. (கக)

வரஸஸா தூஹாவொ நூாவூகொவூகாதூஜாதநஃ।
யஸஸவெஷுஹூகெஷு நஶூஹூநவிநஶூகீ॥ உ௦॥

(ப-ம்) தஸ்மாத்அவ்யக்தாத்-அந்தப்(பிரகிருதிரூப)அவயக்தத்தைக்காட்டிலும், பரஃ-உத்க்ருஷ்டமான, அந்யஃ - மற்ருெரு, அவ்யக்தஃ-பிரமாணத்துக்குப்புலப்படாத, ஸநாதநஃ-நித்தியமான, யஃ பாவஃ-யாதொருபாவமுண்டோ), ஸஃ-அது-ஸர்வேஷுபூதேஷு - எல்லாப்பூதங்களும், நச்யத்ஸு-நசிக்கும் பொழுதும், நவிநச்யதி-நசிக்கிறதில்லை. (உ௦)

(தா-ம்) பிரகிருதிக்கு விலக்ஷணமாயும், அநித்தியமாயுமுள்ள ஸமஸ்தவஸ்துவும் நசித்தாலும் தான் நாசமடையாமலும், எப்பிரமாணத்தாலும் அறியக்கூடாததுமான ஆன்மா வேருனதென்றுணர்க.

அவூகொக்ஷாஜதூகஸஜாஹுஃவரஜாஂமதிஂ।
யஂவூாவூநிவதூெகதஹாஜவரஜஂஜ॥ உக॥

(ப-ம்) யஃ-எதுவானுல், அவ்யக்தஃ-அவ்யக்தம், அக்ஷரஃ-அக்ஷரம், இதிஉக்தஃ-என்று சொல்லப்பட்டதோ, தம்-அதை, பரமாம்கதிம்-பரமகதியாக, ஆஹுஃ-சொல்லுகிருர்கள், யம்-யாதொன்றை, ப்ராப்ய-அடைந்து, நநிவர்தந்தே-நிவர்த்திக்கமாட்டார்களோ, தத்-அது, மம-எனது, பரமம் மேலான, தாம-(சியபன)ஸ்தானம். (உக)

(தா-ம்) அவ்யக்தமெனவும், நாசமற்றதெனவும் கூறப்படுகிற

ஆன்மாவே முக்கியமான கெதியென்றுரைப்பார். அதையுணரப்பெற்றோர் மீண்டும் பிறவார். அதுதான் எந்தனுக்கு முக்கியமான ஸ்தானம். (௨௧)

புருஷஸ்ஸ பர: பார்த்த பக்த்யா லப்யஸ்த்வநந்யயா|
யஸ்யாந்த:ஸ்தாநி பூதாநி யேந ஸர்வமிதம் ததம்|| ௨௨||

(ப-ம்.) இதம்ஸர்வம்-இதெல்லாம், யஸ்ய-யாதொருத்தனுடைய, அந்த:ஸ்தாநி-உள்ளுக்குள்ளிருக்கின்றனவோ, யேந-எவனால், ததம்-வியாபிக்கப்பட்டதோ, ஸ:-அந்த, பர:புருஷ:-பரம புருஷன், அநந்யயா-மற்றொன்றைநாடாத, பக்த்யா-பக்தியினால், லப்ய:-அடையத்தகுந்தவன். (௨௨)

(தா-ம்) பார்த்தா! இந்தச் சேதனா சேதனஸ்வரூபங்களான ஸர்வபூதங்களும் எவனிடத்தில் அந்தர்க்கதங்களாகவிருக்கிறதுகளோ, எவன் இந்த எல்லா வஸ்துக்களிடத்திலும் வியாபித்திருக்கிறானோ, அப்படிப்பட்ட பரமபுருடன் அந்நிய விஷயசம்பந்தமில்லாத பக்தியொன்றாலேயே அறியத்தக்கவன். (ஶா௦) அநந்யயா - ஆத்மவிஷயமான. (௨௨)

யத்ர காலே த்வநாவ்ருத்திமாவ்ருத்திம் சைவ யோகிந:|
ப்ரயாதா யாந்தி தம் காலம் வக்ஷ்யாமி பரதர்ஷப|| ௨௩||

(ப-ம்.) பூதாநி-(ஸகல)பூதங்களும், ஹேபரதர்ஷப-ஓ பரதச்சிரேஷ்ட, யத்ர-எந்த, காலே-மார்க்கத்தில், ப்ரயாதா:-சென்ற(மறித்த), யோகிந:-யோகிகள், அநாவ்ருத்திம்-திரும்பாமையையும், யோகிந:)-புண்ணியவான்கள், ஆவ்ருத்திம்-திரும்புதலையும், யாந்தி-(முறையே) அடைகின்றனரோ, தமகாலம்-அந்த காலத்தை, வக்ஷ்யாமி-சொல்லுகிறேன். (௨௩)

(தா-ம்) ஏ பாரதா! யோகிகளெந்தமார்க்கத்திற்சென்று மறுபிறப்பில்லாதவர்களாயும், பிறப்பையுடையவர்களாயுமாவார்களோ அந்த மார்க்கத்தை யுந்தனுக் கறிவிக்கின்றேன். (௨௩)

அக்நிர்ஜ்யோதிரஹ: ஶுக்ல: ஷண்மாஸா உத்தராயணம்|
தத்ர ப்ரயாதா கச்சந்தி ப்ரஹ்ம ப்ரஹ்மவிதோ ஜநா:|| ௨௪||

(ப-ம்) அக்நி:-அக்கினி, ஜ்யோதி:-ஜோதி, அஹ:-பகல், சுக்ல:-

சுக்லபக்ஷ:, ஷண்மாஸா:-ஆறுமாதங்களான, உத்தராயணம்-உத்த ராயணம், தத்ர-இதில், ப்ரயாதா:-மரணமடைந்த, ப்ரஹ்மவிதஃ-பிரம த்தையறிந்த, ஜநா:-ஜனங்கள், ப்ரஹ்ம-பிரமத்தை, கச்சந்தி-அடைகி ன்றார்கள். (உச)

(தா-ம்) அக்கினி, தேஜஸ், பகல், சுக்கிலபக்ஷம், உத்திராயண மென்கிற இந்தமார்க்கமாய்ச்சென்ற பிர்மவித்துகளான ஜனங்கள் பிரமத்தைச் சேருவார்களென்பது "அர்ச்சிராதி மார்க்கமெனப் படும்." (உச)

தூமோ ராத்ரிஸ்ததா க்ருஷ்ண: ஷண்மாஸா தக்ஷிணாயநம்।
தத்ர சாந்த்ரமஸம் ஜ்யோதிர்யோகீ ப்ராப்ய நிவர்த்ததே॥ உரு॥

(ப-ம்) தூம:-புகை, ராத்ரி:-இரவு, ததா-அப்படியே, க்ருஷ்ண:-கிருஷ்ணபக்ஷம், ஷண்மாஸா:-ஆறுமாதங்களான, தக்ஷிணாயநம் - தக்ஷிணாயனம், தத்ர-இதில், யோகீ-யோகியானவன், சாந்த்ரமஸம்-சந் திரஸம்பந்தியான, ஜ்யோதி:-சோதியை, ப்ராப்ய-அடைந்து, நிவர் த்ததே-திரும்புகிறான். (உரு)

(தா-ம்) புகை, இரவு, கிருஷ்ணபக்ஷம், தக்ஷிணாயனமென்னும் ஆறுமாதம் என்கிற இந்தமார்க்கமாய் சந்திரனது தேஜஸ்ஸை ஆசி ரயித்த யோகிகள் மறுபிறப்பெடுக்கிறார்கள். இதை "தூமமார்க்க மென்ப்படும்." (உரு)

சுக்லக்ருஷ்ணே கதீ ஹ்யேதே ஜகத: சாச்வதே மதே।
ஏகயா யாத்யநாவ்ருத்திமந்யயாவர்த்ததே புந:॥ உசு॥

(ப-ம்) சுக்லக்ருஷ்ணே-வெளுப்பும் கறுப்புமான, ஏதே கதீ-இ க்கதிக(ளிரண்டும்), ஜகத:-உலகத்துக்கு, சாச்வதே-சாசுவதங்களா க,மதே-எண்ணப்பட்டன, ஏகயா-ஒன்றால், அநாவ்ருத்திம்-மீட்சியி ன்மையை, யாதி-அடைகின்றான், அந்யயா-மற்றொன்றால், புந: - ம றுபடியும், ஆவர்த்ததே-திரும்புகிறான். (உசு)

(தா-ம்) சுக்கில்பக்ஷம் "வெண்மை" கிருஷ்ணபக்ஷம் "கறுப்பு" என்கிற இவ்விரண்டு மார்க்கங்களும் "அர்ச்சிராதி, தூமாதி மார்க்க ங்களும்" பிரபஞ்சத்திற்கு சாசுவதமென்பது வேதசம்மதமாயிருக் கிறது. அவ்விருமார்க்கங்களுள் ஆதியான அர்ச்சிராதி மார்க்கமாய்

ச்சென்றவனுக்கு மறுபிறப்பில்லை. இரண்டாவதான தூமமார்க்கமா ய்ச்சென்றவனுக்கு புநர்ஜன்மம் சம்பவிக்கிறது. (உக)

நைதே ஸ்ருதீ பார்த² ஜாநந்யோகீ முஹ்யதி கஶ்சந|
தஸ்மாத்ஸர்வேஷு காலேஷு யோகயுக்தோ ப⁴வார்ஜுந||

(ப-ம்.) ஹேபார்த்த-வாராய் பார்த்தனே, ஏதே-இந்த,ஸ்ருதீ-மார்க்கங்களை, ஜாநந்-அறிகின்ற, யோகி-யோகியானவன், கஃசந-எவனும், நமுஹ்யதி-கலங்கான், தஸ்மாத்-ஆகையால், ஹே அர்ச்சுந-ஓ அர்ச்சுனா! ஸர்வேஷு-எல்லா, காலேஷு-காலங்களிலும், யோகயுக்தஃ-யோகத்தோடுகூடியவனாய், பவ-ஆகுவாய். (உஎ)

(தா-ம்) ஏ பார்த்தா! மேற்கூறிய இரண்டு மார்க்கமு முணர்ந்தஎந்த யோகியும் பிரமிக்கமாட்டான். ஆதலால் நீயுமெக்காலும் யோகநிஷ்டனாகவிரு. (உஎ)

வேதே³ஷு யஜ்ஞேஷு தப:ஸு சைவ தா³நேஷு யத்புண்யப²லம் ப்ரதி³ஷ்டம்| அத்யேதி தத்ஸர்வமிதம் விதி³த்வா யோகீ³ பரம் ஸ்தா²நமுபைதி சாத்³யம்|| உஅ||

(ப-ம்) வேதேஷு-வேதங்களிலும், யக்ஞேஷு - யாகங்களிலும்,தபஸ்ஸுசஏவ-தவங்களிலும், தாநேஷுச-தானங்களிலும், யத்-எந்த, புண்யபலம்-புண்ணியபலம், ப்ரதிஷ்டம்-சொல்லப்பட்டதோ, இதம்-இதை, விதித்வா-அறிந்து. யோகீ-யோகியானவன், தத்ஸர்வம்-அவை எல்லாவற்றையும், அத்யேதி-அதிக்கிரமிக்கிறான், ஆத்யம்-முதல்முதலான, பரம்ஸ்தாநம்ச-பெரியஸ்தானத்தையும், உபைதி-அடைகின்றான். (உஅ)

(தா-ம்) வேதாத்தியயனம், யஞ்ஞம், தவம், ஈகை இதுமுதலானவைகளாலுண்டான புண்ணிய விசேடங்கள் ஞானியும், யோகியும், அதிக்கிரமித்து ஆதியந்தமில்லாதமேன்மை தாங்கிய பதவியைப்பெறுகிறான். (உஅ)

ஸ்ரீகீதாஸு விஶ்வரூபஸந்தர்ஶநயோகமென்னும்

எட்டாவது அத்தியாயம் முற்றிற்று.



## கூ-வது அத்தியாயம்.

## ராஜவித்யா ராஜகுஹ்யயோக:.

## ஒன்பதாவது அத்தியாயம்.



### ஸ்ரீக்ருஷ்ணஉவாச.

இதம் து தே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாம்யநஸூயவே|
ஜ்ஞாநம் விஜ்ஞாநஸஹிதம் யஜ்ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸேऽசுபாத்||

(ப்ரதிபதம்.) அநஸூயவே - அஸூயாரஹிதமான, தே-உனக்கு, குஹ்யதமம்-அதிரஹஸ்யமும், விஜ்ஞாநஸஹிதம்-விஜ்ஞானத்தோடுகூடியதுமான, இதம் து-இந்த, ஜ்ஞாநம்-ஞானத்தை, ப்ரவக்ஷ்யாமி-சொல்லுகிறேன், யத்-எதை, ஜ்ஞாத்வா-அறிந்து, அசுபாத்-கர்மபந்தங்களிலிருந்து, மோக்ஷ்யஸே-விடுபடுவாய். (க)

(தா-ம்) எதையுணர்ந்தபின்பு அசுபங்களான கர்மபந்தங்களினின்றும் முக்திபெறுவாயோ அப்படிப்பட்ட பரம இரகசியமான மெய்ஞ்ஞானத்தை விசேஷ ஞானத்துடன் பொறாமையற்றவுனக்குச் சொல்லுகிறேன். (ஸ) விஜ்ஞாநஸஹிதம்-அநுபவஞ்ஞானத்தோடு கூடினது. (க)

ராஜவித்யா ராஜகுஹ்யம் பவித்ரமிதமுத்தமம்|
ப்ரத்யக்ஷாவகமம் தர்ம்யம் ஸுஸுகம் கர்துமவ்யயம்||உ||

(ப-ம்) இதம்-இது, ராஜவித்யா-ராஜவித்யை; ராஜகுஹ்யம்-ராஜார்ஹமான ரஹஸ்யம், உத்தமம்-மேலான, பவித்ரம்-பரிசுத்திகரமும், ப்ரத்யக்ஷாவகமம் - ப்ரத்யக்ஷவிஷயமுடையதும், தர்ம்யம்-சத்ருக்களைத்தபிக்கச்செய்கிற, கர்தும் - செய்வதற்கு, ஸுஸுகம் - மிகவும், எளியதும், அவ்யயம்-நாசமற்றதுமானது. (உ)

(தா-ம்) இது, இராஜவித்யை, "என்பதால்வித்தைகளுக்கெல்லாம் சிறந்தது. அல்லது இராஜார்ஹமான வித்தை" இராஜகுஹ்யம். "என்பதால் இரகசியவித்தைகளுக்குட் சிறந்தது. அல்லது இராஜார்ஹமான இரகசியம்" இது விசேஷ பரிசுத்தமுடையதும், கண்கூடாய்க் காணத்தக்கதும், மோட்சதர்ம சாதனமானதும், இலகுவிற் செயற்பாலனவாகியதும் அழிவற்றதுமாம். (உ)

அச்ரத்ததாநா: புருஷா தர்மஸ்யாஸ்ய பரந்தப|
அப்ராப்ய மாம் நிவர்த்தந்தே ம்ருத்யுஸம்ஸாரவர்த்மநி||ங||

(ப-ம்) ஹேபரந்தப-ஓ அர்ஜுநா, அஸ்ய- இந்த, தர்மஸ்ய-தர்மத்

ஸ்ய, அஸ்ரத்ததாநா:-நம்பாத, புருஷா:-புருஷர்கள், மாம்-என்னை, அப்ராப்ய-அடையாமல், ம்ருத்யுஸம்ஸாரவர்த்மநி - இயமனுள்ள ஸம்ஸார மார்க்கத்தில், நிவர்த்தந்தே-வர்த்திக்கிறார்கள். (ஙு)

(தா-ம்) ஏ அர்ஜுனா! மானிடர் இவ்வுபாஸனையென்னும் தர்மத்திற்கு உட்படட்டவராயினும் நம்பிக்கையும், அன்புமில்லாதவர்களாய் என்னை யடையாது மிர்தயுரூபமான ஸம்ஸாரமார்க்கத்தில் மிக்கு பிரவேசிக்கிறார். (ஸ௦) அஸ்ரத்ததாநாஸவிஸ்வா:- மற்றிருக்கிற. (ஙு)

மயா ததமிதம் ஸர்வம் ஜகதவ்யக்தமூர்த்திநா।
மத்ஸ்தாநி ஸர்வபூதாநி நசாஹம் தேஷ்வவஸ்தித:॥ ச॥

(ப-ம) அவ்யக்தமூர்த்திநா-அபரகாசரூபத்தையுடைய, மயா-என்னால், இதம்-இந்த, ஸர்வம்-ஸகலமான, ஜகத்-உலகம, ததம்-வியாபிககப்பட்டிருக்கிறது, ஸர்வபூதாநி-எல்லாபபூதங்களும், மத்ஸ்தாநி என்னையாசரயித்திருக்கின்றன, அஹம்ச-நானோ, தேஷு - அவைகளிடத்தில், அவஸ்தித:ந-இருப்பவன் அல்ல. (ச)

(தா-ம) இநதஜகத்தெல்லாம அவ்யக்தரூபியான எநதனுலேவியாபிக்கப்பட்டிருக்கினறது. ஸமஸ்த வஸ்துககளும எநதனை ஆஸ்ரயித்திருந்தாலும் நான் எதையும் ஆஸ்ரயித்திருக்கவிலலை. (ச)

நச மத்ஸ்தாநி பூதாநி பஸ்ய மே யோகமைஸ்வரம்।
பூதப்ருந்ந ச பூதஸ்தோ மமாத்மா பூதபாவந:॥ ரு॥

(ப-ம்) பூதாநி-பூதங்கள், மத்ஸ்தாநிச-என்னிடத்திருபபவைகளும், ச-அல்ல; மே-என்னுடைய, ஐஸ்வரம்-ஈஸ்வரஸம்பந்தியான, யோகம்-யோகத்தைபஸ்ய-பார், மம-என்னுடைய, ஆத்மா-ஆத்மாவானது, பூதப்ருத்-பூதங்களைப் பரிக்கின்றது, பூதஸ்த்த:ச-பூதஙகளில இருப்பதும், ந-அலல, பூதபாவந:-பூதங்களை உண்டாக்குவது. (ரு)

(தா-ம்) அன்றியும் எந்தனிடத்தில் எநதபூதமில்லை, ஈஸ்வரஸம்பந்தமான சக்தியால் தரிக்கின்றேன். ஆயினுமயான் அவ்வஸ்துககளிடத்திலுமில்லை. எந்தன் சங்கற்பமே யாவையுமபடைககின்றது. (ரு)

யதாகாஸஸ்திதோ நித்யம் வாயு: ஸர்வத்ரகோ மஹாந்।
ததா ஸர்வாணி பூதாநி மத்ஸ்தாநீத்யுபதாரய॥ சூ॥

(ப-ம்) ஆகாசஸ்தித:-ஆகாசத்தில் இருக்கும், மஹாந்-பெரிய, வாயு:-வாயுவானது, யதா-எப்படி, நித்யம்-எப்போது, ஸர்வத்ரக:-எங்கும், வியாபித்ததோ, ததா-அப்படி, ஸர்வாணி-எல்லா, பூதாநி-பூதங்

களும் முதல் தாநி-என்னில் இருக்கின்றன,' இதி-என்று, உபதாரய-நிச்சயித்துக்கொள்ளுவாயாக. (௬)

(தா-ம்) ஆகாயத்திலெங்கும்வியாபித்திருக்கிறகாற்றுஎவ்வாறு எந்தனிடத்திலிருக்கிறதோ, அவ்வாறே எல்லாவஸ்துக்களும், எந்தனிடத்திலிருக்கிறதென்று அறிந்துகொள். (௬)

ஸர்வபூதாநி கௌந்தேய ப்ரக்ருதிம் யாந்தி மாமிகாம்|
கல்பக்ஷயே புநஸ்தாநி கல்பாதௌ விஸ்ருஜாம்யஹம்|| ௭||

(ப-ம்) ஹேகௌந்தேயா-ஓ அர்ஜுநா! ஸர்வபூதாநி-எல்லாப் பூதங்களும், மாமிகாம்-எனக்குசசரீரமான, ப்க்ருதிம்-பிரகிருதியை, கல்பக்ஷயே-கல்பத்தின் முடிவில், யாந்தி-அடைகின்றன, கல்பாதௌ-கல்பத்தின் ஆதியில், புந:-மறுபடி (தாநி)-அவைகளையே, அஹம்-நான், விஸ்ருஜாமி-ஸ்ருஷ்டிக்கிறேன். (௭)

(தா-ம்) ஏ குந்தி புததிரா! பிரளயகாலத்தில் எல்லா வஸ்துக்களும் என்னுடன் சேர்ந்த பிரகிருதியை ஆசிரயிக்கின்றன. அவைகளை மீண்டும யுகாரமபததில் யானே சிருஷ்டிக்கின்றனன். (௭)

ப்ரக்ருதிம் ஸ்வாமவஷ்டப்ய விஸ்ருஜாமி புந: புந:|
பூதக்ராமமிமம் க்ருத்ஸ்நமவஶம் ப்ரக்ருதேர்வஶாத்||௮||

(ப-ம்) ஸ்வாம்-என், சம்பந்தமான, ப்ரக்ருதிம்-பிரகிருதிக்கு வசாத் - வசமாயிருக்கையால், அவசம் - சுவாதீனமற்றிருக்கின்ற, இமம்-இந்த, பூதக்ராமம்-பூதஸமுதாயத்தை, க்ருத்ஸ்நம்-எல்லாவற்றையும், புந:புந:-அடிக்கடி, விஸருஜாமி-சிருஷ்டிக்கின்றேன். (௮)

(தா-ம்) எந்தன் பிரகிருதியைக் காரணமாகக்கொண்டு அப்பிரகிருதியினது ஸ்வாதந்திரியததால பரவசமான பிராணி சமூகத்தை அடிக்கடி சிருஷ்டிக்கிறேன். (௮)

ந ச மாம் தாநி கர்மாணி நிபத்நந்தி தநஞ்ஜய|
உதாஸீநவதாஸீநமஸக்தம் தேஷு கர்மஸு||௯||

(ப-ம்) ஹேதநஞ்ஜய-ஓ அர்ச்சுனா! உதாஸீநவத்-உபேக்ஷிப்பவன்போல், ஆஸீநம்-இருக்கின்றவனாய், தேஷுகர்மஸு-அக்கருமங்களில், அஸக்தம்-ஸங்கமற்றவனுமிருக்கின்ற, மாம்-என்னை, தாநி கர்மாணி-அந்தகருமங்கள், நநிபத்நந்தி-கட்டுப்படுத்தமாட்டா. (௯)

(தா-ம்) தனஞ்ஜயா! உதாசீனன்போலிருந்து எந்த கர்மத்திலும் சம்பந்தப்படாத எந்தனை அச்சிருஷ்டி முதலிய கர்மங்கள் பந்திக்கமாட்டாது? (௯)

𑌮𑌯𑌾𑌽𑌧𑍍𑌯𑌕𑍍𑌷𑍇𑌣 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌃 𑌸𑍂𑌯𑌤𑍇 𑌸𑌚𑌰𑌾𑌚𑌰𑌮𑍍।
𑌹𑍇𑌤𑍁𑌨𑌾𑌨𑍇𑌨 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌜𑌗𑌦𑍍𑌵𑌿𑌪𑌰𑌿𑌵𑌰𑍍𑌤𑌤𑍇॥ ௰॥

(ப-ம்) அத்யக்ஷேண - பாவர்த்தகனுன, மாயா - என்னால், ப்ரக்ருதிஃ-பிரகிருதியானது, ஸசராசரம்-ஜங்கமாஜங்கமங்களுடன்கூடிய, ஜகத்-உலகத்தை, ஸூயதே-உண்டு பண்ணுகின்றது, ஹேகௌந்தேய-குந்திபுத்திர! அநேந ஹேதுநா-இந்த காரணத்தால், ஜகத்-உலகமானது, விபரிவர்ததே - பரிணமித்துக் கொண்டிருக்கிறதல்லவா. (௧௦)

(தா-ம்) கௌந்தேயா! யான் அத்தியக்ஷனாகவிருப்பதால் எனது பிரகிருதி எல்லா சராசரங்களையும் படைக்கின்றன. இக்காரணத்தினுலேயே அநேகஜகத்துபரிணமிக்கின்றது. (மாறுகின்றது.) (௧௦)

𑌅𑌵𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑌿 𑌮𑌾𑌂 𑌮𑍂𑌢𑌾 𑌮𑌾𑌨𑍁𑌷𑍀𑌂 𑌤𑌨𑍁𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌮𑍍।
𑌪𑌰𑌂 𑌭𑌾𑌵𑌮𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑍋 𑌮𑌮 𑌭𑍂𑌤𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌮𑍍॥ ௧௧॥

(ப-ம்) மம - என்னுடைய, பரம்-மேலான, பாவம்-அபிப்பிராயத்தை, அஜாநந்தஃ-அறியமாட்டாத, மூடாஃ-மூடர்கள், பூதமஹேச்வரம்-பூதங்களுக்கு நியாமகனுய் (இருந்துவைத்து), மாநுஷீம்-மனுஷ்ய சம்பந்தமான, தநும்-சரீரத்தை, ஆச்ரிதம்-அடைந்திருக்கின்ற, மாம்-என்னை, அவஜாநந்தி, அனாதரிக்கிறுர்கள். (௧௧)

(தா-ம்) மூடர்கள் ஸர்வப் பிராணிகளுக்கும் ஈசனுன என் பரஸ்வரூபத்தையுணராது மானிடதேகத்தை யடைந்திருக்கிற என்னைப்பார்த்து அலக்ஷியம் செய்கிறுர்கள். (௧௧)

𑌮𑍋𑌘𑌾𑌶𑌾 𑌮𑍋𑌘𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑍋 𑌮𑍋𑌘𑌜𑍍𑌞𑌾𑌨𑌾 𑌵𑌿𑌚𑍇𑌤𑌸𑌃।
𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑍀𑌮𑌾𑌸𑍁𑌰𑍀𑌂 𑌚𑍈𑌵 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌮𑍋𑌹𑌿𑌨𑍀𑌂 𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃॥

(ப-ம்) ஆஸுரீம்-அசுரசம்பந்தமும், ராக்ஷஸீம்சைவ-ராக்ஷஸ சம்பந்தமுமான, மோஹிநீம்-மோஹத்தையுண்டுபண்ணும், ப்ரக்ருதிம்-பிரகிருதியை, ச்ரிதாஃ-அடைந்த (அவர்கள்), விசேதஸஃ-ஞானமில்லாதவராயும், மோக ஆசாஃ-வியர்த்தமான ஆசையுற்றவராயும், மோக கர்மாணஃ-வியர்த்தமான செய்கைகளுற்றவராயும், மோக ஜ்ஞாநாஃ- வியர்த்தமான ஞான முடையவர்களாயும் (பவந்தி) ஆகிறுர்கள். (௧௨)

(தா-ம்) மோகத்தை தரத்தக்க இராஜஸ தாமஸகுணங்களை ஆசிரயித்தவர்கள் பயனற்ற வியாபாரத்தை யுடையவர்களாயும், நிஷ்பல மனோரதத்தை யுடையவர்களாயும், பயனற்றஞானமுடையவர்களாயும், ஞானமில்லாதவர்களாயு மாவார்கள். (௧௨)

மஹாத்மாநஸ்து மாம் பார்த்த தைவீம் ப்ரக்ருதிமாஶ்ரிதா:|
பஜந்த்யநந்யமநஸோ ஜ்ஞாத்வா பூதாதிமவ்யயம்|| கங||

(ப-ம்) ஹே பார்த்த-ஓ அர்ஜுநா! மஹாத்மாந:து-மஹாத்துமாக்களோ, தைவீம்-தேவஸம்பந்தியாகிய, ப்ரக்ருதிம் - பிரகிருதியை, ஆஶ்ரிதா:- அடைந்தவர்களாய், பூத ஆதிம் -பூதங்களுக்கு ஆதியாய், அவ்யயம்-வியயமில்லாதவனாய், மாம்-என்னை, ஜ்ஞாத்வா - அறிந்து, அநந்யமநஸ:-இதரமான மனமில்லாதவர்களாய், (மாம்)-என்னை, பஜந்தி-ஸேவிக்கின்றார்கள். (கங)

(தா-ம்) பார்த்தா! ஸத்துவகுணத்தை யாசிரயித்த மகான்கள் அந்நிய மனதின்றி ஸர்வபூதங்களுக்கும் ஆதியாயும், நித்தியனாயுமிருக்கிற என்னை பஜிப்பார்கள். (கங)

ஸததம் கீர்த்தயந்தோ மாம் யதந்தஶ்ச த்ருடவ்ரதா:|
நமஸ்யந்தஶ்ச மாம் பக்த்யா நித்யயுக்தா உபாஸதே|| கச||

(ப-ம்) மாம்-என்னை, ஸததம்-எப்பொழுதும், கீர்தயந்த:-புகழ்வோரும், யதந்த:ச-யத்தனஞ்செய்புமவர்களும், த்ருடவ்ரதா:-திடமானவிரதங்கொண்டவர்களும், மாம்-என்னை, நமஸ்யந்த:ச-நமஸ்கரிப்பவர்களும், பக்த்யா-பக்தியுடன், நித்யயுக்தா:-நித்தியமும்கூடினவர்களும், மாம்-என்னை, உபாஸதே-உபாஸிக்கின்றார்கள். (கச)

(தா-ம்) மனதிடமுடையோர் எப்பொழுதும் எந்தனையே தியானித்துக்கொண்டும் உபாசிப்பதற்குப் பிரயத்தினப் பட்டுக்கொண்டும், பக்தியுடன் எந்தனை வணங்கிக்கொண்டும், எந்தனோடு நித்திய சம்பந்தத்தைக் கோரிக்கொண்டும் உபாசித்துக்கொண்டு மிருப்பார்கள். (ஶம்) யதந்த-வாஸ்தவமான ஸ்வரூபத்தை. (கச)

ஜ்ஞாநயஜ்ஞேந சாப்யந்யே யஜந்தோ மாமுபாஸதே|
ஏகத்வேந ப்ருதக்த்வேந பஹுதா விஶ்வதோமுகம்|| கரு||

(ப-ம்) அந்யேச - இதரர்கள், ஜ்ஞாநயஜ்ஞேந - ஞானயக்ஞத்தால், யஜந்த:-பூஜிப்பவரா்ய், மாம்-என்னை, ஏகத்வேந-ஏகாகாரமாயும், ப்ருதக்த்வேந-தனியாயும், பஹுதா-அனேகவிதங்களான, விஶ்வதோமுகம்-காணப்பிரகாரமாயும், உபாஸதே-உபாஸிக்கிறார்கள். ()

(தா-ம்) மற்றுஞ் சில மகான்கள் ஞானமென்னும்யஞ்ஞத்தைச் செய்துக்கொண்டு ஸர்வாகாரனான எந்தனை ஏகாகாரமாயும், அநேகவிதங்களாய் ஜகத்காரணமாயும் உபாஸனை செய்வார்கள். (கரு)

𑌅𑌹𑌂 𑌕𑍍𑌰𑌤𑍁𑌰𑌹𑌂 𑌯𑌜𑍍𑌞𑌃 𑌸𑍍𑌵𑌧𑌾𑌹𑌮𑌹𑌮𑍌𑌷𑌧𑌮𑍍 ।
𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍋𑌽𑌹𑌮𑌹𑌮𑍇𑌵𑌾𑌜𑍍𑌯𑌮𑌹𑌮𑌗𑍍𑌨𑌿𑌰𑌹𑌂 𑌹𑍁𑌤𑌮𑍍 ॥ ௧௬ ॥

(ப-ம்) அஹம்-நான், க்ரது:-(ஜ்யோதிஷ்டோமாதி) க்ரதுஸ்வரூபன், அஹம்-நான், யக்ஞ:-யக்ஞஸ்வரூபன்; அஹம்-நான், ஸ்வதா-(பித்ருக்களுக்குரிய) அன்னம்; அஹம்-நான், ஔஷதம்-ஔஷதம்; அஹம்-நான், மந்த்ர:-மந்திரம்; அஹம் ஏவ-நானே, ஆஜ்யம்-நெய்; அஹம் நான், அக்நி:-ஹோமாக்கினி, அஹம்-நான், ஹுதம்-ஹோமஸ்வரூபன். (௧௬)

(தா-ம்) யானே யஞ்ஞம் யானே மஹாயஞ்ஞம். யானே பித்ரு தேவதைகளுக்கும் ஸ்வதை யென்னும் திரவியம். யானே ஔஷதம். "என்பதால் தேவதைகளுக்குத் தரத்தக்க ஹவிஸ்ஸு" யானே மந்திரம். யானே அக்கினி. யானே ஹோமம். (௧௬)

𑌪𑌿𑌤𑌾𑌹𑌮𑌸𑍍𑌯 𑌜𑌗𑌤𑍋 𑌮𑌾𑌤𑌾 𑌧𑌾𑌤𑌾 𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌃 ।
𑌵𑍇𑌦𑍍𑌯𑌂 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌮𑍋𑌂𑌕𑌾𑌰 𑌋𑌕𑍍𑌸𑌾𑌮 𑌯𑌜𑍁𑌰𑍇𑌵 𑌚 ॥ ௧௭ ॥
𑌗𑌤𑌿𑌰𑍍𑌭𑌰𑍍𑌤𑌾 𑌪𑍍𑌰𑌭𑍁𑌃 𑌸𑌾𑌕𑍍𑌷𑍀 𑌨𑌿𑌵𑌾𑌸𑌃 𑌶𑌰𑌣𑌂 𑌸𑍁𑌹𑍃𑌤𑍍 ।
𑌪𑍍𑌰𑌭𑌵𑌃 𑌪𑍍𑌰𑌲𑌯𑌃 𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌨𑌿𑌧𑌾𑌨𑌂 𑌬𑍀𑌜𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 ॥ ௧௮ ॥

(ப-ம்) அஸ்ய-இந்த, ஜகத:-உலகத்திற்கு, அஹம்-நான்; பிதா-தகப்பனும், மாதா-தாய்; தாதா - ரக்ஷகன்; பிதாமஹ:-பாட்டன்; பவித்ரம்-பரிசுத்தமாய, வேத்யம - அறியவேண்டுமவனும (நானே), ஓங்கார:-ஓங்காரமும்(நான்), ருக்-ருக்வேதம, ஸாம-ஸாமவேதம்; யஜு:ஏவச - யஜுர்வேதமும, அஹமேவ - நானே; கதி:- கதியும், பர்த்தா-பர்த்தாவும, ப்ரபு:-பிரபுவும, ஸாக்ஷீ-ஸாக்ஷியும, நிவாஸ:-வாஸஸ்தானமும், சரணம்-ரக்ஷகனும், ஸுஹ்ருத்-ஹிதபரனும், ப்ரபவப்ரளய ஸ்தாநம்-உத்பத்திஸ்தானமும லயஸ்தானமும், நிதாநம்-ஆதாரமும, அவ்யயம்பீஜம்-விகாரமில்லாத வித்தும், (அஹமேவ- நானே.) (௧௭-௧௮)

(தா-ம) இவ்வுலகத்திற்கு தாய் யான். தகப்பன் யான். பாட்டன் யான். சிருஷ்டி கர்த்தன் யான். வேதத்தாலறியப்பட்ட பரம்பொருள் யான். ஓங்காரம் யான். ருக்கு ஸாமம் யஜுர்வேதங்கள் யான். "ஆசிரயிக்கத்தக்க ஸ்தானம யான்" தரிக்கிறவனும் யான். காக்கிறவனும, பார்க்கிறவனும் யான். வாஸஸ்தானமும் யான். சரணம் யான். மித்திரன் யான். உற்பத்தி லய ஸ்தானமும் யான். நிதியும் யான். நாசமற்ற வித்தும் யான். (ஸ்ரீ) அநேகரும பல னும். (௧௭-௧௮)

அஹமாதித்ய ரூபேண தபாமி ந்ருணாம் ஸ்ம்ருதிர்மேதா|
நிக்ருஹ்ணாம்யுத்ஸ்ருஜாமி ச அம்ருதம் சைவ ம்ருத்யுஸ்ச ஸதஸச்சாஹமர்ஜுந|| ௧௯||

(ப-ம்) ஹே அர்ஜுந-வாராய் அர்ச்சுனா! அஹம-நான், தபாமி-தபிக்கிறேன்; அஹம்-நான், வர்ஷவாஷத்தை, நிக்ருஹ்ணாமி-நிறுத்துகிறேன், உத்ஸ்ருஜாமிச - விடுகிறேன், அம்ருதம்சைவ - அமுதமும், ம்ருத்யுச-யமனும், ஸத்-ஸத்தும், அஸத்ச-அஸத்தும், அஹம்-நானே.

(தா-ம) அர்ஜுனா! யானே அக்கினி சூரியன் முதலிய தேஜோரூபமாக விருந்து தாபத்தை யுண்டுபண்ணுகிறேன். யானே மழைபெய்யாமற செய்கின்றேன். யானே மழை பொழியும்படிச் செய்கின்றேன். யானே அமிர்தம. யானேமிருத்யு யானே ஸத்தானவஸ்து. யானே அஸத்தானவஸ்து. "என்பதால் உலோகாதீதப் பொருள்." (ஸப) அம்ருதஞ்ச-ஜீவத்திருக்கிறவன். மருத்யுஞ்ச மரணத்தையுடையவர்களுக்கும்ருத்தியுவும. (௧௯)

த்ரைவித்யா மாம் ஸோமபா: பூதபாபா
யஜ்ஞைரிஷ்ட்வா ஸ்வர்கதிம் ப்ரார்த்தயந்தே|
தே புண்யமாஸாத்ய ஸுரேந்த்ரலோக
மஸ்நந்தி திவ்யாந் திவி தேவபோகாந்|| ௨0||

(ப-ம்) த்ரைவித்யா:- ருக் யஜுஸ்ஸாமவேதங்களை அறிந்தவர், ஸோமபா:-ஸோமபானஞ்செயது, பூதபாபா:(பாபாத்பூதா:) பாவங்களைப்போக்கடித்துக்கொண்டவர்களால, யக்ஞை:- யாகங்களாலே, மாம்-என்னை, இஷ்ட்வா-ஆராதித்து, ஸ்வர்கதிப்- சுவர்க்கக்கதியை, ப்ரார்த்தயந்தே-பிரார்த்திக்கின்றார்கள ; தே-அவர்கள், புண்யம்-புண்யமான, ஸுரேந்த்ர லோகம- தேவேந்திரன் உலகத்தை, ஆஸாத்ய-அடைந்து, திவி-சுவர்க்கலோகத்தில, திவ்யாந் -திவ்யங்களான, தேவபோகாந்-தேவபோகங்களை, அச்நந்தி-அநுபவிக்கின்றார்கள். (௨0)

(தா-ம்) ருக்கு யஜுஸ் ஸாமமுதலிய வேதங்களை யுணர்ந்தவர் யஞ்ஞ கன்மங்களால எந்தனை அர்ச்சித்து ஸோமபானஞ்செய்து பாபங்களைப் போக்கி ஸ்வர்க்கலோகப் பிராப்தியை விருமபுகின்றார்கள். அப்படிப்பட்டவர் புண்ணியபலமான இநதிரலோகத்தை ஆஸ்ரயித்து அங்கு அற்புதமான தேவபோகங்களை யநுபவிக்றனர்.

தே தம் புக்த்வா ஸ்வர்கலோகம் விஸாலம்
க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விஸந்தி|

ஸவம்க்ருயீ ய்ஃ-ஃநவெ்ருவர

மதாமகம் காமகாமா லஹனெ॥ உக॥

(ப-ம்) தே-அவர்கள், விஶாலம்-விசாலமான, தம்-அந்த, ஸ்வர்கலோகம்-சுவர்க்கலோகத்தை, புக்த்வா-அனுபவித்து, புண்யே-புண்ணியம், க்ஷீணே - க்ஷயித்தபோது, மர்த்யலோகம்-மனுஷிய லோகத்தை, விசந்தி-பிரவேசிக்கின்றார்கள், ஏவம்-இப்படி, காமகாமா:-(சுவர்க்காதி) காமங்களை விரும்பிய (அவர்கள்), த்ரயீதர்மம்-வேதங்களில் சொல்லப்பட்ட அநுப்ரபந்நா:-அனுட்டித்தவர்களாய், கதாகதம்-போக்குவரத்தை, லபந்தே-அடைகின்றார்கள். (உக)

(தா-ம்) அவர்கள் விசேஷமான இந்த ஸ்வர்க்கபோகங்களை யநுபவித்து புண்ணிய பலம் நசித்துப்போனவுடன் மநுஷ்யலோகத்தை யடைகிறார்கள். இவ்வண்ணம் வேதத்திற் கூறிய யஞ்ஞ முதலிய கன்மங்களை யநுசரித்துபோகங்களை விரும்பினோர்க்கு ஜனன மரணம் ஸம்பவிக்கின்றன. (உக)

அநந்யாஶ்சிந்தயந்தோமாம் யேஜநா: பர்யுபாஸதே।

தேஷாம் நித்யாபியுக்தாநாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம்॥

(ப-ம்) அநந்யா:-என்னை நினைப்பதைப்பார்க்கிலும் இதரபர போஜநங்கள் இல்லாதவர்களாய், மாம்-என்னையே! சிந்தயந்த:-சிந்திப்பார்களாய், யேஜநா:-எந்த ஜனங்கள், பர்யுபாஸதே-உபாஸிக்கிறார்களோ, நித்ய அபியுக்தாநாம்-நித்தியமும் (என்னைவிட்டு) நீங்காத, தேஷாம்-அவர்களுடைய, யோக க்ஷேமம்-யோக க்ஷேமங்களை அஹம்-நான், வஹாமி-வஹிக்கிறேன். (உஉ)

(தா-ம்) எவர்கள் வேறு பிரயோஜநத்தைக்கருதாது எந்தனைத் தியானிக்கின்றார்களோ, அப்படிப்பட்டவர்களுக்குஎந்தன் பிராப்தியென்னும் போகத்தையும், புநர்ஜன்ம நிவிருத்தியென்னும் க்ஷேமத்தையும் யானே யளிக்கின்றேன். (உஉ)

யேப்யந்யதேவதாபக்தா யஜந்தே ஶ்ரத்தயாந்விதா:।

தேபிமாமேவகௌந்தேய யஜந்த்யவிதிபூர்வகம்॥உங॥

(ப-ம்) யே து-பின்னும் எவர்கள், அந்ய தேவதா பக்தா:-இதர தேவதைகளுக்குப் பக்தர்களாய், ஶ்ரத்தயா அந்விதா:-சிரத்தையோடு கூடினவர்களாய், யஜந்தே-யாகம் செய்கிறார்களோ, தே அபி-அவர்களும், ஹேகௌந்தேய-ஓ குந்திபுத்திர! அவிதி பூர்வகம் - அஞ்ஞாநபூர்வகமாய், மாம் ஏவ-என்னையே, யஜந்தி-யாகஞ் செய்கிறார்கள். (உங)

(தா-ம்) கௌந்தேயா! அந்யதேவதைகளிடத்தில் பக்தியுண்டாகி அன்புடன் எவர்கள் பூஜிக்கின்றார்களோ, அவர்கள்கூட என்னையே பூஜித்தவர்கள். ஆனால் அது விதிபூர்வகமாக மாட்டாது. "என்பதால் அவர்கள் வேதாந்த தாத்பரியத்தை யறிந்திலர் என்று கருத்து." (௨௩)

அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் போக்தா ச ப்ரபுரேவ ச ।
ந து மாமபிஜாநந்தி தத்த்வேநாதச்ச்யவந்தி தே ॥ ௨௪ ॥

(ப-ம்) ஸர்வயஜ்ஞாநாம்-ஸமஸ்தமான யஜ்ஞங்களிலும், போக்தாச-அனுபவிப்பவன், ப்ரபு: ஏவச-பலம்கொடுக்கிறவனும், அஹம் ஹி-நான் அல்லவா, தேது-அவர்களே, மாம்-என்னை, தத்வேந-உள்ளபடியே, நாபிஜாநந்தி-அறிகிறதில்லை, அத:-ஆகையால், ச்யவந்தி-தப்பிப்போகிறார்கள். (௨௪)

(தா-ம்) எல்லா வேள்விகளுக்கும் பயனை யளிப்பவனும் ஆராதிக்கத் தக்கவனும் யானே. காமிய கர்மாநிஷ்டர்கள் என்னை உண்மையா யறியார்கள். ஆதலாற்றான் அவர்கள் மறுபிறப்பெடுப்பார்கள்.

யாந்தி தேவவ்ரதா தேவாந் பித்ரூந் யாந்தி பித்ருவ்ரதா: ।
பூதாநி யாந்தி பூதேஜ்யா யாந்தி மத்யாஜிநோऽபி மாம் ॥

(ப-ம) தேவ வ்ரதா:-தேவதைகளைக்குறித்து விரதம் பூண்டவர்கள், தேவாந்-தேவர்களை, யாந்தி-அடைகின்றார்கள்; பித்ருவ்ரதா:-பிதுருக்களைக்குறித்து விரதம்பூண்டவர், பித்ரூந்-பிதுருதேவதைகளை, யாந்தி - அடைகின்றார்கள், பூதேஜ்யா:- பூதங்களைக்குறித்து யாகஞ்செய்வோர், பூதாநி - பூதங்களை, யாந்தி-அடைகின்றார்கள், அபிச-பின்னும் மத்யாஜிந:-என்னைக்குறித்துயாகஞ்செய்யுமவர்கள், மாம்-என்னை, யாந்தி-அடைகின்றார்கள். (௨௫)

(தா-ம்) தேவதைகளைப் பூஜிக்க கருதி பூஜிப்போர் அத்தேவர்களை யடைவார்கள். பித்ருக்களைப் பூஜிக்க விரும்பி பூஜிப்போர் அவர்களைச் சேருவார்கள். யக்ஷராக்ஷஸ பிசாசாதி பூதகணங்களைப் பூஜிக்கக் கருதி பூஜிப்போர் அவர்களைச் சேருவார்கள். என்னை பூஜிக்கக் கருதி பூஜிப்போர் என்னைச் சேருவார்கள். (பப0) மத்பக்திரோபி-விஷ்ணுசம்பந்தமான. (௨௬)

பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி ।
ததஹம் பக்த்யுபஹ்ருதமச்நாமி ப்ரயதாத்மந: ॥ ௨௬ ॥

(பதம்) யஃ-எவன், பக்த்யா-பக்தியோடு, பத்ரம்-பத்திரத்தையும் புஷ்பம்-புஷ்பத்தையும், பலம்-பலத்தையும், தோயம்-தண்ணீரையும், மே-எனக்கு, ப்ரயச்சதி-கொடுக்கிருனோ, ப்ரயத ஆத்மநஃ-பரிசுத்த மனத்தனுன, தஸ்ய-அவனுடைய, பக்தி உபஹ்ருதம்-பக்தியோடு கொடுக்கப்பட்ட, தத்-அந்தவஸ்துவை, அஹம்-நான், அஶ்நாமி-புஜித்துக்கொண்டிருக்கிறேன். (உ௬)

(தாத்பர்யம்) எவன் பக்தியோடு ஒரு பத்திரத்தையாவது, ஒரு புஷ்பத்தையாவது ஒரு பலத்தையாவது, தீர்த்தத்தையாவது எனக்குக் கொடுக்கிருனோ, அந்த பரிசுத்த மனதுடையவன் பக்தியினுல் ஸமர்ப்பிக்கப்பட்ட அந்த வஸ்துவை யான் புசிக்கின்றேன். (உ௬)

யத்கரோஷி யதஶ்நாஸி யஜ்ஜுஹோஷி ததாஸி யத்|
யத்தபஸ்யஸி கௌந்தேய தத்குருஷ்வ மதர்ப்பணம்|| உ௭||

(பதம்) ஹேகௌந்தேய-ஒ குந்திபுத்திர! யத்-எதை, கரோஷி-செய்கிருயோ, யத்-எதை, அஶ்நாஸி - புசிக்கின்ருயோ, யத்-எதை ஜுஹோஷி-ஹோமஞ்செய்கிருயோ, யத்-எதை, ததாஸி-தானஞ் செய்கிருயோ, யத்-எதை, தபஸ்யஸிஃ-தவமாகச்செய்கிருயோ, தத்-அதை, மத் அர்பணம்-என்னிடத்தில் ஸமர்ப்பிக்கப்பட்டதாக, குருஷ்வ-செய். (உ௭)

(தா-ம்) அர்ஜ்ஜுனு ! நீ எதைச் செய்கிருயோ, எதை யுண்ணுகிருயோ, எதை ஹோமம் செய்கிருயோ, எதைத் தானஞ்செய்கிருயோ, எவ்விதத் தவஞ்செய்கிருயோ, அவைகளையெல்லாம் எனக்கு அர்பணஞ்செய். (உ௭)

ஶுபாஶுபபலைரேவம் மோக்ஷ்யஸே கர்மபந்தநைஃ|
ஸந்ந்யாஸயோகயுக்தாத்மா விமுக்தோ மாமுபைஷ்யஸி||

(ப-ம்) ஏவம்-இப்படி, ஸந்யாஸயோகயுக்த ஆத்மா-ஸன்னியாஸயோகத்தோடு கூடியமனமுடையனுய், சுப அசுபபலைஃ-நன்மை தீமைகளைப்பலமாயுள்ள, கர்ம பந்தநைஃ-கர்மபந்தங்களால், மோக்ஷ்யஸே-விடுபடுவாய்; விமுக்தஃ-விடு பட்டவனுய், மாம்-என்னை, உபைஷ்யஸி அடைவாய். (உ௮)

(தாத்) இவ்வண்ணம் சந்யாசமென்னும் "கன்ம பலன்களை பகவதர்ப்பணஞ்செய்தல்" யோகத்தில திடமனதுடையவனுய் நற்பயன் தீவிைப்பயன் இதுகளைத் தரத்தக்க புண்ணிய பாபரூபங்களாக ஜன்மாந்திர கர்மங்கள் விட்டுப்போம். அப்பிறகு என்னை அடைவாய். (உ௮)

ஸமோஹம் ஸர்வபூதேஷு ந மே த்வேஷ்யோஸ்தி ந ப்ரிய:।
யே பஜந்தி து மாம் பக்த்யா மயி தே தேஷு சாப்யஹம்॥ ௨௯॥

(ப-ம்) அஹம-நான், ஸர்வபூதேஷு-எல்லாப் பூதங்களிலும் ஸம:-ஸமமானவன்: மே-எனக்கு - த்வேஷ்ய:-துவேஷிக்கவேண்டிய வன், நாஸ்தி இல்லை; ப்ரிய:-ப்ரியன், ந-இல்லை; யேது-எவர்களானல், மாம்-என்னை, பகத்யா-பக்த்தியோடு, பஜந்தி-ஸேவிக்கின்றார்களோ, தே-அவர்கள், மயி-என்னிடத்தில் (இருக்கிறார்கள்), அஹம்ச-நானும், தேஷு-அவர்களிடத்தில். (வர்த்ததே-இருக்கிறேன்.) (௨௯)

(தா-ம்) யான், ஸர்வபூதங்களிடத்திலும் பேதமின்றி யிருப்ப வன். எனக்குப் பகையாளியும், நேசனுமில்லை. பக்தியோடு என்னை எவர் பஜிக்கின்றார்களோ அவர்கள் என்னிடத்திலிருக்கின்றார்கள். யானும் அவர்களிடத்தி லிருக்கின்றேன். (௨௯)

அபி சேத் ஸுதுராசாரோ பஜதே மாமநந்யபாக்।
ஸாதுரேவ ஸ மந்தவ்ய: ஸம்யக் வ்யவஸிதோ ஹி ஸ:॥ ௩௦॥

(ப-ம்) ஸுதுராசார:அபி-மிகவும் துராசாரமுள்ளவனானாலும் அநந்யபாக்-மறறொன்றைநாடாமல், மாம்-என்னை, பஜதேசேத்-ஸேவிக்கிறானாகில், ஸ:-அவன், ஸாது:ஏவ - சாதுவாகவே, மந்தவ்ய:-நினைக்கத்தகுந்தவன் ஸ:-அவன், ஸம்யக்-நன்றாக, வ்யவஸித:ஹி-நிச்சயமுடையவனன்றோ. (௩௦)

(தா-ம்) இதரப் பிரயோஜனத்தைக் கருதாது என்னை பஜிப்ப வன் ஆசாரஹீனனாக விருந்தபோதிலும் அவனைச் சாதுவென்றே நினைத்தல் வேண்டும். அவனது மனோ நிச்சயம் நன்கிருக்கின்றதல் லவா ! (ஸ0) அநந்யபாக-அன்னியபக்தியுடையவன். (௩௦)

க்ஷிப்ரம் பவதி தர்மாத்மா சஶ்வச்சாந்திம் நிகச்சதி।
கௌந்தேய ப்ரதிஜாநீஹி ந மே பக்த: ப்ரணஶ்யதி॥ ௩௧॥

(ப-ம்) க்ஷிப்ரம்-சீக்கிரத்தில், தர்மாத்மா-தருமமானமனமுடைய வனாக, பவதி, ஆகிறான், ஶஶ்வத்-எப்போதும், சாந்திம்-சாந்தியை, நிகச்சதி-அடைகின்றான்; ஹேகௌந்தேய-ஓ குந்திபுத்திரா ! மே-என்னுடைய, பக்த:-பக்தன், நப்ரணச்யதி-நசிக்கமாட்டான் (என்று) ப்ரதிஜாநீஹி-நீப்ரதிஜ்ஞைசெய்வாயாக. (௩௧)

(தா-ம்) கௌந்தேயா! அப்படிப்பட்டவர்கள் துரிதத்திலேயே தர்மாசார நிஷ்டர்களாவார்கள். எக்காலும் பொறுமையை வஹிப்

பார்த்தன் என் பக்தர்கள் அழிவுடையோ ராகமாட்டார்கள். என்று நீ அறிந்துகொள். (கக)

மாம் ஹி பார்த² வ்யபாஶ்ரித்ய யே'பி ஸ்யு: பாபயோநய:|
ஸ்த்ரியோ வைஶ்யாஸ்ததா² ஶூத்³ராஸ்தே'பி யாந்தி பராம் க³திம்||
கிம் புநர்ப்³ராஹ்மணா: புண்யா ப⁴க்தா ராஜர்ஷயஸ்ததா²|
அநித்யமஸுக²ம் லோகமிமம் ப்ராப்ய ப⁴ஜஸ்வ மாம்||கஉ-கக||

(ப-ம்) ஹேபார்த்த-ஓ அர்ச்சுன! யே-எவர்கள், பாபயோநய:-பாபத்தைகாரணமாய்உடைய, ஸ்திரிய:-பெண்களாயும், வைச்ய:-வைசியர்களாயும், ததா-அப்படியே, சூத்ரா:அபி-சூத்திரர்களாயும், ஸ்யு:-ஆவார்களோ, தே அபி-அவர்களும், மாம்-என்னை, வ்யபாஸ்ரித்ய-ஆஸ்ரயித்து, பராம் - மேலான, கதிம்-கதியை, யாந்தி-அடைகின்றனரன்று புண்யர்களும் புண்யா:-ப்ராம்ஹணா:-பிராம்மணர்களும், ராஜர்ஷய:-ராஜருஷிகளும், ததா- அப்படியே; பக்தா: பக்தர்களாகில், கிம்புந:-என்னசொலலவேண்டுமா அநித்யம்-அநித்யமானது அஸுகம்-சுகமில்லாததுமாகிய, இமம் லோகம்-இவ்வுலகத்தை, ப்ராப்ய-அடைந்து (இருக்கும்) நீ மாம்-என்னை, பஜஸ்வ-பஜிப்பாயாக. (கஉ-கக)

(தா-ம்) பார்த்தா! ஸ்திரீகள், வைசியர்கள், சூத்திரர்கள், புலையர்கள், இவர்களில் என்னை எவர்கள் நம்பியிருக்கிறார்களோ அவர்கள் பரமபதம் சேருவார்கள். (ஶ0) பரப்ரும்மத்தை அடைவார்கள். அப்படிக்கிருக்க; புண்ணிய ஜன்மமுடைய அந்தணர்களும், இராஜரிஷிகளும் பக்தர்களாக விருந்தால் எந்தனையடைவார்களென்பதைச் சொல்லவும்வேண்டுமோ? ஆதலால் அநித்தியமாயும், அசுகமாயுமுள்ள இந்த லோகத்தை யடைந்திருக்கிற நீ எந்தனைத் தொழுவாயாக. (ஶ0) புண்யம் - புண்ணிய ஜன்மாவையுடையவர்கள். (கஉ-கக)

மந்மநா ப⁴வ மத்³ப⁴க்தோ மத்³யாஜீ மாம் நமஸ்குரு|
மாமேவைஷ்யஸி யுக்த்வைவமாத்மாநம் மத்பராயண:|| கச||

(ப-ம்) மந்மநா:-என்னிடத்து மனமுடையனும், பவ-ஆகக்கடவாய், மத்பக்த:-என்னிடத்தில் பக்தியுடையனுய்க்கொண்டு, மத்யாஜீ-என்னை ஆராதிப்பவனுய், மாம்-என்னை, நமஸ்குரு-வணங்கு, ஏவம்-இப்படி ஆத்மாநம்-மனஸ்ஸை, யுக்த்வா-சேர்த்து, மத்பரா

யணஃ-நானேகதியான, நீ மாம் ஏவ-என்னையே, ஏஷ்யஸி-அடை யக்கடைவாய். (௩௪)

(தா-ம்) என்னிடத்தில் மனமுடையவனும், என்னிடத்தில் பக்தியுடையவனும், என்னைப் பூஜிப்பவனும், என்னை நமஸ்கரிப் பவனு மிருப்பாயாக. இவ்வாறு என்னையே முக்கிய கதியாக நம்பி மனதை என்னிடத்தில் நிலைபெற நிறுத்தின பிறகு எந்தனை ஆசிர யிப்பாய்.(மமம்)மந்மநா:-என்மனம்போன்றமனமுடையவனாக.(௩௪)

ஸ்ரீகீதாஸூ ராஜவித்யா ராஜகுஹ்யயோக மென்னும்
ஒன்பதாவது அத்தியாயம்
முற்றிற்று.

---

## விபூதியோகம்.

## பத்தாவது அத்யாயம்.

ஸ்ரீபகவான் அருளிச்செய்கிறார்.

ஸ்ரீபகவாநுவாச ...
... [illegible] ||௧||

(ப-ம்) ஹேமஹாபாஹோ-பெரியதோள்களையுடையஅர்ஜுநா, பூயஏவ-மறுபடியும், மே-என்னுடைய, பரமம்-என் மஹாத்மியத் தைத் தெரியப்படுத்துகிற, வசஃ-வார்த்தையை, ஸ்ருணு-கேள், ப்ரீயமாணாய-பிரீதிசெய்கின்ற, தே-உனக்கு, அஹம்-நான், ஹித காம்யயா-இதத்தைக் கோருவதனல், எத்-எதை, வக்ஷ்யாமி-சொல் லுகிறேன். (௧)

(தா-ம்) அர்ஜுனா! இவ்விஷயத்தி லன்புண்டாயிருக்கிற உந் தனுக்கு நன்மையைக் கருதி மறுபடியும் சிறந்த ஒரு வசனத்தை யான் கூறுகிறேன். கேள்மின்? (௧)

[illegible] |
[illegible] ||௨||

(ப-ம்) ஸுரகணாஃ-தேவதாசமூஹங்கள், மே-ப்ரபவம்-எனது பிரபாவத்தை, நவிதுஃ-அறியார்கள், மஹர்ஷயஃ-மஹர்ஷிகள், ந (விதுஃ)-அறியார்கள், அஹம்-நான், தேவாநாம்-தேவர்களுக்கும்,

[illegible]களும்ச-மஹர்ஷிகளுக்கும், ஸர்வசஃ-ஸர்வப்பிரகாரத்தாலும், [illegible]-முதலான வனல்லவா. (உ)

(தா-ம்) என்தன் பிரபாவத்தை தேவதைகளும், மகரிஷிகளும் அறிந்திலர்; தேவர்களுக்கும், மகாரிஷிகளுக்கும் யானே எல்லா விஷயங்களிலும் மேம்பட்டவன். (உ)

யோமாமஜமநாதிஞ்ச வேத்திலோக மஹேச்வரம் |
அஸம்மூட:ஸமர்த்யேஷு ஸர்வபாபை:ப்ரமுச்யதே ||௩||

(ப-ம்) யஃ-எவன், மாம்-என்னை, அஜம்-பிறப்பில்லாதவனாகவும், அநாதிம்ச-ஆதியில்லாதவனாகவும், லோக மஹேசுவரம்-உலகங்களுக்கு மஹேசுவரனாகவும், வேத்தி-அறிகின்றானோ, ஸஃ-அவன், மர்த்யேஷு-மனிதர்கள், அஸம்மூடஃ-மூடத்தனமற்றவனாய், ஸர்வ பாபைஃ-எல்லாப்பாவங்களாலும், ப்ரமுச்யதே-விடுபடுகிறான். (௩)

(தா-ம்) அநாதிகாலமுதல் ஜனனமின்றி ஸமஸ்த புவனங்கட்கும் அதிபனான என்னை மானிடருள் எவன் பிரமமின்றி அறிகின்றானோ, அப்படிப்பட்ட புருடன் எல்லா பாபங்களிலிருந்தும் விடுபடுகிறான். (௩)

புத்திர்ஜ்ஞாநமஸம்மோஹ: க்ஷமாஸத்யம் தம:சம:|
ஸுகம்து:கம்பவோபாவோ பயஞ்சாபயமேவச ||௪||
அஹிம்ஸாஸமதாதுஷ்டிஸ்தபோதாநம் யசோயச:|
பவந்திபாவாபூதாநாம் மத்தஏவப்ருதக்விதா:|| ௫||

(ப-ம்) புத்திஃ-புத்தியும், ஜ்ஞாநம், ஞானமும், அஸம்மோஹஃ ஒன்றை மற்றொன்றாகப் ரமிக்காமலிருப்பதும், க்ஷமா-பொறுமையும், ஸத்யம்-உண்மையையும், தமஃ-பாஹ்யேந்த்ரியங்களை நிஷ்ப்ரயோஜனமான விஷயங்களிலிருந்து திரும்புவதும் சமஃ-அந்தஃகரண நிக்ரஹமும், ஸுகம்-இன்பமும், துஃகம்-துன்பமும், பவஃ-சந்தோஷித்திருப்பதும், அபாவஃ-இன்மையும், பயம்ச-பயமும், அபயம் ஏவச-பயநிவ்ருத்தியும், அஹிம்ஸா-ஹிம்ஸைசெய்யாமையும், ஸமதா ஸமபுத்தியும், துஷ்டிஃ-காணப்பட்ட எல்லா ஆத்மாக்களும், தபஃ-தவமும், தாநம்-தானமும், யசஃ-கீர்த்தியும், அயசஃ-அபகீர்த்தியு (மென்கிற), பூதாநாம்-ப்ராணிகளினது, ப்ருதக்விதாஃ-வெவ்வேறு விதமான, பாவாஃ-மனோவிருத்திகளும், மத்தஏவ - என்னிடத்தினின்றுமே, பவந்தி-உண்டாகின்றன. (௪-௫)

(தா-ம்) புத்தி ஞானம் ஸம்மோகமின்மை பொறுமைஸத்தியம் தமம்,சமம்,சுகம்,துக்கம்,பவம் (அநுகூலாநுபவத்தால் மனம் நிலை பெற்று நிற்றல்) அபாவம் (பிரதிகூலாநுபவத்தால் மனம் கெடுதல்) பயம் அபயம் (பயமில்லாமை.) அஹிம்ஸை, ஸமத்துவம், ஸந்தோஷம் தபஸ்ஸு தானம் (தமக்குப் போக்கியமான வஸ்துக்களைப் பிறருக் களித்தல்) யஶஸ்ஸு (குணவந்தனென்று பிரசித்தி) அபகீர்த்தி (நிர்க்குணனென்று பிரஸித்தி) இப்படிப்பட்ட அநேகவிதங்களான தோற்றங்கள பிராணிகளுக்கு என்தனுலேயே உண்டாகின்றன. (ஶம) க்ஞாநம்-கட்புலனுக்குத் தோறறும் வஸ்துக்களெல்லாம் நாசமடையத்தகக தென்கிற மெய்ஞ்ஞானம். (ச-ரு)

மஹர்ஷயஃ ஸப்த பூர்வே சத்வாரோ மநவஸ்ததா |
மத்பாவா மாநஸா ஜாதா யேஷாம் லோக இமாஃ ப்ரஜாஃ ||௬||

(ப-ம்) மாநஸாஃ- ஜாதாஃ- ப்ரஹ்மாவின் மனத்திலுண்டான, பூர்வே-கடந்த; ஸப்தமஹர்ஷஃ- ஏழுமகாரிஷிகளும், ததா - அப்படியே, சத்வாரஃ-நால்வரான, மநவஃ-மனுக்களும், மத்பாவஃ-என்னுடைய அபிப்பிராயங் கொண்டவாகள், ஏஷாம்-யாருடையஸ்ருஷ்டியாகிறார்கள்,லோகே உலகத்தில, மே-இந்த,இமாஃப்ரஜாஃ-இந்தப் பிராணிகள. (௬)

(தா-ம்) ப்ரம்ம மனசத்தில் பிறந்த பிறகு முதலிய ஸப்த மகரிஷிகளும், அபபடியே, (ஸாவர்ணிகர்களென்கிற) நான்கு மநுககளும் என் அபிபபிராயத்தை யநுசரித்தே உலகத்தில இநத பிரஜைகளைச் சிருஷ்டித்தார்கள். (௬)

ஏதாம் விபூதிம் யோகம் ச மம யோ வேத்தி தத்த்வதஃ |
ஸோऽவிகம்பேந யோகேந யுஜ்யதே நாத்ர ஸம்ஶயஃ ||௭||

(ப-ம்) மம-எனது, ஏதாம்-இந்த. விபூதிம்-ஐசுவரியத்தையும், யோகம்ச-யோகத்தையும்,தத்வதஃ-உள்ளபடியே,யஃ-எவன்,வேத்தி-அறிகிறானே, ஸஃ-அவன், அவிகம்பேந-நிச்சலமான, யோகேந-யோகத்தால், யுஜ்யதே-கூடுகிறான், அத்ர-இதில், ஸம்ஶயஃ-ஸந்தேஹமில்லை. (௭)

(தா-ம்) என்னுடைய இந்தஐசுவரியத்தையும், கல்யாணகுண சம்பந்தமான செய்கையையும் எவன் உண்மையா யறிந்துகொள்கிறானே, அவன் திடமான பக்தி யோகத்தால் என்னை யடைவானென்பதில் ஐயமில்லை. (௭)

𑌅𑌹𑌂 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌭𑌵𑍋 𑌮𑌤𑍍𑌤𑌃 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 ।
𑌇𑌤𑌿 𑌮𑌤𑍍𑌵𑌾 𑌭𑌜𑌨𑍍𑌤𑍇 𑌮𑌾𑌂 𑌬𑍁𑌧𑌾 𑌭𑌾𑌵𑌸𑌮𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃 ॥ அ ॥

(ப-ம்) அஹம்-நான், ஸர்வஸ்ய-எல்லாவற்றிற்கும், ப்ரபவ:-உற்பத்திகாரணம், மத்த:-என்னிடத்தினின்று, ஸர்வம்-எல்லாம், ப்ரவர்ததே-உண்டாகின்றது, இதி-என்று, மத்வா-நினைத்து, பாவ ஸமந்விதா:-பாவத்தோடுகூடிய, புதா:-பண்டிதாள், மாம்-என்னை, பஜந்தே-ஸேவிக்கிறார்கள். (அ)

(தா-ம்) நான் எல்லாவற்றிற்கும் சிருஷ்டி காரணன். என்னாலேயே ஸர்வமும் நிறைவேறுகின்றது என்று அறிந்து நன்மனதோடு கூடிய ஞானிகள் என்னை பஜிக்கின்றார்கள். (அ)

𑌮𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌾 𑌮𑌦𑍍𑌗𑌤𑌪𑍍𑌰𑌾𑌣𑌾 𑌬𑍋𑌧𑌯𑌨𑍍𑌤𑌃 𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌮𑍍 ।
𑌕𑌥𑌯𑌨𑍍𑌤𑌶𑍍𑌚 𑌮𑌾𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌤𑍁𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌚 𑌰𑌮𑌨𑍍𑌤𑌿 𑌚 ॥ கூ ॥

(ப-ம்) மச்சித்தா:-என்னிடத்தில் சிந்தையும், மத் கதப்ராணா:-என் ஆதீனமானபிராணனும், பரஸ்பரம்-ஒருவர்க்கொருவர், போதயந்த:-போதித்துக்கொண்டு, மாம்-என்னை, நித்யம்-எப்பொழுதும், கதயந்தஃச-சொல்லிக் கொண்டுமிருந்து, துஷ்யந்திச-ஸந்தோஷிக்கிறார்கள், ரமந்திச-ப்ரீதியை அடைவார்கள். (கூ)

(தா-ம்) (ஞானிகள்) என்னிடத்திலேயே மனம் வயித்து என்னிடத்திலேயே பிராணனை வைத்து ஒருவர்க்கொருவர் என் பிரபாவத்தைத் தெரிவித்துக் கொண்டும், பிரசங்கித்துக் கொண்டும் திருப்தி யடைகிறார்கள். ஆனந்திக்கிறார்கள். (கூ)

𑌤𑍇𑌷𑌾𑌂 𑌸𑌤𑌤𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂 𑌭𑌜𑌤𑌾𑌂 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌮𑍍 ।
𑌦𑌦𑌾𑌮𑌿 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍋𑌗𑌂 𑌤𑌂 𑌯𑍇𑌨 𑌮𑌾𑌮𑍁𑌪𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇 ॥ ௰ ॥

(ப-ம்) ஸதத யுக்தாநாம்-நித்தியமாய் என்னோடு சேர்ந்திருப்பதற்கு விருப்பமுள்ளவராய், ப்ரீதிபூர்வகம்-பிரீதியோடு, பஜதாம்-பஜிக்கின்ற, தேஷாம்-அவர்களுக்கு, தேந-எந்தபுத்தியினால், தே-அவர்கள்-யேந-எதனால், மாம்-என்னை, உபயாந்தி-அடைவார்களோ, தம்-அந்த, புத்தியோகம்-புத்தியோகத்தை, ததாமி-கொடுக்கிறேன். ()

(தா-ம்) எக்காலும் யோகாப்பியாசஞ் செய்துகொண்டே பஜிப்போருக்கு நானே என்னை யடையும்படியான ஞானோபாயத்தை அன்புடன் அளிக்கின்றேன். (கo)

𑌤𑍇𑌷𑌾𑌮𑍇𑌵𑌾𑌨𑍁𑌕𑌮𑍍𑌪𑌾𑌰𑍍𑌥𑌮𑌹𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌜𑌂 𑌤𑌮𑌃 ।
𑌨𑌾𑌶𑌯𑌾𑌮𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌭𑌾𑌵𑌸𑍍𑌥𑍋 𑌜𑍍𑌞𑌾𑌨𑌦𑍀𑌪𑍇𑌨 𑌭𑌾𑌸𑍍𑌵𑌤𑌾 ॥ கக ॥

(ப-ம்) தேஷாம் அவர்களுடைய, அநுகம்பார்த்தம்-ஏவ, அநுக்கிரஹத்துக்காகவே, அஹம்-நான், ஆத்மபாவஸ்த்த:-மனோவ்ருத்தியிலிருந்து, பாஸ்வதா-பிரகாசமான, ஜ்ஞாநதீபேந-என்னிடத்திலுள்ள ஜ்ஞாநமென்கிற தீபத்தினால், அஜ்ஞாநஜம்-அஞ்ஞானத்தாலுண்டாகிற, தம:-இருளை, நாசயாமி-நசிக்கச்செய்கிறேன். (கக)

(தா-ம்) யான் அவர்களுக்கு அநுக்கிரகம் செய்வதற்காகவே அவர்கள் மனோபாவத்திற்குவிஷயமாகின்றேன் (காணப்படுகிறேன்) பிரகாசமுடைய ஞானமெனும் தீபத்தினால் அஞ்ஞானமென்னும அந்தகாரத்தை (விஷயாஸக்தியை) போக்கடிக்கின்றேன். (கக)

அர்ஜுனவாக்கியம்.

பரம் ப்ரஹ்ம பரம் தாம பவித்ரம் பரமம் பவாந் ।
புருஷம் சாச்வதம் திவ்யம் ஆதிதேவமஜம் விபும் ॥ ௰௨ ॥
ஆஹுஸ்த்வாம்ருஷய: ஸர்வே தேவர்ஷிர்நாரதஸ்ததா ।
அஸிதோ தேவலோ வ்யாஸ: ஸ்வயம் சைவ ப்ரவீஷி மே ॥ ௰௩ ॥

(ப-ம) பரம் ப்ரம்ஹ-பரப்பிரம்மமும், பரம்தாம-பரமதேஜஸும், பரமம் பவித்ரம்-பரமபாவனமென்றும் (ஶ்ருதிகள் சொல்லாநின்ற,) பவாந்-தேவரீர், ஸர்வேருஷய: - எல்லாருஷிகளும், ததா-அப்படியே, தேவர்ஷி:-தேவரிஷியான, நாரத:-நாரதரும், அஸித: அஸிதரும், தேவல:-தேவலரும், வ்யாஸ:-வியாஸரும், த்வாம்-உம்மை, சாச்வதம்-சாசுவதமாகவும் திவ்யம்-திவ்யமான, புருஷம்-புருஷனாகவும், ஆதிதேவம்-ஆதிதேவனாகவும் அஜம்-பிறப்பிலியாகவும, விபும்-வியாபகனாகவும், ஆஹு:-சொல்லுகிறார்கள், ஸ்வயம்சைவ-தாமும், மே-எனக்கு, ப்ரவீஷி-சொல்லுகிறாய். (கஉ-கக)

(தா-ம்) நீவிர், பரப்பிரம்மம், சிறந்த பிரகாசவந்தன், ஸர்வோத்கிருஷ்டமான பரிசுத்தன் (என்பதால் பகவானை ஸ்மரித்த க்ஷணத்தில் பாபஸமூகங்களெல்லாம் துலைந்துப் போகிறதென்று கருத்து) நித்தியன் அப்ராக்ருதன் ஆதிகாரணன், நித்தியாநந்தரூபன்; பரிணமமற்றவன், ஸர்வவியாபி, என்று நம்மை தேவரிஷிகளான நாரதரும், அஸிதரென்னும் மகரிஷியும், தேவல மகரிஷியும், வியாஸ மகரிஷியும், இன்னும் அளவற்ற மகரிஷிகளும் கூறுகின்றார்கள். ()

ஸர்வமேதத்ருதம் மந்யே யந்மாம் வதஸி கேசவ ।
நஹி தே பகவந் வ்யக்திம் விதுர்தேவா ந தாநவா: ॥ ௰௪ ॥

(ப-ம்) ஹேகேசவா-ஓ கிருஷ்ண! மாம்-என்னைக்குறித்து, யத்-எதை, வதஸி-சொல்லுகிறீரோ, ஏதத் ஸர்வம்-இதெல்லாம், ருதம்

ஸத்யமென்று, மந்யே-நினைக்கிறேன்; ஹேபகவந்-ஓ பகவானே, தேஉம்முடைய, வ்யக்திம்-வைபவத்தைச் சொல்லும்விதத்தை, தேவா:-தேவர்களும், தாநவா:ச-அசுரர்களும், நவிது:-அறியமாட்டார்கள். (௧௪)

(தா-ம்) கேசவா! நீவிர் எனக்குச் சொன்னதெல்லாம்-உண்மையென்றே நம்புகின்றேன். நுங்கள் ஸ்வரூபத்தை தேவர்களும், அசுரர்களு மறிந்திலர். புருஷோத்தமா! ஸர்வபூதங்களையும் சிருஷ்டித்த மகாநுபாவா! ஸர்வபூதங்களையும் நியமனஞ் செய்கிறவரே! தேவாதிதேவனே! ஜகத்பதே! நுங்கள் ஸ்வரூபத்தை அஸாதாரணமான ஞானத்தால் நீங்களே அறிகின்றீர். (௧௪)

ஸ்வயமேவாத்மநாத்மாநம் வேத்த த்வம் புருஷோத்தம।
பூதபாவந பூதேச தேவதேவ ஜகத்பதே ॥ ௧௫॥

(ப-ம்) ஹே புருஷோத்தம - வாரீர் புருஷோத்தமரே, பூதபாவந-பூதங்களைப்படைப்பவனே! பூதேச-பூதங்களை யாள்பவனே, தேவதேவ-தேவர்களுக்கும் தேவ! ஜகத்பதே-லோகநாத! த்வம்-நீர்! ஆத்மநா-உன், ஜ்ஞாநத்தால் ஆத்மாநம்-தன்னை, ஸ்வயமேவ-தாமே, வேத்த-அறிகிறாய். (௧௫)

(தா-ம்) புருஷோத்தமா! ஸர்வபூதங்களையும் சிருஷ்டித்தமகாநுபாவா! ஸர்வபூதங்களையும் நியமனஞ் செய்கிறவரே! தேவாதிதேவனே! ஜகத்பதே! நுங்கள் ஸ்வரூபத்தை அஸாதாரணமான ஞானத்தால் நீங்களே அறிகின்றீர். (௧௫)

வக்துமர்ஹஸ்யசேஷேண திவ்யா ஹ்யாத்மவிபூதய:।
யாபிர்விபூதிபிர்லோகாநிமாம்ஸ்த்வம் வ்யாப்ய திஷ்டஸி॥ ௧௬॥

(ப-ம்) ஆத்மவிபூதய:-உமது விபூதிகள், திவ்யா:ஹி-திவ்யங்களன்றோ? தா:-அவைகளை, அசேஷேண - நிச்சேஷமாக, வக்தும்-சொல்ல, அர்ஹஸி-நீதகுந்திருக்கிறாய், த்வம்- நீர், யாபி:விபூதிபி:-எந்த ஐசுவரியங்களைக் கொண்டு, இமாந்லோகாந்-இந்தஉலகங்களை, வ்யாப்ய-வியாபித்து, திஷ்டஸி-இருக்கிறீர். (௧௬)

(தா-ம்) எந்த மஹிமையால் இந்தப் பிரபஞ்சங்களை யெல்லாம் வியாபித்திருக்கிறீர்களோ, அப்படிப்பட்ட பிராகிருதங்களான நுங்களின் மஹிமைகளை யெல்லாம் உரைப்பதற்கு நீங்களே தகுதியானவர். (௧௬)

கதம் வித்யாமஹம் யோகிம்ஸ்த்வாம் ஸதா பரிசிந்தயந்।
கேஷு கேஷு ச பாவேஷு சிந்த்யோऽஸி பகவந்மயா॥ ௧௭॥

(ப-ம்) அஹம்-நான், யோகீ - பக்தியோகநிஷ்டனாய், த்வாம்-உம்மை, ஸதா-எப்பொழுதும், பரிசிந்தயந்-தியானித்துக்கொண்டு, கதம்-எப்படி, வித்யாம் - தெரிந்துகொள்வேன், ஹேபகவந் - ஓபகவானே! (கிம்)ச-பின்னும், மயா-என்னால், கேஷு கேஷு ச-எந்தெந்த, பாவேஷு-வஸ்துக்களில், சிந்த்ய: அஸி-சிந்திக்கப்படுகிறீர்.

(தா-ம) யான் பக்தியோகத்தை ஆஶ்ரயித்து எக்காலும் உம்மை ஸ்மரித்து நுங்களை யறிந்துகொள்வதெப்படி? ஓ பகவானே; யான் எந்தெந்த விஷயங்களாலும்மை தியானிக்கவேண்டும்? (கஎ)

விஸ்தரேணாத்மநோ யோகம் விபூதிம் ச ஜநார்தந।
பூய: கதய த்ருப்திர்ஹி ஶ்ருண்வதோ நாஸ்தி மேऽம்ருதம்॥

(ப-ம) ஹேஜநார்தந-ஓகிருஷ்ணா! ஆத்மந:-உன்னுடைய, யோகம்-யோகத்தையும், விபூதிம்ச ஐசுவரியத்தையும். பூய:-மறுபடியும், விஸ்தரேண-விஸ்தரித்து, கதய சொல்லும், அம்ருதம்-அம்ருதத்தை, ஶ்ருண்வத:-கேட்கிற, மே-எனக்கு, த்ருப்தி:-திருப்தியானது, நாஸ்திஹி-இல்லையன்றோ? (கஅ)

(தா-ம்) ஜனார்தனா! உம்முடைய சிருஷ்டி-கர்த்துருத்வத்தையும் ஜகந்நியமனத்வத்தையும் எனக்கறிந்து விரிவாய்க் கூறவேண்டும். இந்த அம்ருத வசனத்தைக்கேட்டு யான் திருப்தியடையவில்லை. ()

ஸ்ரீகிருஷ்ண வாக்கியம்.

ஹந்த தே கதயிஷ்யாமி திவ்யா ஹ்யாத்மவிபூதய:।
ப்ராதாந்யத: குருஶ்ரேஷ்ட நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்ய மே॥

(ப-ம்) ஹே குருஶ்ரேஷ்ட-ஓகுருகுலச் சிரேஷ்ட, ஆத்மந:-தன்னுடைய, சுபா:-கல்யாணமான, விபூதய:-விபூதிகள், திவ்யாஹி-சுபங்களைக் கொடுப்பனவல்லாவா, ப்ராதாந்யத:-பிரதானமாய், தே உனக்கு, கதயிஷ்யாமி - சொல்லுவேன், மே-என்னுடைய, விஸ்தரஸ்ய-விஸ்தாரத்துக்கு, அந்த:-முடிவு, நாஸ்தி-இல்லை. (கக)

(தா-ம்) ஆஹா அர்ஜ்ஜுனா! சுபகரங்களான என் அம்சங்களில் முக்கியமான குணங்களை மாத்திரம், உனக்குரைக்கின்றேன். என் விஸ்தாரத்துக்கு அந்தமில்லை. "என்பதால் அனந்தமாதலால் விரிவாய்க் கூறுவதற்கும் கேட்பதற்கும்சாத்தியமன்றென கருத்து." (ஶ்ரீ) ஹந்த-இப்போது. (கக)

அஹமாத்மா குடாகேஶ ஸர்வபூதாஶயஸ்தித:।
அஹமாதிஶ்ச மத்யம் ச பூதாநாமந்த ஏவ ச॥ உ0॥

(ப-ம்) (ஹே) குடாகேசா-ஓ அர்ச்சுனா, அஹம்-நான், ஸர்வ பூத ஆசயஸ்திதஃ-ஸகல பூதங்களின் ஹ்ருதயத்தில் இருக்கிற, ஆத்மா-ஆத்துமா, பூதாநாம்-பூதங்களுடைய, ஆதிஃ-ஆதியும், மத்யம்-மத்தியமும், அந்தஃச - முடிவும், அஹம்ஹி - நானேயாகி யிருக்கிறேன். (௨௦)

(தா-ம்) அர்ஜுனா! ஸமஸ்தப்பிராணிகளுடைய ஹ்ருதயகமலத்தில் வீற்றிருக்கும் ஆத்மாயானே. எல்லாப்பிராணிகளுக்கும் யானே ஆதியாயும், மத்தியமாயும், அந்தமாயுமிருக்கின்றேன். (௨௦)

ஆதித்யாநாமஹம் விஷ்ணுர்ஜ்யோதிஷாம் ரவிரம்சுமாந்|
மரீசிர்மருதாமஸ்மி நக்ஷத்ராணாமஹம் சசீ||௨௧||

(ப-ம்) ஆதித்யாநாம்-ஆதித்தியர்களுக்குள், விஷ்ணுஃ-விஷ்ணுவென்பவன் அஹம்-நான், ஜ்யோதிஷாம்-பிரகாசப்படுத்துகின்றவைகளுள், அம்சுமாந்-கிரணங்கள் உடைய, ரவிஃ (அஹம்)-சூரியன் நான், மருதாம்-மருத்துக்களுக்குள், மரீசிஃ-மரீசியென்பவன், அஹம்-நான், நக்ஷத்ராணாம்-நக்ஷத்திரங்களுக்குள், சசி-சந்திரன், அஹம்-நான், அஸ்மி-ஆகிறேன். (௨௧)

(தா-ம்) யான் துவாதசாதித்தியர்களுள் விஷ்ணுவென்னும் பன்னிரண்டாவது சூரியனும், கிரஹ நக்ஷத்திரம்முதலிய பிரகாசமான வஸ்துக்களுள் விசேஷப்பிரகாசமுடைய சூரியனும், ஸப்தவாயுக்கள் மரீசி யென்கிற வாயுவாயும், நக்ஷத்திரங்களுள் சந்திரனுமிருக்கின்றேன். (௨௧)

வேதாநாம் ஸாமவேதோஸ்மி தேவாநாமஸ்மி வாஸவஃ|
இந்த்ரியாணாம் மநஸ்சாஸ்மி பூதாநாமஸ்மி சேதநா||௨௨||

(ப-ம்) வேதாநாம்-வேதங்களுக்குள், ஸாமவேதஃ-ஸாமவேதம், அஸ்மி-ஆகிறேன், தேவாநாம் - தேவதைகளுக்குள், வாஸவஃ-இந்திரன், அஸ்மி-ஆகிறேன், இந்த்ரியாணாம்-இந்திரியங்களுக்குள், மநஃ-மனம், அஸ்மி-ஆகிறேன், பூதாநாம்-பூதங்களுக்கு, சேதநா-புத்தியும் அஸ்மி-ஆகிறேன். (௨௨)

(தா-ம்) வேதங்களுள் ஸாமவேதமாயும், தேவதைகளுள் இந்திரனும், இந்திரியங்களுள் மனமாயும் பிராணிகளுக்கு புத்தியாயுமிருக்கின்றேன். (௨௨)

ருத்ராணாம் சங்கரஸ்சாஸ்மி வித்தேசோ யக்ஷரக்ஷஸாம்|
வஸூநாம் பாவகஸ்சாஸ்மி மேருஃ சிகரிணாமஹம்||௨௩||

(ப-ம்) ருத்ராணும்-பதினொருருத்திரர்களுக்குள், சங்கரஃச-சங்கரன், அஸ்மி-ஆகிறேன், யக்ஷரக்ஷஸாம் - யக்ஷராக்ஷஸர்களுக்குள், வித்தேசஃ- குபேரனுகிறேன், வஸூநாம் - அஷ்டவசுக்களுக்குள், பாவகஃச-அக்கியும், அஸ்மி-ஆகிறேன், சிகரிணும்-சிகரமுள்ள (மலைகளில்), மேருஃ-மேருபர்வதம், அஹம்-நான், அஸ்மி-ஆகிறேன். (உக)

(தா-ம்) யான் ஏகாதச உருத்திரர்களுள் சங்கரனுயும், யக்ஷராக்ஷஸர்களுள் குபேரனுயும், அஷ்டவஸுக்களுள் அக்கினியாயும், பர்வதங்களுள் மேருவாயு மிருக்கின்றேன். (உக)

புரோதஸாஞ்ச முக்யம் மாம் வித்தி பார்த்த ப்ருஹஸ்பதிம்।
ஸேநாநீநாமஹம் ஸ்கந்த: ஸரஸாமஸ்மி ஸாகர:॥உச॥

(ப-ம்) பார்த்த-ஓ அர்ஜுநா, புரோதஸாம்-புரோகிதர்களுக்குள், முக்யம் - முக்கியனுன, ப்ருஹஸ்பதிம் - பிருஹஸ்பதியாக, மாம்-என்னை, வித்தி-அறி, அஹம்-நான், ஸேநாநீநாம்-ஸேனுபதிகளுள், ஸ்கந்தஃ-சுப்பரமண்ய ஸ்வாமி, ஸரஸாம் - குளங்களுள், ஸாகரஃ-ஸமுத்ரம், அஸ்மி-ஆகிறேன். (உச)

(தா-ம) பார்த்தா! யான் புரோகிதர்களுள் சிரேஷ்டரான பிருஹஸ்பதி யென்றுணர்க. யான் ஸேனுபதிகளுள் ஸுப்ரமண்ணியராயும் ஜலங்களுள் சமுத்திரமா யிருக்கின்றேன். (உச)

மஹர்ஷீணாம் ப்ருகுரஹம் கிராமஸ்ம்யேகமக்ஷரம்।
யஜ்ஞாநாம் ஜபயஜ்ஞோ(அ)ஸ்மி ஸ்தாவராணாம் ஹிமாலய: ॥உரு॥

(ப-ம்) மஹர்ஷீணும்-மரீசிமுதலான மஹரிஷிகளுக்குள், ப்ருகுஃ-பிருகுவென்பவர், அஹம்-நான், கிராம்-வாக்குக்களுக்குள், ஏகம் அக்ஷரம்-ஒன்றுன அக்ஷரத்தையுடைய ப்ரணவமும், அஸ்மி-ஆகிறேன், யஜ்ஞாநாம்-யக்ஞங்களுக்குள, ஜப யஜ்ஞஃ-ஜபயக்ஞம், அஸ்மி-ஆகிறேன்; ஸ்தாவராணும்-தாவரங்களுக்குள், ஹிமாலயஃ-இமயமலை அஸ்மி-ஆகிறேன். (உரு)

(தா-ம்) யான் மஹரிஷிகளுள் பிறகு மஹரிஷியாயும், பதங்களுள் பிரணவமாயும், யஞ்ஞங்களுள் ஜபயஞ்ஞமாயும், ஸ்தாவரங்களுள் ஹிமையமலையாயு மிருக்கின்றன். (உரு)

அஸ்வத்த: ஸர்வவ்ருக்ஷாணாம் தேவர்ஷீணாஞ்ச நாரத:।
கந்தர்வாணாம் சித்ரரத: ஸித்தாநாம் கபிலோ முநி:॥உசு॥

(ப-ம்) ஸர்வ வ்ருக்ஷாணும்-ஸகலமான விருக்ஷங்களுள்ளும், அச்வத்தஃ-அரசமா (மாகிறேன்) தேவர்ஷீணும்ச-தேவரிஷிகளுக்

குணாம் நாரதஃ-நாரதரா (கிறேன்), கந்தர் வாணாம்-கெந்தருவருக்குள், சித்ரரதஃ-சித்ரரதன் (ஆகிறேன்), ஸித்தாநாம்-ஸித்தர்களுள், கபிலஃ முநிஃ-கபிலமுனி (யாகிறேன்). (உசு)

(தா-ம்) விருக்ஷங்களுள் அஸ்வத்தவிருக்ஷமாயும், தேவரிஷிகளுள் நாரதமஹரிஷியாயும், கெந்தர்வர்களுள் சித்திரரதனுயும், ஸித்தர்களுள் கபிலமஹாரிஷியாயு மிருக்கிறேன். (உசு)

உச்சைஶ்ரவஸமஶ்வாநாம் வித்தி மாமம்ருதோத்பவம் |

ஐராவதம் கஜேந்த்ராணாம் நராணாம் ச நராதிபம் ||உஎ||

(ப-ம்) மாம்-என்னை, அசவாநாம்-குதிரைகளுள், அம்ருதோத்பவம், அமுருதத்திலிபிறந்த உசைச்ரவஸம்-உச்சைச்சிரவஸ்என்கிற குதிரையாக, வித்தி-அறி, கஜேந்த்ராணாம் - கஜச்சிரேஷ்டங்களுள், ஐராவதமென்கிறயானையாக, நராணாம்-மனிதருள, நராதிபஞ்ச-அரசனுகவு(மறி). (உஎ)

(தா-ம்) யான் அசுவங்களுக்குள் அமிருதமதனஞ்செய்தகாலத்தில் க்ஷீரஸமுத்திரத்திற் பிறந்த உச்சைஸ்ரவஸ், என்கிறகுதிரையாயும், திக்கஜங்களுக்குள் ஐராவதமாயும், மானிடருள அரசனுயு மிருக்கிறேனென்றறிக. (உஎ)

ஆயுதாநாமஹம் வஜ்ரம் தேநூநாமஸ்மி காமதுக் |

ப்ரஜநஶ்சாஸ்மி கந்தர்ப꞉ ஸர்பாணாமஸ்மி வாஸுகி꞉ || உஅ||

(ப-ம்)ஆயுதாநாம்-ஆயுதங்களுள,வஜ்ரம்-வச்சிராயுதம்,அஹம்-நான், தேநூநாம்-பசுக்களுள், காமதுக்-காமதேனுவாக, அஸ்மி-ஆகிறேன், ப்ரஜநஃ-உத்பத்திகருக்காரணமான, கந்தர்பஃச-மன்மதனும்,அஸ்மி-ஆகிறேன்,ஸர்பாணாம்-ஸர்பங்களுள,வாஸுகிஃஅஸ்மி-வாசுகி யாகிறேன். (உஅ)

(தா-ம்) ஆயுதங்களுள் வஜ்ராயுதமாயும், பசுக்களுள் காமதேனுவாயும், பிரஜாவிருத்திக்குக் காரணமன்மதனுயும், சர்பங்களுள் வாஸுகியாயு மிருக்கிறேன். (உஅ)

அநந்தஶ்சாஸ்மி நாகாநாம் வருணோ யாதஸாமஹம் |

பித்ரூணாமர்யமா சாஸ்மி யம꞉ ஸம்யமதாமஹம் || உகூ ||

(ப-ம்) நாகாநாம்ச-நாகங்களுக்குள், அநந்தஃஅஸ்மி-அனந்தனுகிறேன், யாதஸாம்-ஜலவாஸிகளுள்,வருணஃ-வருணன்,அஹம்-நான்; பித்ரூணாம்-பிதுருககளுள், அர்யமா ச-அரியமாவென்பவர், அஸ்மி-ஆகிறேன், ஸம்யமதாம-சிக்ஷிப்பவர்களுக்குள், யமஃ-யமன், அஹம்-நான், அஸ்மி-ஆகிறேன். (உகூ)

(தா-ம்) நாகங்களுள் அனந்தனையும், ஜலதேவதைகளுள் வருண னையும், பித்ருக்களுள் அர்யமனையும், தண்டனை செய்பவர்களுள் யம னையுமிருக்கிறேன். (௨௯)

ப்ரஹ்லாதஶ்சாஸ்மி தைத்யாநாம் காலஃ கலயதாமஹம்।
ம்ருகாணாம் ச ம்ருகேந்த்ரோऽஹம் வைநதேயஶ்ச பக்ஷிணாம்॥

(ப-ம்) தைத்யாநாம்-தைத்யர்களுக்குள், ப்ரஹ்லாதஶ்ச-பிரஹ்லாதனும், அஸ்மி-ஆகிறேன்; கலயதாம்-கணக்கர்களுக்குள், காலஃ-யமன், அஹம்-நான்; ம்ருகாணாம்ச-மிருகங்களுள், ம்ருகஇந்த்ரஃ-ஸிம்மம், அஹம்-நான்; பக்ஷிணாம்-பக்ஷிகளுள், வைநதேயஶ்ச-கருடனும், (நான்). (௩௰)

(தா-ம்) அசுரர்களுள் ப்ரஹ்லாதனையும், ஆக்கிரமிப்பவர்களுள் ம்ருத்புவாயும், மிருகங்களுள் ஸிம்மமாயும், பக்ஷிகளுள் கருடனையு மிருக்கிறேன். (ஶ0) தைத்யாநாம் ஜலதேவதைகளுக்குள்ளே. (௩௰)

பவநஃ பவதாமஸ்மி ராமஃ ஶஸ்த்ரப்ருதாமஹம்।
ஜ²ஷாணாம் மகரஶ்சாஸ்மி ஸ்ரோதஸாமஸ்மி ஜாஹ்நவீ॥ ௩௧॥

(ப-ம்) பவதாம்-சஞ்சரிப்பவைகளுக்குள், பவநஃ-காற்று, அஸ்மி-ஆகிறேன்; சஸ்த்ரப்ருதாம் - ஆயுதபாணிகளுள், ராமஃ-இராமன், அஹம்-நான்; ஜஷாணாம்-மத்ஸ்யங்களுள், மகரஶ்ச-முதலையும், அஸ்மி-ஆகிறேன்; ஸ்ரோதஸாம்-ப்ரவஹிப்பவைகளுள், ஜாஹ்நவீ-கங்கை, அஸ்மி-ஆகிறேன். (௩௧)

(தா-ம்) சஞ்சரிப்பவர்களுள் வாயுவாயும், சஸ்திரத்தைத் தாங்கினவர்களுள் இராமனையும், மத்ஸியங்களுள் மகா (முதலை) யாயும், பிரவாகங்களுள் கங்கையாயு மிருக்கிறேன். (௩௧)

ஸர்காணாமாதிரந்தஶ்ச மத்⁴யம் சைவாஹமர்ஜுந।
அத்⁴யாத்மவித்³யா வித்³யாநாம் வாத³ஃ ப்ரவத³தாமஹம்॥ ௩௨॥

(ப-ம்) ஹே அர்ஜுந-ஓ அர்ச்சுன! ஸர்காணாம்-படைக்கப்படுமவைகளின், ஆதிஃ-ஆதியும், அந்தஶ்ச-அந்தமும், மத்யம்ச-மத்தியமும், அஹம்-நான், வித்யாநாம்-வித்தைகளுள், அத்யாத்ம வித்யா-மோக்ஷவித்தை (நான்) ப்ரவததாம்-வாதம்செய்வோருள, வாதஃ-வாதம், அஹம்-நான். (௩௨)

(தா-ம்) அர்ஜ்ஜுனை ! விருஷ்டிகளிலிருக்கும் வஸ்துக்களுக்கெல்லாம் ஆதியாயும், அந்தமாயும், மத்தியம மாயும், வித்தைகளுள் ப்ரம்ஹ வித்தையாயும், வாதம் செய்கிறவர்களுக்கு வாதமாயு மிருக்கிறேன். (௩௨)

அக்ஷராணா மகாரோஸ்மி த்வந்த்வஸ்ஸாமாஸிகஸ்யச|
அஹமேவாக்ஷய: காலோ தாதாஹம் விஶ்வதோமுக:||௩௩||

(ப-ம்) அக்ஷராணாம்-அக்ஷரங்களுக்குள், அகார:-அகாரமாக, அஸ்மி-ஆகிறேன்; ஸாமாஸிகஸ்யச-ஸமாஸ ஸமூஹங்களுள், த்வந்த்வ:-துவந்துவம் (நான்), அக்ஷய: கால:-நாசமில்லாதகாலமானது, அஹம்ஏவ-நானே; விஶ்வதோமுக:-நாற்புறமுமுகமான, தாதா-பிரம்மன், அஹம்-நானேயாகிறேன். (௩௩)

(தா-ம்) அக்ஷரங்களில் அகாரமாயும், ஸமாஸங்களில் த்வந்த்வ ஸமாஸமாயும் (அதாவது ஸமாஸங்கள் ஒருபதத்தினது பொருளை மாத்திரம் பிரதானமாயுடையது. த்வந்த்வ ஸமாஸத்தில் மாத்திரம் சேர்ந்த எல்லா பாகத்தினதுபொருளு முக்கியமானவை) நாசமற்ற காலமாயும், கர்மபலனை யளிக்கும சதுர்முக ப்ரம்மனுயு மிருக்கிறேன். (௩௩)

ம்ருத்யு: ஸர்வஹரஶ்சாஹமுத்பவஶ்ச பவிஷ்யதாம்|
கீர்த்தி: ஶ்ரீர்வாக்ச நாரீணாம் ஸ்ம்ருதிர்மேதா த்ருதி: க்ஷமா||௩௪||

(ப-ம்) ஸர்வஹர:-ஸகலத்தையுமழிக்கின்ற, ம்ருத்யு:ச - இயமனும், அஹம்-நான்; பவிஷ்யதாம்-உண்டாகப்போமவைகளுள், உத்பவ:ச-பிறப்பும், அஹம்-நான், நாரீணாம்-பெண்களுள், கீர்த்தி:-கீர்த்தியும், ஶ்ரீ:-இலக்ஷ்மியும், வாக்ச-வாக்கும் (நான்), ஸ்ம்ருதி:-ஸ்மிருதியும், மேதா-புத்தியும், த்ருதி:-தைரியமும், க்ஷமா-க்ஷமையும் அஹம்-நானாகிறேன். (௩௪)

(தா-ம்)எல்லாவஸ்துக்களையும்அபகரிக்கும்ம்ருத்யுவாயும்,உண்டாகப்போகிறவஸ்துக்களுக்கு ப்ரதமோற்பத்தியாயும், ஸ்திரீகளுள் ஶ்ரீதேவியாயும், கீர்த்தியாயும், வாக்காயும, ஸ்மிருதியாயும் மேதையாயும், த்ருதியாயும், க்ஷமையாயு மிருக்கிறேன்.(இலக்ஷ்மி,கீர்த்தி, வாக்கு, இம்மூவரும் பகவானுக்கு அஸாதாரண ஶக்திகள்). (௩௪)

ப்ருஹத்ஸாம ததா ஸாம்நாம் காயத்ரீ ச்சந்தஸாமஹம்|
மாஸாநாம் மார்கஶீர்ஷோऽஹம்ருதூநாம் குஸுமாகர:||

(ப-ம்) ததா-அப்படியே, ஸாம்நாம்-ஸாமங்களுக்குள், ப்ருஹத்ஸாம-பெரியஸாமம் (நான்), சந்தஸாம்-சந்தஸ்க்களுள், காயத்ரீ-காயத்திரி, அஹம்-நான், மாஸாநாம்-மாதங்களுள், மார்கஶீர்ஷ:-மார்கழிமாதம், அஹம்-நான்; ருதூநாம்-இருதுக்களுள், குஸுமாகர:-வஸந்தருது (நான்). (௩௫)

(தா-ம்) ஸாமங்களில்ப்ருஹத்து என்கிற ஸாமமாயும், சந்தஸ்ஸுகளுள் காயத்திரியாயும், மாதங்களுள் மார்கழிமாதமாயும்,ருதுக்களுள் வஸந்தருதுவாயு மிருக்கிறேன். (ஸ)-காயத்ரீ- காயத்ரீமந்த்ரம். (௩௫)

த்யூதம் ச²லயதாமஸ்மி தேஜஸ்தேஜஸ்விநாமஹம்।
ஜயோ(அ)ஸ்மி வ்யவஸாயோ(அ)ஸ்மி ஸத்த்வம் ஸத்த்வவதாமஹம்॥௩௬॥

(ப-ம்) சலயதாம்-மோசம் செய்பவர்களுடைய,த்யூதம்-சூதாக, அஸ்மி-ஆகிறேன்; தேஜஸ்விநாம்-அதிபலமுடையவருக்கு, தேஜ:-பலம், அஹம்-நான், ஜய:-அஸ்மி-ஜயமாகிறேன், வ்யவஸாய:-வியவஸாயம், அஸ்மி-ஆகிறேன்; ஸத்வவதாம்-ஸத்துவமுடையோருக்கு, ஸத்வம்-ஸத்துவம், அஹம்-நான்; (௩௬)

(தா-ம்) யான் கபடஞ்செய்கிறவர்களுக்கு த்யூதமாயும்,(அதாவது சொறகட்டான் அல்லது சூதாட்டம்) பராக்கிரமமுள்ளவர்கட்குப் பராக்கிரமமாயும், வெற்றியாயும் வ்யவஸாயமாயும்(பரயத்னம்) பலிஷ்டர்கட்கு பலமாயுமிருக்கிறேன். (ஸ) ஸத்வம்-நல்லமனதும். (௩௬)

வ்ருஷ்ணீநாம் வாஸுதே³வோ(அ)ஸ்மி பாண்ட³வாநாம் த⁴நஞ்ஜய:।
முநீநாமப்யஹம் வ்யாஸ: கவீநாமுஸ²நா கவி:॥௩௭॥

(ப-ம்) வ்ருஷ்ணீநாம் - யாதவர்களில், வாஸுதேவ:அஸ்மி-வாசுதேவனாகிறேன்,பாண்டவாநாம்-பாண்டுபுத்திரர்களுக்குள்,தநஞ்ஜய:-அருச்சுனன் (நான்), முநீநாம்அபி-முனிகளுக்குள்ளும், வ்யாஸ:-வியாஸமுனி, அஹம்-நான்,கவீநாம்-கவிகளுக்குள்,உசநாகவி:-சுக்கிராசாரியர், அஹம்-நான். (௩௭)

(தா-ம்) யான் விருஷ்ணி வம்சோற்பன்னர்கட்கு வாஸுதேவனாயும், பாண்டவர்கட்கு அர்ஜுனனாயும், இருஷிகட்கு வ்யாஸராயும், வித்வாம்ஸர்கட்கு சுக்கிராசாரியனாயு மிருக்கிறேன். (௩௭)

த³ண்டோ³ த³மயதாமஸ்மி நீதிரஸ்மி ஜிகீ³ஷதாம்।
மௌநம் சைவாஸ்மி கு³ஹ்யாநாம் ஜ்ஞாநம் ஜ்ஞாநவதாமஹம்॥

(ப-ம்) தமயதாம்-சிக்ஷிப்பவர்களுக்கு,தண்ட:-சிக்ஷை, அஸ்மி-ஆகிறேன், ஜிகீஷதாம்-ஜயிக்கக்கோரியவர்களுக்கு, நீதி:அஸ்மி-நீதி ஆகிறேன், குஹ்யாநாம்-ரஹஸ்யமானவைகளுள், மௌநம்சஏவ-மௌனமும்,அஸ்மி-ஆகிறேன்; ஜ்ஞாநவதாம்-ஞானவான்களுடைய; ஜ்ஞாநம்-ஞானம், அஹம்-நான். (௩௮)

(தா-ம்) அர்ஜுனா! தண்டிப்போர்கட்கு யான் தண்டமாயும், ஜயத்தைக் கோருகிறவர்கட்கு இராஜநீதியாயும், இரகசியங்களுக்கு யான் மௌனமாயும், ஞானவான்கட்கு யான் ஞானமாயுமிருக்கிறேன். (௩௮)

யச்சாபி ஸர்வபூதாநாம் பீஜம் ததஹமர்ஜுந|
ந ததஸ்தி விநா யத்ஸ்யாந்மயா பூதம் சராசரம்||௩௯||

(ப-ம்) ஹே அர்ஜுந-வாராய் அர்ச்சுனா! யத்-எது, ஸர்வபூதாநாம்-ஸகலப்பிராணிகளுக்கும், பீஜம-பீஜமோ, தத்ச அபி-அதுவும் அஹம்-நான், யத்-எது, மயாவிநா-என்னைவிட்டு, ஸ்யாத்-இருக்குமோ, தத்-அந்த, சராசரம் - ஜங்கமஸ்த்தாவரரூபமான, பூதம்-பூதம், நாஸ்தி-கிடையாது. (௩௯)

(தா-ம்) அர்ஜுனா! இன்னும் யான் எல்லாவஸ்துக்களுக்கும் ஆதிகாரணன். யான் ஜங்கமுமன்று, ஸ்தாவரமன்று, இல்லாத வஸ்துவுமன்று, இருக்கிறவஸ்துவுமன்று. (௩௯)

நாந்தோஸ்தி மம திவ்யாநாம் விபூதீநாம் பரந்தப|
ஏஷ தூத்தேசத: ப்ரோக்தோ விபூதேர்விஸ்தரோ மயா||

(ப-ம்)(ஹே)பரந்தப-சத்ருக்களைத்தபிக்கப்பண்ணுகிற அர்ச்சுனா மம-என்னுடைய,திவ்யாநாம-திவ்வியங்களான, விபூதீநாம்-விபூதிகளுக்கு, அந்த:-முடிவு, நாஸ்தி-கிடையாது; ஏஷ:-இந்த, விபூதே:-விபூதியின், விஸ்தரஸ்து-விஸ்தாரமோ,மயா-என்னால், உத்தேசத:-ஏகதேசம், ப்ரோக்த:-சொல்லப்பட்டது. (௪௦)

(தா-ம்) பரந்தபா! அப்ராக்ருதமான என் மகிமைக்கு முடிவில்லை. விஸ்தாரமான என்மகிமைகள் சுருக்கமாய்க் கூறப்பட்டன. (௪௦)
(ஶ௦) திவ்யாநாம்-மங்களகரமான.

யத்யத்விபூதிமத்ஸத்த்வம் ஸ்ரீமதூர்ஜிதமேவ வா|
தத்ததேவாவகச்ச த்வம் மம தேஜோம்ஶஸம்பவம்|| ௪௧ ||

(ப-ம்) விபூதிமத்-விபூதியுள்ளதாலும்,ஸ்ரீமத்-சோபையுடையதும், ஊர்ஜிதமேவவா-பலமுடையதுமாம், யத்யத்-எந்தெந்த, ஸத்வம்-ஸத்துவம், அஸ்தி-இருக்கின்றதோ, தத்தத்-அது அது, மம-என்னுடைய, தேஜோம்ஶ- தேஜஸ்ஸினது அம்சத்தால், ஸம்பவமேவ-உண்டானதாகவே, த்வம்-நீ, அவகச்ச-அறி; (௪௧)

(தா-ம்) இக்காசினியுள்கண் எந்தெந்த வஸ்துசிறப்புடைத்தோ, எந்தெந்தவஸ்து ஸ்ரீமத் (அதாவது காந்தி, அல்லது தனதான்

னிய ஸம்ருத்தியுடன் கூடியிருக்கிறதோ,) அக்தெந்த வஸ்து சுபகாரியங்களையே முக்கியப் பிரயோஜனமாயுடையதோ, அவைகளெல்லாம் எனது தேஜோம்சத்தினாலேயே உண்டாகிறதென்றுணர்க. (சக)

அதவா பஹுநைதேந கிம் ஜ்ஞாதேந தவார்ஜுந |
விஷ்டப்யாஹமிதம் க்ருத்ஸ்நமேகாம்சேந ஸ்திதோ ஜகத் ||சஉ||

(ப-ம்) ஹே அர்ஜுந-ஓ அர்ச்சுனா! அதவா-அல்லது, பஹுநா-விஸ்தாரமான, ஏதேந-இந்த, ஜ்ஞாதேந-ஞானத்தால் அறியப்பட்ட, தவ-உனக்கு, கிம்ஸ்யாத்-என்ன பிரயோஜனமுண்டாகும்? அஹம்-நான், இதம்-இந்த, க்ருத்ஸ்நம்-ஸமஸ்தமான, ஜகத்-உலகத்தையும், ஏகாம்சேந-ஓரம்சத்தாலே, விஷ்டப்ய-நிறுத்தி, ஸ்திதஃ-இருக்கிறேன். (சஉ)

(தா-ம்) அர்ஜுநனே! இதன்றிபற்பல ஞானத்தாலுனக்குபயோகமென்ன? யானோ இந்த ஜகத்துக்கெல்லாம் ஓர் பாகத்தால் நிலைநிறுத்திக்கொண்டு (என்பதால் ஸம்பந்தப்பட்டும், ஸம்பந்தப்படாமலும் ஸர்வாதிகாரியாய்) இருக்கிறேன். (சஉ)

ஸ்ரீ கீதாஸு விபூதியோகமென்னும் பத்தாவது
அத்தியாயம், முற்றிற்று.

---

## பதினோராவது அத்தியாயம்.

விச்வரூபஸந்தர்சநயோகம்.

அர்ஜுனவாக்கியம்.

மதநுக்ரஹாய பரமம் குஹ்யமத்யாத்மஸம்ஜ்ஞிதம் |
யத்த்வயோக்தம் வசஸ்தேந மோஹோऽயம் விகதோ மம ||க||

(ப-ம்) மத் அநுக்ரஹாய-என்னை அனுக்கிரஹிக்கும்பொருட்டு, த்வயா-உன்னால், பரமம்-மிகவும், குஹ்யம்-ரஹஸ்யமும், அத்யாத்மஸம்ஜ்ஞிதம்-அத்தியாத்மமென்று பெயருடையதுமான, யத்வசஃ-எந்தவார்த்தையானது த்வயா-உம்மால், உக்தம்-சொல்லப்பட்டதோ, தேந-அதனால், மம-எனக்கு, அயம்-இந்த, மோஹஃ-மோஹமானது, விகதஃ-விட்டது. (க)

(தா-ம்) நீர், என்னையநுக்கிரகிப்பதற்காகக் கூறிய பரம இரக

சியமான ஆத்மஞான ரூபவசனத்தால் என்னுடைய அஞ்ஞானந் தொலைந்துப்போயின. (ஸ:) மோஹ:- அவிவேகபுத்தி. (க)

ஸவாவூயௌஹி லூதாநாம் ஶ்ருதௌ விஸ்தரஶோ மயா|
த்வத்த: கமலபத்ராக்ஷ மாஹாத்ம்யமபி சாவ்யயம் || உ ||

(ப-ம்) (ஹே) கமலபத்ராக்ஷ-கமலபத்ரம்போல்போன்றநேத்திரங்களுள்ள ஸ்ரீகிருஷ்ணா! பூதாநாம்-பிராணிகளினது, பவாப்யயௌ-உற்பத்திவிநாசங்கள், இரண்டும் த்வத்த:-உம்மிடத்தினின்று, மயா-என்னால், விஸ்தரஶ:-விஸ்தாரமாய், ஶ்ருதௌ - கேட்கப்பட்டன, அவ்யயம்-நாசமில்லாத, மாஹாத்ம்யம் அபிச-மஹிமையும், (ஶ்ருதம்)-கேட்கப்பட்டது. (உ)

(தா-ம்) கமலநயனா! எல்லா வஸ்துக்களுக்கும் நுங்களாலேயே உற்பத்திலயங்களுண்டாகிற தென்பதையும, உமது அழிவற்ற மான்மியத்தையும் யான் உம்மிடத்திலேயே ஸவிஸ்தாரமாய்க் கேட்கப்பட்டன. (உ)

ஏவமேதத்யதாத்த த்வமாத்மானம் பரமேஶ்வர|
த்ரஷ்டுமிச்சாமி தே ரூபமைஶ்வரம் புருஷோத்தம || ௩ ||

(ப-ம்) (ஹே) பரமேஸ்வர-ஓ ஸர்வேசுவர! த்வம்-நீர், ஆத்மாநம்-உம்மைப்பற்றி, யதா-எப்படி, ஆத்த-சொன்னீரோ! ஏதத்-இது, ஏவம்-இப்படியே, (ஹே) புருஷோத்தம-ஓ புருஷச்சிரேஷ்ட! தே-உம்முடைய, ஐஸ்வரம் - ஈஸ்வரஸம்மந்தமான, ரூபம்-ரூபதத்தை, த்ரஷ்டும்-தர்சிப்பதற்கு, இச்சாமி-விரும்புகிறேன். (௩)

(தா-ம்) ஓ பரமபுருஷா! நீங்கள் நுங்களைக் குறித்துக் கூறியவைகளெல்லா முண்மையே, புருஷோத்தமா! உமது ஈஸ்வரஸ்வரூபத்தைத் தரிசிப்பதற்கு மிகவு மாவலுடையவனாகிறேன். (௩)

மன்யஸே யதி தச்சக்யம் மயா த்ரஷ்டுமிதி ப்ரபோ|
யோகேஶ்வர ததோ மே த்வம் தர்ஶயாத்மானமவ்யயம் ||௪||

(ப-ம்) (ஹே) ப்ரபோ-ஓ பிரபுவே, ஹேயோகச்வர-ஜ்ஞாநாதிகல்யாணகுணங்களோடு கூடியிருப்பவனே! தத்-அது, மயா-என்னால், த்ரஷ்டும்-பார்க்க, சக்யம்-கூடும், இதி-என்று, மந்யஸேயதி-நினைத்திராகில், ததஃ-அதன்பின்பு, த்வம்-தேவரீர், அவ்யயம்-சம்பூர்ணமான, ஆத்மாநம்-ஆத்மஸ்வரூபத்தை, மே-எனக்கு, தர்சய-காட்டவேண்டும். (௪)

(தா-ம்) ஏ ப்ரபோ! ஸகல கல்யாணகுணங்களும் நிறைந்த

ஈசா! அந்த ஸ்வரூபத்தைத் தர்சிப்பதற்கு யான் ஸமர்த்தனென்று மக்குத் தோற்றுமேயாகில் நீவிர் எந்தனுக்கு அந்த விஸ்வரூபத்தை நன்கு காண்பிக்கவேண்டும். (௪)

ஸ்ரீகிருஷ்ண வாக்கியம்.

பஶ்ய மே பார்த² ரூபாணி ஶதஶோ(அ)த² ஸஹஸ்ரஶ꞉ ।
நாநாவிதா⁴நி தி³வ்யாநி நாநாவர்ணாக்ருதீநி ச ॥ ௫ ॥

(ப-ம்) ஹே பார்த்த-ஓ பார்த்த, ஶதச꞉-நூறுபங்காயும், அத ஸஹஸ்ரச꞉-அல்லது ஆயிரம்பங்காயும், நாநாவிதாநி-பலவிதங்களாயும், நாநாவர்ண ஆக்ருதீநி-பலவர்ணமும் ஆகாரமுமுடையனவாயும், திவ்யாநிச-திவ்வியங்களாயுமுள்ள, மே-எனது, ரூபாணி-ரூபங்களை, பச்ய-பார். (௫)

(தா-ம்) பார்த்தா! அளவற்றதாயும், நானாவிதங்களாயும், அப்ராக்ருதங்களாயும், அநேக ஆகாரங்களாயுமுள்ள என் ஸ்வரூபத்தைப்பார்மின். (௫)

பஶ்யாதி³த்யாந்வஸூந்ருத்³ராநஶ்விநௌ மருதஸ்ததா² ।
ப³ஹூந்யத்³ருஷ்டபூர்வாணி பஶ்யாஶ்சர்யாணி பா⁴ரத ॥ ௬ ॥

(ப-ம்) ஹேபாரத-ஓ பரதவம்சத்திலுதித்தோய்! ஆதித்யாந்-துவாதச ஆதித்யர்களையும், ருத்ராந் - ஏகாதசருத்திரர்களையும், வஸூந்-அஷ்டவசுக்களையும், அச்விநௌ - அசுவனிதேவர்களையும், ததா-அப்படியே, மருத꞉-மருத்துக்களையும், பச்ய-பார், அத்ருஷ்டபூர்வாணி-முன்னேபார்க்கபடாத, பஹூநி-பலவித, ஆச்சர்யாணி-ஆச்சரியங்களை, பச்ய-பார். (௬)

(தா-ம்) ஏ பாரதா! எனது ஒருஸ்வரூபத்தின்கண் எண்ணிறந்தவைகளாயும் இதற்கு முன் காணாதவைகளாயும், அநேக ஆச்சரியயுக்தங்களாயுமுள்ள வஸ்துக்களையும், பன்னிரண்டுசூரியர்களையும், அஷ்டவஸுக்களையும், ஏகாதச உருத்திரர்களையும, அஸ்வினி தேவதைகளையும், நாற்பத்தொன்பது மருத்தேவதைகளையும் ஸ்பஷ்டமாய்ப் பார்மின்? (௬)

இஹைகஸ்த²ம் ஜக³த்க்ருத்ஸ்நம் பஶ்யாத்³ய ஸசராசரம் ।
மம தே³ஹே கு³டா³கேஶ யச்சாந்யத்³ த்³ரஷ்டுமிச்ச²ஸி ॥ ௭ ॥

(ப-ம்) (ஹே) குடாகேச-ஓ அர்ச்சுனா! ஸசராசரம்-ஜங்கமஸ்தாவரங்களோடுகூடிய ஜகத்-உலகம், க்ருத்ஸ்நம்- எல்லாவற்றையும், யத்-(பின்னும்)எது, அந்யத்-வேறு, த்ரஷ்டும்-பார்ப்பதற்கு,

இச்சஸி-விரும்புகிருயோ, (தத்) ச-அதையும், மம-என்னுடைய, இஹ-இந்த, தேஹே-சரீரத்தில், ஏகஸ்த்தம்-ஓரிடத்திலிருக்கும்படி, அத்ய-இப்பொழுது, பச்ய-பார். (எ)

(தா-ம்) அர்ஜுனு! என் சரீரத்தின்கண் சராசரங்களுடன் ஸம்பந்தப்பட்ட அகில லோகங்களையும், இன்னும் எதைப்பார்க்கக் கருதுகிருயோ. அதையுமோர்லோகத்திற் கண்கூடாககாணலாம்.

𑌨 𑌤𑍁 𑌮𑌾𑌂 𑌶𑌕𑍍𑌯𑌸𑍇 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌮𑌨𑍇𑌨𑍈𑌵 𑌸𑍍𑌵𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌾 ।
𑌦𑌿𑌵𑍍𑌯𑌂 𑌦𑌦𑌾𑌮𑌿 𑌤𑍇 𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 𑌪𑌶𑍍𑌯 𑌮𑍇 𑌯𑍋𑌗𑌮𑍈𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 ॥ ௮ ॥

(ப-ம்) அநேந-இந்த, ஸ்வசக்ஷுஷா ஏவது-உன் கண்ணிஞலேயே, மாம்-என்னை, த்ரஷ்டும்-பார்க்க, நசக்ஷ்யஸே-ஸமர்த்தனுகவே மாட்டாய, திவ்யம்சக்ஷு:-திவ்யநேத்திரத்தை, தே-உனக்கு, ததாமி-தருகிறேன், மே-எனது, ஐஸ்வரம-ஈஸ்வரஸம்பந்தமான, யோகம்-யோகத்தை, பச்ய-பார். (அ)

(தா-ம்) நீ, இந்தப்ராக்ருத நேத்திரத்தால் என்னைப் பார்ப்பதற்கு முடியாது, ஆதலால் உனக்கு அப்ராக்ருதமான நேத்திரத்தைத் தருகின்றேன், அதனுல சுத்தஞானமயமான எனது ஈஸ்வரஸ்வரூபத்தையும், எனது மகிமையையும பார்மின்? (அ)

ஸஞ்சய வாக்கியம்.

𑌏𑌵𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌤𑌤𑍋 𑌰𑌾𑌜𑌨𑍍𑌮𑌹𑌾𑌯𑍋𑌗𑍇𑌶𑍍𑌵𑌰𑍋 𑌹𑌰𑌿𑌃 ।
𑌦𑌰𑍍𑌶𑌯𑌾𑌮𑌾𑌸 𑌪𑌾𑌰𑍍𑌥𑌾𑌯 𑌪𑌰𑌮𑌂 𑌰𑍂𑌪𑌮𑍈𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 ॥ ௯ ॥
𑌅𑌨𑍇𑌕𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌨𑌯𑌨𑌮𑌨𑍇𑌕𑌾𑌦𑍍𑌭𑍁𑌤𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑍍 ।
𑌅𑌨𑍇𑌕𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌭𑌰𑌣𑌂 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑍇𑌕𑍋𑌦𑍍𑌯𑌤𑌾𑌯𑍁𑌧𑌮𑍍 ॥ ௰ ॥

𑌦𑌿𑌵𑍍𑌯𑌮𑌾𑌲𑍍𑌯𑌾𑌮𑍍𑌬𑌰𑌧𑌰𑌂 𑌦𑌿𑌵𑍍𑌯𑌗𑌨𑍍𑌧𑌾𑌨𑍁𑌲𑍇𑌪𑌨𑌮𑍍 ।
𑌸𑌰𑍍𑌵𑌾𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌮𑌯𑌂 𑌦𑍇𑌵𑌮𑌨𑌨𑍍𑌤𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌤𑍋𑌮𑍁𑌖𑌮𑍍 ॥ ௧௧ ॥
𑌦𑌿𑌵𑌿 𑌸𑍂𑌰𑍍𑌯𑌸𑌹𑌸𑍍𑌰𑌸𑍍𑌯 𑌭𑌵𑍇𑌦𑍍𑌯𑍁𑌗𑌪𑌦𑍁𑌤𑍍𑌥𑌿𑌤𑌾 ।
𑌯𑌦𑌿 𑌭𑌾𑌃 𑌸𑌦𑍃𑌶𑍀 𑌸𑌾 𑌸𑍍𑌯𑌾𑌦𑍍𑌭𑌾𑌸𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ॥ ௰௨ ॥

(ப-ம்) (ஹே) ராஜந்-ஓராஜாவான (திருதராஷ்டிரா), மஹாயோகேஸ்வர:-மஹத்தான யோகங்களுக்கும் ஈஸ்வரனான, ஹரி:-ஸ்ரீகிருஷ்ணனானவா, ஏவம்-இப்படி, உக்த்வா-சொல்லி ததஃ-பிறகு, ஐஸ்வரம்-ஈஸ்வரஸம்பந்தமான, பரமம்-மேலான, ரூபம்-ரூபத்தை, பார்த்தாய-அர்ச்சுனன் பொருட்டு, தர்சயாமாஸ-காட்டினூர். அநேகவக்த்ர நயநம்-அநேக முகங்களுங்கண்களுமுடையதும், அநேக

அத்புததர்சகம் - அனேகம் ஆச்சரியக்காட்சியுடையதும், அநேக திவ்யாபரணம் - அநேகம் திவ்யாபரணங்களுடையதும், திவ்யா நேகோத்யதாயுதம்-திவ்வியமாயும் அனேகமாயும்எடுக்கப்பட்டதா யுமுள்ள ஆயுதங்களுடையதும், திவ்ய மால்யாம்பரதரம்-திவ்விய மான மாலைகளும் ஆடைகளுமுடுத்ததும், திவயகந்தாநுலேபநம் - திவ்வியமான கெந்தம்பூசியதும், ஸர்வாச்சர்யமயம் - எல்லா ஆச்சரியமும் நிறைந்ததும், தேவம் - பிரகாசிப்பதும், அநந் தம் - முடிவில்லாததும், விஸ்வதோமுகம் - நாற்புறமும் முகமு டையதுமான ரூபத்தைக்காட்டினா, திவி-ஆகாயத்தில், யுகபத்-ஏககாலத்தில், ஸூர்யஸஹஸ்ரஸ்ய-சூரியர்களின் ஆயிரத்தின்,பாஃ கிரணம், உத்திதாயதி-உண்டாயிருக்குமாகில், ஸா-அது,தஸ்ய-அந் த, மஹாத்மந:-மஹாத்மாவின், பாஸ:-காந்திக்கு, ஸத்ருசீ-ஸமான மாக, ஸ்யாத்-ஆகும். (கூ-கO-கக-கஉ)

(தா ம்) திர்த்தராஷ்டிர மகாராஜனே ! இவ்வண்ணம் சொன்ன பிறகு சிறந்த யோகியான கிருஷ்ணன் அர்ஜ்ஜுனனுக்கு தனது முக்கியமான ஈஸ்வரஸ்வரூபத்தைக் காண்பித்தனர். அநேக முகங்களும், அநேக கண்களும், அநேக ஆச்சரிய வஸ்துக் களுடன் கூடியும், அநேக அப்ராக்ருத பூஷணங்களோடு கூடியும், நானாவிதங்களான ஆயுதங்களைத் தரித்தும், பற்பல புஷ்பமாலிகைகளும், பீதாம்பரங்களும், அடிமிதவாசனைகந்த லேபனங்களும், ஆச்சரியமயங்களும், முடிவில்லாததும், ஸர்வதோமுகங் களுமான விஸ்வரூபத்தைக் காண்பித்தனர். ஆகாயத்தின்கண் ஆயி ரம் சூரியன் ஏககாலத்திலுதித்தால் அது அம்மகாத்மாவினது தே ஜஸ்ஸுக் கீடாகும். (கூ-கO-கக-கஉ)

தத்ரைகஸ்தம் ஜகத்க்ருத்ஸ்நம் ப்ரவிபக்தமநேகதா|
அபஸ்யத்தேவதேவஸ்ய ஸரீரே பாண்டவஸ்ததா||கந||

(ப-ம்) தேவதேவஸ்ய-தேவதேவனுடைய, தத்ர-அந்த, சரீரே-சரீரத்தில், ஏகஸ்த்தம்-ஒரிடத்தில் இருக்குமதும், அனேகப்பிரகார மாக, ப்ரவிபக்தம்-பிரிக்கப்பட்டதுமான, க்ருத்ஸ்நம்-ஸமஸ்த,ஜகத்-லோகத்தையும், ததா-அப்பொழுது, பாண்டவ:-அருச்சுனன், அப ஸ்யத்-பார்த்தான். (கந)

(தா-ம்) அப்பொழுது அர்ஜ்ஜுனன் தேவதேவனை பகவா னது சரீரத்தில் நானாவிதங்களான விபாகங்களுடன் கூடிய அகண் டப் பிரபஞ்சங்களையும் ஒருபாகத்தி லிருப்பதாகப் பார்த்தனன். ()

ததஸ்ஸவிஸ்மயாவிஷ்டோ ஹ்ருஷ்டரோமா தனஞ்ஜய: ‖
ப்ரணம்யஸிரஸாதேவம் க்ருதாஞ்ஜலிரபாஷத ‖கச‖

(ப-ம்) தத:-பிறகு, ஸ:-அந்த விஸ்மய ஆவிஷ்ட:- ஆச்சரியயுக்தனாய், ஹ்ருஷ்டரோமா:-சிலிர்த்தமயிருடையனான, தனஞ்ஜய:-அர்ச்சுனன், தேவம்-தேவனை, சிரஸா-தலையால், ப்ரணம்ய-வணங்கி, க்ருதாஞ்ஜலி:-கைகூப்பினவனாய், அபாஷத-சொன்னான். (கச)

(தா-ம்) அப்பிறகு அர்ஜ்ஜுனன் ஆச்சரியத்தால் பரவசனாய் ரோமாஞ்சமுண்டாகி (மயிர்கூச்சலுண்டாகி) அப்பகவானை வணங்கிக் குவித்தகையோடு வினவினன். (கச)

பஸ்யாமிதேவாம்ஸ்தவதேவதேஹே
ஸர்வாம்ஸ்ததா பூதவிஸேஷஸங்கான் |
ப்ரஹ்மாணமீஸம் கமலாஸனஸ்தம்
ருஷீம்ஸ்ச ஸர்வானுரகாம்ஸ்சதிவ்யான் ‖ கரு‖

(ப-ம்) ஹேதேவ-ஓகிருஷ்ணமூர்த்தீ, தவ-உமதுடைய, தேஹே-சரீரத்தில், ஸர்வான் - ஸமஸ்தமான, தேவான் - தேவதைகளையும், ததா-அப்படியே, பூதவிஸேஷஸங்கான்-பிராணிவிசேஷங்களுடைய, கட்டங்களையும், ப்ரஹ்மாணம்-சதுர்முகப்ரஹ்மாவையும், கமலாஸனஸ்தம்-ப்ரஹ்மாவினிடத்திலிருக்கிற, ஈஸம்- ருத்திரனையும், ஸர்வான்-ஸமஸ்தமான, ருஷீம்ஸ்ச-ருஷிகளையும், திவ்யாந்-திவ்யங்களான, உரகாந்-நல்லபாம்புகளையும், பஸ்யாமி-பார்க்கிறேன். (கரு)

(தா-ம்) தேவா! உன் சரீரத்தில் எல்லா தேவர்களையும் எல்லாப்பிராணிகளையும், அவைகளுள்ளிருக்கும் பகுதிகளையும், கமலாஸனனும், சிருஷ்டிகர்த்தனுமான ப்ரம்மனையும், தேவரிஷிகள் முதலிய மகரிஷிகளையும், வாஸுகி தக்ஷகன் முதலிய பற்பல ஸர்ப்பங்களையும் ஈசனையும் பார்க்கின்றேன். (ஶ0) ஈசம்-ப்ரஜைகளுக்கு கல்லாமிசனும். (கரு)

அநேகபாஹூதரவக்த்ரநேத்ரம்
பஸ்யாமித்வாம் ஸர்வதோநந்தரூபம் |
நாந்தம் நமத்யம் நபுநஸ்தவாதிம்
பஸ்யாமிவிஸ்வேஸ்வர விஸ்வரூப ‖ கசு‖

(ப-ம்) அநேக பாஹூதர வக்த்ரநேத்ரம்-அநேகம்புயங்களும் வயிறுகளும்முகங்களும்கண்களுமுடையனும் அநந்தரூபம் அளவற்ற ரூபமுடையனுமான, த்வா-உம்மை, ஸர்வத:-எல்லாவற்றிலும்; பஸ்யாமி-பார்க்கிறேன். ஹேவிஸ்வேஸ்வர-எல்லாவற்றிலும் அதிபதியானவனே, ஹேவிஸ்வரூப-ஓஜகத்ரூப! தவ-உன்னுடைய, அந்தம்-முடி

யை, நபஶ்யாமி-காண்கில்லேன். மத்யம்-இடையை, ந(பஶ்யாமி)-பார்க்கிறேனில்லை. (௧௬)

(தா-ம்) ஜகதீசா! அநேக கைகளும், அனேக உதரங்களும், பல நேத்திரங்களும், அந்தமில்லாத ரூபமும் கூடிய உம்மை எங்குங் காண்கின்றேன். ஏ விஶ்வரூபா! உமது முடிவும், மத்தியமும், உற்பத்தியும் தெரியவில்லை. (௧௬)

𑌕𑌿𑌰𑍀𑌟𑌿𑌨𑌂 𑌗𑌦𑌿𑌨𑌂 𑌚𑌕𑍍𑌰𑌿𑌣𑌂 𑌚
𑌤𑍇𑌜𑍋𑌰𑌾𑌶𑌿𑌂 𑌸𑌰𑍍𑌵𑌤𑍋 𑌦𑍀𑌪𑍍𑌤𑌿𑌮𑌨𑍍𑌤𑌮𑍍 ।
𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌦𑍁𑌰𑍍𑌨𑌿𑌰𑍀𑌕𑍍𑌷𑍍𑌯𑌂 𑌸𑌮𑌨𑍍𑌤𑌾𑌤𑍍
𑌦𑍀𑌪𑍍𑌤𑌾𑌨𑌲𑌾𑌰𑍍𑌕𑌦𑍍𑌯𑍁𑌤𑌿𑌮𑌪𑍍𑌰𑌮𑍇𑌯𑌮𑍍 ॥ ௧௭ ॥

(ப-ம்) தேஜோராசிம்-தேஜோராசியும், ஸர்வதஃ-எல்லாவற்றிலும், தீப்திமந்தம்-பிரகாசிப்பவரும், ஸமந்தாத்-எங்கும், துர்நிரீக்ஷ்யம்-பார்க்கக்கூடாதவரும் தீப்தாநலார்கத்யுதிம்-பிரகாசிக்கின்ற அக்னிசூரியாளின்காந்தியுடையவரும், அப்ரமேயம்-அறியசக்கிடமல்லாதவருமான, த்வாம்-உன்னை, கிரீடிநம்-கிரீடமுடையரும், கதிநம், கதையுடையரும், சக்ரிம்ச - சக்கரமுடையருமக, பஶ்யாமி-பார்க்கிறேன். (௧௭)

(தா-ம்) தேஜோரூபமாய் எல்லாத் திக்கிலும் பிரகாசித்துக்கொண்டும், பார்ப்பதற்கு அசக்கியனாய் நான்கு திக்கிலும் ஜ்வலித்துக்கொண்டும், அக்கினி சூரியன் இவாகளைப்போன்ற தேஜஸ் உடையவனாயும், அப்ரமேயனாயுமிருககிற உம்மை கிரீடம், கதை சக்ரம் இவைகளைத் தாங்கினவராய்ப் பார்க்கின்றேன். (௧௭)

𑌤𑍍𑌵𑌮𑌕𑍍𑌷𑌰𑌂 𑌪𑌰𑌮𑌂 𑌵𑍇𑌦𑌿𑌤𑌵𑍍𑌯𑌂
𑌤𑍍𑌵𑌮𑌸𑍍𑌯 𑌵𑌿𑌶𑍍𑌵𑌸𑍍𑌯 𑌪𑌰𑌂 𑌨𑌿𑌧𑌾𑌨𑌮𑍍 ।
𑌤𑍍𑌵𑌮𑌵𑍍𑌯𑌯𑌃 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌧𑌰𑍍𑌮𑌗𑍋𑌪𑍍𑌤𑌾
𑌸𑌨𑌾𑌤𑌨𑌸𑍍𑌤𑍍𑌵𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌮𑌤𑍋 𑌮𑍇 ॥ ௧௮ ॥

(ப-ம்) வேதிதவ்யம்-அறியவேண்டிய, பரமம்-பெரிதாகிய, அக்ஷரம்-ப்ரப்ரஹ்மம், த்வம்-நீ, அஸ்ய-இந்த, விஶ்வஸ்ய-ஜகத்துக்கு, பரம்-பெரிய, நிதாநம்-ஆதாரம், த்வம்-நீ, அவ்யயஃ-நாசமில்லாதவன், த்வம்-நீ, ஶாஶ்வததர்மகோப்தா - ஶாஶ்வதமான தர்மத்தைப் பாலிக்கிறவன், நீ, ஸநாதநஃ-புராணநாகிய, புருஷஃ-புருஷனும், த்வமேவேதி-நீயேயென்று, மே. என்னுடைய, மதஃ-அபிப்ராயம். (௧௮

(தா-ம்) அழியற்பாலனவாகிய சிறந்த ப்ரம்மம் நீங்களே நீவிரே இவ்வுலகத்திற்கு முக்கிய காரணன். உமக்கழிவில்லை, நீவிரே ஸ்திரமாய் அறத்தைப் பரிபாலிப்பவர், நீவிரே நித்தியரூபியான புருடன் என்பது என் கருத்து. (கஅ)

அநாதிமத்யாந்தமநந்தவீர்ய-
மநந்தபாஹும் சசிஸூர்யநேத்ரம்।
பச்யாமி த்வாம் தீப்தஹுதாசவக்த்ரம்
ஸ்வதேஜஸா விச்வமிதம் தபந்தம்॥ கக॥

(ப-ம்) அநாதி மத்யாந்தம்-ஆதி மத்தியம் அந்தமில்லாதவரும், அநந்தவீர்யம்-அளவற்ற பராக்கிரமமுடையரும், அநந்தபாஹும்-அநந்தமான பராக்கிரமமுடையரும், சசி ஸூர்ய நேத்ரம்-சந்திர சூரியனைக்கண்களாயுடையரும், தீப்தஹுதாச வக்த்ரம்-ஜ்வலிக்கிற அக்னிபோன்றமுகமுடையரும்ஸ்வதேஜஸா-தம்தேஜஸ்ஸாலே, இதம்-இந்த, விச்வம்-லோகத்தை, தபந்தம்-தபிக்கச்செய்கிறவனுமாகிய, த்வாம்-உன்னை, பச்யாமி-பார்க்கிறேன். (ககூ)

(தா-ம்) உற்பத்தி லய ஸ்திதி முதலியவைகளற்ற அபரிமித சக்தியுக்தனும், அளவிறந்த கைகளையுடையவனும், சந்திரசூரியர் போன்ற கண்களால் பிரகாசிப்பவனும், பிரளயகாலாக்கினியைப் போன்ற முகமுடையவனும், நின் ஒளியால் அவ்வுலகை பிரகாசிக்கிரவனுமுள்ள உன்னை நன்கு பார்க்கின்றேன். (ககூ)

த்யாவாப்ருதிவ்யோரிதமந்தரம் ஹி
வ்யாப்தம் த்வயைகேந திசச்ச ஸர்வா:।
த்ருஷ்ட்வாத்புதம் ரூபமுக்ரம் தவேதம்
லோகத்ரயம் ப்ரவ்யதிதம் மஹாத்மந்॥ உ0॥

(ப-ம்) த்யாவாப்ருதிவ்யோ:-ஆகாசத்தினுடையவும் பூமியினுடையவும், இதம் அந்தரம்-இந்தஇடவெளியானது, ஏகேந-ஒருவரான, த்வயா-உம்மால், வ்யாப்தம்ஹி-வியாபிக்கப்பட்டதன்றோ? ஸர்வா:-எல்லா, திசச-திசைகளும் (வியாபிக்கப்பட்டன), ஹேமஹாத்மாவே! அத்புதம்-ஆச்சரியமூற்றிதும், உக்ரம்-பயங்கரமானதுமான, தவ-உன்னுடைய, இதம்-இந்த,ரூபம்-உருவத்தை,த்ருஷ்ட்வா-பார்த்து,லோகத்ரயம்-உலகமூன்றும், ப்ரவ்யதிதம்-வெருளுகின்றன.(உ0)

(தா-ம்) பகவானே! ஊர்த்துவலோகமும், அதோலோகமும், மத்தியலோகமும், எல்லா திக்குகளும், உன்னாலேயே வியாபித்திருக்கிறது. உனது ஆச்சரியகரமான, இந்த உக்கிர ஸ்வரூபத்தைக் கண்டு மூன்றுலோகமும் நடுங்குகின்றன. (ஶ௦) ப்ரவ்யதிதம் நடுங்கிருக்கிறது. (௨௦)

அமீ ஹி த்வாம் ஸுரஸங்கா⁴ விஶந்தி
கேசித்³ பீ⁴தா꞉ ப்ராஞ்ஜலயோ க்³ருணந்தி|
ஸ்வஸ்தீத்யுக்த்வா மஹர்ஷிஸித்³த⁴ஸங்கா⁴꞉
ஸ்துவந்தி த்வாம் ஸ்துதிபி⁴꞉ புஷ்கலாபி⁴꞉|| ௨௧||

(ப-ம்) அமீ-இந்த, த்வாம்-உம்மை, ஸுரஸங்கா꞉-தேவஸமூஹங்கள், விசந்தி-பிரவேசிக்கின்றனவல்லவா; கேசித்-சிலர், பீதா꞉-பயந்தவர்களாய், ப்ராஞ்ஜலய꞉-கைகூப்பிக்கொண்டு, க்ருணந்தி-தோத்திரம் செய்கிறார்கள், மஹர்ஷி ஸித்தஸங்கா꞉ - மஹாருஷிகணங்களும் சித்தகணங்களும், ஸ்வஸ்தி-இதி உக்த்வா- "ஸ்வஸ்தி" என்று சொல்லி, புஷ்கலாபி꞉-ஸம்பூர்ணமான, ஸ்துதிபி꞉-தோத்திரங்களால், த்வாம்-உன்னை, ஸ்துவந்தி - தோத்திரஞ்செய்கின்றனர். (௨௧)

(தா-ம்) இந்த தேவக்கூட்டங்கள் உம்மிடத்திற் பிரவேசிக்கின்றனர். இவர்களுள் சிலர் நுங்கள் உக்கிரஸ்வரூபத்தைக்கண்டு பயந்து அஞ்ஜலி பத்தர்களாய்த் துதிக்கின்றனர். மகரிஷிகளும், சித்தர்களும் மங்களமுண்டாகக் கடவதென்று பகவத்குணங்களை ஸ்தோத்திர ரூபமாய் முழங்குகின்றனர். (௨௧)

ருத்³ராதி³த்யா வஸவோ யே ச ஸாத்⁴யா
விஶ்வே(அ)ஶ்விநௌ மருதஶ்சோஷ்மபாஶ்ச|
க³ந்த⁴ர்வயக்ஷாஸுரஸித்³த⁴ஸங்கா⁴
வீக்ஷந்தே த்வாம் விஸ்மிதாஶ்சைவ ஸர்வே|| ௨௨||

(ப-ம்) ருத்ரஆதித்யா꞉-பதினொரு ருத்திரர்களும் பன்னிரண்டு சூரியர்களும், வஸவ꞉-வசுக்கள், ஸாத்யா꞉யே-ஸாத்தியர்கள் எவர்களோ, தேச-அவர்களும், விஶ்வே-விசுவேதேவரும், அஶ்விநௌ-அஶ்வனீதேவர்களும், மருத꞉ச-மருத்துக்களும், உஷ்மபா꞉ச-பித்ருக்களும், கந்தர்வயக்ஷாஸுரஸித்தஸங்கா꞉-ஹாஹாஹூஹூ முதலானகந்த்ருவர் இயக்கர் அசுரர்சித்தர்களின் கூட்டங்களும், ஸர்வே ச ஏவ-எல்லாருமே, விஸ்மிதா꞉- ஆச்சரியமுற்றவர்களாய், த்வாம்-உன்னை, வீக்ஷந்தே-பார்க்கிறார்கள். (௨௨)

(தா-ம்) உமது அத்புதஸ்வரூபத்தை உருத்திரர்களும், ஆதித்தியர்களும், வஸுக்களும், ஸாத்தியர்களும், விஸ்வேதேவர்களும், அஸ்விநீதேவதைகளும், மருத்துக்களும். பித்ருதேவதைகளும், கெந்தர்வர்களும், யக்ஷர்களும், அசுரர்களும், சித்தர்களுங் கூடிப்பார்த்து ஆச்சரியப்படுகிறார்கள். (ஸ்ரீ) கந்தர்வயக்ஷாஸுரஸித்தஸங்கா:- ஹாஹாஹூஹூ முதலியகந்தர்வ ஸமூகங்களும், குபேரன் முதலிய யக்ஷர்களும், விரோசனாதி அசுரர்களும், கபிலர்முதலிய சித்தர்களும் உன்னைபார்க்கிறார்கள். (௨௨)

ரூபம் மஹத்தே பஹுவக்த்ரநேத்ரம்
மஹாபாஹோ பஹுபாஹூருபாதம்|
பஹூதரம் பஹுதம்ஷ்ட்ராகராளம்
த்ருஷ்ட்வா லோகா: ப்ரவ்யதிதாஸ்ததாஹம்|| ௨௩||

(ப-ம்) ஹேமஹாபாஹோ-ஓபெருந்தோளுடைய ஓக்ருஷ்ணா! பஹுவக்த்ர நேத்ரம் - பலமுகமும் கண்களுமுடையதும், பஹுபாஹூ ஊருபாதம்-பல தோள்களும் தொடைகளும் பாதங்களுமுடையதும், பஹூதரம்-பலவயிறுகளுடையதும், பஹுதம்ஷ்ட்ராகராளம்-பல கோரப்பற்களாலே விகாரமானதும், மஹத்-பெரியதுமான, தே-உனக்கு, ரூபம்-உருவத்தை, த்ருஷ்ட்வா-பார்த்து, லோகா:-உலகத்தார், ப்ரவ்யதிதா:-அஞ்சுகிறார்கள், அஹம் (ச)-நானும், ததா-அப்படியே. அஞ்சுகின்றேன். (௨௩)

(தா-ம்) மஹாபாஹோ ! உமது அனேகநேத்திரங்களையும் பற்பல முகங்களையும், கைகளையும், புசங்களையும் கால்களையும், உதரங்களையும், சிங்கப்பற்களையும், பயங்கரமான ரூபத்தையுங்கண்டு எல்லா உலகங்களும், யானும் பீதியடைகின்றோம். (௨௩)

நப:ஸ்ப்ருசம் தீப்தமநேகவர்ணம்
வ்யாத்தாநநம் தீப்தவிசாலநேத்ரம்|
த்ருஷ்ட்வா ஹி த்வாம் ப்ரவ்யதிதாந்தராத்மா
த்ருதிம் ந விந்தாமி சமம் ச விஷ்ணோ|| ௨௪||

(ப-ம்) (ஹே) விஷ்ணோ-ஓவிஷ்ணுவே ! நபஸ்ப்ருசம்-ஆகாசத்தைத்தொட்டு, தீப்தம்-பிரகாசித்து, அநேகவர்ணம்-பல வர்ணங்களுடையவனும், வ்யாத்தாநநம்-திறந்தவாயுடையவனும், தீப்தவிசாலநேத்ரம்-பிரகாசமும் விசாலமுமான கண்களுடையனுமான, த்வாம்-உன்னை, த்ருஷ்ட்வா-பார்த்து, ப்ரவ்யதிதாந்தராத்மா-சலித்தமனமுடை

டையனாய், த்ருதிம்-தைரியத்தையும், சமம்ச-சாந்தியையும், நவிந்தாமி-அடையாமலிருக்கிறேன். (௨௪)

(தா-ம்) ஓ கிருஷ்ணா! ஆகாசம் வரையில் வியாபித்து ஜ்வலித்துப் பற்பல காந்தியோடு திறந்துகொண்டு பிரகாசிக்கின்ற விசால நேத்திரமுடைய நுங்களைக் கண்டு நடுங்கிய மனதுடன் கூடிய யான் தேகத்தைத் தரிக்கவில்லை, மனதிற்கும், இந்திரியங்கட்கும் உபசாந்தியு முண்டாகவில்லை. (ஸ) ஸமஞ்ச-உள்ள கிளர்ச்சியையும். (௨௪)

𑌦𑌂𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌕𑌰𑌾𑌲𑌾𑌨𑌿 𑌚 𑌤𑍇 𑌮𑍁𑌖𑌾𑌨𑌿
𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑍈𑌵 𑌕𑌾𑌲𑌾𑌨𑌲𑌸𑌨𑍍𑌨𑌿𑌭𑌾𑌨𑌿 |
𑌦𑌿𑌶𑍋 𑌨 𑌜𑌾𑌨𑍇 𑌨 𑌲𑌭𑍇 𑌚 𑌶𑌰𑍍𑌮
𑌪𑍍𑌰𑌸𑍀𑌦 𑌦𑍇𑌵𑍇𑌶 𑌜𑌗𑌨𑍍𑌨𑌿𑌵𑌾𑌸 || ௨௫ ||

(ப-ம்) தம்ஷ்ட்ராகராளாநி-கோரைப்பற்களால் விகாரமுற்று, காலாநல ஸந்நிபாநிச- காலாக்கினிக்குச் சமமாயிருக்கும், தே-உன்னுடைய, முகாநிச-முகங்களை, த்ருஷ்ட்வைவ-பார்த்தே, திச:-திசைகளை, நஜாநே-அறியகிலேன், சர்மச-சுகத்தையும், நலபே-அடைகில்லேன், (ஹே) தேவேச-ஓ தேவநாத, (ஹே) ஜகந்நிவாஸ-ஓ ஜகத்திற்கு வாஸஸ்த்தான மானவரே, ப்ரஸீத - அனுக்கிரஹித்தருள வேண்டும். (௨௫)

(தா-ம்) ஓதேவேசா!ஓ ஜகந்நிவாஸா! கோரப்பற்களால் பயங்கரமாயும் பிரளயகாலாக்னிக்குச சமதையாயுமுள்ள உமது முகத்தைப்பார்த்த உடனே திக்பிரமை யுண்டான வனாகிறேன். சாந்தியடையவில்லை. (ஆதலால் அனுக்கிரகக்வேண்டும்.) (௨௫)

𑌅𑌮𑍀 𑌚 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌧𑍃𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌸𑍍𑌯 𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌃
𑌸𑌰𑍍𑌵𑍇 𑌸𑌹𑍈𑌵𑌾𑌵𑌨𑌿𑌪𑌾𑌲𑌸𑌙𑍍𑌘𑍈𑌃 |
𑌭𑍀𑌷𑍍𑌮𑍋 𑌦𑍍𑌰𑍋𑌣𑌃 𑌸𑍂𑌤𑌪𑍁𑌤𑍍𑌰𑌸𑍍𑌤𑌥𑌾𑌸𑍌
𑌸𑌹𑌾𑌸𑍍𑌮𑌦𑍀𑌯𑍈𑌰𑌪𑌿 𑌯𑍋𑌧𑌮𑍁𑌖𑍍𑌯𑍈𑌃 || ௨௬ ||
𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌤𑍇 𑌤𑍍𑌵𑌰𑌮𑌾𑌣𑌾 𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿
𑌦𑌂𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌕𑌰𑌾𑌲𑌾𑌨𑌿 𑌭𑌯𑌾𑌨𑌕𑌾𑌨𑌿 |
𑌕𑍇𑌚𑌿𑌦𑍍𑌵𑌿𑌲𑌗𑍍𑌨𑌾 𑌦𑌶𑌨𑌾𑌨𑍍𑌤𑌰𑍇𑌷𑍁
𑌸𑌂𑌦𑍃𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌚𑍂𑌰𑍍𑌣𑌿𑌤𑍈𑌰𑍁𑌤𑍍𑌤𑌮𑌾𑌙𑍍𑌗𑍈𑌃 || ௨௭ ||

(ப-ம்) அமீ-இந்த, ஸர்வே-ஸகலருமான, த்ருதராஷ்ட்ரஸ்ய-திருதராஷ்டிரர்களின், புத்ரா:-புத்திரர்களும், ததா-அப்படியே, பீஷ்ம:-

பீஷ்மரும், த்ரோண:-துரோணரும், ததா-அப்படியே, அஸௌ-இந்த, ஸூதபுத்ர:-சூதபுத்திரனும், ஸர்வை:-ஸகலமான, அவநிபாலஸங்கை:ஸஹ-ராஜாக்களின் கூட்டங்களுடனுங்கூட, அஸ்மதீயை:-எம்மவர்களான, யோதமுக்யை: ஸஹ-வீரஶ்ரேஷ்டர்களோடுங்கூட, தம்ஷ்ட்ராகராளானி-கோரப்பற்களால் விகாரமாயும், பயாநகானி-பயங்கரமாயுமிருக்கிற, தே-உன்னுடைய, வக்த்ராணி-முகங்களை; த்வரமாணா:-வேகமாய், விசந்தி-பிரவேசிக்கிறார்கள், கேசித்-சிலர், தசநாந்தரேஷு-பல் இடுக்குகளில், விலக்நா:-ஒட்டிக்கொண்டு, சூர்ணிதை:-பொடிபண்ணப்பட்ட, உத்தமாங்கை:-சிரங்களுடன், ஸந்த்ருச்யந்தே-காணப்படுகிறார்கள். (௨௬-௨௭)

(தா-ம்) அனேக வீரப்ரதாபர்களான அரசர்களோடு இந்ததிருதராஷ்டிரபுத்திரர்களும், பீஷ்மரும், துரோணரும், கர்ணனும் கூடிக்கொண்டு சிங்கபற்களால் விக்ருதங்களாயும், பயங்கரங்களாயுமிருக்கிற நுங்கள் முகங்களில் சிலர் வேகமாய்ப்பிரவேசிக்கின்றார்கள். சிற்சிலர் உடைபட்டசிரசோடு பற்களினது துவாரத்திலகப்பட்டுக்கொண்டு பொடிபொடியானதாய்க் காணப்படுகின்றனர். ()

யதா நதீநாம் பஹவோம்புவேகா:
ஸமுத்ரமேவாபிமுகா த்ரவந்தி |
ததா தவாமீ நரலோகவீரா
விசந்தி வக்த்ராண்யபிவிஜ்வலந்தி || ௨௮||

(ப-ம்) யதா-எப்படி, நதீநாம்-ஆறுகளின், பஹவ:-பலவான, அம்புவேகா:-நீர்வெள்ளங்கள், ஸமுத்ரம்ஏவ-சமுத்திரத்தையே, அபிமுகா:-எதிர்நோக்கி த்ரவந்தி-ஓடுகின்றனவோ, ததா-அப்படி, அமீ-இந்த, நரலோகவீரா:-மனுஷ்யலோகவீரர்கள், அபிவிஜ்வலந்தி-நாற்புறமும், ஜ்வலிக்கின்ற, தவ-உன்னுடைய, வக்த்ராணி-முகங்களில், விசந்தி-புகுகின்றார்கள். (௨௮)

(தா-ம்) எவ்வண்ணம் எல்லா நதிகளுடைய பிரவாகங்களும் சமுத்திரத்தைக்குறித்துச் செல்லுகின்றனவோ, அவ்வண்ணமே இந்த இராஜவீரர்களெல்லவரும் ஜ்வலித்துக்கொண்டிருக்கிற உமது முகத்திலேயே வந்து விழுகிறார்கள், (௨௮)

யதா ப்ரதீப்தம் ஜ்வலநம் பதங்கா
விசந்தி நாசாய ஸம்ருத்தவேகா: |
ததைவ நாசாய விசந்தி லோகா
ஸ்தவாபி வக்த்ராணி ஸம்ருத்தவேகா: || ௨௯||

(ப-ம்) யதா-எப்படி, பதங்கா:-பக்ஷிகள், ப்ரதீப்தம்-நன்றாய் ஜொலிக்கின்ற, ஜ்வலநம்-அக்கினியை(க்குறித்து), ஸம்ருத்தவேகா:-மிகுந்தவேகத்தோடு, நாசாய-நாசத்தின்பொருட்டு, விசந்தி-ப்ரவேசிக்கின்றனவோ, லோகா:அபி-(இந்த) லோகங்களும், ததாஏவ-அப்படியே, தவ-உன்னுடைய, வக்த்ராணி-முகங்களை(க்குறித்து), ஸம்ருத்தவேகா:-மிகுந்தவேகத்தோடு, நாசாய-நாசத்தின்பொருட்டு, விசந்தி-பிரவேசிக்கின்றன. (௨௯)

(தா-ம்) எவ்வாறு ஜ்வலித்துக்கொண்டிருக்கிற அக்கினியில் சலபங்கள் (விளக்குப்பூச்சி) தாம் நசிப்பதற்கு அதிக வேகத்தினுடன் விழுகின்றனவோ, அவ்வாறே இந்த அரசவீரர்களும் அதிகவேகத்தோடு தாம் நாசமடைவதற்கு உமது முகத்தில் பிரவேசிக்கிறார்கள். (௨௯)

லேலிஹ்யஸே க்ரஸமான: ஸமந்தாத்
லோகாந்ஸமக்ராந்வதநைர்ஜ்வலத்பி: |
தேஜோபிராபூர்ய ஜகத்ஸமக்ரம்
பாஸஸ்தவோக்ரா: ப்ரதபந்தி விஷ்ணோ || ௩௰ ||

(ப-ம்) ஸமக்ராந்-ஸம்பூர்ணமான, லோகாந்-ஜனங்களையும், ஜ்வலத்பி:-ஜொலிக்கின்ற, வதனை:-வாய்களாலே, க்ரஸமாந:-விழுங்குகிறவனாய், ஸமந்தாத்-நாலுபக்கமும், லேலிஹ்யஸே-(அடிக்கடி) உதட்டை நக்குகிறாய், தேஜோபி:-தேஜஸ்ஸுகளாலே, ஸமக்ரம்-எல்லா, ஜகத்-ஜகத்தையும், ஆபூர்ய-நிறைத்து, (ஹே) விஷ்ணோ-ஓவிஷ்ணுவே, தவ-உன்னுடைய, உக்ரா:-உக்கிரமான, பாஸ:-கிரணங்கள், ப்ரதபந்தி-தகிக்கின்றன. (௩௰)

(தா-ம்) கேசவா! நான்குதிசைகளிலுள்ள ஸமஸ்த அரசர்களையும் பிரகாசிக்கின்ற முகத்தில் புஜித்துவிட்டு மீண்டும் வாயைத்திறக்கின்றீர். உக்கிரமான உமது கிரணங்களுடையபிரகாசம் எங்கும் வ்யாபித்து ஸமஸ்த உலகத்தையும் தபிக்கச்செய்கின்றது.()

ஆக்யாஹி மே கோ பவாநுக்ரரூபோ
நமோऽஸ்து தே தேவவர ப்ரஸீத |
விஜ்ஞாதுமிச்சாமி பவந்தமாத்யம்
ந ஹி ப்ரஜாநாமி தவ ப்ரவ்ருத்திம் || ௩௧ ||

(ப-ம்) மே-எனக்கு, ஆக்யாஹி-சொல்லும்; உக்ரரூப:-க்ரூரரூபியான, பவாந்-நீர் க:-யார்? தே உமக்கு, நம:-நமஸ்காரம், அஸ்து-

உண்டாகட்டும்; (ஹே) தேவவர-ஓ தேவச்சிரேஷ்ட, ப்ரஸீத-அனுக்கிரஹியும், ஆத்யம்-ஆதியரான, பவந்தம்-உம்மை, விஜ்ஞாதும்-தெரிந்துக்கொள்ள, இச்சாமி-விரும்புகிறேன், தவ-உன்னுடைய, ப்ரவ்ருத்திம-விருத்தாந்தத்தை, நப்ரஜாநாமிஹி-அறியகில்லேனன்றோ.()

(தா-ம்) இத்தகைய உக்ரஸ்வரூபமுடைய நீங்களார்? (என்பதால் நுங்கள் அத்புதஸ்வரூபத்தைப பார்ப்பதற்குக் கருதிய எனக்கு நீங்களிப்படிப்பட்ட கோரரூபத்தைக் காண்பிப்பதெதற்கு?) அதை எனக்கு அறிவித்தல் வேண்டும், உமக்குவந்தனம். தேவேசா! அநுக்கிரகஞ் செய்யவேண்டும், ஆதிபுருஷனுன உண்மை தெரிந்துகொள்ள விரும்புகிறேன். நீவிற்செய்யப்போகிற காரியம் எனக்குத் தெரியவில்லை. (௩௧)

ஸ்ரீ கிருஷ்ணவாக்கியம்.

காலோஸ்மி லோகக்ஷயக்ருத்ப்ரவ்ருத்தோ
லோகாந்ஸமாஹர்துமிஹ ப்ரவ்ருத்த꞉ |
ருதேபி த்வா ந பவிஷ்யந்தி ஸர்வே
யேவஸ்திதா꞉ ப்ரத்யநீகேஷு யோதா꞉ || ௩௨ ||

(ப-ம) லோகக்ஷயக்ருத் - லோகங்களை க்ஷயிக்கப்பண்ணுவதும், ப்ரவ்ருத்த꞉-விருத்தியடைந்ததும், இஹ-இங்கே, லோகாந்-உலகங்களை, ஸமாஹர்த்தும் - ஸம்ஹரிக்க, ப்ரவ்ருத்த꞉ - பிரவர்த்தித்ததுமான, கால꞉ அஸ்மி-காலமாகிறேன், யே-எந்த, யோதா꞉-வீரர்கள், ப்ரத்யநீகேஷு - எதிரேசேனைகளில, அவஸ்த்திதா꞉ - இருக்கிறார்களோ, தே ஸர்வே - அவர்களெல்லாம், த்வாம்ருதேபி - உன்னைத்தவிர்த்தும், நபவிஷ்யந்தி-ஜீவிக்கமாட்டார்கள். (௩௨)

(தா-ம்) யான் இந்த இராஜ ஸமூகங்களை நாசப்படுத்துவதற்கு விர்த்தியடைந்திருக்காலமாகின்றேன். இவ்வுலகத்தைச்சம்கரிப்பதற்குப் பிரவர்த்தித்திருக்கிறேன். உனக்குப் பகையாளியாய் நிற்கின்ற யுத்த வீரர்க்கெல்லாம் நீவெருமையிருந்தாலும் ஜீவிக்க மாட்டார்கள். (௱௦) ப்ரவ்ருத்த꞉-எங்கும் பரிபூரணமாயிருக்கிற; (௩௨)

தஸ்மாத்த்வமுத்திஷ்ட யஶோ லபஸ்வ
ஜித்வா ஶத்ரூந்புங்க்ஷ்வ ராஜ்யம் ஸம்ருத்தம் |
மயைவைதே நிஹதா꞉ பூர்வமேவ
நிமித்தமாத்ரம் பவ ஸவ்யஸாசிந் || ௩௩ ||

(ப-ம்) தஸ்மாத்-ஆகையால், த்வம்-நீ, உத்திஷ்ட்ட-எழுந்திரு; யசஃ-கீர்த்தியை, லபஸ்வ-அடைவாய்யாக; சத்ரூந்-சத்துருக்களை, ஜித்வா-ஜெயித்து, ஸம்ருத்தம்-பரிபூர்ண, ராஜ்யம்-ராஜ்ஜியத்தையும், புங்க்ஷ்வ-அநுபவி. ஏதே-இவர்கள், மயா ஏவ-என்னாலேயே, பூர்வம் ஏவ-முன்னமே, நிஹதாஃ-சொல்லப்பட்டார்கள், (ஹே) ஸவ்யஸாசிந்-ஓ ஸவ்யஸாசியே, த்வம்-நீர், நிமித்தமாத்ரம்-நிமித்த மாத்திரமாக, பவ-ஆகு. (௩௩)

(தா-ம்) அர்ஜுனா! ஆதலால் நீ, பிரயத்தினப்பட்டு வைரிகளை வென்று புகழ்பெறுவாயாக, அகண்டராஜ்ஜியத்தை யநுபவித்துக் கொண்டிரு. இவர்களெல்லாரும் முன்னாலேயே என்னால் கொல்லப் பட்டார்கள். நீகாரணனாய் மாத்திரமிரு. (௩௩)

த்ரோணஞ்ச பீஷ்மஞ்ச ஜயத்ரதஞ்ச
கர்ணம் ததாந்யாநபி யோதவீராந் |
மயா ஹதாம்ஸ்த்வம் ஜஹி மா வ்யதிஷ்டா
யுத்யஸ்வ ஜேதாஸி ரணே ஸபத்நாந் || ௩௪||

(ப-ம்) மயா-என்னால், ஹதாந்-கொல்லப்பட்ட, த்ரோணஞ்ச-துரோணரையும், பீஷ்மஞ்ச-பீஷ்மரையும், ஜயத்ரதஞ்ச-ஜயத்திரதனையும், கர்ணஞ்ச-கர்ணனையும், ததா-அப்படி, ஹதாந்-கொல்லப்பட்ட, அந்யாந்-இதரமான, யோதவீராந் அபி-யுத்தவீரர்களையும், த்வம்-நீ; ஜஹி-கொல்வாயாக, மாவ்யதிஷ்டாஃ-வேதனைப்படாதே, யுத்யஸ்வ-போர்செய், ரணே-யுத்தத்தில், ஸபத்நாந்-பகைவரை, ஜேதாஸி-ஜயிப்பாய், (௩௪)

(தா-ம்) நீ, இப்பொழுது என்னால் சொல்லப்பட்ட துரோணரையும், கர்ணனையும், இன்னுமுள்ள யுத்தவீரர்களையும், நாசஞ்செய்வாயாக. விசனம்வேண்டாம் - போர்புரி யுத்தத்தில் சத்ருக்களை ஜெயிப்பாய். (௩௪)

ஸஞ்சயர் சொல்லுகிறார்.

ஏதச்ச்ருத்வா வசநம் கேசவஸ்ய
க்ருதாஞ்ஜலிர்வேபமாந: கிரீடீ |
நமஸ்க்ருத்வா பூய ஏவாஹ க்ருஷ்ணம்
ஸகத்கதம் பீதபீத: ப்ரணம்ய || ௩௫||

(ப-ம்) கிரீட-அர்ச்சுனன், கேசவஸ்ய-கிருஷ்ணனுடைய, ஏதத்வசநம்-இந்தவார்த்தையை, ச்ருத்வா-கேட்டு, க்ருதஅஞ்ஜலி:-கூப்பியகையுடன், வேபமாந:-நடுங்கிக்கொண்டு, நமஸ்க்ருத்வா-நமஸ்காரஞ்செய்து, பீதபீத:-பயந்து பயந்து, ப்ரணம்ய-வணங்கி, பூய:ஏவ-மறுபடியும், ஸகத்கதம்-கத்கதஸ்வரத்தோடு, க்ருஷ்ணம் - கிருஷ்ணனை (க்குறித்து), ஆஹ-சொல்லுகிறார். (௩௫)

(தா-ம்) கிருஷ்ணனது இம்மொழிகளைக்கேட்டு அஞ்சலிசெய்து நடுநடுங்கினவனாய் வணங்கி மிகப்பயந்து மீண்டும் வணங்கி ஹீனஸ்வரத்தோடு கிருஷ்ணனைப்பார்த்து கீழ் வருமாறு கூறுகின்றான். (௩௫)

அர்ஜுனன் சொல்லுகிறான்.

𑌸𑍍𑌥𑌾𑌨𑍇 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶 𑌤𑌵 𑌪𑍍𑌰𑌕𑍀𑌰𑍍𑌤𑍍𑌯𑌾
𑌜𑌗𑌤𑍍𑌪𑍍𑌰𑌹𑍃𑌷𑍍𑌯𑌤𑍍𑌯𑌨𑍁𑌰𑌜𑍍𑌯𑌤𑍇 𑌚 ।
𑌰𑌕𑍍𑌷𑌾𑌂𑌸𑌿 𑌭𑍀𑌤𑌾𑌨𑌿 𑌦𑌿𑌶𑍋 𑌦𑍍𑌰𑌵𑌨𑍍𑌤𑌿
𑌸𑌰𑍍𑌵𑍇 𑌨𑌮𑌸𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌚 𑌸𑌿𑌦𑍍𑌧𑌸𑌙𑍍𑌘𑌾𑌃 ॥ ௩௬ ॥

(ப-ம்) ஸ்தாநே-யுக்தம், (ஹே) ஹ்ருஷீகேச-ஓ இருடீகேச! தவ-உன்னுடைய, ப்ரகீர்த்யா-கீர்த்தியால், ஜகத்-ஜகத்தானது, ப்ரஹ்ருஷ்யதி-மிகவும்சந்தோஷிக்கின்றது, அநுரஜ்யதேச-அனுராகத்தையுமுறுகின்றது; ரக்ஷாம்ஸி-ராக்ஷஸர்கள், பீதாநி-பயந்து, திச:-திசைகளை (நோக்கி), த்ரவந்தி-ஓடுகின்றார்கள், ஸர்வே-ஸமஸ்தமான, ஸித்தஸங்கா:ச-சித்தக்கணங்களும், நமஸ்யந்தி-வணங்குகின்றன. (௩௬)

(தா-ம்) ஓ ஹ்ருஷீகேசா! உமது கீர்த்தியினால் பிரபஞ்சம் சந்தோஷிக்கின்றன. உம்மிடத்தி லன்புண்டாயிருக்கிறது. இராக்கதர் திக்குகளிற பயந்தோடுகிறார்கள். ஸித்தவித்யாதரர்முதலிய வானவர்களெல்லவரு மொருங்காய்ச்சேர்ந்து வணங்குகின்றார்க ளென்பது நியாயமேதான். (சிறந்தவர்க்கெல்லாம் சிறந்தவராயும், ப்ரம்மனைப் படைத்தவராயு மிருக்கிற நுங்களை எவர்தான் வணங்கார்?) (௩௬)

𑌕𑌸𑍍𑌮𑌾𑌚𑍍𑌚 𑌤𑍇 𑌨 𑌨𑌮𑍇𑌰𑌨𑍍𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑍍
𑌗𑌰𑍀𑌯𑌸𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋𑌽𑌪𑍍𑌯𑌾𑌦𑌿𑌕𑌰𑍍𑌤𑍍𑌰𑍇 ।
𑌅𑌨𑌨𑍍𑌤 𑌦𑍇𑌵𑍇𑌶 𑌜𑌗𑌨𑍍𑌨𑌿𑌵𑌾𑌸
𑌤𑍍𑌵𑌮𑌕𑍍𑌷𑌰𑌂 𑌸𑌦𑌸𑌤𑍍𑌤𑌤𑍍𑌪𑌰𑌂 𑌯𑌤𑍍 ॥ ௩௭ ॥

(ப-ம்) (ஹே) மஹாத்மந்-ஓ மஹாத்துமாவே! கரீயஸே-பெரியவனாய், ப்ரம்ஹண: அபி-பிரமனுக்கும், ஆதிகர்த்ரே-ஆதிகர்த்தாவான, தே-உமக்கு, கஸ்மாத்-ஏன், நநமேரந், நமஸ்கரியார்கள். அநந்த-அந்தமில்லாதவனே, தேவேச-தேவர்களுக்கிறையாய், ஜகந்நிவாஸ-லோகங்களுக்கு உறைவிடமான, த்வம்-நீரே, அக்ஷரம்-ஜீவாத்மதத்துவம்; ஸத்அஸத்ச-பிரகிருதிதத்துவமும், த்வம ஏவ-நீரே; தத்பரம்-அவையிரண்டைப் பார்க்கிலும் வேறான முக்தாத்துமாவோ அவையெல்லாவற்றிலும், அந்தர்யாமியாயிருப்பவன், யத் - எதுவோ (அந்தமுக்தஸ்வரூபமும்), (த்வம்)-நீரே. (௩௭)

(தா-ம்) ஓ மஹாத்மா! அநந்தகல்யாண குணங்களால் மிக்கசிறப்புடைத்தாயும், ப்ரம்மதேவனுக்கு ஆதிகர்த்தருமான நுங்களுக்கு ப்ரம்மன் முதலிய தேவர்கள் ஏன் நமஸ்கரிக்கமாட்டார்கள்? ஓ அநந்தா! தேவேசா! ஜகந்நிவாஸா! அக்ஷரமெனப்படும் ஜீவாத்மஸ்வரூபம் நீங்களே. காரியகாரணரூபமான ப்ரகிருதிதத்துவமும் நீங்களே. இவ்விரண்டிற்கும் வேறாயும், பிரகிருதிஸம்பந்தமற்றுமிருக்கிற ஆத்ம தத்துவமும் நீங்களே. (ம)மஹாத்மந் - பூர்ணமான ஆத்மா. (௩௭)

த்வமாதிதேவ: புருஷ: புராண:
த்வமஸ்ய விஶ்வஸ்ய பரம் நிதாநம்|
வேத்தாஸி வேத்யம் ச பரம் ச தாம
த்வயா ததம் விஶ்வமநந்தரூப|| ௩௮||

(ப-ம்) த்வம்-நீரே, ஆதிதேவ:-ஆதிதேவன், புருஷ:-புருஷன், புராண:-புராணன், அஸ்ய விஶ்வஸ்ய-இந்தப்பிரபஞ்சத்துக்கு, பரம்-மேலான, நிதானம்-ஆதாரமானவனும், த்வம்-நீர் தான். வேத்தா அஸி-அறிந்தவன் ஆகிறாய்; வேத்யம்ச - அறியத்தகுந்தவன்; பரம் தாம ச-பெருமஸ்தானமும், அஸி-ஆகிறீர்; (ஹே) அநந்தரூப-ஓ அனந்தரூபனே! விஶ்வம்-பிரபஞ்சம், த்வயா உன்னால், ததம்-வியாபிக்கப்பட்டது. (௩௮)

(தா-ம்) நீங்களே ஆதிபுருஷனாயும், புராணபுருஷனாயும். இவ்வுலகத்திற்கு முக்கியகாரணனாயும், வேத்தாவாயும், (அறிந்தவன்) வேத்யனாயும் (அறியற்பாலன்) அடையத்தக்கவனாயு மிருக்கிறீர் ஓ அநந்தரூபா! (அபரிச்சின்னாகாரா) இவ்வுலகமெல்லாம் உம்மாலேயே வ்யாபிக்கப்பட்டிருக்கிறது. (௩௮)

வாயுர்யமோ(அ)க்நிர்வருண: ஶஶாங்க:
ப்ரஜாபதிஸ்த்வம் ப்ரபிதாமஹஶ்ச|

𑌨𑌮𑍋 𑌨𑌮𑌸𑍍𑌤𑍇𑌽𑌸𑍍𑌤𑍁 𑌸𑌹𑌸𑍍𑌰𑌕𑍃𑌤𑍍𑌵𑌃
𑌪𑍁𑌨𑌶𑍍𑌚 𑌭𑍂𑌯𑍋𑌽𑌪𑌿 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌸𑍍𑌤𑍇 ॥ ௩௯ ॥

(ப-ம்) த்வம்-நீர், வாயு:-வாயு; யம:-இயமன்; அக்நி:-அக்கினி; வருண:-வருணன்; ஶஶாங்க:-சந்திரன்; பிதாமஹ:-பிரஜாபதியும், ப்ரபிதாமஹஶ்ச-பிரஜாபதிக்கு தகப்பனும், (பவஸி)-ஆகிறீர். தே-உமக்கு, நம: அஸ்து-நமஸ்காரமுண்டாகுக; ஸஹஸ்ரக்ருத்வ:-ஆயிரந்தடவை, நம:(அஸ்து)-நமஸ்காரமுண்டாகுக; புநஶ்ச-மறுபடியும், நம:(அஸ்து)-நமஸ்காரமுண்டாகுக, பூய: அபி-மறுபடியும், தே-உமக்கு, நம:-நமஸ்காரம். (௩௯)

(தா-ம்) நீவிர்காற்றும், எமனும், அக்நியாயும், வருணனும், சந்திரனும், பிதாமஹனும், (ப்ரம்மன்) பிதாமஹனுக்கு (ப்ரம்மனுக்கு) தந்தையாயுமிருக்கின்றீர். ஆயிரம்வந்தனம். மீண்டும் பற்பல வந்தனம்! வந்தனம்!! வந்தனம்!!! (ஸ0) பூயோபிபுநஶ்ச-அனேகந்தடவை. (௩௯)

𑌨𑌮𑌃 𑌪𑍁𑌰𑌸𑍍𑌤𑌾𑌦𑌥 𑌪𑍃𑌷𑍍𑌠𑌤𑌸𑍍𑌤𑍇
𑌨𑌮𑍋𑌽𑌸𑍍𑌤𑍁 𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌤 𑌏𑌵 𑌸𑌰𑍍𑌵 ।
𑌅𑌨𑌨𑍍𑌤𑌵𑍀𑌰𑍍𑌯𑌾𑌮𑌿𑌤𑌵𑌿𑌕𑍍𑌰𑌮𑌸𑍍𑌤𑍍𑌵𑌂
𑌸𑌰𑍍𑌵𑌂 𑌸𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌷𑌿 𑌤𑌤𑍋𑌽𑌸𑌿 𑌸𑌰𑍍𑌵𑌃 ॥ ௪௰ ॥

(ப-ம்) புரஸ்தாத்-எதிரில், நம:-நமஸ்காரம்; அத-இனிமேல் ப்ருஷ்ட்டத:-பின்புறத்தில், தே-உமக்கு, நம:-நமஸ்காரம்; (ஹே) ஸர்வ-ஓ ஸர்வரூப! ஸர்வத ஏவ-எப்புறத்திலும், தே-உமக்கு, நம:-நமஸ்காரம், அஸ்து-உண்டாகட்டும். (ஹே) அநந்தவீர்ய-அந்தமில்லாத வீரியமுடையோய்! த்வம்-நீர், அமிதவிக்ரம: - அளவிடப்படாத பராக்கிரமமுடையீர்; ஸர்வம்-எல்லாவற்றையும், ஸமாப்நோஷி-வ்யாபித்திருக்கிறீர், தத:-ஆகையால், ஸர்வ: அஸி-ஸர்வஸ்வரூபனாக வாகின்றீர். (௪௦)

(தா-ம்) ஓ ஸ்வரூபி! உமது முன்பாகத்திற்கு நமஸ்காரம்! பின்பாகத்திற்கு நமஸ்காரம்! நான்குதிக்குகளுக்கும் நமஸ்காரம்! ஓ அபரிமிதசக்தியுடைய மகாநுபவா! நீவிர் அபரிமிதபராக்கிரமமுடையவராயும், எல்லா வஸ்துக்களிலும் வியாபித்து மிருக்கின்றீராதலால் ஸர்வமும் நீங்களே. (௪௦)

ஸகேதி மத்வா ப்ரஸபம் யதுக்தம்
ஹே க்ருஷ்ண ஹே யாதவ ஹே ஸகேதி|
அஜாநதா மஹிமாநம் தவேதம்
மயா ப்ரமாதாத்ப்ரணயேந வாபி|| ௪௧||
யச்சாவஹாஸார்த்தமஸத்க்ருதோஸி
விஹாரசய்யாஸநபோஜநேஷு|
ஏகோதவாப்யச்யுத தத்ஸமக்ஷம்
தத்க்ஷாமயே த்வாமஹமப்ரமேயம்|| ௪௨||

(ப-ம்) தவ-உன்னுடைய, இமம்மஹிமாநம் - இந்தமஹிமையை, அஜாநதா - அறியாத, மயா-என்னால், ப்ரமாதாத்-அஜாக்கிரதையாலோ; ப்ரணயேநவாபி-(அல்லது) ஸ்நேகத்தாலோ, ஸகா இதி-தோழன் என்று, மத்வா-நினைத்து, ஹேக்ருஷ்ண-"ஓ கிருஷ்ணா! ஹே யாதவ-ஓ யாதவ! ஹேஸகே-ஓதோழ!" இதி-என்று, ப்ரஸபம்-பயமின்றி, யத்உக்தம்-எதுசொல்லப்பட்டதோ, அச்யுத-ஓ அச்சுத! விஹாரசய்யா-ஸஞ்சரிப்பதிலும், படுக்கையிலும், ஆஸநபோஜநேஷு-இருக்கையிலும் புசிக்கையிலும், ஏகாந்தம்-ஏகாந்தமாயோ, அதவா-இல்லாவிடில், ஸமக்ஷம் - உம் முன்னிலையிலோ, அவஹாஸார்த்தம்-வேடிக்கைக்காக, அஸத்க்ருதோஅஸி இதியத்-பூஜிக்கப்படவில்லையென்கிறது யாதொன்றுண்டோ, தத் அபி-அதையும், அப்ரமேயம்-அறிவரியவுனை, த்வாம்-உம்மை(க்கொண்டு), அஹம்-நான், க்ஷாமயே-க்ஷமிக்கவேண்டுமென்று, ப்ரார்த்திக்கிறேன். (௪௧-௪௨)

(தா-ம்) இப்படிப்பட்ட நுங்கள் மஹிமையை யுணராது அஞ்ஞானத்தினாலாவது, சிநேகாலபரியத்தினாலாவது, மித்திரனென்றெண்ணி வினயமின்றி ஓ கிருஷ்ணா! ஓ யாதவா! ஓ சினேகிதனே! என்று பலமுறைகள் அழைத்திருக்கிறேன். அவைகளையும் அச்சுதா! பரிகாசமாய் விளையாடும்போதும், படுக்கும்போதும், புசிக்கும்போதும், ஏகாந்தத்திலும், ஜனஸமூகங்களிலும், மட்டுமரியாதையில்லாமல் வசனித்தேனோ என்னமோ அறிகிலம். அப்படியிருப்பின் அவைகளைத் தாங்கள க்ஷமிக்கவேண்டுமென்று விநயத்துடன்பிரார்த்திக்கின்றேன். (௪௧-௪௨)

பிதாஸி லோகஸ்ய சராசரஸ்ய
த்வமஸ்ய பூஜ்யஶ்ச குருர்கரீயாந்|
ந த்வத்ஸமோஸ்த்யப்யதிக: குதோந்யோ
லோகத்ரயேப்யப்ரதிமப்ரபாவ|| ௪௩||

(ப-ம்) ஹே அப்ரதிமப்ரபாவ-ஒப்பில்லாத பிரபாவமுடையவரே! த்வம்-நீர், சராசரஸ்ய-ஜங்கமாஜங்கமரூபமான, அஸ்ய-இந்த, லோகஸ்ய - பிராணிஸமூஹத்துக்கு, பிதா-பிதாவும், பூஜ்ய:-பூஜ்யனும், குரு:-குருவும், கரீயாந்ச-பெரியவரும், அஸி-ஆகிறீர், லோகத்ரயேபி - உலகமூன்றிலும், த்வத்ஸம:-உமக்குஈடு, நாஸ்தி-இல்லை, அப்யதிக:-அதிகனான, அந்ய: ஒருவன், குத: - எந்தஹேதுவினால் (உண்டாவான்). (௪௩)

(தா-ம்) ஸமானமில்லாப் பிரபாவமுடையவனே! நீவிர் ஜங்கமஸ்தாவரரூபமான இப்பிரபஞ்சத்திற்குத் தந்தையாயும், எல்லாவற்றிற்கும் பூஜ்ஜியனாயு மிருக்கிறீராதலால் எல்லாவற்றிலும் சிறந்தவர் உமக்குச் சமானையானவரும். (௪௩)

தஸ்மாத் ப்ரணம்ய ப்ரணிதாய காயம்
ப்ரஸாதயே த்வாமஹமீசமீட்யம்।
பிதேவ புத்ரஸ்ய ஸகேவ ஸக்யு:
ப்ரிய: ப்ரியாயார்ஹஸி தேவ ஸோடும்॥ ௪௪॥

(ப-ம்) தஸ்மாத் ஆகையால், ப்ரணம்ய-நமஸ்கரி, காயம்-சரீரத்தை, ப்ரணிதாய-(பூமியில்) ஊன்றி, ஈசம்-ஈசுவரனாய், ஈட்யம்-ஸ்தோத்திரார்ஹனான, த்வாம்-உம்மை, அஹம்-நான், ப்ரஸாதயே-பிரஸன்னமாக்கிக்கொள்ளுகிறேன், (ஹே) தேவ-ஓ தேவனே! புத்ரஸ்ய-புத்திரனுக்கு, பிதாஇவ-பிதாவைப்போலவும், ப்ரிய: இஷ்டனை (நீர)ப்ரியாய-இஷ்டனான,(மே)-எனக்காக, ஸோடும்-பொறுக்க, அர்ஹஸி-தகுந்தவனாகிறாய். (௪௪)

(தா-ம்) தேவா! ஆகையால் நமஸ்கரித்து மிகுந்த வினயத்தோடு ஈசனாயும், ஸ்தோத்திரார்கனாயுமிருக்கிற உன்னை பிரார்த்தித்தேன். புத்திரனிடத்தில் தகப்பன் எப்படியிருப்பானோ, நேசனிடத்தில் சிநேகிதனெவ்வாறிருப்பானோ, அவ்வாறே உனக்கிஷ்டனான என்னிடத்தில் எனக்கிஷ்டனான நீ எல்லாவற்றிலும் க்ஷமிப்பதற்குரியவனாகிறாய், (௪௪)

அத்ருஷ்டபூர்வம் ஹ்ருஷிதோऽஸ்மி த்ருஷ்ட்வா
பயேன ச ப்ரவ்யதிதம் மநோ மே।
ததேவ மே தர்சய தேவ ரூபம்
ப்ரஸீத தேவேச ஜகந்நிவாஸ॥ ௪௫॥

(ப-ம்) அத்ருஷ்டபூர்வம் - முன்பார்த்திராததை, த்ருஷ்ட்வா-

பார்த்து, ஹ்ருஷிதம்-ஸந்தோஷமடைந்தவனாக, அஸ்மி-ஆகிறேன். மே-என்னுடைய, மந:ச-மனமும், பயேந-பயத்தால், ப்ரவ்யதிதம்-பீடிக்கப்பட்டிருக்கிறது-(ஹே), தேவ-ஓ தேவனே! தத்ரூபம் ஏவ-அந்தரூபத்தையே, மே-எனக்கு, தர்சய-காட்டும், (ஹே) ஜகந்நிவாஸ-ஓ உலகத்துக்குறைவிடமே! (ஹே) தேவேச-ஓதேவனாத! ப்ரஸீத-அனுக்கிரஹியும். (௪௫)

(தா-ம்) தேவா! இதுவரையிலும் காணப்பெறாத உன் உக்கிர ரூபத்தைக்கண்டு களித்தேன். ஆயினும் என்மனம் பீதியினால் பீடிக்கப்பட்டதாயிற்று. ஆதலால் ஓ ஜகந்நிவாஸா! என்னிடத்திலன்பு வைத்து இரக்ஷிப்பீராக. (௪௫)

𑌕𑌿𑌰𑍀𑌟𑌿𑌨𑌂 𑌗𑌦𑌿𑌨𑌂 𑌚𑌕𑍍𑌰𑌹𑌸𑍍𑌤-
𑌮𑌿𑌚𑍍𑌛𑌾𑌮𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌮𑌹𑌂 𑌤𑌥𑍈𑌵 ।
𑌤𑍇𑌨𑍈𑌵 𑌰𑍂𑌪𑍇𑌣 𑌚𑌤𑍁𑌰𑍍𑌭𑍁𑌜𑍇𑌨
𑌸𑌹𑌸𑍍𑌰𑌬𑌾𑌹𑍋 𑌭𑌵 𑌵𑌿𑌶𑍍𑌵𑌮𑍂𑌰𑍍𑌤𑍇 ॥ ௪௬ ॥

(ப-ம்) ததைவ-அப்படியே, கிரீடிநம்-கிரீடமுடையராய், கதிநம்-கதையுடையராய், சக்ரஹஸ்தம் - சக்கிரக்கையராகிய, த்வாம்-உன்னை, த்ரஷ்டும்-பார்க்க, அஹம்-நான், இச்சாமி-விரும்புகிறேன், (ஹே) ஸஹஸ்ரபாஹோ-ஓ ஆயிரந்தோளாய்! (ஹே) விச்வமூர்தே-ஓஸர்வஸ்வரூப! சதுர்புஜேந-நான்குதோளுடைய, தேநரூபேண ஏவ-அவ்வுருவத்தோடேயே, பவ-ஆகுவீர். (௪௬)

(தா-ம்) ஓ ஸஹஸ்ரபாஹோ! விச்வரூபா! கிரீடம் கதை இவைகளைத்தரித்தவராயும், வச்ராயுதத்தை ஹஸ்தத்தி லுடையவராயுமிருக்கிற உம்மை அரூபியாய்ப் பார்ப்பதற்கு விரும்புகின்றேன். நான்கு புஜமுடைய அந்த சரீரத்துட னிருக்கவேண்டும். (௪௬)

ஸ்ரீகிருஷ்ண வாக்கியம்.

𑌮𑌯𑌾 𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑍇𑌨 𑌤𑌵𑌾𑌰𑍍𑌜𑍁𑌨𑍇𑌦𑌂
𑌰𑍂𑌪𑌂 𑌪𑌰𑌂 𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑌮𑌾𑌤𑍍𑌮𑌯𑍋𑌗𑌾𑌤𑍍 ।
𑌤𑍇𑌜𑍋𑌮𑌯𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌮𑌨𑌨𑍍𑌤𑌮𑌾𑌦𑍍𑌯𑌂
𑌯𑌨𑍍𑌮𑍇 𑌤𑍍𑌵𑌦𑌨𑍍𑌯𑍇𑌨 𑌨 𑌦𑍃𑌷𑍍𑌟𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑍍 ॥ ௪௭ ॥

(ப-ம்) ஹே அர்ஜுந-ஓ அருச்சுனா! ப்ரஸந்நேந-பிரஸன்னனான, மயா-என்னால், தேஜோமயம்-தேஜஸ்வரூபமும், அநந்தம்-அந்தமற்றதும், ஆத்யம்-முதலானதும், பரம்-மேலானதுமான, இதம்-இந்த, விச்வரூபம்-விச்வரூபமானது, ஆத்மயோகாத்-எனது

யோகத்தால், தவ-உனக்கு, தர்சிதம்-காட்டப்பட்டது, மே-எனது, யத்-எந்த(இந்தரூபமானது); த்வத்-உன்னைத்தவிர, அந்யேந-மற்றவனால், த்ருஷ்டபூர்வம்-முன்பார்க்கப்பட்டது, ந-அல்ல. (சஎ)

(தா-ம்) அர்ஜுநா! உன்னைத்தவிர வேறொருவராலும் முன்பார்த்திராததாயும் தேஜோரூபமாயும், முடிவில்லாததாயும், முதன்மையாயும், சிறப்புடையதாயுமுள்ள இந்த என் விஸ்வரூபத்தை உனக்கநுக்கிரகிக்கவேண்டுமென்ற கருத்தோடு என் சங்கற்பத்தினால் உனக்குக் காண்பித்தேன். (சஎ)

நவெடயஜாயநெர நடாநெ
நவ க்ரியாலிநடதவொலிரவெ ஃ।
வைவம்ரவெஸூகெஹம் நுலொகெ
உஷநவெநு நுகு ர வைர॥ சஅ॥

(ப-ம்) (ஹே) குருப்ரவீர- ஓ குருச்சிரேஷ்ட, ஏவம்ரூபஃ-இப்படிப்பட்ட ரூபமுள்ள, அஹம்-நான், ந்ருலோகே-மானிடலோகத்தில், த்வத்-உன்னைத்தவிர, அந்யேந-வேறொருவனால், வேதயஜ்ஞ அத்யயநைஃ-வேதத்தினாலும் யாகத்தினாலும், அத்யயனத்தாலும், த்ரஷ்டும்-பார்க்க, நசக்யஃ- ஸத்தியமானவனன்று, தாநைஃ-தானங்களால், ந-அல்ல; க்ரியாபிஃ-கிரியைகளாலும், ந- அல்ல; உக்ரைஃ- பயங்கரமான, தபோபிஃ- தவங்களால், ந- அல்ல.(சஅ)

(தா-ம்) குருஸ்ரேஷ்டா! வேதங்களாலும், யக்ஞங்களாலும், அத்யயனங்களாலும், தானங்களாலும், கர்மங்களாலும், உக்கிரமான தவங்களாலும், உன்னைத்தவிர வேறெவருக்கும் மானிடசரீரத்திலிருந்து இந்த ரூபத்தோடு என்னைப்பார்ப்பதற்கு முடியாது. (சஅ)

ஊவெதவுயாவிவஷாவொதஷூராவெவொர
ஸிஜெடூ। வுவெதஸீஃதநாஃவநஸா தநெவ
ரெவெவிஷவுவயூ॥ சகூ॥

(ப-ம்) மம- என்னுடைய, கோரம்- கோரமான, ஈத்ருக்-இப்படிப்பட்ட, இதம்- இந்த, ரூபம்- ரூபத்தை, த்ருஷ்டவா- பார்த்து, தே- உனக்கு, வ்யதா- துன்பம், மா(பூத்)- வேண்டாம்; விமூடபாவஃ- முசித்துக்கிடக்கையும், மா- வேண்டாம், த்வம்- நீ, வ்யபேதபிஃ- பயம்நீங்கினவனும், ப்ரீத மநாஃசஸந்- பிரீதியுற்றமனமுமாய், மே- என்னுடைய, தத் இதம்- அந்த இந்த, ரூபம் ஏவ- ரூபத்தையே, புநஃ- மறுபடியும், ப்ரபச்ய- பார். (சகூ)

(தா-ம்) இப்படிப்பட்ட கோரரூபத்தைப் பார்த்து உனக்கு பீதியும், மோகமும் உண்டாகவேண்டாம். நிர்பயனாய் சந்தோஷத்துடன் என் முன்னிருந்த சாந்தஸ்வரூபத்தையே நீ இப்போ பார்மின்! (௪௯)

ஸஞ்ஜயவாக்கியம்.

இத்யர்ஜுநம் வாஸுதேவஸ்ததோக்த்வா ஸ்வகம் ரூபம்
தர்சயாமாஸ பூய: | ஆச்வாஸயாமாஸ ச பீதமேநம்
பூத்வா புந: ஸௌம்யவபுர்மஹாத்மா || ௫௰||

(ப-ம்) வாஸுதேவ: - வாசுதேவன், அர்ஜுநம்ப்ரதி - அர்ச்சுனனைக்குறித்து, இதிஉக்த்வா - இப்படிசொல்லி, ததா - அப்படி, ஸ்வகம் - தனதான, ரூபம் - ரூபத்தை, பூய: - மறுபடியும், தர்சயாமாஸ - காட்டினார், மஹாத்மா - மஹாத்மாவான (கண்ணன்), புந: - மறுபடி, ஸௌம்யவபு: - சவும்மியமான சரீரமுடையவராக, பூத்வா - ஆகி, பீதம் - பயந்த, ஏநம் - இவனை, ஆச்வாஸயாமாஸ - தேற்றினார். (௫௰)

(தா-ம்) வாசுதேவனிவ்வண்ணம் அர்ஜ்ஜுனனைக் குறித்துக் கூறியபிறகு மீண்டும் தனதுஸ்வரூபத்தைக் காண்பித்தனர். அந்த மஹாத்மா அப்பிறகு சாந்தரூபனாய் பீதியடைந்திருக்கிற அர்ஜ்ஜுனனை சமாதானப்படுத்தினார். (௫௰)

அர்ஜுனவாக்கியம்.

த்ருஷ்ட்வேதம் மாநுஷம் ரூபம் தவ ஸௌம்யம் ஜநார்தந |
இதாநீமஸ்மி ஸம்வ்ருத்த: ஸசேதா: ப்ரக்ருதிம் கத: || ௫௧||

(ப-ம்) (ஹே)ஜநார்தந - ஓ கிருஷ்ணா! தவ - உம்முடைய, ஸௌம்யம் - ஸவும்மியமான, இதம் - இந்த, மாநுஷம் - மானிட, ரூபம் - உருவத்தை, த்ருஷ்ட்வா - கண்டு, இதாநீம் - இப்பொழுது, ஸசேதா: - நினைவுடன் கூடியவனாய், ஸம்வ்ருத்த: - அஸ்மி ஆனேன், ப்ரக்ருதிம் - சுபாவத்தை, கத: - அடைந்தேன். (௫௧)

(தா-ம்) ஏ ஜநார்த்தனா! உமது சாந்தமான இந்த மானிட சரீரத்தைப்பார்த்து யான் இப்பொழுது பயமற்ற மனதுடையவனாய் ஸ்வபாதத்தை யடைந்தவனாகின்றேன். (௫௧)

ஸ்ரீகிருஷ்ணவாக்கியம்.

ஸுதுர்தர்சமிதம் ரூபம் த்ருஷ்டவாநஸி யந்மம |
தேவா அப்யஸ்ய ரூபஸ்ய நித்யம் தர்சநகாங்க்ஷிண: || ௫௨||

(ப-ம்) மம - எனது, யத் இதம் - எந்த இந்த, ரூபம் - ரூபத்தை, த்ருஷ்டவாந் - (நீ) பார்த்தவனாக, அஸி - ஆகிறாயோ, தத்-அந்த, இதம் - இது, ஸுதுர்தர்சம் - மிகவும் வருத்தத்தால் காணக்கூடியது, தேவா: அபி - தேவர்களும், நித்யம் - எப்போதும், அஸ்ய - இந்த, ரூபஸ்ய - ரூபத்தை, தர்சநகாங்க்ஷிண: - காண விரும்பினார்களாய், (பவந்தி) - ஆகிறார்கள். (௫௨)

(தா-ம்) அர்ஜ்ஜுனா! நீ பார்த்த இந்த என்ரூபத்தை தர்சிப்பது மிகக்கடினமானது. இந்திரன் முதலிய தேவர்கள் கூட இந்த விஸ்வரூபத்தைக் காண்பதற்கு தினந்தோறும் ப்ரார்த்தித்துக்கொண்டிருக்கிறார்கள். அப்படி ப்ரார்த்தித்தும் இந்த விஸ்வரூபத்தைப் பார்த்தவர்களாகவில்லை. (௫௨)

𑌨𑌾𑌹𑌂𑌵𑍇𑌦𑍈𑌰𑍍𑌨𑌤𑌪𑌸𑌾 𑌨𑌦𑌾𑌨𑍇𑌨 𑌨𑌚𑍇𑌜𑍍𑌯𑌯𑌾।
𑌶𑌕𑍍𑌯 𑌏𑌵𑌂𑌵𑌿𑌧𑍋 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑌵𑌾𑌨𑌸𑌿 𑌮𑌾𑌂𑌯𑌥𑌾॥௫௩॥

(ப-ம்) மாம் - என்னை, யதா - எப்படி, த்ருஷ்டவாந்-பார்த்தவன், அஸி - ஆகிறாயோ, ஏவம் விதஃ - இந்தவிதமான, அஹம்-நான், வேதைஃ - வேதங்களால், த்ரஷ்டும் - காண, சக்யஃ ந - கூடியவனல்ல, தபஸா - தவத்தால், ந - அல்ல; தானேந - தானத்தால், ந - அல்ல; இஜ்யயாச - யாகத்தால், ந - அல்ல. (௫௩)

(தா-ம்) வேதங்களாலும், தவத்தினாலும், தானத்தினாலும், யக்ஞங்களாலும், எனது உண்மையான ஸ்வரூபத்தை நீ இப்பொழுது பார்த்ததுபோல் பார்ப்பதற்குச் சாத்தியமன்று. (௫௩)

𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌵𑌨𑌨𑍍𑌯𑌯𑌾𑌶𑌕𑍍𑌯 𑌅𑌹𑌮𑍇𑌵𑌂𑌵𑌿𑌧𑍋𑌽𑌰𑍍𑌜𑍁𑌨।
𑌜𑍍𑌞𑌾𑌤𑍁𑌂𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌂𑌚𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑍇𑌨 𑌪𑍍𑌰𑌵𑍇𑌷𑍍𑌟𑍁𑌂𑌚𑌪𑌰𑌨𑍍𑌤𑌪॥௫௪॥

(ப-ம்) பரந்தப - பகைவரைத்தபிக்கும், (ஹே) அர்ஜுந - ஓ அர்ச்சுனா! ஏவம் விதம் - இந்தவிதமான, அஹம் - நான், அநந்யயா - மற்றொன்றையும் நாடாத, பக்த்யா - பக்தியினால், ஜ்ஞாதும்-அறியவும், தத்வேந - உள்ளபடியே, த்ரஷ்டும்ச - காணவும், ப்ரவேஷ்டும்ச - ப்ரவேசிப்பதவும், சக்யஃ - கூடியவன். (௫௪)

(தா-ம்) அர்ஜ்ஜுனா! ஓ பரந்தபா! வேறு பக்தியினால் (பலத்தைவிரும்பிய பக்தியினால்) எனது இப்படிப்பட்ட ரூபத்தை உண்மையாய்க்கண்டு தெளிவதற்கும், தர்சிப்பதற்கும், ஐக்கியத்தையடைவதற்கு முடியாது. (௫௪)

𑌮𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌕𑍃𑌨𑍍𑌮𑌤𑍍𑌪𑌰𑌮𑍋 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌃𑌸𑌙𑍍𑌗𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌃।

நிர்வைர: ஸர்வபூதேஷு ய: ஸ மாமேதி பாண்டவ ॥ ௫௫ ॥

(ப-ம்) மத் கர்ம க்ருத் - எனக்காகக்கருமத்தைச் செய்பவனும், மத்பரம: - யானேகதியாயிருப்பவனும், மத்பக்த: - என்னிடத்தில் பக்தியுடையனும், ஸங்கவர்ஜித: - பற்றொழித்தவனும், ஸர்வபூதேஷு - எல்லாப்பூதங்களிலும், நிர்வைர: - வைரமற்றவனும், ய: - எவனோ, ஸ: - அவன், (ஹே) பாண்டவ - ஓ பாண்டுபுத்திர! மாம் - என்னை, ஏதி - அடைகின்றான். (௫௫)

(தா-ம்) பாண்டவா! எவர் எல்லா கர்மங்களையும், எனது ஆராதனரூபமாய்ச் செய்கிறார்களோ, எந்தன்திருவடிகளையே அடையவேணுமென்றெண்ணி எந்தனிடத்தில் பக்தியுண்டாகி வேறு வஸ்துக்களில் ஆசையில்லாதவர்களாய் ஸர்வப் பிராணிகளிடத்திலும் த்வேஷமில்லாதவர்களாக விருக்கிறார்களோ, அப்படிப்பட்ட புண்ணியபுருடர்கள் என் திருவடிகளையடைவார்கள். (௫௫)

ஸ்ரீகீதாஸு விச்வரூபஸந்தர்சநயோகமென்னும்
பதினோராவது அத்தியாயம் முற்றிற்று.

---

## பனிரண்டாவது அத்தியாயம்.

### பக்தியோக:.

அர்ச்சுன வாக்கியம்.

ஏவம் ஸததயுக்தா யே பக்தாஸ்த்வாம் பர்யுபாஸதே ।
யே சாப்யக்ஷரமவ்யக்தம் தேஷாம் கே யோகவித்தமா: ॥ ௧ ॥

(ப-ம்) ஏவம் - இப்படி, ஸததயுக்தா: - எப்போதும் விருப்பமுள்ளவராய், யே பக்தா: - எந்த பக்தர்கள், த்வாம் - உன்னை, பர்யுபாஸதே - உபாஸிக்கிறார்களோ, யேச - (பின்னும்) எவர்கள், அவ்யக்தம் - (இந்திரியத்துக்கு) விஷயப்படாத, அக்ஷரம் - அக்ஷரத்தை, உபாஸதே - உபாஸிக்கிறார்களோ, தேஷாம் - அவர்களுள், கே - யார், யோகவித்தமா: - நன்றாய் யோகத்தையறிந்தவர்கள். (௧)

(தா-ம்) இவ்வண்ணம் சிலர், எக்காலும் உங்களிடத்தில் பக்தியுண்டாகி எங்களை யுபாசிக்கின்றனர்கள். சிலர், இந்திரியங்களின் வழியைநாடி ஜீவான்ம ஸ்வரூபத்தை யுபாசிக்கின்றனர்களே, இவ்விருதரத்தாருளெவர்கள் யோகத்தை நன்குணர்ந்தவர்கள்? (௧)

ஸ்ரீகிருஷ்ணவாக்கியம்.

𑌮𑌯𑍍𑌯𑌾𑌵𑍇𑌶𑍍𑌯 𑌮𑌨𑍋 𑌯𑍇 𑌮𑌾𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌯𑍁𑌕𑍍𑌤𑌾 𑌉𑌪𑌾𑌸𑌤𑍇।
𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾 𑌪𑌰𑌯𑍋𑌪𑍇𑌤𑌾𑌸𑍍𑌤𑍇 𑌮𑍇 𑌯𑍁𑌕𑍍𑌤𑌤𑌮𑌾 𑌮𑌤𑌾𑌃॥௨॥

(ப-ம்) யே - எவர்கள், மயி - என்னிடத்தில், மந: - மனதை, ஆவேச்ய - வைத்து, பரயா - பெரிதான ச்ரத்தயா - சிரத்தையுடன், உபேதா: - கூடி, நித்ய யுக்தா: - நித்தியமும் யோகமுற்றவர்களோ, தே - அவர்கள், யுக்ததமா: - மிகவும் யோகத்தில் தேறினவராய், மே - எனக்கு, மதா: - எண்ணப்பட்டார்கள். (௨)

(தா-ம்) எவர்கள், என்னிடத்தில் நித்தியவஸ்துவைக்கருதி மனதை நிலைநிறுத்தி என்னை யுபாசிக்கிறார்களோ, அவர்களே சிறந்த யோகிகளென்று என்னுடைய வபிப்பிராயம். (௨)

𑌯𑍇 𑌤𑍍𑌵𑌕𑍍𑌷𑌰𑌮𑌨𑌿𑌰𑍍𑌦𑍇𑌶𑍍𑌯𑌮𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌂 𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇।
𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰𑌗𑌮𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌂 𑌚 𑌕𑍂𑌟𑌸𑍍𑌥𑌮𑌚𑌲𑌂 𑌧𑍍𑌰𑍁𑌵𑌮𑍍॥௩॥
𑌸𑌂𑌨𑌿𑌯𑌮𑍍𑌯𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍍𑌰𑌾𑌮𑌂 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌸𑌮𑌬𑍁𑌦𑍍𑌧𑌯𑌃।
𑌤𑍇 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍁𑌵𑌨𑍍𑌤𑌿 𑌮𑌾𑌮𑍇𑌵 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌹𑌿𑌤𑍇 𑌰𑌤𑌾𑌃।௪॥

(ப-ம்) அக்ஷரம் - ஆத்மாவை, அநிர்தேச்யம் - குறிக்கத்தகாததாயும், அவ்யக்தம் - தெரியப்படாததாயும், ஸர்வத்ரகம் - தேவர்கள் முதலான எல்லாச் சரீரங்களிலும் இருப்பதாயும், அசிந்த்யம்- சிந்திக்கவரியதாயும், கூடஸ்த்தம் - ஸர்வஸாதாரணமாயும், அசலம் - சலிப்புறாததாயும், த்ருவம்ச - நித்தியமானதாயும், இந்த்ரியக்ராமம் - இந்த்ரிய கூட்டத்தை ஸந்நியம்ய - அடக்கி, ஸர்வத்ர - எங்கும், ஸமபுத்தய: - ஸமபுத்திகளாய், ஸர்வபூதஹிதே - ஸகலப்பிராணிகளுடைய இதத்திலும், ரதா: - ஆஸக்தியுடையராய், (யே)- எவர்கள், பர்யுபாஸதே - உபாஸிக்கிறார்களோ, தே - அவர்களும், மாம்-என்னை, ப்ராப்நுவந்திஏவ-அடையவே அடைகின்றனர். (௩-௪)

(தா-ம்) எந்தமகான்கள், இந்திரிய சமூகங்களை நன்குள்ளடக்கி ஸமஸ்தவஸ்துக்களிலும் சமபுத்திவைத்து அகில ஜீவன்களுக்கும் நன்மையைக்கருதுகிறதுடன், வாக்குக் கெட்டாததாயும், கட்புலனுக் ககப்படாததாயும், மநோவிருத்திக் கதீதமாயும், பிரபஞ்சத்திற் காதாரணமாயும், அசைவற்றதாயும், நித்தியமாயும், எங்கும் பரிபூரணமாயுள்ள பரப்பிரமத்தை யுபாசிக்கின்றனர்களோ, அம்மகான்கள், உன்னையே யடைகின்றனர்கள். (௩-௪)

க்லேஶோ(அ)தி⁴கதரஸ்தேஷாமவ்யக்தாஸக்தசேதஸாம்|
அவ்யக்தா ஹி க³திர்து³:க²ம் தே³ஹவத்³பி⁴ரவாப்யதே||

(ப-ம்) அவ்யக்த ஆஸக்த சேதஸாம் - அக்ஷரத்தில் ஆஸக்தியுடையமனங்கொண்ட, தேஷாம் - அவர்களுக்கு, அதிகதர:-மிகவும் அதிகமான; க்லேச: - வருத்தம்; அவ்யக்தா - அவ்யக்த ஸம்பந்தமான, கதி: - கதியானது, தேஹவத்பி: - சரீரமுடையோரால், துக்கம் வருத்தமாய், அவாப்யதே ஹி - அடையப்படுகிறதன்றோ? (௫)

(தா-ம்) ஆனால் ஐம்புலாதிகளுக்கு அகோசரமான ஜீவாத்மஸ்வரூபத்தில் மனம் நாட்டினோருக்குப் பிரயாசை மிகவும்வதிகந்தான். சரீரமுள்ளவர்களுக்கு இந்திரியங்கட்குப் புலப்படாதபொருளையடைவது கடினமல்லவா. (௫)

யே து ஸர்வாணி கர்மாணி மயி ஸந்ந்யஸ்ய மத்பரா:|
அநந்யேநைவ யோகே³ன மாம் த்⁴யாயந்த உபாஸதே|| ௬||
தேஷாமஹம் ஸமுத்³த⁴ர்தா ம்ருத்யுஸம்ஸாரஸாக³ராத்|
ப⁴வாமி நசிராத்பார்த² மய்யாவேஶிதசேதஸாம்|| ௭||

(ப-ம்) ஹேபார்த்த - ஓ அர்ச்சுன! யேது - எவர்களானால், ஸர்வாணி - ஸகலமான, கர்மாணி - கருமங்களையும், மயி - என்னிடத்தில், ஸந்ந்யஸ்ய - வைத்து, மத்பரா: - என்னையே ப்ரதானவனாக நினைத்துக்கொண்டு, அநந்யேந - மற்றொன்றையுநாடாத, யோகேந - யோகத்தால், மாம்ஏவ - என்னையே, த்யாயந்த: - தியானிப்பார்களால் உபாஸதே உபாஸிக்கிறார்கள ஹே பார்த்தா ஓ அர்ச்சுனா மயி - என்னிடத்தில், ஆவேசிதசேதஸாம் - வைக்கப்பட்ட மனமுடைய, தேஷாம் - அவர்களுக்கு, அஹம் - நான், ம்ருத்யுஸம்ஸார ஸாகராத் - மிருத்தியுவுடன்கூடின ஸம்ஸாரஸாகரத்தினின்றும், நசிராத் - சீக்கிரமாகவே, ஸமுத்தர்தா - கரையேற்றுகிறவனாக, பவாமி - ஆகிறேன். (௬-௭)

(தா-ம்) அர்ஜுனா! எவர்கள், ஸர்வகர்மங்களையும் எனக்கொப்பிவித்து என்னையே முக்கியவஸ்துவாகவெண்ணி பிரயோஜனத்தைக் கோராதமனதுடன் தியானமுதலியவற்றாலென்னை பக்திசெய்கிறார்களோ, அப்படிப்பட்ட சாதுக்களை, மிருத்யுஸ்வரூபமான ஸம்சார ஸமுத்திரத்தினின்றும் யானே கரையேறச்செய்கிறேன். (௬-௭)

(௯௦) மத்பரா:-யானேசிறந்தவனெனக் கருதினவர்கள்.

मय्येव मन आधत्स्व मयि बुद्धिं निवेशय।
निवसिष्यसि मय्येव अत ऊर्ध्वं न संशयः॥ அ॥

(ப-ம்) மயிஏவ - என்னிடத்தில்தானே, மநஃ - மனதை, ஆத த்ஸ்வ - வைக்கககடவாய் புத்திம் - புத்தியை, மயி - என்னிடத் தில், நிவேசய - வை; அதஃ - இதற்கு, ஊர்த்வம் - மேல், மயிஏவ- என்னிடத்திலேயே, நிவஸிஷ்யஸி - வஸிப்பாய் ஸம்சயஃந - இந்தவிஷ யத்தில் ஸந்தேஹமில்லை. (அ)

(தா-ம்) ஆகையால், எப்பொழுதும் என்னிடத்திலேயே மன தைநிறுத்து, என்னிடத்திலேயே புத்தியைச்செலுத்து, என்னிட த்திலேயே குடிகொண்டிருப்பாயென்பதில் சந்தேகமில்லை. (அ)

अथ चित्तं समाधातुं न शक्नोषि मयि स्थिरम्।
अभ्यासयोगेन ततो मामिच्छाप्तुं धनञ्जय॥ கூ॥

(ப-ம்.) அத - இனி, மயி - என்னிடத்து, சித்தம் - சித்தத்தை, ஸ்திரம் - ஸ்திரமாய், ஸமாதாதும் - வைப்பதற்கு, நசக்நோஷி - ஆகமாட்டா, (ஹே) தநஞ்ஜய - அர்ச்சுன? ததஃ - அதற்குப்பின் - அப்யாஸயோகேந-அப்பியாஸ யோகத்தால், மாம் - என்னை, ஆப்தும் அடைய, இச்ச - கோருகிறேன். (கூ)

(தா-ம்) ஓ அர்ஜ்ஜுனு! நின்மனதை என்னிடத்தில் நின்பெற நிறுத்த வல்லவனல்லாமற் போனவையேயாகில் அப்பியாசஞ்செய்தா வது என்னையடைவதற்கு முயல்வாயாக. (கூ)

अभ्यासेऽप्यसमर्थोऽसि मत्कर्मपरमो भव।
मदर्थमपि कर्माणि कुर्वन्सिद्धिमवाप्स्यसि॥ ய॥

(ப-ம்.) அப்யாஸே அபி - அப்பியாஸத்திலும், அஸமர்த்தோஸி-அஸமர்த் தனுகில் மத்கர்மபரமஃ - என்னைக்குறித்த கர்மங்களையே முக்கியமாகவுடை யவனுய், பவ - ஆகு, மதார்த்தம் - என்பொருட்டு, கர்மாணி - கைங்கரியரூப கர்மங்களை, குர்வக் அபி - செய்துவந்தாலும், ஸித்திம் - ஸித்தியை, அவாப் ஸ்யஸி - அடைவாய். (க0)

(தா-ம்) அவ்வாறு அப்பியாசஞ்செய்கிற விஷயத்திலுனக்குச் சத்தியில்லாவிடின் பகவத்கைங்கர்யரூபமான கன்மத்தையே பிரதா னமாகச்செய் எங்கிமித்தமான கர்மத்தைச்செய்தாலும் ஸித்தியைப் பெருவாய். ஶ0. ஸித்தம்-மனோநிக்கிரகமென்றும் சித்தியை. (க0)

अथैतदप्यशक्तोऽसि कर्तुं मद्योगमाश्रितः।
सर्वकर्मफलत्यागं ततः कुरु यतात्मवान्॥ கக॥

(ப-ம்.) அத - பிறகு, ஏதத் - இதை, கர்தும்மபி - செய்யவும், அசக்தஃ அஸி - சக்தனுகாதபக்ஷத்தில். ததஃ - பிறகு, மத்யோசம்-எனது யோகத்தை

ஆச்ரித꞉ - ஆச்ரயித்தவனாய், யதாத்மவான்- அடக்கப்பட்டஅந்தக்கரணத்துடன், ஸர்வகர்மபலத்யாகம்-எல்லாக்கருமபலனையும் விடுவதை, குரு-செய்.

(தா-ம்) அவ்வண்ணம் என்னிடத்தில் மனதைசெலுத்தி கன்மத்தைச்செய்ய முடியாமற்போகுங்கால் சுத்தசித்தத்தோடு எல்லா கர்மங்களுடைய பலத்தையும் நீக்கிவிடு. (௧௧)

ச்ரேயோ ஹி ஜ்ஞாநமப்யாஸாஜ் ஜ்ஞாநாத் த்யாநம் விசிஷ்யதே ।
த்யாநாத் கர்மபலத்யாகஸ் த்யாகாச் சாந்திரநந்தரம் ॥ ௧௨ ॥

அத்வேஷ்டா ஸர்வபூதாநாம் மைத்ர꞉ கருண ஏவ ச ।
நிர்மமோ நிரஹங்கார꞉ ஸமது꞉கஸுக꞉ க்ஷமீ ॥ ௧௩ ॥

ஸந்துஷ்ட꞉ ஸததம் யோகீ யதாத்மா த்ருடநிச்சய꞉ ।
மய்யர்பிதமநோபுத்திர் யோ மத்பக்த꞉ ஸ மே ப்ரிய꞉ ॥ ௧௪ ॥

(ப-ம்.) ஜ்ஞாநம்-ஞானம்-அப்யாஸாத் - அப்பியாஸத்தைவிட, ச்ரேயோ ஹி-சிறந்ததல்லவா? ஜ்ஞாநாத்-ஞானத்தைக்காட்டிலும், த்யாநம்-தியானம் விசிஷ்யதே - விசேஷமாகிறது, த்யாநாத்-தியானத்தைவிட, கர்மபலத்யாக꞉-கருமப்பயனைவிடுவது, (தரம்) த்யாகாத் - தியாகத்திற்கு, அநந்தரம் - உடனே, சாந்தி꞉ - சாந்தி, பவதி - உண்டாகும். ஸர்வபூதாநாம்-எல்லாப்பிராணிகளுக்கும், அத்வேஷ்டா - பகைவனல்லாதவனும், மைத்ர꞉ - மித்திரனும், கருண ஏவச - கருணையுடையனும், நிர்மம꞉ - மமகாரமற்றவனும், நிரஹங்கார꞉ அஹங்காரமற்றவனும், ஸமது꞉கஸுக꞉-துக்கமும் சுகமும் ஸமமாயிருப்பவனும், க்ஷமீ - பொறுமையுடையனும், ஸததம் - எப்பொழுதும், ஸந்துஷ்ட꞉ - ஸந்துஷ்டியடைந்தவனுமான, யோகீ - யொகியும், யதாத்மா - நியமிக்கப்பட்ட மனமுடையனும், த்ருடநிச்சய꞉ - திடமான நிச்சயமுடையனும், மயி - என்னிடத்தில், அர்பிதமநோபுத்தி꞉ - வைக்கப்பட்ட மனமும் புத்தியுமுடையனும், மத்பக்த꞉ - என்னிடத்தில் பக்தியுடையவனும், ய꞉-எவனோ, ஸ꞉-அவன், மே - எனக்கு, ப்ரிய꞉ - இஷ்டன். (௧௨-௧௩-௧௪-)

(தா-ம்) அப்பியாசத்தைவிட ஞானமேலானது, ஞானத்தைவிட தியானம் சிறந்தது. தியானத்தைவிட பயனைக்கருதாதகர்மம் மேலானது. கர்மபலத்தியாகத்தால் தாமசமின்றி சித்தம் சாந்தியை யடைகிறது. எவன் ஸமஸ்தப்பிராணிகளிடத்திலும் துவேஷமில்லாமலும், அகிலஜீவன்களிடத்திலும் மித்திரத்துவம்வைத்தும் ஸர்வபூதங்களிடத்திலும் தயைநிரைந்தும், தேஹேந்திரியங்களி லன்பில்லாமலும், அகங்கார மின்றியும், சுகதுக்கத்தைச் சமமாய்பாவித்தும், பொருமை வகித்தும், நித்தியதிருப்தியும், எப்பொழுதும் ஆத்மாநுஸந்தானஞ் செய்துக்கொண்டும், சித்தவிருத்தியைத் தடுத்

தும், மநோநிச்சயத்துடனுங் கூடினவனாய் என்னிடத்தில் மனதை யும், மதியையும் நாட்டி பக்திபண்ணுகிறானோ, அவன்தான் எனக்கு பிரியன். (கஉ-கங-கச)

யஸ்மாந்நோத்விஜதே லோகோ லோகாந்நோத்விஜதே ச ய:|
ஹர்ஷாமர்ஷபயோத்வேகைர்முக்தோ ய: ஸ ச மே ப்ரிய:||

(ப-ம்.) லோக: - உலகம், யஸ்மாத் - எவனிடத்தினின்றும், நோத்விஜதே - பயப்படானோ, ய: - எவன், ஹர்ஷ அமர்ஷபய உத்வேகை: - ஸந்தோஷம் கோபம் பயம் உத்வேகங்களால், முக்த: - விடுபட்டானோ, ஸ: ச - அவனும், மே - எனக்கு, ப்ரிய: - இஷ்டன். (கரு)

(தா-ம்) எவனிடத்திலிருந் துலகத்தார் பீதியடையாரோ, உலகத்தாரிடத்திலெவன் பயமடையவில்லையோ, சந்தோஷத்தாலும், கோபத்தாலும், பயத்தாலும், மனக்கலக்கத்தாலும், எவன் விடப்பட்டானோ, அவனுமெனக்குப்பிரியனே. (கரு)

அநபேக்ஷ: ஶுசிர்தக்ஷ உதாஸீநோ கதவ்யத:|
ஸர்வாரம்பபரித்யாகீ யோ மத்பக்த: ஸ மே ப்ரிய:|| கசு||

(ப-ம்.) அநபேக்ஷ: - ஆத்மா தவிர மற்றவைகளெல்லாவற்றிலும் விருப்பமில்லாதவனாய், சுசி: - பரிசுத்தனாய், தக்ஷ: - ஸமர்த்தனாய், உதாஸீந:-உதாஸீனனாய், கதவ்யத: - பாதையற்றவனாய், ஸர்வ ஆரம்ப பரித்யாகீ - எல்லா ஆரம்பத்தையும்விட்டு, மத்பக்த: - என்னுடையபக்தனாய், ய:-எவன் (இருக்கிறானோ), ஸ: - அவன், மே - எனக்கு, ப்ரிய: - இஷ்டன். (கசு)

(தா-ம்) ஆத்மாவுக் கந்நியவஸ்துக்களில் விருப்பமற்றவனாயும், மாம்ஸபக்ஷணமுதலிய தாமசாஹாரத்தை நீக்கி சாஸ்திரசம்மதமான ஆகாரத்தையுட்கொண்டதால் பரிசுத்தனாயும், வல்லவனாயும், சத்துருமித்திரர்களில்லாதவனாயும், சாஸ்திரோக்த சர்மாநுஷ்டானத்தில் சிரமமில்லாதவனாயும், சாஸ்திரவிருத்தமான வேறுகர்மந்துலைத்து என்னிடத்திலேயே பக்தியுள்ளவனோ, அவனே எனக்கன்பன். (ஶ்ரீ) கதவ்யத:-பயமற்றவன். (கசு)

யோ ந ஹ்ருஷ்யதி ந த்வேஷ்டி ந ஶோசதி ந காங்க்ஷதி |
ஶுபாஶுபபரித்யாகீ பக்திமாந்ய: ஸ மே ப்ரிய:|| கஎ||

(ப-ம்.) ய: - எவன், நஹ்ருஷ்யதி-ஸந்தோஷியானோ,(ய:)-எவன், நத்வேஷ்டி - அநிஷ்டங்களுண்டானபோது த்வேஷிக்கமாட்டானோ, (ய:)-எவன், நசோசயதி - துக்கிக்கானோ, நகாங்க்ஷதி - (எவன்) கோரானோ, சுபாசுபபரித்

யாகீ - சுபாசுபங்கள் துறந்த, பக்திமாந் - பக்திமான், (யஃ) எவனே, ஸஃ - அவன், மே - எனக்கு, ப்ரியஃ - இஷ்டன். (௧௭)

(தா-ம்.) எவன் சந்தோஷிக்கானே, பொறாமையடையானே, துக்கப்படானே ஆசைப்படானே, புண்ணியபாபங்களிரண்டையும் பக்திபண்ணுகிறானே, அவனே எனக்கிஷ்டன். (௧௭)

ஸம: ஶத்ரௌ ச மித்ரே ச ததா மாநாபமாநயோ:|
ஶீதோஷ்ணஸுகது:கேஷு ஸம: ஸங்கவிவர்ஜித:|| ௧௮||

துல்யநிந்தாஸ்துதிர்மௌநீ ஸந்துஷ்டோ யேந கேநசித்|
அநிகேத: ஸ்திரமதிர்பக்திமாந்மே ப்ரியோ நர:|| ௧௯||

(ப-ம்.) சத்ரௌச - சத்துருவினிடத்தும், மித்ரேச - மித்திரனிடத்தும், ஸமஃ-ஸமனாய், ததா-அப்படி, மாநாபமாநயோஃ - மானாவமானங்களிலும், சீதஉஷ்ணசுகதுஃகேஷு - சீதோஷ்ணங்களினிடத்திலும், சுகதுக்கங்களினிடத்திலும், ஸமஃ-ஸமனாய், ஸங்கவிவர்ஜிதஃ-மனைவிமக்கள் முதலானவர்களிடத்தில் விருப்பமில்லாதவனாய், துல்யநிந்தாஸ்துதிஃ-நிந்தித்தாலும் துதித்தாலும் சமமாய், மௌநீ-மவுனமுடையவனாய், யேநகேநசித் - எதினாலாவது, ஸந்துஷ்டஃ-ஸந்தோஷித்தவனாய், அநிகேதஃ - ஸ்தானமில்லாதவனாய், ஸ்திரமதிஃ-ஸ்திரமானபுத்தியாய், பக்திமாந்-பக்தியுடையனான, நரஃ - மனிதன், மேப்ரியஃ-எனக்கு இஷ்டன். (௧௮-௧௯)

(தா-ம்.) வைரியிடத்திலும், மித்திரனிடத்திலும், மானாவமானங்களிலும், சீதோஷ்ணங்களிலும், இன்பதுன்பங்களிலும், சமசித்தமுடையவனும், எவ்வித வஸ்துவிலும், பற்றில்லாதவனும், நிந்தாஸ்துதிகளில் ஸமதிருஷ்டியுள்ளவனும், மௌனியாயும், எந்த வஸ்துவினாலும் திருப்தி யடைந்தவனும், ஆன்மஸ்வரூபத்தைக் காரியமானதை ஆஶ்ரயிக்காமலும், ஸ்திரபக்தியுள்ளவனே எனக்கிஷ்டன். (௧௮-௧௯)

யே து தர்ம்யாம்ருதமிதம் யதோக்தம் பர்யுபாஸதே|
ஶ்ரத்ததாநா மத்பரமா பக்தாஸ்தேऽதீவ மே ப்ரியா:|| ௨௦||

(ப-ம்.) யேது-எவர்கள், ஶ்ரத்ததாநாஃ - சிரத்தையுடையரும், மத்பரமாஃ-என்னை முக்கியமாயுடையருமாய், யதோக்தம்-பின்சொல்லப்பட்ட, தர்ம்யம்ருதம்-தருமத்தினின்றும் நீங்காதும் அமிருதமு

மான, இதம்-இதை, பர்யுபாஸதே - உபாஸிக்கின்றார்களோ, தே-அந்த, பக்தா:-பக்தர்கள், மே-எனக்கு, அதீவ - மிகவும், ப்ரியா: - இஷ்டர்கள். (உ0)

(தா-ம்.) எவர்கள், தர்மரூபமாகிய அமுதுபோன்ற இப்பக்தி யோகத்தைச் சிரத்தையுடன் மேற்கூறியவண்ணம் அநுஷ்டிக்கிறார்களோ, அப்படிப்பட்ட பக்தர்களே யெனக்குச் சிறந்தவேயர்கள். ()

ஸ்ரீகீதாஸூ பக்தியோகமென்னும்
பன்னிரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.



## பதிமூன்றாவது அத்தியாயம்.

அர்ஜுனவாக்கியம்.

க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞ விபாகயோக:.

ப்ரக்ருதிம்புருஷஞ்சைவக்ஷேத்ரம்க்ஷேத்ரஜ்ஞமேவச|
ஏதத்வேதிதுமிச்சாமிஜ்ஞானம்ஜ்ஞேயஞ்சகேசவ|| க||

(ப-ம்.) ஹேகேசவா! ஓகேசவனே! ப்ரக்ருதிம் - ப்ரக்ருதியை யும், புருஷம்சஏவ-பரமாத்மஸ்வரூபத்தையும் புருஷனையும், க்ஷேத்ரம்-க்ஷேத்திரத்தையும், க்ஷேத்ரஜ்ஞம்ஏவச - க்ஷேத்திரஜ்ஞனென்னுமவன் ஸ்வரூபத்தையும், ஜ்ஞாநம் - ஜ்ஞானஸ்வரூபத்தையும், ஜ்ஞேயம்ச-அறியவேண்டியவஸ்துவின் ஸ்வரூபத்தையும், ஏதத் - இவைகளை, வேதிதும், தெரிந்துகொள்ள, இச்சாமி-நிச்சயித்திருக்கிறேன். (க)

(தா-ம்.) கேசவா! பிரகிருதிபுருஷன், க்ஷேத்திரன் க்ஷேத்திரஞ்ஞன், ஞானம்ஞேயம், இவைகளைத் தெரிந்துக்கொள்ள விரும்புகின்றேன். (க)

இதம்சரீரம்கௌந்தேயக்ஷேத்ரமித்யபிதீயதே|
ஏதத்யோவேத்திதம்ப்ராஹு:க்ஷேத்ரஜ்ஞஇதிதத்வித:|| உ||

(ப-ம்.) ஹே கௌந்தேய - ஓகுந்தியின்மைந்த, இதம் சரீரம்-இந்த சரீரம், க்ஷேத்ரம்இதி-க்ஷேத்திரமென்று, அபிதீயதே - சொல்லப்படுகிறது, ஏதத்- இதை, ய:-எவன், வேத்தி-அறிகிறானோ, தம்-

அவனை, தத்விதஃ-அதையறிந்தவர், க்ஷேத்ரஜ்ஞஇதி-க்ஷேத்திரஜ்ஞனென்று, ப்ராஹுஃ-பகர்கின்றனர். (௨)

(தா-ம்.) ஓ அர்ஜுனா! இச்சரீரம ஆத்மாவுக்குபோகஸ்தானமானக்ஷேத்திரமெனப்படுகிறது. க்ஷேத்திரமான சரீரத்தையறிகினவனெவனோ, அவனை க்ஷேத்திரஜ்ஞனென்று ஆத்மஸ்வரூபத்தையுணர்ந்தவர்கள் சொல்லுவார்கள். (௨)

க்ஷேத்ரஜ்ஞம்சாபிமாம்வித்திஸர்வக்ஷேத்ரேஷுபாரத|

க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோர்ஜ்ஞாநம்யத்தஜ்ஜ்ஞாநம்மதம்மம|| ௩||

(ப-ம்.) ஹே! பாரத - ஓபரதவம்சத்தானே! ஸர்வக்ஷேத்ரேஷு-எல்லாசரீரங்களிலும், க்ஷேத்ரஜ்ஞம்ச அபி - ஜீவனையும், மாம்-என்னையாக, வித்தி-அறி, க்ஷேத்திரக்ஷேத்திரஜ்ஞயோஃ(இப்படி) - சரீர ஆத்மாக்களை, ஜ்ஞாநம்-அறிவதானது, யத்-எதுவோ, தத்-அது தான், ஜ்ஞாநம்-ஞானமென்று, மம-எனது, மதம்-ஸித்தாந்தம். (௩)

(தா-ம்.) பாரதா! க்ஷேத்திரமென்னும் எல்லாசரீரங்களிலும் வசிக்கின்ற க்ஷேத்திரஞ்ஞனென்னும் ஆன்மாயானென்கிற யுணர்க இப்படி சரீரத்தையும் ஆன்மாவையுந் தெரிந்துகொள்வதே ஞானமென்றெந்தன் கருத்து. (௩)

தத்க்ஷேத்ரம்யச்சயாத்ருக்சயத்விகாரியதச்சயத்|

ஸசயோயத்ப்ரபாவச்சதத்ஸமாஸேநமேஶ்ருணு|| ௪||

(ப-ம்.) தத்-அந்த, க்ஷேத்ரம்-சரீரம், யத்ச-எந்தஸ்வரூபமோ, யாத்ருக்ச-எப்படிப்பட்டதோ, யத்விகாரி - எந்தவிகாரமுடையதோ, யதஃச-எதினாலு(ண்டானதோ), யத்-எதுவோ, ஸச-அந்த (க்ஷேத்திரஜ்ஞனும்), யஃ-எவனோ, யத்ப்ரபாவஃச - என்னப்பிரபாவமுடையனோ, தத்-அதை, ஸமாஸேந-சங்க்ரஹமாய், மே - என்னிடத்தில், ஶ்ருணு-கேள். (௪)

(தா-ம்) க்ஷேத்திரமென்பது யாது? எப்படிப்பட்டது எந்தவிகாரமுடையது? யாதுகாரணத்தாற் பிறந்தது? எவ்விதரூபத்துடனிருக்கின்றது? க்ஷேத்திரஞ்ஞனென்பவனெவன்? எப்படிப்பட்டசக்திபெற்றவன்? இதுகளையெல்லாம் சுருக்கமாக என்னிடத்தில் கேட்டுணர்க. (ஶ்ஓ) யத்ப்ரபாவச்ச-எப்படிப்பட்ட உபாதிக்ருதமான சக்திகளையுடையவனே. (௪)

ருஷிபிர்பஹுதா கீதம் சந்தோபிர்விவிதை: ப்ருதக்|
ப்ரஹ்மஸூத்ரபதைச்சைவ ஹேதுமத்பிர்விநிச்சிதை:||

(ப-ம்.) ருஷிபி:-ரிஷிகளாலே, பஹுதா-அனேகவிதங்களாக, கீதம்-சொல்லப்பட்டது, விவிதை:-நாநாவிதங்களான வேதங்களால் சந்தோபி:-மந்திரங்களால், ப்ருதக்-பிரத்தியேகமாய், (கீதம்)-சொல்லப்பட்டது; ஹேதுமத்பி: - ஹேதுக்களுடையனவாய்க் கொண்டு, விநிச்சிதை:-நிச்சயிக்கப்பட்ட, ப்ரம்மஸூத்ரபதை:சஏவ - பிரம்மஸூத்திரங்களாலும், (கீதம்)-சொல்லப்பட்டது. (௫)

(தா-ம்.) இவ்விஷயம் க்ஷேத்திரக்ஷேத்திரக்ஞவிஷயம் ரிஷிகளினாலும், ஒவ்வொன்றையும்பற்பலவிதங்களாலறிவிக்கும் நான்கு வேதங்களிலும், நியாயயுக்தமாயும்சித்தாந்த முடிவாயுமுள்ள பிர்ம ஸூத்திர வாக்கியங்களினாலும், அநேகவிதங்களாக நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. (௫)

மஹாபூதாந்யஹங்காரோ புத்திரவ்யக்தமேவ ச|
இந்த்ரியாணி தசைகம் ச பஞ்ச சேந்த்ரியகோசரா:|| ௬||

இச்சா த்வேஷ: ஸுகம் து:கம் ஸங்காதஸ்சேதநா த்ருதி:|
ஏதத்க்ஷேத்ரம் ஸமாஸேந ஸவிகாரமுதாஹ்ருதம்|| ௭||

(ப-ம்.) மஹாபூதானி-பஞ்சபூதங்களும், அஹங்கார: - அஹங்காரதத்துவமும், புத்தி: புத்தியும், அவ்யக்தம்ஏவச-மூலப்பிரகிருதியும், இந்த்ரியாணி-இந்திரியங்கள், தசஏகம்ச-பதினொன்றும், இந்த்ரியகோசரா:-இந்திரியங்களுக்கு விஷயமான, பஞ்சச-ஐந்தும், இச்சா-இச்சையும், த்வேஷ:-துவேஷமும், ஸுகம்-சுகமும், து:கம்-துன்பமும் என்று, ஸங்காத:-ஸமுதாயமாய்க்கொண்டு, சேதநத்ருதி:-பிராணிகளுக்கு ஆதாரமாயிருக்கும்; ஏதத்-இந்த, க்ஷேத்ரம்-க்ஷேத்திரமானது, ஸவிகாரம் - விகாரங்களுடன்கூட, ஸமாஸேந-சுருக்கமாய், உதாஹ்ருதம்-சொல்லப்பட்டது. (௬-௭)

(தா-ம்.) பிருதிவி, அப்பு, தேஜஸ், வாய்வு, ஆகாசமென்னும் பஞ்சபூதங்கள், அகங்காரம், புத்தி, பிரகிருதி, கர்மேந்திரியமைந்து, ஞானேந்திரியமைந்து, மனமொன்றுஆக பதினொன்று இந்திரியங்கள், சப்த, ஸ்பர்ச, ரூப, ரஸ, கந்தமென்னும் ஐந்து இந்திரியார்த்தங்கள், இச்சை, துவேஷம், சுகம், துக்கம். ஜீவான்மாவுக்கு ஆதார

மான் ஸங்காதமென்னும் மகாபூதங்கள் முதலியவைகளுடைய சேர்க்கை, இதுகளை பரிணாமத்துடன் க்ஷேத்திரமென்று சங்கிரஹமாகக் கூறப்பட்டிருக்கிறது. (௯-௭)

அமாநித்வமதம்பித்வமஹிம்ஸா க்ஷாந்திரார்ஜவம்।
ஆசார்யோபாஸநம் ஶௌசம் ஸ்தைர்யமாத்மவிநிக்ரஹ:॥
இந்த்ரியார்தேஷு வைராக்யமநஹங்கார ஏவ ச।
ஜந்மம்ருத்யுஜராவ்யாதிது:கதோஷாநுதர்ஶநம்॥ ௯॥
அஸக்திரநபிஷ்வங்க: புத்ரதாரக்ருஹாதிஷு।
நித்யம் ச ஸமசித்தத்வமிஷ்டாநிஷ்டோபபத்திஷு॥ ௧௦॥
மயி சாநந்யயோகேந பக்திரவ்யபிசாரிணீ।
விவிக்ததேஶஸேவித்வமரதிர்ஜநஸம்ஸதி॥ ௧௧॥
அத்யாத்மஜ்ஞாநநித்யத்வம் தத்த்வஜ்ஞாநார்ததர்ஶநம்।
ஏதஜ்ஜ்ஞாநமிதி ப்ரோக்தமஜ்ஞாநம் யததோऽந்யதா॥ ௧௨॥

(ப-ம்.) அமாநித்வம்-பெரியோர்களை அவமதிக்காமின்மை அதம்பித்வம் - டம்பமின்மை, அஹிம்ஸா - ஹிம்ஸியாதொழிகை, க்ஷாந்தி:-பொறுமை, ஆர்ஜவம்-நேர்மை, ஆசார்ய உபாஸநம்-ஆசாரியனைகுறித்து நமஸ்காரம், சௌசம்-அந்தஜ்ஞானத்துக்கும் அதின் சாதனத்துக்கும் தகுந்த மனோவாக்காயங்களுண்டாமை, ஸ்தைர்யம்-நிலையுடைமை, ஆத்மவிநிக்ரஹ:-மனோநிக்ரஹம், இந்த்ரிய அர்த்தேஷு-புலன்விஷயங்களில், வைராக்யம்-விரக்தி, அநஹங்கார ஏவ ச-ஆங்காரமின்மை, ஜந்மம்ருத்யுஜராவ்யாதி து:கதோஷ அநுதர்சநம்-பிறப்புஇறப்பு மூப்புநோய்துன்பம் தோஷம் இவைகளை தெரிந்துக்கொள்கை, அஸக்தி:-ஆத்மாவைப்பார்க்கிலும் அந்யாயமானவைகளில் ஸங்கமில்லாதிருத்தல், புத்ரதாரக்ருஹாதிஷு - பிள்ளை பெண்டீர் இல்லமுதலியவற்றில், அநபிஷ்வங்க:-மிகுந்தபற்றின்மை இஷ்டாநிஷ்டஉபபத்திஷு-இஷ்டாநிஷ்டங்கள் சேர்ந்தபோது, நித்யம்ச-எப்போதும், ஸமசித்தத்வம்-ஒருமனமாயிருக்கை, மயிச-என்னிடத்தில், அநந்யயோகேந-இதரசம்பந்தமில்லாதிருக்கும்படி, அவ்யபிசாரிணீ-இடைவிடாத, பக்தி:-பக்தி, விவிக்ததேச ஸேவித்வம்-நிர்ஜநதேசத்தில்வாஸம், ஜநஸம்ஸதி-ஜனக்கூட்டத்தில், அரதி:ச-ஆதரமின்மை, அத்யாத்மஜ்ஞாநநித்யத்வம் - ஆத்மஞானத்தோடு எப்பொழுதுங் கூடியிருக்கை, தத்வஜ்ஞாநார்த்தசிந்தனம்-தத்துவ ஞா

ஞார்த்தமான சிந்தை ஆகிய, ஏதத்-இது, ஜ்ஞாநம்-ஆத்மஜ்ஞாநசாதனம், இதி-என்று, ப்ரோக்தம்-சொல்லப்பட்டது, அதஃ-ஜ்ஞாநத்தைக்காட்டிலும், அந்யதா-வேறுபடியாய், யத்-எது இருக்கிறதோ தத்-அது, அஜ்ஞாநம்-அஜ்ஞானத்திற்குவிரோதமானது. (அ-மு-கஉ)

(தா-ம்.) கெர்வமின்றியிருத்தல், டம்பமில்லாமலிருத்தல், அஹிம்ஸைபொறுமை, சத்தியம், குருபக்தி, மனோவாக்காயசுத்தி, சாஸ்திரார்த்தப்படி ஸ்திரமாகநிற்றல், மனக்கட்டு, சப்த ஸ்பர்ச, ரூப ரச, கந்தங்களென்னும் இந்திரியார்த்தங்களில் வைராக்கியமுண்டாகுதல், சரீரத்தை ஆன்மாவாகவெண்ணாதிருத்தல், பிறப்பு, இறப்பு கிழத்தனம், வியாதி, துக்கம், இதுகள் தேகத்தினதுதோஷமென்று லோசித்தல், ஆத்மாவுக்கந்நிய வஸ்துகளிடத்தில் மனப்பெருக்கையொழித்தல், புத்திரன், களத்திரம், வீடுமுதலானவற்றி லபிமானமின்றியிருத்தல், இஷ்டாநிஷ்டங்களி லெக்காலும் மனம்மாறாமலிருத்தல், ஏந்தனிடத்திற் பயனை விரும்பாமல் பக்திபண்ணுதல், நிர்ஜனப்பிரதேசத்தில்வசித்தல், ஜனஸமூகங்களிலன்பற்றல் ஆன்மஞானத்தில் ஸ்திரத்வம், தத்துவஞானபோதியான சாஸ்திரார்த்தங்களைவிசாரித்தல், இதுகளே தன் ஆத்மசாதன ஞானமென்று கூறப்பட்டிருக்கிறது. இதற்குவேறுபாடானதெல்லாம் அஞ்ஞானமென்றறிக. ஶ்ம். அதம் பித்வம்-தன்னுடையதர்மத்தைபிரகாசிப்பது. (அ-கஉ)

ஜ்ஞேயம் யத்தத்ப்ரவக்ஷ்யாமி யஜ்ஜ்ஞாத்வாऽம்ருதமஶ்நுதே।
அநாதிமத்பரம் ப்ரஹ்ம ந ஸத்தந்நாஸதுச்யதே॥ கங॥

(ப-ம்.) ஜ்ஞேயம்-அறியவேண்டுவது, யத்-எதுவோ, தத்-அதை, ப்ரவக்ஷ்யாமி-சொல்லுகிறேன், யத்-எதை, ஜ்ஞாத்வா-அறிந்து, அம்ருதம்-மோக்ஷத்தை, அச்நுதே-அடைவனோ, அநாதி-அநாதியாய், மத்பரம்-என்பரமான, தத்-அது:—(பிரத்யகாத்மா), ப்ரம்ஹ-க்ஷேத்ரஜ்ஞாநத்வமான ஜீவவஸ்து, (தத்)-அது, ஸத்-ஸத்(என்றுவது) அஸத்-அஸத் என்றுவது, ந உச்யதே-சொல்லப்படுகிறதில்லை. (கங)

(தா-ம்.) எதையறிந்தபின் ஜனனம் மரணம். கிழத்தனமுதலிய பிரகிருதி தர்மமில்லாததாயும், அம்ருதஸ்வரூபமாயுமுள்ள ஆத்மாவடிக்கின்றதோ அப்படிப்பட்ட ஜீவாத்மஸ்வரூபத்தை யுந்தனுக்குரைக்கிறேன். அதற்காதியில்லை. எந்தனையே முக்கியமாயுடையது அதுபெரிது, ஆதிகாரியமெனவும், காரணமெனவுங்கூறப்படா. (

𑌸𑌰𑍍𑌵𑌤𑌃𑌪𑌾𑌣𑌿𑌪𑌾𑌦𑌂𑌤𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌤𑍋𑌕𑍍𑌷𑌿𑌶𑌿𑌰𑍋𑌮𑍁𑌖𑌮𑍍|
𑌸𑌰𑍍𑌵𑌤𑌃𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌮𑌲𑍍𑌲𑍋𑌕𑍇𑌸𑌰𑍍𑌵𑌮𑌾𑌵𑍃𑌤𑍍𑌯𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿|| ௧௪||

(ப-ம்) தத் - அந்தபரிசுத்தமான ஆத்மஸ்வரூபம், ஸர்வதஃ-எல்லாவற்றிலும், பாணிபாதம்-கைகால்களுடையது, ஸர்வதஃ - எல்லாவற்றிலும், அக்ஷிசிரோமுகம் - கண்தலைமுக (முடையாது), ஸர்வதஃ - எல்லாவற்றிலும், ஶ்ருதிமத் - காதுடையது, லோகே - உலகத்தில், ஸர்வம - எல்லாவற்றையும், ஆவ்ருத்ய- சூழ்ந்துகொண்டு, திஷ்டதி - இருக்கிறது. (௧௪)

(தா-ப்) நான்கு பக்கங்களிலும் கால் கை யுடையது, எல்லா திக்குகளிலும் கண், சிரசு, முகம், இதுகளையுடையது, நான்குபக்கங்களிலும் செவியுண்டாகி இந்த உலகத்தில் ஸமஸ்தத்திலும் வியாபித்திருக்கிறது "என்பதால் பிரகிருதிசம்பந்தமற்ற ஆத்மஸ்வரூபம் பகவத் ஸாயுஜ்யத்தை யடைந்து அகண்டமாயும், ஸர்வவியாபியாயும், ஸர்வஞ்ஞத்துவமாயு மாகிறதென்று சுருக்கம்." (௧௪)

𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍁𑌣𑌾𑌭𑌾𑌸𑌂𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌵𑌿𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌮𑍍|
𑌅𑌸𑌕𑍍𑌤𑌂𑌸𑌰𑍍𑌵𑌭𑍃𑌚𑍍𑌚𑍈𑌵𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌂𑌗𑍁𑌣𑌭𑍋𑌕𑍍𑌤𑍃𑌚|| ௧௫||
𑌬𑌹𑌿𑌰𑌨𑍍𑌤𑌶𑍍𑌚𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌮𑌚𑌰𑌂𑌚𑌰𑌮𑍇𑌵𑌚|
𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌤𑌦𑌵𑌿𑌜𑍍𑌞𑍇𑌯𑌂𑌦𑍂𑌰𑌸𑍍𑌥𑌂𑌚𑌾𑌨𑍍𑌤𑌿𑌕𑍇𑌚𑌤𑌤𑍍|| ௧௬
𑌅𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌂𑌚𑌭𑍂𑌤𑍇𑌷𑍁𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌮𑌿𑌵𑌚𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍|
𑌭𑍂𑌤𑌭𑌰𑍍𑌤𑍃𑌚𑌤𑌜𑍍𑌜𑍍𑌞𑍇𑌯𑌂𑌗𑍍𑌰𑌸𑌿𑌷𑍍𑌣𑍁𑌪𑍍𑌰𑌭𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌚|| ௧௭||
𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌷𑌾𑌮𑌪𑌿𑌤𑌜𑍍𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌸𑍍𑌤𑌮𑌸𑌃𑌪𑌰𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇|
𑌜𑍍𑌞𑌾𑌨𑌂𑌜𑍍𑌞𑍇𑌯𑌂𑌜𑍍𑌞𑌾𑌨𑌗𑌮𑍍𑌯𑌂𑌹𑍃𑌦𑌿𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯𑌵𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌮𑍍|| ௧௮||

(ப-ம்) ஸர்வ இந்திரிய குணாபாஸம் - ஸகலமான இந்த்ரிய வியாபாரத்தாலும் பிரகாசிப்பது, ஸர்வ இந்த்ரிய விவர்ஜிதம் - ஸகல இந்திரியங்களையும் ஒழித்தது, அஸக்தம் - தேவாதிசரீரத்தைப்பற்றில்லாததும், ஸர்வப்ருத்சைவ - எல்லாவற்றையும் பரிப்பது, நிர்குணம் - குணஹீனமானது, குணபோக்த்ருச - குணங்களை யநுபவிக்கவல்லதுமாகிய பரிசுத்தமான ஆத்மதத்வம். பூதாநாம் - ப்ருதிவிமுதலான பூதங்களை, பஹிஃ - வெளியும், அந்தச்ச - உள்ளும் (இருக்கும்) அசரம் - ஸஞ்சரியாதது, சரம்ஏவச-ஸஞ்சரிக்குமதும், தத் - அது, ஸூக்ஷ்மத்வாத் - ஸூக்ஷ்ம மானதையால, அவிஜ்ஞேயம்-அறியஸாத்தியப்படாதது, தூரஸ்தம்ச-தூரத்திலிருக்கும், அந்திகேச - ஸமீபத்திலும், தத் - அது(இருக்கும்). பூதேஷு-பிராணி

களில், ஸ்திரம் - இருக்கும் (ஆத்மாவானது), அவிபக்தம் - பிரிக்கப் படாததா யிருக்கச்செய்தே, விபக்தம்இவச - பிரிக்கப்பட்டதுபோ லும், பூதபர்த்ரு - பூதங்களைப்பரிக்கின்றதாய், தத்-அது, ஜ்ஞேயம்- அறியத்தக்கது, க்ரஸிஷ்ணு - விழுங்குவதாயும், ப்ரவிஷ்ணுச - உண் டாகுவதாயும் (அறியத்தக்கது). தத்-அது, ஜ்யோதிஷாம் அபி-ஜோ திகளுக்கெல்லாம், ஜ்யோதிః - சோதி, தமஸః-இருளுக்கு, பரம்-மே லென்று, உச்யதே - சொல்லப்படுகின்றது, ஜ்ஞாநம் - ஞானஸ்வ ரூபமாய், ஜ்ஞேயம் - அறியப்படுமது, ஜ்ஞாநகம்யம் - ஞான (ஸாத னத்தாலே அடையத்தக்கது), ஸர்வஸ்ய - எல்லாவற்றினுடைய, ஹ்ரு தி - உள்ளத்திலும், விஷ்டிதம்-இருப்புற்றது. (கரு-கசு-கஎ-கஅ).

(தா-ம்) அந்தப் பரம்பொருளானது, ஸமஸ்த இந்திரியங்களு டைய வியாபாரங்களினால் விஷயங்களை கிரகிப்பதாயும், ஸர்வேந்திரி யங்களி வில்லாததாயும, எந்ததேகத்திலும் ஸம்பந்தப்படாததாயும், எல்லாதேகத்தையும் பரிக்கிறதாயும், ஸத்துவ, ரஜஸ், தமோகு ணங்களில்லாததாயும் அந்த முக்குணங்களை யனுபவிப்பதாயும், பி ராணிகளுடைய வெளியிலும், உள்ளிலும் ஸ்தாவரமாயும், ஜங்கமா மாயும், சூக்ஷ்மமாயு மிருப்பதா லறியக்கூடாததாயு மிருக்கிற அந்த பரப்ரும்மமானது "அஞ்ஞானிகளுக்கு" வெகுதூரமாயும், "ஞானி களுக்கு" சமீபத்திலிருப்பதாயும், ஸ்தாவரஜங்கமங்களி லதுபிரியா ததாயும், பிரிந்திருப்பதுபோற் றோற்றுவதாயும், பூதங்களை இரக்ஷி ப்பதாயும், எல்லாவற்றையும், விழுங்குகிறதாயும், ஸமஸ்தத்தையு முண்டுபண்ணுவதாயும், பிரகாசங்களுக்கு அஃது, பிரகாசத்தைத்த ருகிறதாயும், அஞ்ஞானத்திற் கந்யமாயும், ஞானவடிவாயும், அறி யத்தக்கதாயும், அறிவிற்குப் புலப்படுவதாயும், அகிலப்பிராணிகளு டைய மனதிலும் வீற்றிருப்பதாயும் கூறப்படுகிறது. (௱௦) ஸர்வே ந்திரியகுணபாஸம் - இந்திரியமற்றது. (கரு-கசு-கஎ-கஅ).

இதிக்ஷேத்ரம்ததாஜ்ஞாநம்ஜ்ஞேயம்சோக்தம்ஸமாஸதః |
மத்பக்தஏதத்விஜ்ஞாயமத்பாவாயோபபத்யதே || கசு ||

(ப-ம்) இதி - இந்தப்பிரகாரம், க்ஷேத்ரம் - க்ஷேத்திரமும், த தா-அப்படியே, ஜ்ஞாநம் - ஞானமும், ஜ்ஞேயம்ச - ஜ்ஞேயமும், ஸமா ஸதః - சுருக்கமாய், உக்தம்-சொல்லப்பட்டது, மத்பக்தஃ-எனதுபக் தனானவன், ஏதத்-இதை, விஜ்ஞாய- அறிந்துகொண்டு, மத்பாவாய- எனதுசுபாவத்திற்கு, உபபத்யதே - தக்கவனாகிறான். (கசு)

(தா-ம்) இவ்வாறு க்ஷேத்திரமும், ஞானசாதனமும், ஞேயமான ஆத்மஸ்வரூபமும சொல்லப்பட்டன. எந்தனிடத்தில் பக்தியுள்ளவன் இதையுணர்ந்து எந்தன் தன்மையை யடைவதற்குரியவனாகிறான். (ஸ-ம்) மத்பாவாய - மோக்ஷத்திற்கு. (௧௯)

ப்ரக்ருதிம் புருஷம் சைவ வித்த்யநாதீ உபாவபி |
விகாராம்ஶ்ச குணாம்ஶ்சைவ வித்தி ப்ரக்ருதிஸம்பவாந் || ௨௦ ||

(ப-ம்) ப்ரக்ருதிம் - பிரகிருதியையும், புருஷம்ச - புருஷனையும், உபௌ அபி - இரண்டையும், அநாதீ ஏவ - ஆதியற்றவைவென்று, வித்தி-அறி; விகாராம்ச-விகாரங்களையும், குணாம்ச ஏவ-குணங்களையும், ப்ரக்ருதிஸம்பவாந் - பிரகிருதியினின்று முண்டானவைகளாக, வித்தி-அறி. (௨௰)

(தா-ம்) பிரகிருதி, புருஷன் (என்றால் ஆன்மா) இந்தஇரண்டும் அநாதியென்றுணர்க. இப்புருடனுக்கு இச்சை, துவேஷமுதலிய ஸம்ஸாரஹேதுக்களான விகாரங்களும், கர்வமின்றியிருத்தல் முதலியவைகளான மோக்ஷசாதன குணங்களும், பிரகிருதியினாலேயே சம்பவிக்கிறதென்றறிக. (௨௰)

கார்யகாரணகர்த்ருத்வே ஹேது: ப்ரக்ருதிருச்யதே |
புருஷ: ஸுகது:கா₂நாம் போக்த்ருத்வே ஹேதுருச்யதே ||

(ப-ம்) ப்ரக்ருதி:-பிரகிருதியானது, கார்யகாரணகர்த்ருத்வே-காரியகாரணங்களின் கர்த்திருத்வத்தில், ஹேது:-ஏது(வென்று) உச்யதே - சொல்லப்படும்; ஸுகது:காநாம் - இன்பதுன்பங்களினது, போக்த்ருத்வே-புசிக்குந்திறத்தில், புருஷ:-புருஷன், ஹேது:-ஏது (வென்று), உச்யதே-சொல்லப்படும். (௨௧)

(தா-ம்) தேகேந்திரியாதிகளை யுண்டுபண்ணுகிற விஷயத்தில்மாயை காரணமாகச் சொல்லப்படுகிறது பிரகிருதியுடன் சம்பந்தப்பட்ட ஜீவன் இன்பதுன்பங்களை யனுபவிப்பதில் காரணமாகச் சொல்லப்படுகிறான். (௨௧)

புருஷ: ப்ரக்ருதிஸ்தோ ஹி புங்க்தே ப்ரக்ருதிஜாந் குணாந் |
காரணம் குணஸங்கோऽஸ்ய ஸதஸத்யோநிஜந்மஸு || ௨௨ ||

(ப-ம்) புருஷ:-புருஷன், ப்ரக்ருதிஸ்த:-பிரகிருதியிலிருந்தவனாய், ப்ரக்ருதிஜாந் - பிரகிருதியிலுண்டான, குணாந் - குணங்களை,

புங்தேஹி-அனுபவிக்கிருனன்ரு? அஸ்ய-இவனுக்கு, குணஸங்க:-குணங்களோடு ஸம்பந்தம், ஸதஸத்யோநி ஜந்மஸு - நன்ருந்தீது மான யோனிப்பிறவிகளில், காரணம்-காரணம். (உஉ)

(தா-ம்) புருடன் பிரகிருதிவிஷயத்திற் சம்பந்தப்பட்டு அப்பிரகிருதிகுண விசேடத்தாற்சம்பவித்த இன்பதுன்பங்களை யனுபவிக்கிருன். புருடனுக்கு ஸத்துவ ரஜஸ்தமோ குணமயமான இன்பதுன்ப புண்யபாப முதலானவற்றில் ஆஸக்தியும், நல்லயோனியிலும், கெட்டயோனியிலும் ஜனிப்பதற்குக் காரணமுமாகும். (உஉ)

உபத்ரஷ்டாநுமந்தா ச பர்த்தா போக்தா மஹேஶ்வர:।
பரமாத்மேதி சாப்யுக்தோ தேஹேஸ்மிந்புருஷ: பர: ॥

(ப-ம்) அஸ்மிந்-இந்த, தேஹே-தேகத்தில், (ஸ்திதஃ)-இருக்கும் பரஃ-சிரேஷ்டனை, புருஷஃ-புருஷன், உபத்ரஷ்டா-ஸமீபத்திலிருந்துபார்ப்பவன்; அநுமந்தா-அங்கீகரிப்பவன்; பர்த்தா - போஷிப்பவன்; போக்தா-அனுபவிப்பவன்; மஹேச்வரஃ - மஹேசுவரன்; பரமாத்மா-பரமாத்துமா; இதிசாபி-என்றும், உக்தஃ-சொல்லப்படுவன்.

(தா-ம்) இந்த புருஷன் சரீரத்தைப் பார்ப்பவனும், அநதந்த தொழில்களிற் பிரவேசிககச் சம்மதித்தவனும், தேகத்தை பரிப்பவனும், இந்த துன்பத்தை யனுபவிப்பவனுமாயிருக்கிருன். இச்சரீரத்தில் தேகவிலக்ஷணனை இப்புருடன் முக்கிய நியாமகனும், பரமாத்மாவாகவும் கூறப்படுகிருன். (உ௩)

ய ஏவம் வேத்தி புருஷம் ப்ரக்ருதிம் ச குணை: ஸஹ।
ஸர்வதா வர்த்தமாநோऽபி ந ஸ பூயோऽபிஜாயதே॥ உ௪॥

(ப-ம்) ஏநம்-இந்த, புருஷம்-புருஷனையும், ப்ராக்ருதிம்ச-பிரகிருதியையும், குணைஃஸஹ-குணங்களுடன்கூட, யஃ-எவன், வேத்தி-அறிகிருனே, ஸஃ-அவன், ஸர்வதா - எல்லாவிதங்களிலும், வர்தமாநஃஅபி - இருந்தபோதிலும், பூயஃ-மறுபடி, நஅபிஜாயதே-பிறக்கமாட்டான். (உ௪)

(தா-ம்) எவனிவ்வண்ணம் இப்புருடனையும், பிரகிருதியையும், அதனதுகுணத்துட னறிந்துகொள்கிருனே, அவன் எந்தப் பிரகாரம்நடந்தபோதிலும் மீண்டும் இக்கன்மபூமியிற் பிறவான். (உ௪)

த்யாநேநாத்மநி பஶ்யந்தி கேசிதாத்மாநமாத்மநா।
அந்யே ஸாங்க்யேந யோகேந கர்மயோகேந சாபரே ॥

(ப-ம்) கேசித்-சிலர், த்யாநேந-தியானத்தாலே, ஆத்மநி சரீரத்தில், ஆத்மநா-மனதினால், ஆத்மாநம்-ஆத்மாவை, பச்யந்தி-பார்க்கின்றனர், அந்யே-பின்னுஞ்சிலர், ஸாங்க்யேந யோகேந-ஞானயோகத்தாலே, பச்யந்தி-பார்க்கின்றனர், அபரே-பின்னுஞ்சிலர், கர்மயோகேந-கருமயோகத்தாலே (பார்க்கிறார்கள்). (௨௫)

(தா-ம்) யோகத்தில் தேற்சியடைந்த சிலர், தேகத்திலுள்ள ஆன்மாவை மனதினாலே தியானித்து தரிசிக்கின்றனர்கள், யோகசமாப்தியடைந்த வேறுசிலர், ஆன்மாவினிடத்து மனதிற்குச் சம்பந்தமுண்டாகும்படியான ஞானயோகத்தால், தரிசிக்கின்றனர்கள். ஆன்மா ஞானயோகத்திலதிகாரமற்றவர்களும், இருந்தும் இன்பத்துக்குறிய வுபாயத்தைக் கருதாதிறமற்றுஞ்சிலர், ஞானகர்ப்பமான கர்மயோக நிட்டையாற்கண்டு களிக்கின்றனர்கள். (௨௫)

அந்யேத்வேவமஜாநந்த: ஶ்ருத்வாந்யேப்ய உபாஸதே ।
தேऽபி சாதிதரந்த்யேவ ம்ருத்யும் ஶ்ருதிபராயணா: ॥ ௨௬ ॥

(ப-ம்) அந்யேது-மிருந்தவர்களோ, ஏவம் - இப்படி, அஜாநந்த:-அறியாதவர்களாய், அந்யேப்ய:-பிறரிடத்தினின்றும், ஶ்ருத்வா-கேட்டு, உபாஸதே-உபாஸிக்கின்றனர்; ஶ்ருதிபராயணா: - கேள்வியில் ஆஸக்தரான, தே அபி ச-அவர்களும், ம்ருத்யும்-மிருத்யுவை, அதிதரந்தி ஏவ-தாண்டுகின்றார்களே. (௨௬)

(தா-ம்) சர்மயோகாதிகாரமில்லாத பற்றுஞ்சிலர், வேறு ஞானிகளாலுபதேசம் பெற்று பிரமத்தையுபாசிக்கின்றனர்கள். இதன் றிசிரவணஞ் செய்கிறவர்களும், அவர்களை ஆச்ரயித்தவர்களும் சமசாரபந்தத்தை யதிக்கிரமிக்கின்றார்கள். (௨௬)

யாவத்ஸஞ்ஜாயதே கிஞ்சித்ஸத்வம் ஸ்தாவரஜங்கமம் ।
க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞஸம்யோகாத்தத்வித்தி பரதர்ஷப ॥ ௨௭ ॥

(ப-ம்) ஹேபரதர்ஷப-ஓபரதரிஷப! ஸ்தாவரஜங்கமம்-தாவரஜங்கமரூபமாய், யாவத்கிஞ்சித்-யாதேனும் சிறிது, ஸத்வம்-பிராணியானது, ஸஞ்ஜாயதே-(எதெது) உண்டாகின்றதோ, தத் - அது, க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞஸம்யோகாத்- க்ஷேத்திரக்ஷேத்திரஜ்ஞசேர்க்கையால், வித்தி-(உண்டானதாய்) அறி. (௨௭)

(தா-ம்) ஓ அர்ஜ்ஜுனா! எதுவரையிலும் ஸ்தாவரரூபமாயாவது ஜங்கமரூபமாயாவது ஓர் பொருளுதிக்கின்றதோ, அதுவரையி

லும் சரீரம், ஆன்மா, இதுகளுடைய சேர்க்கையினாலேயே உதிக்கி ன்றதென்றறிக. (உஎ)

ஸமம் ஸர்வேஷு பூதேஷு திஷ்டந்தம் பரமேச்வரம்|
விநச்யத்ஸ்வவிநச்யந்தம் ய: பச்யதி ஸ பச்யதி|| உஅ||

(ப-ம்) ஸர்வேஷு பூதேஷு - எல்லா பூதங்களிலும், பரமேச்வரம்-பரமேசுவரனாய், திஷ்டந்தம்-இருக்கு (மாத்மாவை), ஸமம்-ஸமானனென்றும், விநச்யத்ஸு-நசிக்கும்போது, அவிநச்யந்தம்-நசியாமலிருப்பவனென்றும், ய:-எவன், பச்யதி-பார்க்கிறானோ, ஸ:-அவன், பச்யதி-பார்க்கிறான். (உஅ)

(தா-ம்) எல்லாப்பிராணிகளிடத்திலும் பேதபுத்தியின்றி தேகம், இந்திரியம், மனமுதலானவைகளுக்குப் பிரதானனியாமகனாயும், த்ருசியஜால முற்றுமழிந்தாலும், தான் அழிவற்றவனாயுமுள்ள பரமாத்மாவை எவன் காண்கிறானோ, அவன்தான் ஞானியாகிறான். ()

ஸமம் பச்யன் ஹி ஸர்வத்ர ஸமவஸ்திதமீச்வரம்|
ந ஹிநஸ்த்யாத்மநாத்மாநம் ததோ யாதி பராம் கதிம்|| உகூ||

(ப-ம்) ஸர்வத்ர-எங்கும்; ஸமவஸ்திதம்-இருக்கும், ஈச்வரம்-ஈசுவரனை(ஆத்மாவை), ஸமம்-ஸமமாக, பச்யந் - பார்ப்பவன், ஆத்மநா-மனதால், ஆத்மாநம்-ஆத்மாவை, நஹிநஸ்தி-ரக்ஷிக்கிறான்; தத:-அதனால், பராம்கதிம்-பரமகதியை, யாதி-அடைகின்றான். (உகூ)

(தா-ம்) ஸமஸ்த்த சரீரத்திலுமுள்ள ஆன்மாவைச்சமதிருஷ்டியாய்ப் பார்ப்போன் தன்மனதினாற்றனது ஆன்மாவை ஹிம்ஸிக்கான்; "என்பதால் இரக்ஷிப்பான், பின்பு முக்கியமாயடையவேண்டிய சுத்தாத்ம ஸ்வரூபமென்னும் பரகதியைப்பெறுகிறான். (உகூ)

ப்ரக்ருத்யைவ ச கர்மாணி க்ரியமாணாநி ஸர்வச:|
ய: பச்யதி ததாத்மாநமகர்தாரம் ஸ பச்யதி|| ௩0||

(ப-ம்) கர்மாணி-கருமங்கள், ஸர்வச:-எல்லாம், ப்ரக்ருத்யாஏவ பிரகிருதியாலேயே, க்ரியமாணாநி - செய்யப்படுவதாய், ய:-எவன், பச்யதி-பார்க்கிறானோ, ததா-அப்படியே, ஆத்மாநம்-ஆத்மாவை, அகர்தாரம்ச-கர்த்தாவல்லவென்றும் (பார்க்கிறானோ), ஸ:-அவன், பச்யதி-பார்க்கிறான். (௩0)

(தா-ம்) எவன் யெல்லாநதொழில்களையும் பிரகிருதியாற் செய்

யப்படுகின்றதெனவும், ஆன்மா கர்த்தனன்றெனவு முணருகின்றானோ, அவனே ஆன்மஸ்வரூபத்தை யறிகிறான். (௩௰)

யதாபூதப்ருதக்பாவமேகஸ்தமநுபஶ்யதி |
தத ஏவ ச விஸ்தாரம் ப்ரஹ்ம ஸம்பத்யதே ததா || ௩௧||

(ப-ம்) யதா-எப்பொழுது, பூதப்ருதக்பாவம்-பூதங்களின்வேற்றுமையை, ஏகஸ்தம்-ஒன்றிலிருப்பதாகவும், தத: ஏவ ச-அதினின்றுமே, விஸ்தாரம்-விஸ்தரிப்பதாகவும், அநுபச்யதி-பார்க்கிறானோ, ததா-அப்பொழுது, ப்ரம்ஹ - பிரம்மத்தை, ஸம்பத்யதே - அடைகின்றான். (௩௧)

(தா-ம்.) எவன் வஸ்துபேதங்களை ஒரு வஸ்துவினிடத்தில் "பிரகிருதியினிடத்தில்" இருப்பதாய்ப் பார்க்கின்றானோ, அப்பிரகிருதியினிடத்திலேயே அளவற்றப்பிரபஞ்ச விஸ்தீரணத்தைக் காண்கின்றானோ, அவன் ஆன்மாவை யடைகின்றான்! (௩௧)

அநாதித்வாந்நிர்குணத்வாத்பரமாத்மாயமவ்யய: |
ஶரீரஸ்தோऽபி கௌந்தேய ந கரோதி ந லிப்யதே || ௩௨||

(ப-ம்) ஹே கௌந்தேய-ஓ குந்திபுத்திர, அயம்-இந்த, பரமாத்மா-பரமாத்மா, சரீரஸ்த: அபி-சரீரத்திலிருந்தாலும், அநாதித்வாத்-ஆரம்பிக்கப்படாமையால், அவ்யய:-நாசமற்றவன்; நிர்குணத்வாத்-குணஹீனனாகையாலே, நகரோதி-செய்கிறதில்லை, நலிப்யதே ஒட்டப்படுகிறதில்லை. (௩௨)

(தா-ம்) ஓ அர்ஜுனா! இந்த முக்கியமான ஆத்மா ஆதியல்லாததா லழிவில்லாதது ஸத்துவரஜஸ் தமோகுணங்களில்லாமையால் சரீரத்திலிருந்தும் தான் ஒன்றையும் செய்யவில்லை ஆதலால் ஆன்மா சரீரஸ்வபாவத்தால் மறைக்கப்படாது. (௩௨)

யதா ஸர்வகதம் ஸௌக்ஷ்ம்யாதாகாஶம் நோபலிப்யதே |
ஸர்வத்ராவஸ்திதோ தேஹே ததாத்மா நோபலிப்யதே ||

(ப-ம்) எப்படி, ஆகாசம்-ஆகாயமானது, ஸர்வகதம் அபி - எங்கும்வியாபித்திருந்தபோதிலும், ஸௌக்ஷ்ம்யாத் - ஸூக்ஷ்மமாயிருக்கையாலே, நஉபலிப்யதே-ஒட்டுகிறதில்லையோ, ததா-அப்படி, ஆத்மா-ஆத்மாவானது, ஸர்வத்ர-எல்லா, தேஹே-தேஹத்திலும், அவஸ்திதோ அபி-இருந்தாலும், நஉபலிப்யதே-ஒட்டுகிறதில்லை. (௩௩

(தா-ம்) எவ்வண்ணம் ஆகாயம் எங்கும் வியாபித்திருந்தும், ஸூக்ஷ்மமாகவிருப்பதா லிதரவஸ்துகளுடைய ஸ்வபாவத்தால் மறைக்கப்படாதோ, அவ்வண்ணம் ஆன்மா தேகமெங்கும் வியாபித்திருந்தாலும் தேகஸ்வபாவத்தால் மறைக்கப்படாது. (௩௩)

யதா ப்ரகாஶயத்யேக: க்ருத்ஸ்நம் லோகமிமம் ரவி: |
க்ஷேத்ரம் க்ஷேத்ரீ ததா க்ருத்ஸ்நம் ப்ரகாஶயதி பாரத || ௩௪ ||

(ப-ம்) ஹே பாரத-ஓ பாரதவம்சத்தானே! ஏக:-ஒரு, ரவி:-சூரியன், இமம், இந்த, க்ருத்ஸ்நம்-எல்லா, லோகம் - உலகத்தையும், யதா-எப்படி, ப்ரகாசயதி-பிரகாசிப்பிக்கிறானோ, ததா-அப்படி, க்ஷேத்ரீ-ஆத்மாவானவன், க்ருத்ஸ்நம்-எல்லா, க்ஷேத்ரம-சரீரத்தையும், ப்ரகாசயதி-பிரகாசிப்பிக்கிறான். (௩௪)

(தா-ம்) ஓ பாரதா! எவ்வாறு ஒரு சூரியன் இவ்வுலகத்தையெல்லாம் பிரகாசப்படுத்துகிறானோ, அவவாறே இந்த ஆன்மா ஸமஸ்த சரீரத்தையும் பிரகாசப்படுத்துகிறது. (௩௪)

க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோரேவமந்தரம் ஜ்ஞாநசக்ஷுஷா |
பூதப்ரக்ருதிமோக்ஷம் ச யே விதுர்யாந்தி தே பரம் ||

(ப-ம்) ஏவம்-இப்படி, க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோ:-சரீரஆத்மாக்களின், அந்தரம்-விசேஷத்தையும், பூதப்ரக்ருதிமோக்ஷம்ச-பூதப்பிரகிருதிமோக்ஷத்தையும், ஜ்ஞாநசக்ஷுஷா-ஞானக்கண்ணால், யே-எவர்கள், விது:-அறிவார்களோ, தே-அவர்கள், பரம்-மேலானதை, யாந்தி-அடைகின்றார்கள். (௩௫)

(தா-ம்) இவ்வண்ணம் தேகத்துக்கும், ஆன்மாவுக்குமுள்ளபேதங்களையும், பூதரூபமான பிரகிருதிமோக்ஷத்தையும், என்பதால்பிரகிருதியைவிலக்குவதற்குச் சாதனங்களான கர்வமில்லாமைமுதலியகுணங்களை எவர்களறிகிறார்களோ, அவர்கள் ஆன்மாவையடைகிறார்கள். (௩௫)

ஸ்ரீகீதாஸூ பக்தியோகமென்னும்
பதின்மூன்றாவது அத்தியாயம் முற்றிற்று.

# பதிநான்காவது அத்தியாயம்.



## அத குணத்ரயவிபாகயோக:.

### ஸ்ரீகிருஷ்ண வாக்கியம்.

பரம் பூய: ப்ரவக்ஷ்யாமி ஜ்ஞாநாநாம் ஜ்ஞாநமுத்தமம் |
யஜ்ஜ்ஞாத்வா முநய: ஸர்வே பராம் ஸித்திமிதோ கதா: || ௧||

(ப-ம்.) ஜ்ஞாநாநாம்-ஞானங்களுள், உத்தமம்-உத்தமமான, பரம் - மற்றொரு-ஜ்ஞாநம்-ஸத்வாதிகுணங்களைக்குறித்தஞ்ஞானத்தை, பூய:-மறுபடியும், ப்ரவக்ஷ்யாமி-சொல்லுகிறேன்; யத்-எதை, ஜ்ஞாத்வா-தெரிந்துகொண்டு, ஸர்வே-எல்லா, முநய:-முனிகளும், இத:-இந்தஸம்ஸாரமண்டலத்தைப்பார்க்கிலும், பராம்-மேலான, ஸித்திம்-ஸித்தியை, கதா:-அடைந்தார்களோ. (௧)

(தா-ர்.) ரிஷிகளானவருள், எந்த ஞானத்தையறிந்து இச்சம்சாரபந்தத்தில் நின்றும் சித்தியைப்பெற்றார்களோ. அத்தகைய ஞானங்களுக்குட்சிறந்த வேறொரு ஞானத்தையுனக்கு மீண்டும் கூறுகின்றேன். (௧)

இதம் ஜ்ஞாநமுபாஶ்ரித்ய மம ஸாதர்ம்யமாகதா: |
ஸர்கேऽபி நோபஜாயந்தே ப்ரலயே ந வ்யதந்தி ச || ௨||

(ப-ம்.) இதம்-இந்த, ஜ்ஞாநம்-ஞானத்தை, உபாஶ்ரித்ய-ஆஶ்ரயித்து, மம-என்னுடைய, ஸாதர்ம்யம் - ஸமானத்தன்மையை, ஆகதா:-அடைந்தவர்கள், ஸர்கேபி - சிருஷ்ட்டியிலும், ந உபஜாயந்தே-ஜநிக்கமாட்டார்கள், ப்ரளயே-பிரளயத்திலும், ந வ்யதந்தி ச-ஸம்ஹரிக்கப்படமாட்டார்கள். (௨)

(தா-ம்) இவ்வறியஞானத்தை ஆச்ரயித்து எனக்குச்சமமானதன்மையயடைகிறவர்கள் பிரபஞ்சசிருஷ்டியிற்பிறவார்கள் பிரளயகாலத்திலும் லயமடையார்கள். (௨)

மம யோநிர்மஹத்ப்ரஹ்ம தஸ்மிந்கர்பம் ததாம்யஹம் |
ஸம்பவ: ஸர்வபூதாநாம் ததோ பவதி பாரத || ௩||

(ப-ம்.) யோநி:-(ஸர்வ)காரணமான, மம-என்னால், மஹத்ப்ரஹ்ம-பெரும்பிரம்மம் (எதுவோ), தஸ்மிந்-அதில், அஹம்-நான், கர்ப்பம்-கர்ப்பத்தை, ததாமி-வைக்கிறேன், தத:-அதனால், ஹே பார

த!-ஓ பாரத!, ஸர்வபூதாநாம்-எல்லாப்பிராணிகளுக்கும், ஸம்பவ:- பிறப்பு, பவதி-உண்டாகிறது. (௩.)

(தா-ம்) ஓ அர்ஜுனா! எங்கும் வியாபித்திருக்கின்ற பிரகிருதியானது எந்தனுக்குகர்பத்தைவைக்கிற விடமாகவிருக்கிறது அதனிடத்தில் யான் கர்பத்தைவைக்கிறேன். அதனாற்றான் பிரமன்முதலிய சகலபிராணிகளுடைய வுற்பத்தியுமுண்டாகின்றது. (௩.)

ஸர்வயோநிஷு கௌந்தேய மூர்த்தய: ஸம்பவந்தி யா: |
தாஸாம் ப்ரஹ்ம மஹத்யோநிரஹம் பீஜப்ரத: பிதா || ௪ ||

(ப-ம்.) (ஹே) கௌந்தேய-ஓ குந்திபுத்திர, ஸர்வயோநிஷு- எல்லா யோனிகளிலும், யா:-எந்த, மூர்தய:-சரீரங்கள், ஸம்பவந்தி உண்டாகின்றனவோ, தாஸாம்-அவைகளுக்கு, ப்ரம்ஹ - பிரகிருதியானது, மஹத்-பெரிய, யோநி:-காரணம்; அஹம்-நான், பீஜப்ரத:- அவர்கள் கர்மாநுசாரமாகச் சேதநர்களைச்சேர்க்கிறவனாகிய, பிதா- தகப்பன். (௪)

(தா-ம்) ஓ அர்சுனனே! தேர், மனிதர்முதலிய நானாசாதிகளிடத்தில் எங்கெந்த சரீரங்களுண்டாகின்றதோ, அதுகளெல்லாவற்றிர்க்கும் மஹத்தான பிரகிருதியே காரணமாகிறது ஆதலால், யான், அவைகளுக்கு விதைபோடுகிற தந்தையாகின்றேன். (௪)

ஸத்த்வம் ரஜஸ்தம இதி குணா: ப்ரக்ருதிஸம்பவா: |
நிபத்நந்தி மஹாபாஹோ தேஹே தேஹிநமவ்யயம் || ௫ ||

(ப-ம்.) (ஹே) மஹாபாஹோ-ஓ பெருந்தோளாய், அவ்யயம்- அழிவற்ற, தேஹிநம்-ஆத்மாவை; தேஹே-சரீரத்தில், நிபத்நந்தி- (அவை) கட்டுப்படுத்துகின்றன. (௫)

(தா-ம்) ஓ மஹாபாஹோ! ஸத்துவ, ரஜஸ், தமஸ்என்கிறபிரகிருதிசம்பந்தமான முக்குணங்கள், சரீரத்திற்பற்றிய ஆன்மாவை, பிரகிருதிசம்மந்தமானதேவர், மனிதர். பசு, பக்ஷிமுதலிய சரீரசம்பந்தவசமா யநுசரிக்குங்கால் கட்டுகின்றது. (௫)

தத்ர ஸத்த்வம் நிர்மலத்வாத் ப்ரகாசகமநாமயம் |
ஸுகஸங்கேந பத்நாதி ஜ்ஞாநஸங்கேந சாநக || ௬ ||

(ப-ம்.) ஹே அநக-ஓ குற்றமற்றவனே, தத்ர-அவற்றுள், ஸத்வம்-ஸத்துவகுணமானது, நிர்மலத்வாத் - தெளிவாயிருக்கையால், ப்ரகாசகம்-பிரகாசத்தைத்தருமது; அநாமயம் - ஆரோக்கியத்தைச்

செய்வது, ஸுகஸங்கேந-ஸுகத்தோடு சேர்ப்பதினாலும், ஜ்ஞாநஸங்கேந-ஞானப்பற்றாலும், பத்நாதி-கட்டுகிறது. (௬)

(தா-ம்.) ஓ பாபமற்ற அர்ஜ்ஜுனனே! மேற்கூறிய ஸத்துவாதிமுக்குணங்களுள் சத்துவகுணம் நிர்மலமாயும், பிரகாசமாயும், சாந்தமாயுமிருப்பதால், அஃது, இன்பத்திலும், ஞானத்திலும் ஆஸக்தியையுண்டுபண்ணி அவைகளை யநுபவிப்பதற்குச் சிறந்தயோனிகளில் ஜனிக்கும்படிசெய்து புருடனை நிர்பந்திக்கின்றது. (௬)

𑌰𑌜𑍋 𑌰𑌾𑌗𑌾𑌤𑍍𑌮𑌕𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌤𑍃𑌷𑍍𑌣𑌾𑌸𑌙𑍍𑌗𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌮𑍍 ।
𑌤𑌨𑍍𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌾𑌤𑌿 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌕𑌰𑍍𑌮𑌸𑌙𑍍𑌗𑍇𑌨 𑌦𑍇𑌹𑌿𑌨𑌮𑍍 ॥ ௭ ॥

(ப-ம்.) ஹே கௌந்தேய-ஓ குந்திபுத்திர! ரஜ꞉ - ரஜோகுணமானது, ராகாத்மகம்-ஸ்த்ரீபுருஷர்களுக்கு அந்யோந்யமிருக்கிறப்ரீதிக்குக்காரணமானதும், த்ருஷ்ணாஸங்கஸமுத்பவம்-திருஷ்ணையுடன் சேர்க்கைக்குக் காரணமுமென்று, வித்தி-அறி, தத் - அது, கர்மஸங்கேந-கருமப்பற்றால், தேஹிநம்-ஆத்மாவை, நிபத்நாதி - கட்டுகிறது. (௭)

(தா-ம்.) ஓ குந்திசுதனே! இரஜோகுணம் பெண்களிடத்தில் மோஹத்தைத்தரத்தக்க காமரூபமானது. சப்தாதிவிஷயங்களில் விருப்பங்கொள்வதற்கும், புத்திரமித்திராதிகளிடத்தில் விசேஷ அன்பை யுண்டுபண்ணுவதற்குக் காரணமாகவும், அவைகட்கு ஆதாரங்களான கர்மங்களிலாசையை கற்பித்து ஆன்மாவை பந்திக்கின்றது.

𑌤𑌮𑌸𑍍𑌤𑍍𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑌜𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌮𑍋𑌹𑌨𑌂 𑌸𑌰𑍍𑌵𑌦𑍇𑌹𑌿𑌨𑌾𑌮𑍍 ।
𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌾𑌲𑌸𑍍𑌯𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌭𑌿𑌸𑍍𑌤𑌨𑍍𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌾𑌤𑌿 𑌭𑌾𑌰𑌤 ॥ ௮ ॥

(ப-ம்.) அஜ்ஞாநஜம்-அஞ்ஞானத்தாலுண்டான, தம꞉ து-தமோகுணமோ, ஸர்வதேஹிநாம் - எல்லாப் பிராணிகளுக்கும், மோஹநம்-மோஹகர(மென்று), வித்தி-அறி; தத்-அது, பாரத-ஓபாரத!, ப்ரமாதாலஸ்ய நித்ராபி꞉-பிரமாதம் ஆலஸ்யம் நித்திரா (இவைகளால்), நிபத்நாதி-கட்டுகின்றது. (௮)

(தா-ம்.) ஓ அர்ஜ்ஜுனா! தமோகுணம் அஞ்ஞானத்தாலுதிக்கின்றது. அது, அகிலப்பிராணிகளையும் விவேகமின்றிச் செய்வதற்குக்காரணமென்றுணர்க. இன்னும் அத்தமோகுணம், செய்யவேண்டிய கன்மத்தைவிட்டு வேறுகர்மத்தைச்செய்வதற்கு ஏதுவான அஜாக்கிரதையையும், சோம்பலையும், உறக்கத்தையுமுண்டுபண்ணி புருஷனை நிர்பந்திக்கும். (௮)

ஸத்வம் ஸுகே ஸஞ்ஜயதி ரஜ: கர்மணி பாரத।
ஜ்ஞாநமாவ்ருத்ய து தம: ப்ரமாதே ஸஞ்ஜயத்யுத॥ க௯॥

(ப-ம்.) ஹே பாரத-ஓ பாரத!, ஸத்வம்-ஸத்துவகுணமானது, ஸுகே-சுகத்தில், ஸஞ்ஜயதி - ஸங்கத்தையுண்டாக்குகின்றன, ரஜ:-ரஜோகுணம், கர்மணி-கருமத்தில்; தம:து-தமஸ்ஸோ, உத - மற்றபடி, ஜ்ஞாநம்-ஞானத்தை, ஆவ்ருத்ய-மறைத்து, ப்ரமாதே-விபரீதத்தில், ஸஞ்ஜயதி-ஸங்கத்தை யுண்டாகின்றது. (க௯)

(தா-ம்.) ஓ பாரத! சத்துவகுணம், இன்பத்தால் புருடனை நிர்பந்திக்கின்றது. இரஜோகுணம், கன்மத்தால்பந்திக்கின்றது. தமோகுணம், ஞானத்திற்கு வேறுபாடான விபரீதஞானத்தை விளைவித்துதுர்வியாபாரத்திற் பிரவேசிக்கச்செய்கிறது. (௯)

ரஜஸ்தமஸ்சாபிபூய ஸத்வம் பவதி பாரத।
ரஜ: ஸத்வம் தமஸ்சைவ தம: ஸத்வம் ரஜஸ்ததா॥ க0॥

(ப-ம்.) (ஹே) பாரத-ஓ பாரதனே!, ரஜ: - ரஜோகுணத்தையும், தம:ச-தமோகுணத்தையும், அபிபூய - திரஸ்கரித்து, ஸத்வம்-ஸத்துவகுணம், பவதி-தலையெடுக்கும்; ரஜ: - ரஜஸையும், ஸத்வம்-ஸத்துவத்தையும் (அடக்கி) தம:சஏவ-தமோகுணம் (தலையெடுக்கும்)ததா-அப்படி, தம:-தமஸ்ஸையும், ஸத்வம்-ஸத்துவத்தையும் (அடக்கி), ரஜ:-ரஜோகுணம் (தலையெடுக்கும்). (க0)

(தா-ம்.) ஓ அர்ஜுநனே! ஸத்துவகுணம், இரஜோகுணத்தையும், தமோகுணத்தையும், திரஸ்கரித்துவிட்டு பிரகாசிக்கும். இரஜோகுணம், ஸத்துவ; தமோகுணங்களை யதிட்டித்து பிரகாசிக்கும் அவ்வாறேதான் தமோகுணமும், ஸத்துவ ரஜோகுணங்களை திரஸ்கரிக்கின்றது. (கக)

ஸர்வத்வாரேஷு தேஹேऽஸ்மிந் ப்ரகாஸ உபஜாயதே।
ஜ்ஞாநம் யதா ததா வித்யாத் விவ்ருத்தம் ஸத்வமித்யுத॥ கக॥

(ப-ம்) அஸ்மிந் - இந்த, தேஹே - தேஹத்தில், ஸர்வத்வாரேஷு-எல்லாத்துவாரங்களிலும், ப்ரகாஸே-வஸ்துக்களின் நிஜஸ்வரூபத்தைத்தெரிந்துக் கொள்ளுகிறவிஷயமாய், யதா - எப்பொழுது, ஜ்ஞாநம்-ஞானம், உபஜாயதே-உண்டாகின்றதோ, ததா - அப்பொழுது, ஸத்வம்-ஸத்துவகுணம், விவ்ருத்தம்-தலையெடுத்தது, இதிஉத-என்று, வித்யாத்-நினைக்கக்கடவன். (கக)

(தா-ம்.) இச்சரீரத்தினது கண், செவிமுதலிய விந்திரியரூபமானஞானமார்க்கங்களில் எப்பொழுது வஸ்துக்களுடைய நிஜஸ்வரூ

பத்தைத் தெரிவிக்கும்படியான தத்துவஞானமுண்டாகின்றதோ, அப்பொழுது சத்துவகுணமே விருத்தியடைந்திருக்கிறதென்றறிதல்வேண்டும். (௧௧)

லொஃ ப்ரவ்ருத்திராரம்ப꞉ கர்மணாமஶம꞉ ஸ்ப்ருஹா ।
ரஜஸ்யேதாநி ஜாயந்தே விவ்ருத்தே பரதர்ஷப ॥ ௧௨ ॥

(ப-ம்) ஹே பரதர்ஷப-ஓ பரதச்சிரேஷ்டனே! ரஜஸி-ரஜோகுணமானது, விவ்ருத்தே-விருத்தியானபொழுது, லோப꞉-லோபம், ப்ரவ்ருத்தி꞉-பிரவிருத்தி, கர்மணாம்-கருமங்களுடைய, ஆரம்ப꞉-ஆரம்பம், அஶம꞉-இந்திரியங்கள் வெலியாமை, ஸ்ப்ருஹா-விஷயஇச்சை(இவை), ஜாயந்தே-உண்டாகின்றன. (௧௨)

(தா-ம்) ஓ அர்ஜ்ஜுனா! உலோபம், என்றால் பொருள்செலவிடாமல் பத்திரப்படுத்துதல். வியாபாரம், "என்றால் பிரயோஜனமின்றிச் சஞ்சரித்தல்" பலத்தைக்கருதி கன்மத்தை ஆரம்பித்தல், அசாந்தி, என்றால் இந்திரியங்களுக்கு ஓய்வில்லாமலிருத்தல். ஸ்ப்ருஹா, என்றால் சப்தாதிவிஷயங்களில் விருப்பம் இவைகள் இரஜோகுணம் விருத்தியடைந்தபொழுதுண்டாகும். (ஸ)ப்ரவ்ருத்தி꞉-காரியங்களில்ப்ரவ்ருத்தி. (௧௨)

அப்ரகாஶோ(அ)ப்ரவ்ருத்திஶ்ச ப்ரமாதோ மோஹ ஏவ ச ।
தமஸ்யேதாநி ஜாயந்தே விவ்ருத்தே குருநந்தந ॥ ௧௩ ॥

(ப-ம்) (ஹே) குருநந்தந-ஓ குருநந்தனா! அப்ரகாஶ꞉- அப்பிரகாசமும், அப்ரவ்ருத்திஶ்ச-அப்பிரவர்த்தியும், ப்ரமாத꞉-தான் செய்யவேண்டியதைப்பார்க்கிலும் இதரமானவைகளில் ப்ரவர்த்திக்கச்செய்தல், மோஹஏவச-மயக்கமும், ஏதாநி-இவை, தமஸி-தமோகுணம், விவ்ருத்தே-விருத்தியடைந்தபோது, ஜாயந்தே-உண்டாகும்.

(தா-ம்.) ஓ பார்த்தா! அப்பிரகாசம், "என்றால்; ஞானமுதிக்காமலிருத்தல்" ஆலச்யம், "என்றால் கர்மத்தை ஆரம்பிக்காமலிருத்தல்" பிரமாதம், "என்றால் அஜாக்கிரதை" மோஹம், "என்றால் விபரீதஞானம்" இவைகள் தமோகுணம் மேம்பட்டபோதுண்டாகும். (௧௩)

யதா ஸத்த்வே ப்ரவ்ருத்தே து ப்ரலயம் யாதி தேஹப்ருத் ।
ததோத்தமவிதாம் லோகாநமலாந்ப்ரதிபத்யதே ॥ ௧௪ ॥

(ப-ம்) யதா-எப்பொழுது, தேஹப்ருத்-மனிதன், ஸத்த்வே - ஸத்துவம், ப்ரவ்ருத்தே து - தலையெடுத்திருக்கும்பொழுது, ப்ரளயம்-

மரணத்தை, யாதி-அடைகின்றானோ; ததா - அப்பொழுது, உத்தமவிதாம்-உத்தமமறிந்தவர்களின், அமலாந் - நிர்மலமான, லோகாந்-லோகங்களை, ப்ரதிபத்யதே-அடைகின்றான். (௧௪)

(தா-ம்.) எப்பொழுது புருடன் சத்துவகுணம் விருத்தியடையும்போது மரணமடையுகிறானோ, அப்பொழுதுதான் உத்தமமான ஆத்மஸ்வரூபத்தையடைந்த ஞானியினது நிர்மலவம்சத்தில் ஜன்மமெடுக்கிறான். (௧௪)

ரஜஸி ப்ரலயம் க³த்வா கர்மஸங்கி³ஷு ஜாயதே|
ததா² ப்ரலீநஸ்தமஸி மூட⁴யோநிஷு ஜாயதே|| ௧௫||

(ப-ம்.) ரஜஸி-ரஜோகுணத்தில், ப்ரளயம்-மரணம், கத்வா-அடைந்து, கர்மஸங்கிஷு-கருமஞ்செய்வோரிடத்தில், ஜாயதே பிறக்கிறான், ததா-அப்படி, தமஸி-தமோகுணத்தில்,ப்ரலீந:-இறந்தவன், மூடயோநிஷு-மூடயோனிகளில், ஜாயதே-பிறக்கிறான். (௧௫)

(தா-ம்.) இரஜோகுணம் மேம்பட்டபோது மரணமடைந்தவன் ஸ்வர்க்காதி போகங்களைவிரும்பி பர்மத்தைச்செய்தவர்களுடைய குலத்தில் ஜனிக்கிறான். தமோகுணம் மேலிட்டபொழுது மரணமடைந்தவன் நாய், பன்றி, புழுகு முதலிய மூடயோனியிற்பிறக்கின்றான்.

கர்மண: ஸுக்ருதஸ்யாஹு: ஸாத்த்விகம் நிர்மலம் ப²லம்|
ரஜஸஸ்து ப²லம் து³:க²மஜ்ஞாநம் தமஸ: ப²லம்|| ௧௬||

(ப-ம்.) ஸுக்ருதஸ்ய - சுகிருதமான, கர்மண:-கருமத்துக்கு, ஸாத்விகம்-ஸாத்துவிகமும், நிர்மலம்-நிர்மலமுமான, பலம்-பலமாக, ஆஹு:-சொல்வர்கள்; ரஜஸ:து-ரஜோகுணத்துக்கோ, து:கம்-துக்கம், பலம்-பயன்(என்பார்கள்); தமஸ:-தமோகுணத்துக்கு, அஜ்ஞாநம்-அக்ஞானம், பலம்-பலமாகச் சொல்லுவார்கள். (௧௬)

(தா-ம்.) சத்துவகுணத்தோடு பலத்தைக்கோராமல் பகவதாராதனரூபமாய்ச்செய்யப்படுகிற கன்மத்திற்குப்பயன் துக்கலேசமில்லாத சுகமெனவும், இரஜோகுணத்துடன் செய்யப்படுகிற கர்மத்திற்குப்பயன் துக்கமெனவும் தமோகுணத்துடன் செய்யப்படுகிறகர்மத்திற்குப்பயன் அஞ்ஞானமெனவும் கூறப்படும். (௧௬)

ஸத்த்வாத்ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம் ரஜஸோ லோப⁴ ஏவ ச|
ப்ரமாத³மோஹௌ தமஸோ ப⁴வதோऽஜ்ஞாநமேவ ச|| ௧௭||

(ப-ம்.) ஸத்வாத்-ஸத்துவகுணத்தால், ஜ்ஞாநம்-ஞானம், ஸஞ்ஜாயதே-பிறக்கும்; ரஜஸ:-ரஜோகுணத்தால், லோப ஏவ ச - லோபமே, (ஸஞ்ஜாயதே)-பிறக்கும்; தமஸ:-தமஸால், ப்ரமாதமோஹௌ-அநவதானமோஹங்கள், பவத:-உண்டாகின்றன; அஜ்ஞாநம் ஏவ ச-அக்ஞானமும் (உண்டாம்). (௧௭)

(தா-ம்.) சத்துவகுணத்தால் மெய்ஞ்ஞான விளக்கமும், இரஜோகுணத்தால் ஸ்வர்க்காதிபோகங்களும், தமோகுணத்தால் மதிமயக்கமும், விபரீதஞானமும் அஜாக்கிறதையுமுண்டாகும். (௧௭)

ஊர்த்வம் கச்சந்தி ஸத்வஸ்தா மத்யே திஷ்டந்தி ராஜஸா:।
ஜகந்யகுணவ்ருத்திஸ்தா அதோ கச்சந்தி தாமஸா:॥ ௧௮॥

(ப-ம்.) ஸத்வஸ்தா:-ஸத்துவத்தினின்றவர், ஊர்த்வம்-ஸம்ஸாரபந்தத்தைவிட்டு மேலேபோவார்கள், சச்சந்தி-போகிறார்கள், ராஜஸா:-ரஜஸில்நின்றவர்கள், மத்யே-மத்யபோகத்தில் பிறந்தும் இறந்தும் திஷ்டந்தி-நிற்கிறார்கள்; ஜகந்யகுண வ்ருத்திஸ்தா:-இழிவானகுணத்தின் விருத்தியினிற்பவர்களான, தாமஸா:-தாமதர்கள், அதோகச்சந்தி-சண்டாளத்வத்தையும் திர்யகாதி ஜந்மத்தையும் அடைவார்கள். (௧௮)

(தா-ம்.) சத்துவகுண நிலைமையிலிருப்போர் மேன்மையடைகிறார்கள், "என்பதால் சம்சாரபந்தத்திலிருந்து மோக்ஷமடைகின்றார்கள்" இரஜோகுண நிலைமையிலிருப்போர் மத்தியத்திலிருக்கின்றனர்கள். தேவமனுஷ்யாதி ஜன்மங்களில் பிரவேசிக்கின்றனர்கள். தமோகுணநிலைமையிலிருப்போர்முறையே பரமநிக்ருஷ்டகுணங்களையும், கிரியைகளையும், அநுசரித்து அதோகதியை யடைகின்றனர் ஈனஜன்மத்தையடைகின்றனர்களென்று கருத்து. (௧௮)

நாந்யம் குணேப்ய: கர்தாரம் யதா த்ரஷ்டாநுபஶ்யதி।
குணேப்யஶ்ச பரம் வேத்தி மத்பாவம் ஸோऽதிகச்சதி॥ ௧௯॥

(ப-ம்.) த்ரஷ்டா-பார்ப்பவன், குணேப்ய: - குணங்களைக்காட்டிலும், அந்யம்-வேறு; கர்தாரம்-கர்த்தாவை, யதா - எப்பொழுது, ந அநுபச்யதி-பார்க்கிறதில்லையோ, (கிம்)ச-பின்னும், குணேப்ய:-குணங்களைக்காட்டிலும், பரம்-மேலானவனை, வேத்தி-அறிகின்றானோ ஸ:-அவன், மத்பாவம்-என்னைநிகர்த்தவனுதலை; (ததா - அப்பொழுது), அதிகச்சதி-அடைகின்றான். (௧௯)

(தா-ம்.) ஞானமுடையோன் எப்பொழுது ஸத்வராஜஸ்தமோகுணங்களைவிட வேறுகர்த்தனையுணராது இக்குணங்களெல்லாவற்றிற்கும் விலக்ஷணமாய்ப் பிரகாசிக்கின்ற பரப்பிரமமென்னும்பரமாத்மனை உய்த்துணருகின்றனோ, அப்பொழுதுதான் என்தன்மையையடைகிறான். (௧௯)

𑌗𑍁𑌣𑌾𑌨𑍇𑌤𑌾𑌨𑌤𑍀𑌤𑍍𑌯 𑌤𑍍𑌰𑍀𑌨𑍍𑌦𑍇𑌹𑍀 𑌦𑍇𑌹𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌾𑌨𑍍 |
𑌜𑌨𑍍𑌮𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌜𑌰𑌾𑌦𑍁:𑌖𑍈𑌰𑍍𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑍋𑌽𑌮𑍃𑌤𑌮𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 || ௨௦ ||

(ப-ம்.) தேஹீ-தேகமெடுத்தவன், தேஹஸமுத்பவாந்-தேகத்திலுண்டான, ஏதாந்-இந்த, த்ரீந்-மூன்று, குணாந் - குணங்களையும், அதீத்ய-கடந்து, ஜந்மம்ருத்யுஜராதுக்கை: - பிறப்பு இறப்பு மூப்பு துன்பங்களினின்று, விமுக்த:-விடுபட்டவனாய், அம்ருதம்-அமுதத்தை, அச்நுதே-அடைகிறான். (௨௰)

(தா-ம்) இந்த தேஹியான ஆத்மா, தேகத்திலுண்டான இம்முக்குணங்களென்னும் பிரகிருதியை அதிக்கிரமித்து என்றால் "இதற்குவிலக்ஷணமான சித்தாத்மஸ்வரூபத்தையறிந்து ஜனனம், மரணம், கிழத்தன்மை, துக்கமுதலிய துன்பத்தில் நின்றும் விடுபட்டவனாய் ஆத்மாநந்தாநுபவத்தையடைவான். (௬௦) அம்ருதம் - என்னுடைய ஸ்வரூபமாயிருத்தலே. (௨௰)

𑌕𑍈𑌰𑍍𑌲𑌿𑌙𑍍𑌗𑍈𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌨𑍍𑌗𑍁𑌣𑌾𑌨𑍇𑌤𑌾𑌨𑌤𑍀𑌤𑍋 𑌭𑌵𑌤𑌿 𑌪𑍍𑌰𑌭𑍋 |
𑌕𑌿𑌮𑌾𑌚𑌾𑌰: 𑌕𑌥𑌂 𑌚𑍈𑌤𑌾𑌂𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌨𑍍𑌗𑍁𑌣𑌾𑌨𑌤𑌿𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 || ௨௧ ||

(ப-ம்.) (ஹே) ப்ரபோ-ஓ பிரபுவே! ஏதாந்-இந்த, த்ரிகுணாந்-முக்குணங்களையும், அதீத:-கடந்தவன், கை:-எந்த, லிங்கை:-அடையாளங்களோடு, (வசிஷ்ட:)-கூடியவனாய், பவதி - ஆகிறான்? (கிம்ஆசார:-எந்த ஆசாரமுடையவன்?) ஏதாந்-இந்த, த்ரீந்-மூன்று, குணாந்-குணங்களையும், கதம்ச-எப்படி, அதிவர்த்ததே-அதிக்ரமிக்கிறான். ()

(தா-ம்.) ஓ முகுந்தா! மேற்கூறிய முக்குணங்களையும் அதிக்கிரமித்தவனெத்தன்மயத்தனாகவிருப்பன் ? அவனெத்தகையவாசாரமுடையன்? எவ்விதவுபாயத்தாற் புருடன் முக்குணங்களைக்கடந்திருப்பன்? (௨௧)

𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌂 𑌚 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂 𑌚 𑌮𑍋𑌹𑌮𑍇𑌵 𑌚 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵 |
𑌨 𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌿 𑌸𑌂𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌾𑌨𑌿 𑌨 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌾𑌨𑌿 𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌤𑌿 || ௨௨ ||

𑌉𑌦𑌾𑌸𑍀𑌨𑌵𑌦𑌾𑌸𑍀𑌨𑍋 𑌗𑍁𑌣𑍈𑌰𑍍𑌯𑍋 𑌨 𑌵𑌿𑌚𑌾𑌲𑍍𑌯𑌤𑍇 |
𑌗𑍁𑌣𑌾 𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌯𑍋𑌽𑌵𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 𑌨𑍇𑌙𑍍𑌗𑌤𑍇 || ௨௩ ||

𑌸𑌮𑌦𑍁𑌃𑌖𑌸𑍁𑌖𑌃 𑌸𑍍𑌵𑌸𑍍𑌥𑌃 𑌸𑌮𑌲𑍋𑌷𑍍𑌟𑌾𑌶𑍍𑌮𑌕𑌾𑌞𑍍𑌚𑌨𑌃 |
𑌤𑍁𑌲𑍍𑌯𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌪𑍍𑌰𑌿𑌯𑍋 𑌧𑍀𑌰𑌸𑍍𑌤𑍁𑌲𑍍𑌯𑌨𑌿𑌨𑍍𑌦𑌾𑌤𑍍𑌮𑌸𑌂𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌃 || ௨௪ ||

𑌮𑌾𑌨𑌾𑌪𑌮𑌾𑌨𑌯𑍋𑌸𑍍𑌤𑍁𑌲𑍍𑌯𑌸𑍍𑌤𑍁𑌲𑍍𑌯𑍋 𑌮𑌿𑌤𑍍𑌰𑌾𑌰𑌿𑌪𑌕𑍍𑌷𑌯𑍋𑌃 |
𑌸𑌰𑍍𑌵𑌾𑌰𑌮𑍍𑌭𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑍀 𑌗𑍁𑌣𑌾𑌤𑍀𑌤𑌃 𑌸 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 || ௨௫ ||

(ப-ம்.) (ஹே) பாண்டவ-ஓ பாண்டுபுத்திர! ஸம்ப்ரவ்ருத்தாநி-பிரவர்த்தித்த, ப்ரகாசம்ச - பிரகாசத்தையும், ப்ரவ்ருத்திம்ச-பிரவிருத்தியையும், மோஹம் ஏவச - மோஹத்தையும், ந த்வேஷ்டி - பகைக்கமாட்டான், நிவ்ருத்தாநி-நிவ்ருத்திக்கப்பட்டவைகளை, ந காங்க்ஷதி - விரும்பமாட்டான், ய: - எவன், உதாஸீநவத் - உதாஸீனமாய், ஆஸீந: - இருந்து, குணை: - குணங்களால், ந விசால்யதே-சலிப்புறுமோ, ய:-எவன், குணா: ஏவ-குணங்களே, வர்த்தந்தே-இருக்கின்றன, இதி - என்று, அவதிஷ்டதி இருக்கிறானோ, (ஸ:) - அவன், ந இங்கதே - சலிக்கமாட்டான், ஸமதுக்கஸுக: - இன்பதுன்பங்கள் ஸமமாய், ஸ்வஸ்த: - ஸ்வஸ்தனாய், ஸமலோஷ்டாச்மகாஞ்சந: - மண்கட்டி கல் பொன் (இவை) ஸமமாய், துல்யப்ரியாப்ரிய: - பிரியமும் அப்பிரியமும் துல்யமாய், தீர: - ப்ரக்ருதியையும் ஆத்மாவையும் ஏற்படுத்த வல்லவனும், துல்யநிந்தா ஆத்மஸம்ஸ்துதி: - நிந்தையும் தன்னைத்துதிப்பதும் துல்யமாய், மாந அவமாநயோ: - மானவமானங்கள், துல்ய: - ஸமமுள்ளவனாய், மித்ராரிபக்ஷயோ: - மித்திரசத்ருபக்ஷங்களில், துல்ய:-துல்யனாய், ஸர்வாரம்ப பரித்யாகீ-எல்லா ஆரம்பத்தையும் விட்டவன் (யாவன்) ஸ: - அவன், குணாதீத: - குணங்களைக்கடந்தவன், உச்யதே சொல்லப்படுவான். (௨௩-௨௪-௨௫)

(தா-ம்.) ஓ பாண்டவா! தனக்கு விருப்பமில்லாத வேறுவஸ்துவினிடத்தில் பிரவர்த்தித்த ஸத்துவகுணத்தின் தொழிலும், பிரகாசமென்னும் இரஜோகுணத்தின் வியாபாரமென்னும் தமோகுணத்தின் இஷ்ட மோஹ வியாபாரங்களடங்கினவனையும் விரும்பா. இஷ்டவஸ்துவினிடத்தில் பிரமமிருப்பது மில்லாத காட்டி,ஆகிய இவைகளைக்கருதானெனக் கருத்துபெற்றும். எவன் நடுநிலத்தியிலுள்ளவனைப்போல் இராகத்துவேஷமின்றியும், ஸத்துவாதி முக்குணங்களாலும் பீடிக்கப்படவில்லையோ. இன்னும் எவன், அந்தகுணத்தின்

நம்மிடத்திற் குடிப்புகுந்திருக்கின்றதுகளென்று தானொன்றையும் செய்யாது மௌனமாக விருக்கின்றானோ, எவன், இன்பதுன்பத்திற் சமபுத்திவகித்து ஆன்மாவிடத்திலேயே நிறுத்தி மண், கல், பொன், உலோகம், இவைகளையும், விருப்பு வெருப்புகளையும் துல்லியமாகப் பாவித்துத் தத்துவவிவேக முகித்துத் தன்னையேற்றினாலும், இகழ்ந்தாலும் ஸமமாக நினைக்கின்றானோ, எவன், மாநாவமானங்களையும் சத்ரு மித்ரர்களையும் சமமாகவெண்ணி சர்வப்ரயத்நங்களையும் விலக்குகின்றானோ, அப்படிப்பட்டவனேதான் சத்துவ, ரஜஸ், தமோகுணங்களை விலக்கினவனெனப்படுவன். ()

மாஞ்சயோவ்யபிசாரேண பக்தியோகேந ஸேவதே|
ஸகுணாந்ஸமதீத்யைதாந்ப்ரஹ்மபூயாய கல்பதே||உ௬||

(ப-ம்.) யஃ-எவன், அவ்யபிசாரேண - இதரவிஷயமில்லாத, பக்தியோகேந - பக்தியோகத்தாலே, மாம்-என்னை, ஸேவதே - சேவிக்கிறானோ, ஸஃ-அவன், ஏதாந் - இந்த, குணாந் - குணங்களை, ஸமதீத்ய - அதிக்ரமித்து, ப்ரம்ஹபூயாய-ஆத்மப்ராப்தியின்பொருட்டு கல்பதே - தகுந்தவனாவான். (உ௬)

(தா-ம்.) எவன் எந்தனை மனதிடத்துடன்கூடி பக்தியோகத்தால்பஜிக்கின்றானோ, அவனும் இந்த முக்குணங்களையும் அதிக்கிரமித்து பிரம்ம ப்ராப்த்திக்குரியவனாகின்றான். (உ௬)

ப்ரஹ்மணோஹி ப்ரதிஷ்டாஹமம்ருதஸ்யாவ்யயஸ்ய ச|
சாஶ்வதஸ்ய ச தர்மஸ்ய ஸுகஸ்யைகாந்திகஸ்ய ச|| உஎ||

(ப-ம்.) அம்ருதஸ்ய - நாசமற்றதும், அவ்யயஸ்யச - நிர்விகாரமுமான, ப்ரம்ஹணஃ-பிரமத்துக்கும், சாச்வதஸ்ய - சாச்சுவதமான, தர்மஸ்யச - தருமத்துக்கும், ஐகாந்திகஸ்ய - ஏகாந்தமான, ஸுகஸ்யச- இன்பத்துக்கும், அஹம் - நான், ப்ரதிஷ்டா - பிரதிஷ்டை செய்பவன். (உஎ)

(தா-ம்.) யான், ஆனந்தஸ்வரூபமாயும், நித்தியமாயுமுள்ள பிரம்மத்துக்கு இருப்பிடமாகின்றேன். அவ்வண்ணமே நித்தியமான தர்மத்துக்கும், துக்கசம்பந்தமில்லாத மோக்ஷாநந்தத்திற்கும் இருப்பிடம். (உஎ)

ஸ்ரீகீதாஸு விஶ்வரூபஸந்தர்சநயோகமென்னும் பதினான்காவது அத்தியாயம் முற்றிற்று.



## பதினைந்தாவது அத்தியாயம்.



### ஸ்ரீகிருஷ்ண வாக்கியம்.

𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌮𑍂𑌲𑌮𑌧𑌃𑌶𑌾𑌖𑌮𑌶𑍍𑌵𑌤𑍍𑌥𑌂 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌰𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 ।
𑌛𑌨𑍍𑌦𑌾𑌂𑌸𑌿 𑌯𑌸𑍍𑌯 𑌪𑌰𑍍𑌣𑌾𑌨𑌿 𑌯𑌸𑍍𑌤𑌂 𑌵𑍇𑌦 𑌸 𑌵𑍇𑌦𑌵𑌿𑌤𑍍 ॥ ௧॥

(ப-ம்.) ஊர்த்வமூலம் - மேல்வேரும், அதஃஶாகம் - கீழ்க்கிளையுமான, அஶ்வத்தம்-அரசமரத்தை, அவ்யயம்-அழிவற்றதாக, ப்ராஹுஃ சுருதிக்கள் சொல்லுகின்றனவே. யஸ்ய எந்த அஶ்வத்தவ்ருக்ஷத்துக்குசந்தாம்ஸி-(வேதச்) சந்தங்களே, பர்ணாநி - இலைகளாகச் (சொல்லுகிறார்களோ), தம் - அப்படி ஸம்ஸார வ்ருக்ஷத்தை, யஃ-எவன், வேத-அறிகிறானோ, ஸஃ-அவன், வேதவித் - வேதமறிந்தவன்.

(தா-ம்.) மேலே வேரும் கீழேகிளைகளுமுடைய நித்தியமான அஶ்வத்த விருக்ஷமென்றுளதென்று கூறுவார்கள். அவ்விருக்ஷத்திற்கு வேதங்கள் இலைகள், இவ்வுண்மையை யுணர்ந்தவனே வேதமுணர்ந்தவன். " என்பதால் ஸம்ஸாரமே அஶ்வத்தவிருக்ஷம் ஸப்த லோகங்களுக்கும் மேலேயிருக்கிற நான்குமுகப்பிரமனே இவ்விருக்ஷத்திற்கு வேர். பூமியின்கண்ணுள்ள ஸ்தாவரஜங்கம வஸ்துக்களெல்லாம் கிளைகள். ஆன்மஞானமுண்டாகாமல் இது விலகாதாதலின் நித்தியமானது. ஸ்வர்க்காதி புவனபோகங்களான கர்மங்களை யநுசரித்து ஸம்ஸாரவிருக்ஷத்தை விருத்திசெய்வதால் வேதங்கள் இதற்கு இலைகளென்று கருத்து. (௧)

𑌅𑌧𑌶𑍍𑌚𑍋𑌰𑍍𑌧𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌸𑍃𑌤𑌾𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌶𑌾𑌖𑌾 𑌗𑍁𑌣𑌪𑍍𑌰𑌵𑍃𑌦𑍍𑌧𑌾 𑌵𑌿
𑌷𑌯𑌪𑍍𑌰𑌵𑌾𑌲𑌾𑌃 । 𑌅𑌧𑌶𑍍𑌚 𑌮𑍂𑌲𑌾𑌨𑍍𑌯𑌨𑍁𑌸𑌨𑍍𑌤𑌤𑌾𑌨𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌬𑌨𑍍𑌧𑍀𑌨𑌿
𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌲𑍋𑌕𑍇 ॥ ௨॥

(ப-ம்.) குணப்ரவ்ருத்தாஃ-குணங்களால வளர்ந்து, விஷயப்ரவாளாஃ-விஷயங்களைத் தளிராய்க்கொண்ட, தஸ்ய-அந்த வ்ருக்ஷத்தினுடைய, சாகாஃ-கிளைகள், அதஃச-கீழும், ஊர்த்வம்ச-மேலும், ப்ரஸ்ருதாஃ-பரம்பியிருக்கின்றன; கர்மாநுபந்தீநி-கருமத்தை அநுஸரித்த, மூலாநி-வேர்கள், அதஃச மனுஷ்யலோகே-கீழ மனுஷியலோகத்தில, அநுஸந்ததாநி-ஊன்றியிருக்கின்றன. (௨)

(தா-ம்) விருக்ஷத்தினது கிளைகள் கீழும் மேலும் "என்பதால் மானிடரூபமாயும் தேவரூபமாயும்" வியாபித்திருக்கின்றன. அவை

கள் ஸத்வரஜஸ், தமோகுணங்களால் விருத்தியடைகின்றது. சப்தாதிவிஷயங்களால் அக்கிளைகளுக்குதளிர்கள் உண்டாகிறது அதற்குக் கீழ்புறத்திலுள்ள மானிடபோகத்திலும்கர்மங்களென்னும் அவிச்சின்னங்களான அளவற்றவேர்கள்ஸம்பந்தப்பட்டிருக்கின்றன.

𑌨 𑌰𑍂𑌪𑌮𑌸𑍍𑌯𑍇𑌹 𑌤𑌥𑍋𑌪𑌲𑌭𑍍𑌯𑌤𑍇 𑌨𑌾𑌨𑍍𑌤𑍋 𑌨 𑌚𑌾𑌦𑌿𑌰𑍍𑌨 𑌚
𑌸𑌂𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾 | 𑌅𑌶𑍍𑌵𑌤𑍍𑌥𑌮𑍇𑌨𑌂 𑌸𑍁𑌵𑌿𑌰𑍂𑌢𑌮𑍂𑌲𑌮𑌸𑌙𑍍𑌗𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑍇𑌣
𑌦𑍃𑌢𑍇𑌨 𑌛𑌿𑌤𑍍𑌤𑍍𑌵𑌾 || ௩ ||

𑌤𑌤𑌃 𑌪𑌦𑌂 𑌤𑌤𑍍𑌪𑌰𑌿𑌮𑌾𑌰𑍍𑌗𑌿𑌤𑌵𑍍𑌯𑌂 𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌗𑌤𑌾 𑌨 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑌿
𑌭𑍂𑌯𑌃 | 𑌤𑌮𑍇𑌵 𑌚𑌾𑌦𑍍𑌯𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇 𑌯𑌤𑌃 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃
𑌪𑍍𑌰𑌸𑍃𑌤𑌾 𑌪𑍁𑌰𑌾𑌣𑍀 || ௪ ||

(ப-ம்.) அஸ்ய-இந்த வ்ருக்ஷத்தினுடைய, ரூபம்-உருவம், ததா-அப்படி, இஹ-இந்த லோகத்தில், நஉபலப்யதே-காணப்படுகிறதில்லை; அந்தஃந-அந்தமுமில்லை, ஆதிஃசந - ஆதியுமில்லை, ஸம்ப்ரதிஷ்டாசந-ஸ்திதியுமில்லை, ஸுவிரூடமூலம் - நன்றாய்முளைத்த வேருடைய, ஏநம்-இந்த, அச்வத்தம்-அரசமரத்தை, த்ருடேந-திடமான, அஸங்கசஸ்த்ரேண-பற்றின்மையென்னும் கத்தியால், சித்வா-வெட்டி, ததஃ-பிறகு, யஸ்மிந்-எந்தவிடத்தில், கதாஃ-சென்றவர், பூயஃ-மறுபடி, நநிவர்தந்தி-திரும்புகிறதில்லையோ, தத்-அந்த, பதம்-ஸ்தானம், பரிமார்கிதவ்யம்-தேடத்தக்கது, யதஃ - எவனிடத்தினின்றும், புராணீ-புராதனமான, ப்ரவ்ருத்திஃ-பிரவர்த்தியானது, ப்ரஸ்ருதா-பரம்பிற்றோ, தம்-அந்த, ஆத்யம்-ஆதியான, புருஷம் ஏவச-புருஷனையே, ப்ரபத்யேத்-சரணமடையக்கடவன். (௩-௪)

(தா-ம்) இவ்வுலகத்தில் இதனது ஸ்வரூபமும், நாசமும், உற்பத்தியும் அஞ்ஞானரூபமான ஆதாரமும் அறியப்படமாட்டாது. ஆதலால் உறுதியாய் நான்குபக்கத்திலும் வேரோடிய இந்த அச்வத்தவிருக்ஷத்தை ஆத்மஞானத்தால் குணங்களில் ஆஸக்தி நிவர்த்தித்தலென்னும் அஸ்திரத்தால் சேதித்து அதனால் எங்குசென்றவர்கள் மீண்டும் ஜன்மமெடுக்காரோ, அப்படிப்பட்ட பொருளைத் தேடுதல்வேண்டும். எவனிடத்தில் நின்றும் பிராசீனமான இந்தகுணங்கள் வியாபித்தனவோ, அந்த ஆதிபுருஷனை சரணமாய் பஜிக்கவேண்டும்.

𑌨𑌿𑌰𑍍𑌮𑌾𑌨𑌮𑍋𑌹𑌾 𑌜𑌿𑌤𑌸𑌙𑍍𑌗𑌦𑍋𑌷𑌾 𑌅𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌿𑌤𑍍𑌯𑌾 𑌵𑌿𑌨𑌿
𑌵𑍃𑌤𑍍𑌤𑌕𑌾𑌮𑌾𑌃 | 𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑍈𑌰𑍍𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑌸𑌂𑌜𑍍𑌞𑍈𑌰𑍍𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑍍𑌯𑌮𑍂𑌢𑌾𑌃
𑌪𑌦𑌮𑌵𑍍𑌯𑌯𑌂 𑌤𑌤𑍍 || ௫ ||

(ப-ம்.) நிர்மாநமோஹா:-மாநமும் மோஹமுமற்று, ஜிதஸங்க தோஷா:-பற்றென்னும் குற்றமற்று, அத்யாத்ம நித்யா:-ஆத்மாவில் ஊன்றிய, விநிவ்ருத்தகாமா:-காமத்தினின்று நீங்கி, ஸுகது:கஸம் ஜ்ஞை:-இன்பதுன்பங்களென்னும், த்வந்த்வை:-த்வந்த்வங்களால் விமுக்தா:-விடுபட்ட, அமூடா: - மூடத்தன்மையற்றவர்கள், அவ்ய யம்-இடையறுதல்ஞானமே ஆகாரமாயுற்ற, தத்-அந்த, பதம்-ஸ்தா னத்தை, கச்சந்தி-அடைகிறார்கள். (ரு)

(தா-ம்.) அநாத்மாவினிடத்தில் ஆத்மாபிமான மோஹத்தை யொழித்து ஸத்துவ, ரஜஸ், தமோகுணங்களிடத்தில் ஆசக்தியின்றி ஆன்மஞானத்தின்கண் ஆஸக்தியுண்டாயி வேறுகோறிக்கைகளெல லாவற்றையும் நிவர்த்திசெய்து சுகதுக்கங்களைவிட்டவர்களாய் ஆத் மா இஃது, அநாத்மா இஃது என்கிற விவேகமுடையோர் அபரிமித மான ஆத்மசொரூபத்தை யடைகின்றனர். (௬)

ந தத்³ பா⁴ஸயதே ஸூர்யோ ந ஶஶாங்கோ ந பாவக꞉ ।
யத்³ க³த்வா ந நிவர்தந்தே தத்³ தா⁴ம பரமம் மம ॥ ௬॥

(ப-ம்.) தத்-அதை, ஸூர்ய:-சூரியன், நபாஸயதே-ப்ரகாசிக்க ச்செய்வதில்லை; சசாங்க:-சந்திரன்; ந - (விளக்குவ)தில்லை; பாவக:- அக்கினி, ந-(விளக்குவ)தில்லை; யத்-எதை, கத்வா - அடைந்து, நநி வர்தந்தே-திரும்புகிறதில்லையோ, தத்-அது, மம-என்னுடைய, பர மம்-மேலான, தாம ஸ்தாநம். (௬)

(தா-ம்.) அந்த ஆத்மாவினது தேஜஸ்ஸை சூரியனும், சந்திர னும், அக்கினியும், பிரகாசிக்கச்செய்யவில்லை. "என்பதால் ஸ்வயம் பிரகாசமென்று கருத்து" எதனையடைந்தபின் மீண்டும் பிரகிருதி சம்பந்தமில்லையோ, அப்படிப்பட்டமேலான ஆன்மஸ்வரூபமே என தென்றுணர்க. (௬)

மமைவாம்ஶோ ஜீவலோகே ஜீவபூ⁴த꞉ ஸநாதந꞉ ।
மந꞉ஷஷ்டா²நீந்த்³ரியாணி ப்ரக்ருதிஸ்தா²நி கர்ஷதி ॥ எ॥

(ப-ம்.) ஸநாதந:-புராதனமான, மம-என்னுடைய, அம்ச ஏவ- அம்சமே, ஜீவலோகே - ஜீவலோகத்தில், ஜீவபூத: - ஜீவனுயிருப்ப து; ப்ரக்ருதிஸ்தாநி-பிரகிருதியிலுள்ள, மந:ஷஷ்டாநி-மனம் ஆருவதாயுற்றதுமாகிய, இந்த்ரியாணி-இந்த்ரியங்களை, கர்ஷதி-இழு க்கின்றது. (எ)

(தா-ம்.) சாஸ்வதமான எனதம்சமே ஜீவரூபமாய் ஜீவலோகத்திலிருந்து பிரகிருதி ரூபங்களான சரீரங்களிலுள்ள மனதுடன்கூடிய ஐந்து இந்திரியங்களையும் இழுக்கின்றது. (எ)

ஶரீரம் யத³வாப்னோதி யச்சாப்யுத்க்ராமதீஶ்வர꞉|
க்³ருஹீத்வைதானி ஸம்யாதி வாயுர்க³ந்தா⁴னிவாஶயாத்|| அ||

(ப-ம்) யத்-எந்த, சரீரம்-சரீரத்தை, அவாப்நோதி-அடைகின்றனோ, அபிச-பின்னும், யத்ச-எதினின்றும், உத்க்ராமதி-கிளம்புகிறனோ, ஈச்வர꞉-(புலன்களுக்கு) ஈசுவரனன (ஜீவன்), வாயு꞉-காற்றானது, ஆசயாத்-வஸ்துவினின்றும், கந்தாந இவ - கெந்தங்களைப் போல், ஏதாநி-இவைகளை, க்ரஹீத்வா-கிரகித்துக்கொண்டு, ஸம்யாதி-போகிறன். (அ)

(தா-ம்.) வாயு கந்தமுள்ள வஸ்துக்களிலிருந்து சூட்சுமகந்தாம்சங்களைக் கிரகிப்பதுபோல், இந்த ஆத்மா எந்த சரீரத்தை ஆச்ரயிக்கின்றதோ, எந்தசரீரத்திலிருந்து வெளிப்படுகின்றதோ, அவ்விடத்திலெல்லாம் இந்த இந்திரியங்களை "சூட்சமரூபமாய்" கிரகித்துக்கொண்டு செல்லுகின்றன. (அ)

ஶ்ரோத்ரம் சக்ஷு꞉ ஸ்பர்ஶனம் ச ரஸனம் க்⁴ராணமேவ ச|
அதி⁴ஷ்டா²ய மனஶ்சாயம் விஷயானுபஸேவதே|| கூ||

(ப-ம்.) அயம்-இவன், ஶ்ரோத்ரம்-காதையும், சக்ஷு꞉ - கண்ணையும், ஸ்பர்சநம்ச-துவக்கையும், ரஸநம் - நாக்கையும், க்ராணம் ஏவச-மூக்கையும், மநச்ச-மனதையும், அதிஷ்டாய-அதிஷ்டித்து, விஷயாந்-விஷயங்களை, உபஸேவதே-அனுபவிக்கிறன். (கூ)

(தா-ம்.) செவி, கண், ஸ்பர்சேந்திரியம், வாக்கு, மூக்கு, மனம், இவைகளைவசப்படுத்திக்கொண்டு ஆத்மா, சப்தாதிவிஷயங்களையநுபவிக்கிறேன். (கூ)

உத்க்ராமந்தம் ஸ்தி²தம் வாபி பு⁴ஞ்ஜானம் வா கு³ணான்விதம்|
விமூடா⁴ நானுபஶ்யந்தி பஶ்யந்தி ஜ்ஞானசக்ஷுஷ꞉|| கo||

(ப-ம்.) குணாந்விதம்-குணத்தோடுகூடியவனை, உத்க்ராமந்தம்-சரீரத்திலிருந்துநீங்குகிறவனும், ஸ்திதம்வாபி - இருப்பவனும், புஞ்ஜாநம்வா-புசிப்பவனுமான (ஆத்மாவை); விமூடா꞉- மூடர்கள், நாநுபச்யந்தி-பார்க்கிறதில்லை; ஜ்ஞாந சக்ஷுஷ꞉-ஞானக்கண்ணுடையவர்கள், பச்யந்தி-பார்க்கின்றனர். (கo)

(தா-ம்) பிரகிருதியான குணத்தோடுசேர்ந்த ஆத்மாவைசுத்து வஞானமில்லாதவர்கள் எழுந்திருந்தபோதிலும், நின்றபோதிலும், விஷயாதிகளை யநுபவித்தபோதிலும், பார்ப்போர்களாகார், ஞானக் கண்ணுடையோர் கண்ணுற்றவர்களாவார். (௰)

யதந்தோயோகிநஸ்சைநம் பஸ்யந்த்யாத்மந்யவஸ்திதம்।
யதந்தோப்யக்ருதாத்மாநோ நைநம் பஸ்யந்த்யசேதஸ:॥

(ப-ம்.) யதந்த:-யத்தினம்செய்கின்ற, யோகிந:-யோகிகள், ஆத்மநி-ஆத்மாவில், அவஸ்திதம்-இருக்கின்ற, ஏநம்-இந்த ஆத்மாவை, பச்யந்தி-பார்க்கின்றார்கள்; யதந்த:அபி-பிரயத்தினம் செய்தபோதா லும், அக்ருதாத்மாந:-அசுத்திதமான மனதையுடைய, அசேதஸ:-புத்தியீனர்கள், ஏநம்-இவனை, நபச்யந்தி-பார்க்கமாட்டார்கள். (௧௧)

(தா-ம்) ஆத்மஞானத்தில் முயலுகின்ற யோகிகள், சிலர், சரீரத்திலுள்ள இந்த ஆத்மாவைபார்க்கின்றனர். முயற்சிசெய்தாலும் பரிசுத்தமனமில்லாத அறிவிலிகள் இந்த ஆத்மாவைக்காணவில்லை.()

யதாதித்யகதம் தேஜோ ஜகத்பாஸயதே(அ)கிலம்।
யச்சந்த்ரமஸியச்சாக்நௌ தத்தேஜோவித்திமாமகம்॥ ௧௨॥

(ப-ம்) ஆதித்ய கதம்-சூரியனை யடைந்த, யத்-எந்த, தேஜ:-தேஜஸ்ஸு, அகிலம்-ஸமஸ்தமான, ஜகத்-லோகத்தையும், பாஸயதே-பிரகாசிப்பிக்கின்றதோ, சந்த்ரமஸி - சந்திரனிடத்தில, யத் - எதுவோ, அக்நௌ-அக்கினியில், யத்ச-எதுவோ, தத் - அந்த, தேஜ:-தேஜஸ், மாமகம்-எனதென்று, வித்தி-அறி. (௧௨)

(தா-ம்) உலகையெல்லாம் பிரகாசப்படுத்தும்படியான சூரியனிடத்துள்ள ஒளியும் சந்திரனிடத்துள்ள ஒளியும்; அக்கினியிடத்துள்ள ஒளியும் எந்தனொளியென்றறிக. (௧௨)

காமாவிஸ்ய சபூதாநி தாரயாம்யஹமோஜஸா।
புஷ்ணாமிசௌஷதீஸ்ஸர்வா: ஸோமோபூத்வாரஸாத்மக:॥

(ப-ம்.) அஹம்-நான், காம்-புவியில், ஆவிச்ய-ப்ரவேசித்து, ஓஜஸா-ஸாமர்த்தியத்தால், பூதாநி-பூதங்களை, தாரயாமி-தரிக்கிறேன் ரஸாத்மக:-அமுதமயமான; ஸோம:-சந்திரனாக, பூத்வா - ஆகி, ஸர்வா:-எல்லா, ஓஷதீ:ச-ஓஷதிகளையும், புஷ்ணாமி-போஷிக்கிறேன்.()

(தா-ம்) யான் பூமியிற்பிரவேசித்து என்சக்தியினால் எல்லாவஸ்துக்களையும் தரிக்கின்றேன். அம்ருதரஸமயமான சந்திரனாகவிருந்து ஔஷதிகளையெல்லாம் விருத்திசெய்கின்றேன். (கங)

அஹம் வைஶ்வாநரோ பூத்வா ப்ராணிநாம் தேஹமாஶ்ரித꞉ ।
ப்ராணாபாநஸமாயுக்த꞉ பசாம்யந்நம் சதுர்விதம் ॥ கச ॥

(ப-ம்.) அஹம்-நான், வைச்வாநர꞉-அக்கினியாக, பூத்வா-இருந்து, ப்ராணிநாம்-பிராணிகளின், தேஹம்-சரீரத்தை, ஆச்ரித꞉-ஆச்ரயித்து, ப்ராணாபாநஸமாயுக்த꞉-பிராணாபானங்களுடன்கூடி, சதுர்விதம்-நான்குவிதங்களான, அந்நம்-அன்னத்தையும், பசாமி - ஜீர்ணம் செய்கிறேன். (கச)

(தா-ம்.) யான் ஜாடராக்கினி ரூபனாய் எல்லாப்பிராணிகளுடைய சரீரத்தையும் ஆச்ரயித்துப் பிராணாபான வாயுக்களுடன் சம்பந்தப்பட்டு காத்யம், சோஷ்யம், லேஹ்யம், பேயம்; என்னும் நாலுவித அன்னத்தையும் பசனம் செய்கிறேன். (கச)

ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்டோ மத்த꞉ ஸ்ம்ருதிர்ஜ்ஞாநமபோஹநம் ச ।
வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்யோ வேதாந்தக்ருத்வேதவிதேவ சாஹம் ॥ கரு ॥

(ப-ம்) அஹம்-நான், ஸர்வஸ்ய-யாவருடைய, ஹ்ருதி-உள்ளத்திலும், ஸந்நிவிஷ்ட꞉-புகுந்திருக்கிறேன, ஸ்ம்ருதி꞉-நினைவும், ஜ்ஞாநம்-ஞானமும், அபோஹநம்ச-ஊஹமும், மத்த꞉ - என்னிடத்து(ண்டாகின்றது), ஸர்வை꞉-ஸகலமான, வேதை꞉-வேதங்களாலும், வேத்ய꞉-அறியவேண்டியவன், அஹமேவ-நானே; அஹம் - நான், வேதாந்தக்ருத்-வேதத்தில் (சொன்ன)பலத்தையளிப்பவன், வேதவித்ச-வேதந்தெரிந்தவனும், அஹம் ஏவ - நானே. (கரு)

(தா-ம்) எல்லா வஸ்துக்களுடைய ஹிருதயத்திலும் யானே யிருக்கின்றேன். அனுபவித்தவஸ்துக்களை நினைப்பதும், புதியமனிதனை அறிதலும், ஊகிப்பதும், என்னிடத்திலிருந்தே உண்டாகிறது ஸமஸ்தவேதங்களாலும் அறியத்தக்கவனுமானேன். வேதாந்ததர்மங்களுக்கு பயனளிப்பவனும்யானே வேதமுணர்ந்தவனும் யானே. ()

த்வாவிமௌ புருஷௌ லோகே க்ஷரஶ்சாக்ஷர ஏவ ச ।
க்ஷர꞉ ஸர்வாணி பூதாநி கூடஸ்தோ(அ)க்ஷர உச்யதே ॥ க௬ ॥

(ப-ம்) லோகே-உலகத்தில், க்ஷரச்ச-க்ஷரமென்றும், அக்ஷரஏவ ச-அக்ஷரமென்றும் (சொல்லுகிற), இமௌ-இந்த, த்வௌ-இரண்டு, புருஷௌ-புருஷர்களும், (ப்ரதிதௌ)-பிரஸித்தர்கள், க்ஷர:-க்ஷரமாவது, ஸர்வாணி-ஸகலமான, பூதாநி-பூதங்களும்; கூடஸ்த:-புராக்ருதத்திலில்லாத சுத்தாத்மஸ்வரூபனென்றும் ஜீவன், அக்ஷர:-அக்ஷரமென்று, உச்யதே-சொல்லப்படுகிறான். (௧௬)

(தா-ம்) இந்தலோகத்தில் புருடர்களிருவர் அவ்விருவரிலொருவன் க்ஷரன். (இறப்பவன்) மற்றொருவன் அக்ஷரன் (நாசமற்றவன்) பிரகிருதிசம்பந்தமான பிராணியும் க்ஷரமுடையது. கூடஸ்தன் "என்றால் பிரகிருதிசம்பந்தத்தைநீக்கிவிட்ட முக்தாத்மா" அக்ஷரன் என்று சொல்லப்படுகிறது. (பாட) லோகே-ஸ்ருஷ்டியில். (௧௬)

உத்தம: புருஷஸ்த்வந்ய: பரமாத்மேத்யுதாஹ்ருத:|
யோ லோகத்ரயமாவிஸ்ய பிபர்த்யவ்யய ஈஸ்வர:|| ௧௭||

(ப-ம்) உத்தம: புருஷஸ்து-உத்தமபுருஷனோ, அந்ய:-வேறுபட்டவனாய், பரமாத்மா இதி-பரமாத்மா என்று, உதாஹ்ருத:-சொல்லப்பட்டிருக்கிறான்; ய:-எவன், லோகத்ரயம்-அசேதனமும் அதனோடு சேர்ந்திருக்கிற ஜீவாத்மாக்களும் ஆகிய இந்தமூன்றுக்கும் ஆத்மாவாய், ஆவிஸ்ய-ஆவேசித்து, பிபர்த்தி-பரிக்கின்றானோ, அவ்யய:-விகாரமற்றவனோ, ஈஸ்வர:-ஈசுவரனோ: (௧௭)

(தா-ம்) மூன்றுலோகத்திற்குள் உள்ளே பிரவேசித்து பரித்துக்கொண்டிருக்கிற வ்யயமில்லாத பரமாத்மாவென்று சொல்லப்படுகிற உத்தமபுருடன் இவ்விரண்டிற்கும் விலக்ஷணன். (பா) பிபர்த்தி-தரிக்கிறார். (௧௭)

யஸ்மாத்க்ஷரமதீதோஹமக்ஷராதபி சோத்தம:|
அதோஸ்மி லோகே வேதே ச ப்ரதித: புருஷோத்தம:||

(ப-ம்) யஸ்மாத்-எதினால், அஹம்-நான், க்ஷரம்-க்ஷரத்தை, அதீத:-கடந்திருக்கிறேனோ; அக்ஷராத் அபிச-அக்ஷரத்தைக்காட்டிலும், உத்தம:-உத்தமனோ; அத:-ஆகையால், லோகே-உலகத்திலும், வேதேச-வேதத்திலும், புருஷோத்தம: இதி-புருஷோத்தமன் என்று, ப்ரதித: அஸ்மி-பிரஸித்தியடைந்திருக்கிறேன். (௧௮)

(தா-ம்) எதனால் யான் க்ஷரபுருடனை அதிக்கிரமித்து அக்ஷரபுருடனைவிட சிறந்தவனாகவிருக்கின்றேனோ. அதனாலேயே லோகத்

திலும்வேதத்திலும், புருஷோத்தமனென்று பிரசித்தவானாக விருக்கிறேன். (கஅ)

யொமாமெவமஸம்மூடொஜாநாதிபுருஷொத்தமம்।
ஸஸர்வவித்பஜதிமாம்ஸர்வபாவெநபாரத॥ கக॥

(ப-ம்) ஹேபாரத - ஓ பாரதனே! யஃ-எவன், புருஷோத்தமம்-புருஷோத்தமனான, மாம்-என்னை, அஸம்மூடஃ - மோஹம் நீங்கினவனாய், ஏவம்-இப்படி, ஜாநாதி-அறிகின்றானோ, ஸஃ-அவன், ஸர்வவித்-யாவுமறிந்தவன், ஸஃ-அவன், ஸர்வ பாவேந-ஸகல விதத்தாலும், மாம்-என்னை, பஜதி-ஸேவிக்கிறான். (கக)

(தா-ம்) பாரதா? எவன் இவ்வண்ணம்புருஷோத்தமனான என்னைபிரமையடையாமல் தெரிந்துகொள்கிறானோ, அவன் எல்லாம் அறிந்தவன் அவனே எந்தனை ஸமஸ்தவிதத்தாலும் பஜிக்கிறவன். ()

இதிகுஹ்யதமம்ஶாஸ்த்ரமிதமுக்தம்மயாநக।
ஏதத்புத்த்வாபுத்திமாந்ஸ்யாத்க்ருதக்ருத்யஶ்சபாரத॥ உ௦॥

(ப-ம்.) (ஹே) பாரத-ஓ பாரத! (ஹே) அநக-ஓ குற்றமற்றவனே! இதி-இப்படி, குஹ்யதமம்-அதிரஹஸ்யமான, இதம் - இந்த, சாஸ்த்ரம்-சாஸ்திரம், மயா-என்னால், உக்தம் - சொல்லப்பட்டது, ஏதத்-இதை, புத்த்வா-அறிந்து, புத்திமாந்-புத்திமானும், க்ருதக்ருத்யஶ்ச-கிருதகிருத்தியனும், ஸ்யாத்-ஆவான். (உ௰)

(தா-ம்) ஓ அர்ஜ்ஜுனா! இது இரகசியங்களுக்கெல்லாம் இரகசியமான சாஸ்திரம ஓ பாரதா! இது எந்தனால் உந்தனுக்குக்கூறப்பட்டது. இதையறிந்த மனிதன் அறிவுடையோனும், ஸமர்த்தனும் ஆகுறான். (உ௰)

ஸ்ரீகீதாஸு விஶ்வரூபஸந்தர்ஶநயோகமென்னும்

பதினைந்தாவது அத்தியாயம் முற்றிற்று.



## பதினாறுவது அத்தியாயம்.



### ஸ்ரீகிருஷ்ண வாக்கியம்.

#### தைவாஸுரஸம்பத்விபாகயோகம்.

அபயம் ஸத்வஸம்ஶுத்திர் ஜ்ஞானயோகவ்யவஸ்திதி꞉|
தானம் தமஶ்ச யஜ்ஞஶ்ச ஸ்வாத்யாயஸ்தப ஆர்ஜவம்|| ௧||

அஹிம்ஸா ஸத்யமக்ரோதஸ்த்யாக꞉ ஶாந்திரபைஶுனம்|
தயா பூதேஷ்வலோலுப்த்வம் மார்தவம் ஹ்ரீரசாபலம்|| ௨||

தேஜ꞉ க்ஷமா த்ருதி꞉ ஶௌசமத்ரோஹோ நாதிமானிதா|
பவந்தி ஸம்பதம் தைவீமபிஜாதஸ்ய பாரத|| ௩||

(ப-ம்.) பாரத-ஓ பாரதனே! அபயம்-பயஹானியும், ஸத்வஸம்சுத்தி꞉-ஸத்துவசுத்தியும், ஜ்ஞானயோக வ்யவஸ்திதி꞉-ஞானயோகத்தில் நிஷ்டையும், தானம்-கொடையும், தமஃச-பாஹ்யேந்த்ரிய நிக்கிரஹமும், யஜ்ஞஃச-யக்ஞமும், ஸ்வாத்யாய꞉ - வேதாத்தியயனமும், தப꞉-தவமும், ஆர்ஜவம்-ருஜுத்தன்மையும், அஹிம்ஸா-இம்ஸையின்மையும், ஸத்யம்-ஸத்தியமும், அக்ரோத꞉-கோபமின்மையும், த்யாக꞉-தியாகமும், சாந்தி꞉-சாந்தியும், அபைசுனம்-கோழின்மையும், பூதேஷு-பிராணிகளிடத்தில், தயா-தயையும், அலோலுப்த்வம்-ஆவலின்மையும், மார்தவம்-சாதுத்தன்மையும், ஹ்ரீ꞉ - வெட்கமும், அசாபலம்-சபலமின்மையும், தேஜ꞉-தேஜஸ்ஸும், க்ஷமா - பொறுமையும், த்ருதி꞉-தைரியமும், சௌசம்-பரிசுத்தமும், அத்ரோஹ꞉-துரோகஞ்செய்யாமையும், ந அதிமானிதா-அபிமானமின்மையும், தைவம்-தெய்வீகமான, ஸம்பதம்-ஸம்பத்தில், அபிஜாதஸ்ய-பிறந்தவனுக்கு பவந்தி-உண்டாகின்றன. (௧ ௨-௩)

(தா-ம்) பாரதா! நிர்பயமாயிருத்தலும், சித்தத்தில் இராஜஸதாமஸகுணங்களுடைய ஸம்பந்தமின்றியிருத்தலும், சுத்தாத்மஸ்வரூபத்தைப் பகுத்துணரும்படியான ஞானயோகத்தில ஸ்திரத்துவமும், ஈகையும்; மனக்கட்டும், பலத்தைவிரும்பாது யக்ஞத்தைச்செய்தலும், வேதமுணர்தலும், தவமும், மனம் வாக்கு, காமம் இதுகள் ஒற்றுநடக்குதலென்னும் ஆர்ஜவமும் பரஹிம்ஸை செய்யாமலிருத்தலும், ஸத்தியமும், கோபமின்றியிருத்தலும், ஆத்மாவுக்கு அ

நுகூலமில்லாதவஸ்துவை நீக்குதலும், பொறுமையும், கலகஞ்செய்யாமலிருத்தலும், பிராணிகளிடத்தில் தயையும், விஷயாதிகளில்ஆசையின்றியிருத்தல், சாதுக்களோடு ஸகவாசஞ்செய்யாமலும், செய்யத்தகாதவியாபாரத்தைச்செய்வதில் வெட்கமும், விஷயவியாபாரத்திலிருந்தாலும் புத்திசலிக்காமலிருத்தலும், தேஜஸ்ஸும், சத்துருக்களால் தீங்குநேர்ந்தாலும் அதனால் மனதில் வருத்தப்படாமலிருத்தலும், எவ்வித ஆபத்துவந்தபோதிலும் தைரியமாகவிருத்தலும் பரிசுத்தமும், துரோகஞ்செய்யாமலிருத்தலும், கெர்வமின்றியிருத்தல், இவைகள் தேவதாம்ச ஸம்பத்தை ஆசிரயித்து நல்ல ஜன்மமெடுத்தவனுக்கு ஸம்பவிக்கும். (௧-௨-௩)

𑌦𑌂𑌭𑍋 𑌦𑌰𑍍𑌪𑍋𑌽𑌭𑌿𑌮𑌾𑌨𑌶𑍍𑌚 𑌕𑍍𑌰𑍋𑌧𑌃 𑌪𑌾𑌰𑍁𑌷𑍍𑌯𑌮𑍇𑌵 𑌚 |
𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌚𑌾𑌭𑌿𑌜𑌾𑌤𑌸𑍍𑌯 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌸𑌮𑍍𑌪𑌦𑌮𑌾𑌸𑍁𑌰𑍀𑌮𑍍 || ௪ ||

(ப-ம்.) (ஹேபார்த்த - ஓ அர்ஜுனா! தம்பஃ - டம்பமும், தர்பஃ-கர்வமும், அபிமாநஶ்ச-அபிமானமும், க்ரோதஃ-கோபமும், பாருஷ்யம் ஏவச-கடினமையும், அஜ்ஞாநஞ்ச - அஞ்ஞானமும், ஆஸுரீம்-அசுரஸம்பந்தமான, ஸம்பதம்-ஸம்பத்தில், அபிஜாதஸ்ய - பிறந்தவனுக்கு, (பவந்தி)-உண்டாகின்றன. (௪)

(தா-ம்) டம்பம், கெர்வம்; துரபிமானம், கோபம், கொடூரம், அவிவேகம், இந்தஸ்வபாவங்கள் ஆஸுரசம்பந்தத்தை ஆசிரயித்தஜன்மமுடையவனுக்குண்டாகும். (௪)

𑌦𑍈𑌵𑍀 𑌸𑌮𑍍𑌪𑌦𑍍𑌵𑌿𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌯 𑌨𑌿𑌬𑌨𑍍𑌧𑌾𑌯𑌾𑌸𑍁𑌰𑍀 𑌮𑌤𑌾 |
𑌮𑌾 𑌶𑍁𑌚𑌃 𑌸𑌮𑍍𑌪𑌦𑌂 𑌦𑍈𑌵𑍀𑌮𑌭𑌿𑌜𑌾𑌤𑍋𑌽𑌸𑌿 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵 || ௫ ||

(ப-ம்.) தைவீ-தெய்வீகமான, ஸம்பத்-ஸம்பத்து, விமோக்ஷாய-முத்தியின்பொருட்டு, மதா-எண்ணப்பட்டது; ஆஸுரீ-அசுரஸம்பந்தமான (செல்வம்) நிபந்தாய - (ஸம்ஸார) பந்தத்தின்பொருட்டு; (ஹே)பாண்டவ-ஓ பாண்டுபுத்திர! தைவீம்-தெய்வீகமான, ஸம்பதம்-ஸம்பத்தில், அபிஜாதஃ-பிறந்தவனாய், அஸி-இருக்கிறாய, மாஶுசஃ-சோகிக்கவேண்டாம். (௫)

(தா-ம்.) தைவசம்பத்து மோக்ஷஹேதுவாகும், ஆஸுரஸம்பத்துசம்சாரபந்த ஹேதுவாகுமென்பது என்கருத்து. அர்ஜுனா துக்கிக்காதே, நீ தேவதாஸம்பந்தத்தை ஆசிரயித்துப்பிறந்தவன். ()

𑌦𑍍𑌵𑍌 𑌭𑍂𑌤𑌸𑌰𑍍𑌗𑍌 𑌲𑍋𑌕𑍇𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌦𑍈𑌵 𑌆𑌸𑍁𑌰 𑌏𑌵 𑌚 |
𑌦𑍈𑌵𑍋 𑌵𑌿𑌸𑍍𑌤𑌰𑌶𑌃 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤 𑌆𑌸𑍁𑌰𑌂 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌮𑍇 𑌶𑍃𑌣𑍁 ||

(ப-ம்.) (ஹே) பார்த்த - ஓ குந்திபுத்ர! அஸ்மிந்-இந்த,லோகே-லோகத்தில், தைவ:-தெய்வீகமென்றும், ஆஸுர ஏவ ச-ஆஸுரமென்றும், த்வெள-இரண்டு, பூத ஸர்கௌ-பூதங்களின் சிருஷ்டிகள், ஸ்த:-இருக்கின்றன; தைவ:-தெய்வீகமோ, விஸ்தரச:-விஸ்தாரமாக, ப்ரோக்த:-சொல்லப்பட்டது; ஆஸுரம்-அஸுரஸம்பந்தியாகிய பிறப்பை, மே-என்னிடத்திலிருந்தும், ச்ருணு-கேள். (௬)

(தா-ம்.) இக்கன்மபூமியின்கண் தைவமென்றும், ஆஸுரமென்றும், பிராணிகளுக்கு இரண்டுவிதங்களான ஜன்மமுள்ளது. அவ்விரண்டுகளில் தைவஜன்மம் சிறந்ததெனப்படும், ஆஸுரஜன்மத்தினது நடவடிக்கைகளைக்கேண்மின். (௬)

ப்ரவ்ருத்திஞ்ச நிவ்ருத்திஞ்ச ஜநா ந விதுராஸுரா: |
ந சௌசம் நாபி சாசாரோ ந ஸத்யம் தேஷு வித்யதே || ௭ ||

(ப-ம்) ஆஸுரா:-அஸுரத்தன்மையுற்ற, ஜநா:-ஜனங்கள், ப்ரவ்ருத்திம் ச-பிரவிருத்திதர்மத்தையும், நிவ்ருத்திம் ச-நிவிருத்திதர்மத்தையும், ந விது:-அறியார்கள்; தேஷு-அவர்களிடத்தில், சௌசம்-சுத்தி, ந-இல்லை, ஆசார: அபி-ஆசாரமும், ந-இல்லை; ஸத்யம் - ஸத்தியமும், ந வித்யதே-இல்லை. (௭)

(தா-ம்) ஆஸுரஜன்மமுடையோர் ஸ்வர்க்காதிஸாதனமான கர்மத்தையும், மோக்ஷஸாதனகர்மத்தையும் அறிந்திலர், அத்தகையருக்குவைதிககர்மங்களில் சுசியும் ஆசாரமுமிருக்கமாட்டாது அதற்கு ஏதுவான சத்தியமுமிருக்காது இவ்வுலகில். (௭)

அஸத்யமப்ரதிஷ்டந்தே ஜகதாஹுரநீச்வரம் |
அபரஸ்பரஸம்பூதம் கிமந்யத்காமஹைதுகம் || ௮ ||

(ப-ம்) தே-அவர்கள், ஜகத்-ஜகத்தை, அஸத்யம்-அஸத்தியமென்றும், அப்ரதிஷ்டம்-பிரதிஷ்டையற்றதென்றும், அநீச்வரம்-ஸர்வேச்வரனை என்னால் நியமிக்கப்படுதலில்லை என்றும், அபரஸ்பர ஸம்பூதம்-ஒன்றுக்கொன்றுண்டானதன்றி, கிம் அந்யத்-வேறு என்ன(வென்றும்), காமஹேதுகம்-காமத்தால் உண்டான(தென்றும்) ஆஹு:-சொல்வார்கள். (௮)

(தா-ம்) அத்தகையர் இவ்வுலகை ஸத்தியமான பிரமத்தினது காரியமாகவிருந்தும் ஸத்தியமென்று சொல்லமாட்டார்கள். பிரம்மமே ஆதாரமென்று சொல்லுவார்கள் ஈசனால் நியமிக்கப்பட்டதென்

றும் சொல்லார்கள். எந்தவஸ்துவும் ஆண்பெண்களுடைய ஸங்கம த்தினாற்பிறந்ததில்லை ஆதலால் பிரபஞ்சத்திற்கு காமஹேதுவென் றும்வேறில்லை என்றே கூறுவார்கள். (அ)

ஏதாம்த்ருஷ்டிமவஷ்டப்ய நஷ்டாத்மாநோ(அ)ல்பபுத்தய꞉|
ப்ரபவந்த்யுக்ரகர்மாண꞉ க்ஷயாய ஜகதோ(அ)ஹிதா꞉|| கூ||

(ப-ம்) ஏதாம்-இப்படிப்பட்ட, த்ருஷ்டிம்-ஜ்ஞானத்தை, அவஷ்டப்ய-அவலம்பித்து, நஷ்டாத்மாந꞉-ஆத்மாவைக்காணாது, அல்ப புத்தய꞉-அற்ப மதிகளாய், உக்ரகர்மாண꞉-குரூரச்செயல்செய்யு மவர்களான, அஹிதா꞉-பாவிகளுமாய், ஜகத꞉ - உலகத்தினது, க்ஷயாய-நாசத்தின்பொருட்டு, ப்ரபவந்தி-ஸமர்த்தராகின்றனர். (கூ)

(தா-ம்) இந்த ஞானத்தை உள்ளுநின்று நோக்கவகையறியாத அறிவிலிகள் ஆத்மாயிருக்கிறதென்பதையே யுணராது பரஹிம்ஸா ரூபமான உக்கிரகர்மத்தைச் சிறிதுமஞ்சாதுசெய்து பிரபஞ்சத்திற் குநாசஹேதுக்களாகிறார்கள், (கூ)

காமமாஸ்ரித்ய துஷ்பூரம் தம்பமாநமதாந்விதா꞉|
மோஹாத்க்ருஹீத்வா(அ)ஸத்க்ராஹாந்ப்ரவர்தந்தே(அ)ஸுசிவ்ரதா꞉||

(ப-ம்) துஷ்பூரம்-நிறைக்கமுடியாத, காமம்-காமத்தை, ஆஸ்ரித்ய-அடைந்து, மோஹாத்-அவிவேகத்தாலே, அஸத்க்ராஹாந்-கெட்டபிடிவாதங்களை, க்ருஹீத்வா-வாங்கி, அசுசிவ்ரதா꞉ - அபரிசுத்த விரதங்கொண்டு, தம்பமாநமதாந்விதா꞉ - தம்பம் மானம் மதங்களுடன் கூடி, ப்ரவர்தந்தே-பிரவர்த்தித்துக்கொண்டிருக்கிறார்கள். (ய)

(தா-ப்) துர்லபமான விஷயங்களையுடைய கர்மத்தை ஆச்ரயி த்து அஞ்ஞானத்தால் வீணானஜன்மங்களெடுத்து சாஸ்திரவிருத்த மான ஆசாரமுண்டாகி டம்பம், அகம்பாவம், கெர்வம் இவைகளுட ன்கூடினவர்களாகிறார். (ய)

சிந்தாமபரிமேயாம் ச ப்ரலயாந்தாமுபாஸ்ரிதா꞉|
காமோபபோகபரமா ஏதாவதிதி நிஸ்சிதா꞉|| கக||

ஆஸாபாஸஸதைர்பத்தா꞉ காமக்ரோதபராயணா꞉|
ஈஹந்தே காமபோகார்தமந்யாயேநார்தஸஞ்சயாந்||

(ப-ம்) அபரிமேயாம்-அளவில்லாததும், ப்ரளயாந்தாம்ச-பிர ளயங்கொண்டுமுடிவதுமான, சிந்தாம் - சிந்தையை, உபாஸ்ரிதா꞉-

அடைந்தார்களாய், காமோபபோகபரமா:-காமாநுபவமே பெரிதாய், ஏதாவத்இதி-இவ்வளவுதானென்று, நிச்சிதா:-நிச்சயித்துக்கொண்டவர்களும், ஆசாபாசசதை:-ஆசையென்னும் பாசச்சதங்களால், பத்தா:-கட்டுண்டு, காமக்ரோதபராயணா:-காமக்குரோதங்களே முக்கியமாய், காமபோகார்த்தம்-காமப்போகத்துக்காக, அந்யாயேந-அன்னியாயமாய், அர்த்தஸஞ்சயாந்-தன ஸமூஹத்தைப்(பற்றி), ஈஹந்தே-யத்தினம் செய்கிறார்கள். (௧௧-௧௨)

(தா-ம்) காமம், குரோதம், முதலியதுர்குணம் நிறைந்தபுருடர்கள் பிரளயகாலவரையில் அளவற்ற சிந்தையை ஆச்ரயித்து காமாநுபவங்களையே முக்கியமாகவெண்ணி இவ்வளவென்று நிச்சயித்து ஆசையென்னும் மோஹவலையிலகப்பட்டுக்கொண்டு காமசுகாநுபவததின்பொருட்டு அக்ஞாநத்திரவியலாபத்தை விரும்புகிறார்கள்.

இதமத்ய மயா லப்தமிமம் ப்ராப்ஸ்யே மநோரதம்।
இதமஸ்தீதமபி மே பவிஷ்யதி புநர்தநம்॥ ௧௩॥

அஸௌ மயா ஹத: சத்ருர்ஹநிஷ்யே சாபராநபி।
ஈச்வரோஹமஹம் போகீ ஸித்தோஹம் பலவாந் ஸுகீ॥ ௧௪॥

ஆட்யோபிஜநவாநஸ்மி கோந்யோஸ்தி ஸத்ருசோ மயா।
யக்ஷ்யே தாஸ்யாமி மோதிஷ்ய இத்யஜ்ஞாநவிமோஹிதா:॥ ௧௫॥

அநேகசித்தவிப்ராந்தா மோஹஜாலஸமாவ்ருதா:।
ப்ரஸக்தா: காமபோகேஷு பதந்தி நரகே அசுசௌ॥ ௧௬॥

(ப-ம்.) இதம்-இந்த க்ஷேத்ராதிகளெல்லாம், அத்ய-இப்பொழுது, மயா-என்னால், லப்தம்-அடையப்பட்டது; இமம்-இந்த, மநோரதம்-கோரிக்கையை, ப்ராப்ஸ்யே-அடைவேன்; இதம்-இதி, அஸ்தி இருக்கிறது; புந:-மறுபடியும், இதம்-இந்த, தநம்அபி-தனமும், மே-எனக்கு, பவிஷ்யதி-கிடைக்கப்போகிறது; அஸௌ-இந்த, சத்ரு:-சத்துரு, மயா-என்னால், ஹத:-கொல்லப்பட்டான்; அபராந்அபிச-மற்றவர்களையும், ஹநிஷ்யே-(சூரனும்தீரனுமானநான) கொல்லப்போகிறேன்; அஹம்-நான், ஈச்வர:-ஈசுவரன்; அஹம்-நான், போகீ-போகி; அஹம்-நான், ஸித்த:-ஸித்தன்; (அஹம்)-நான், பலவாந்-பலசாலி; (அஹம்)-நான், ஸுகீ-சுகிப்பவன், ஆட்ய:-தனவானும், அபிஜநவாந்ச-நல்லபிறவியுடையனும், அஸ்மி-ஆகிறேன்; மயா-என்னொடு, ஸத்ருச:-சமானமானவன், அந்ய:-வேறு, க:-யார், அஸ்தி-

இருக்கிறான்? யக்ஷ்யே-யாகஞ்செய்வேன்; தாஸ்யாமி - கொடுப்பேன், மோதிஷ்யே-ஸந்தோஷிப்பேன்; இதி-என்று, அஜ்ஞாநவிமோஹிதா꞉-அக்ஞானத்தால் மோஹமடைந்தவர்கள் (ஆகிறார்கள்), அநேக சித்த விப்ராந்தா꞉ - அனேகவிதமான சிந்தைகளால் மயங்கி, மோஹஜால ஸமாவ்ருதா꞉-மோஹமென்னும் வலையால் கட்டுண்டு, காமபோகேஷு-காமப்போகங்களில், ப்ரஸக்தா꞉ - பற்றுற்றவராய் அசுசௌ-அசுத்தமான, நரகே-நரகத்தில், பதந்தி-விழுகின்றார்கள்,

(தா-ம்.) இது எப்பொழுது என் முயற்சியாற்பெறப்பட்டது. இந்தகோரிக்கையையான் அடையப்போகிறேன். எனக்கிவ்வளவு பொருளிருக்கின்றது எனக்கின்னும் எவ்வளவு பொருள்வரப்போகிறது, இப்பகையன் என்னால் கொல்லப்பட்டான், இன்னும் அநேகசத்துருக்களைக் கொல்லப்போகிறேன்யானேமேலானவன். யானேபோகி-யானேசித்தன். யானேபலிஷ்டன் யானேசுகி. யான்தனிகன் யான் நற்குடிப்பிறந்தோன் எனக்குச் சமதையானவனெவனுளன்; நான் யாகம் நடாத்தப்போகிறேன். நான் கொடுக்கப்போகிறேன். யான் சந்தோஷிப்பேன், என்கிற அஞ்ஞானத்தால் மோஹமடைந்து பரமபதியொருவரிருக்கிறார் அவரது ஆஞ்ஞையால்தான் ஸமஸ்தமும் நடக்கின்றதென்கிற பகுத்தறிவின்றிப் பற்பல எண்ணங்களுண்டாகி அஞ்ஞானவலையில் சிக்கிக்கொண்டு இம்மையின் சுகத்தை சாசுவதமென்றுன்னி அசுசியான நரகமென்னும் நிரயத்தான்பத்திற்குரியராவர். (௧௩-௧௪-௧௫-௧௬)

ஆத்மஸம்பாவிதா꞉ ஸ்தப்தா தநமாநமதாந்விதா꞉ |
யஜந்தே நாமயஜ்ஞைஸ்தே தம்பேநாவிதிபூர்வகம் || ௧௭ ||

அஹங்காரம் பலம் தர்பம் காமம் க்ரோதம் ச ஸம்ஶ்ரிதா꞉ |
மாமாத்மபரதேஹேஷு ப்ரத்விஷந்தோऽப்யஸூயகா꞉ ||

தாநஹம் த்விஷத꞉ க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந் |
க்ஷிபாம்யஜஸ்ரமஶுபாநாஸுரீஷ்வேவ யோநிஷு || ௧௯ ||

(ப-ம்.) ஆத்ம ஸம்பாவிதா꞉-தம்மைத்தாமே புகழ்ந்துகொண்டு, ஸ்தப்தா꞉-குறைவற்றவர்களாய் நினைத்து, தநமாந மதாந்விதா꞉ - தனமதத்தோடும் அபிமானத்தோடுங்கூடிய, தே-அவர்கள், தம்பேந-ஜம்பமாய், அவிதி பூர்வகம் - விதியோடுகூடாதவிதமாக, நாமயஜ்ஞை꞉-(யஜ்ஞம்செய்கிறவனென்கிறபேர்) உண்டாவதற்குமாத்திரம் காரணமானவர்களாய், யஜந்தே - யாகஞ்செய்கின்றார்கள், அஹங்

காரம்-அஹங்காரத்தையும், பலம்-பெலத்தையும், தர்பம்-கர்வமும், காமம்-ஆசையையும், க்ரோதம்ச-கோபத்தையும், ஸம்ச்ரிதா꞉ - அடைந்தவர்களாய், ஆத்ம பர தேஹேஷு - தம்முடையவும் பிறருடையவும் சரீரங்களில் இருக்கிறப்ரோகனை, மாம்-என்னை, ப்ரத்விஷந்த꞉-பகைத்தும், அப்யஸூயகா꞉-தோஷத்தை ஏறிட்டும் போருகின்றனர், த்விஷத꞉-பகைக்கின்றவரும், க்ரூராந் - கொடுமையானவரும், அசுபாந்-துஷ்டர்களுமான, தாந்-அந்த, நராதமாந் - மநுஷ்யாதமர்களை, ஸம்ஸாரேஷு-ஸம்ஸாரங்களில், ஆஸுரீஷு-அசுர ஸம்பந்தமான, யோநிஷு ஏவ-யோநிகளிலேயே, அஜஸ்ரம்-எப்போதும், அஹம் க்ஷிபாமி-நான் தள்ளிவிடுகிறேன். (௧௭-௧௮-௧௯)

(தா-ம்.) அப்படிப்பட்டவர் தம்மைத்தாமே புகழ்ந்துகொண்டு, செல்வம், கல்வி, நற்குண முதலிய அபிமானத்தினால் கெர்வம் மேம்பட்டு சாத்திரவரம் புகழ்ந்து டம்பத்திற்காகயாககர்மங்களை யநுஷ்டிப்பவராயினர். அகங்காரம், தேகவலிவுகெர்வம், காமம், கோபம், இவைகளை ஆசிரயித்து தம்தேகத்திலும், அந்தர்யாமியாய், எல்லாகிருத்தியத்தையும் செய்கின்ற என்னை பொறாமையராயும், கடினசித்தமுள்ளவராயுமுள்ள அந்த புருஷாதமர்களை எக்காலும் ஸம்ஸார ஸாகரத்தில் ஆஸுரஸ்வபாவமுடைய ஜன்மங்களிலேயேதள்ளுகிறேன். (௧௭-௧௮-௧௯)

ஆஸுரீம்யோநிமாபந்நா மூடா ஜந்மநிஜந்மநி ।
மாமப்ராப்யைவ கௌந்தேய ததோயாந்த்யதமாம்கதிம் ॥ ௨௰॥

(ப-ம்.) (ஹே) கௌந்தேய-ஓ குந்தீபுத்திர ! ஆசுரீம்-அசுரஸம்பந்தமான, யோநிம்-யோனியை, ஆபந்நா꞉-அடைந்தவர்களாய், ஜந்மநிஜந்மநி-பிறவிதோறும், மூடா꞉-விபரீதஞானிகளாய், மாம்-என்னை அப்ராப்யஏவ-அடையாமலே, தத꞉-அதைக்காட்டிலும், அதமாம்-தாழ்ந்ததான, கதிம்-கதியை, யாந்தி-அடைகிறார்கள். (௨௰)

(தா-ம்.) அர்ஜ்ஜுனா ! ஆஸுரஜன்மத்தையடைந்து மீண்டும் ஜன்மங்கடோறும் அஞ்ஞானம் மேம்பட்டு என் திருவடிகளையடையாமலே அந்தந்த ஜன்மத்திலிருந்து அதமகெதிச்குரியராவர். (௨௰)

த்ரிவிதம் நரகஸ்யேதம் த்வாரம் நாசநமாத்மந꞉।
காம꞉க்ரோதஸ்ததாலோபஸ்தஸ்மாதேதத்த்ரயம் த்யஜேத்॥ ௨௧॥

(ப-ம்.) காம꞉-காமமும், க்ரோத꞉-கோபமும், ததா-அப்படியே லோப꞉-லோபமும், ஏதத்-(என்கிற)இது, ஆத்மந꞉-ஆத்மாவுக்கு, நா

சகம்-நாசகரமான, நரகஸ்ய-நரகத்திற்கு, த்ரிவிதம் - மூன்றுவிதங்களாகிய, த்வாரம்-துவாரம்; தஸ்மாத்-ஆகையால், ஏதத்-இந்த, த்ரயம்-மூன்றையும், த்யஜ-விட்டுவிடு. (உக)

(தா-ம்.) இந்த ஆத்மநாசரூபமான நரகத்திற்குகாமம், குரோதம், லோபமென்னும் மூன்றுமார்க்கமுளதாதலின், இம்மூன்றையும்விலக்குதல் வேண்டும். (உக)

ஏதைர்விமுக்த꞉ கௌந்தேய தமோத்வாரைஸ்த்ரிபிர்நர꞉ ।
ஆசரத்யாத்மந꞉ ஶ்ரேயஸ்ததோ யாதி பராம் கதிம் ॥ உஉ ॥

(ப-ம்.) (ஹே) கௌந்தேய-ஓ குந்திபுத்திர! ஏதை꞉-இந்த, த்ரிபி꞉-மூன்று, தமோத்வாரை꞉-நரகத்துவாரங்களாலும், விமுக்த꞉-விடுபட்டே, நர꞉-புருஷன், ஆத்மந꞉-(தன்)ஆத்மாவுக்கு, ஶ்ரேய꞉-க்ஷேமத்தை, ஆசரதி-செய்கிறான்; தத꞉-அப்படி ப்ரவர்த்தித்தாய், பராம்-மேலான, கதிம்-கதியை, யாதி-அடைகின்றான். (உஉ)

(தா-ம்.) கௌந்தேயா? அஞ்ஞான ஹேதுக்களான இந்தகாம, குரோத, லோபங்களைவிட்டவன் தனது ஆத்மாவுக்கு சிரேயஸ்ஸை ஆஶ்ரயித்தவன் அத்தகையன் தாரணுவஸானத்திற்கு பிறகு உத்தமகெதியைப் பெறுவான். (உஉ)

ய꞉ ஶாஸ்த்ரவிதிமுத்ஸ்ருஜ்ய வர்ததே காமகாரத꞉ ।
ந ஸ ஸித்திமவாப்நோதி ந ஸுகம் ந பராம் கதிம் ॥ உ௩ ॥

(ப-ம்.) ய꞉-எவன், சாஸ்த்ரவிதிம் - வேதங்களாகிய ஆஜ்ஞையை, உத்ஸ்ருஜ்ய-விட்டு, காமகாரத꞉-மனம்போனபடி, வர்ததே-இருக்கிறானோ, ஸ꞉-அவன், ஸித்திம்-ஸித்தியை, நாவாப்நோதி-அடையமாட்டான்; ஸுகம்-சுகத்தையும், ந-அடையமாட்டான், பராம்-மேலான, கதிம்-கதியை, ந-அடையமாட்டான். (உ௩)

(தா-ம்.) எவன் சாஸ்திரவரம்புகடந்து தன்விருப்பத்திற்கு அனுகுணசின்மார்க்கத்தில் பிரவேசிக்கிறானோ, அவன் பரலோகப்ராப்திஹேதுவான கதியையும், இன்பத்தையும், உத்தம பதவியையும் பெறான். (உ௩)

தஸ்மாச்சாஸ்த்ரம் ப்ரமாணம் தே கார்யாகார்யவ்யவஸ்திதௌ ।
ஜ்ஞாத்வா ஶாஸ்த்ரவிதாநோக்தம் கர்ம கர்துமிஹார்ஹஸி ॥ உ௪ ॥

(ப-ம்.) தஸ்மாத்-ஆகையால், கார்யாகார்யவ்யவஸ்திதௌ- கா

ரிய அகார்யங்களின் ஏற்பாட்டில், தே-உனக்கு, சாஸ்த்ரம்-சாஸ்திரந்தான், ப்ரமாணம்-பிரமாணம்; சாஸ்த்ரவிதாந உக்தம்-சாஸ்திர விதியில் சொல்லப்பட்டதை, ஜ்ஞாத்வா-அறிந்து, இஹ - இங்கே, கர்ம-கருமத்தை, கர்தும்-செய்ய, அர்ஹஸி-அடுப்பாய். (உ௪)

(தா-ம்) ஆகையால் இது செயற்பாலனவாகியது, இது செயற்பாலனவாகிய தன்றெனப் பகுத்துணர்த்தச் சாஸ்திரமே உனக்குப் பிரமாணமாகவிருக்கிறபடியால் சாஸ்திரத்தால்விதிக்கப்பட்ட கர்மத்தையறிந்து யதோக்தமாயநுஷ்டிப்பாயாக. (உ௪)

ஸ்ரீகீதாஸு விஶ்வரூபஸந்தர்ஶநயோகமென்னும்

பதினாறாவது அத்தியாயம் முற்றிற்று.



## பதினேழாவது அத்தியாயம்.



அர்ச்சுனவாக்கியம்.

ஶ்ரத்தாத்ரயவிபாகயோகம்.

யெஶாஸ்த்ரவிதிமுத்ஸ்ருஜ்ய யஜந்தெ ஶ்ரத்தயாந்விதா:|
தெஷாம் நிஷ்டா து கா க்ருஷ்ண ஸத்வமாஹோ ரஜஸ்தம:|| ௧||

(ப-ம்.) ஹே க்ருஷ்ண-ஓ கிருஷ்ணா! சாஸ்த்ரவிதிம்-சாஸ்திரத்தின் முறையை, உத்ஸ்ருஜ்ய-விட்டு, ஶ்ரத்தயா-சிரத்தையோடு, அந்விதா:-கூடினவர்களான, யே-எவர்கள், யஜந்தே-யாகஞ்செய்கிறார்களோ, தேஷாம்-அவர்களின், நிஷ்டா-நிஷ்டை, கா-எப்படிப்பட்டது? ஸத்வம்-ஸத்துவமோ, ஆஹோ-அல்லது, ரஜ: - ரஜஸ்ஸோ, தம:-தமஸ்ஸோ? (க)

(தா-ம்.) கிருஷ்ணா! எவர் சாஸ்திரவிதியையொதுக்கிசிரத்தையுடன் யஞ்ஞாதிகர்மங்களைச் செய்கிறார்களோ, அவர்களுடையகதியாதாகின்றது? அவ்வகைய ஆசாரம் ஸத்துவகுணமா? இரஜோகுணமா? அல்லது தமோகுணமா? (௧)

ஸ்ரீகிருஷ்ண வாக்கியம்.

த்ரிவிதா பவதி ஶ்ரத்தா தேஹிநாம் ஸா ஸ்வபாவஜா|
ஸாத்விகீ ராஜஸீ சைவ தாமஸீ சேதி தாம் ஶ்ருணு|| உ||

(ப-ம்.) தேஹிநாம்-ப்ராணிகளுடைய, ஸ்வபாவஜா-சுபாவமாயுண்டான, ஸா-அந்த, ஶ்ரத்தா-சிரத்தை, ஸாத்விகீ-ஸாத்விகீ, ராஜஸீசைவ-ரஜோகுணத்தால் உண்டானதும், தாமஸீச-தமோகுணத்தால் உண்டானதும், இதி-என்று, த்ரிவிதா-மூவகையாய், பவதி-இருக்கும், தாம்-அதை, ஶ்ருணு-கேள். (௨)

(தா-ம்) பிராணிகளுக்கு சிரத்தை மூவ்வகைப்படும் அஃது இயற்கையாகத்தானே அமைந்தன. அம்மூவ்வகைப்படி சிரத்தையாதெனின்; ஸாத்விகி ராஜஸீ, தாமஸீ என்பதேயாம். (௨)

ஸத்த்வாநுரூபா ஸர்வஸ்ய ஶ்ரத்தா பவதி பாரத |
ஶ்ரத்தாமயோ(அ)யம் புருஷோ யோ யச்ச்ரத்த: ஸ ஏவ ஸ: || ௩ ||

(ப-ம்) பாரத-ஓ பாரதனே! ஸர்வஸ்ய - எல்லோருக்கும், ஸத்வாநுரூபா-ஸத்துவத்துக்குத்தக்கபடி, ஶ்ரத்தா-சிரத்தை, பவதி-உண்டாம்; அயம்-இந்த, புருஷ:-புருஷன், ஶ்ரத்தாமய:-சிரத்தையின் விகாரம், ய:-எவன், யச்ச்ரத்த: - எந்த சிரத்தையுடையனோ, ஸ:-அவன், ஸஏவ-அந்த சிரத்தையினுடைய பரிணாமபூதனே. (௩)

(தா-ம்) எல்லோர்க்கும் தத்தம் மனதிற்கநுகுணமாகவே சிரத்தையுதிக்கும் சிரத்தையினது பரிணாமமே புருஷ ரூபமாயிற்று. ஆதலின்; எவன் எவ்வித சிரத்தையுடையவனோ, அவன் அவ்வித சிரத்தையினது பரிணாமம். சிரத்தைக்கேற்றபயன் சித்திக்கும். (௩)

யஜந்தே ஸாத்த்விகா தேவாந் யக்ஷரக்ஷாம்ஸி ராஜஸா: |
ப்ரேதாந் பூதகணாம்ஶ்சாந்யே யஜந்தே தாமஸா ஜநா: ||

(ப-ம்.) ஸாத்விகா:-ஸத்வகுணமுள்ளவர்கள், தேவாந் - தேவர்களைக்குறித்து, யஜந்தே-பூஜிக்கிறார்கள், ராஜஸா: - ராஜஸர்கள்; யக்ஷரக்ஷாம்ஸி-யக்ஷராக்ஷஸர்களை, (யஜந்தே)-யாகஞ்செய்கிறார்கள்; அந்யே-இதரமான, தாமஸா:-தாமஸர்களான, ஜநா: - ஜனங்கள், ப்ரேதாந்-பிரேதங்களையும், பூதகணாம்ச-பூதக்கணங்களையும்(குறித்து) யஜந்தே-பூஜிக்கிறார்கள். (௪)

(தா-ம்.) பகுசிரத்தையோடு ஸத்துவகுணநிஷ்டர்கள் தேவர்களையும் ரஜோகுணநிஷ்டர்கள் யக்ஷ ராக்ஷஸர்களையும் தமோகுணநிஷ்டர்கள் பிரேதபூதகணங்களையு மாராதிப்பார்கள். (௪)

அஶாஸ்த்ரவிஹிதம் கோரம் தப்யந்தே யே தபோ ஜநா: |
தம்பாஹங்காரஸம்யுக்தா: காமராகபலாந்விதா: || ௫ ||

கமாயம் தஸ்ரீரஸ்மஹ-ரி-தமரஃரச்செவதஸஃ|
மாமைசவாந்தஸ்ரீரஸ்தம்தாநுவிழ்யாஸுஈரநிஸ்சயாந்|| ௬||

(ப-ம்.) யேஜநாஃ-எந்தஜனங்கள், தம்பாஹங்கார ஸம்யுக்தாஃ-ஜம்பம் அஹங்காரங்களுடன் கூடினவரும், காமராகபலாந்விதாஃ-காமராக பலங்களுடன் கூடினவரும், அசேதஸஃ-புத்தியீனருமாய், சரீரஸ்த்தம்-சரீரத்திலிருக்கும், பூதக்ராமம் - பூதஸமூஹத்தையும், அந்தஃ சரீரஸ்த்தம்-சரீரத்திலுள்பாகத்திலிருக்கும், மாம்ச-என்னையும், கர்சயந்தஃ-பீடிப்பவருமாய், அஶாஸ்த்ரவிஹிதம் - சாஸ்திரத்தில்சொல்லாத, கோரம்-கோரமான, தபஃ-தவத்தை, தப்யந்தே-செய்கிறார்களோ, தாந்-அந்த ஜனங்களை, ஆசுரநிச்சயாந்-அசுர நிச்சயமுள்ளவரென்று, வித்தி-அறி. (௫-௬)

(தா-ம்) எந்ததபஸ்விகள் டம்பமும் அகங்காரமுமுண்டாகி சாஸ்திரவிதிக்கு விருத்தமாய் போக்கியவஸ்துக்களில் ஆசை அதிகரித்து சரீரத்திலுள்ள பஞ்சபூதங்களை உபவாஸாதிகளால் பீடித்தும் மனஸ்ஸுகெட்டு சரீராந்தர்க்கதனை என்னையும் குன்றச்செய்து அக்கிரமம் செய்கிறார்களோ, அவர்களை ஆஸுரஸ்வபாவமுடையவர்களென்றுணர்க. (௱௦) பூதக்ராமம்-இந்த்ரியக்கூட்டங்களை (௫-௬)

ஆஹாரஸ்த்வபி ஸர்வஸ்ய த்ரிவிதோ பவதி ப்ரியஃ|
யஜ்ஞஸ்தபஸ்ததா தாநம் தேஷாம் பேதமிமம் ஶ்ருணு|| எ||

(ப-ம்) ஸர்வஸ்யாபி-எல்லாருக்கும், ஆஹாரஃ - ஆகாரம், த்ரிவிதஃ-மூன்றுவகையாய், ப்ரியஃ-பிரியம், பவதி-ஆகிறது; யஜ்ஞம்-யஜ்ஞமும், தபஃ-தவமும், தாநம்-தானமும், ததா-அப்படியே; மூன்றுவிதங்களுள்ளவைகளாகின்றன, தேஷாம்-அவர்களுக்குண்டான, இமம்-இந்த, பேதம்-பேதத்தை, ஶ்ருணு-கேள். (எ)

(தா-ம்) எல்லாவற்றிற்கும் (ஸாத்விகராஜஸதாமஸங்களுக்கும்) ஆகாரம்யஞ்ஞமெனவும், தபஸ்ஸெனவும், தானமெனவும் மூவ்வகையாம். அந்தயக்ஞம் தவம்தானமென்னு மூவ்வித ஆகாரபேதங்களை (என்பதால் ஸத்வ; ரஜஸ்தமோ குணங்களாலுண்டாகும் பேதங்களைக்) கேள்மின் ? (எ)

ஆயுஸ்ஸத்வபலாரோக்ய ஸுகப்ரீதிவிவர்த்தநாஃ|
ரஸ்யாஸ்ஸ்நிக்தாஸ்ஸ்திரா ஹ்ருத்யா ஆஹாராஸ்ஸாத்விகப்ரியாஃ|| அ||

(ப-ம்.) ஆயுஃ ஸத்வ பலஆரோக்ய ஸுகப்ரீதி விவர்த்தநாஃ-ஆ

யுஸ்ஸ- ஸத்துவம் பலம் ஆரோக்யம் ஸுகம்ப்ரீதி (இவற்றை) வளர்க்கின்ற, ரஸ்யா:-ரஸமுடையவைகளும், ஸ்நிக்தா:- எண்ணெயுடையவைகளும், ஸ்திரா: ஸ்திரமானவைகளும், ஹ்ருத்யா:-மனோஹரமானவைகளுமான, ஆஹாரா:-ஆஹாரங்கள்; ஸாத்விகப்ரியா:-ஸத்வகுணமுள்ளவர்களுக்கு இஷ்டமானவைகள். (அ)

(தா-ம்.) ஸத்துவகுணமுடையோனுக்கு இஷ்டமான ஆகாரம் ஆயுட்களையும், ஞானத்தையும், வலிமையையும், ஆரோக்யத்தன்மையையும், சுகத்தையும், சந்தோஷத்தையும், பிரீதியையுமளிப்பதாயும் மதுரமான ரஸமுடையதாயும், பிசுக்குடையதாயும், சரீரத்திற்கு பலத்தைத்தருகிறதாயும், இரமணீயமாயுமிருக்கும். (அ)

கட்வம்லலவணாத்யுஷ்ணதீக்ஷ்ணரூக்ஷவிதாஹிந: |
ஆஹாரா ராஜஸஸ்யேஷ்டா து:கஶோகாமயப்ரதா: || ௯ ||

(ப-ம்.) கட்வாம் லவண அத்யுஷ்ண தீக்ஷ்ண ரூக்ஷ விதாஹிந:- காரம் புளி உப்பு அதிச்சூடு காரம் வரக்ஷி எரிச்சலாயும், து:க சோக ஆமய ப்ரதா:-துக்கம் சோகம் ரோகம் (இவற்றைத்)தருவதாயுமிருக்கிற, ஆஹாரா:-ஆஹாரங்கள், ராஜஸஸ்ய - இராஜஸனுக்கு இஷ்டா:-இஷ்டமானவைகள். (௯)

(தா-ம்.) இராஜஸ குணமுடையவனுக்கு ஆகாரம் காரமாயும், புளிப்பாயும், உப்பாயும், அதிகஉஷ்ணமாயும், அதிகதீக்ஷண்யமாயும், ரூக்ஷமாயும், (சரீரபலத்தைத் தளரச்செய்வதாயும், தாபமாயும், சோகமாயும், வியாதியைத்தருகிறதாயுமிருக்கும். (௯)

யாதயாமம் கதரஸம் பூதி பர்யுஷிதம் ச யத் |
உச்சிஷ்டமபி சாமேத்யம் போஜநம் தாமஸப்ரியம் || ௰ ||

(ப-ம்.) யத்-எந்த, போஜநம்-போஜனம், யாத யாமம்-ஜாமம்கடந்ததும், கதரஸம்-ரஸமற்றதும், பூதி பர்யுஷிதம்ச-துர்க்கந்தமானதும்,பழகினதும், உச்சிஷ்டம்-மிகுந்ததும், அபிச-மேலும், அமேத்யம்-அபரிசுத்தமானதமோ, தத்-அது, தாமஸப்ரியம்-தமோகுணமுள்ளவர்களுக்கு இஷ்டமானது. (௰)

(தா-ம்) தாமசகுணமுடையவனது ஆகாரம் உஷ்ணமில்லாததாயும், குணமற்றதாயும், துர்கந்தமுடையதாயும், புசிக்கத்தகாததாயும், யஜ்ஞார்ஹமாயுமிருக்கும். (ஙா) யாதயாமம்-நன்றாய் வேகாதது. (௰)

அபலாகாங்க்ஷிபிர்யஜ்ஞோ விதிதிருஷ்டோ யஇஜ்யதே |
யஷ்டவ்யமேவேதி மன: ஸமாதாய ஸ ஸாத்விக:|| கக||

(ப-ம்) அபலாகாங்க்ஷிபி:-பலனைக்கோராதவர்களால், விதித்ருஷ்டம்-விதியில் காணப்பட்ட, ய:-எந்த, யஜ்ஞ: - யாகம், யஷ்டவ்யம் ஏவ-யாகம்செய்யத்தக்கதே, இதி-என்று, மன:-மனதை, ஸமாதாய-ஸமாதானம்பண்ணிக்கொண்டு, இஜ்யதே-யஜிக்கப்படுகிறதோ, ஸ:-அது, ஸாத்விக:-ஸாத்விகம். (கக)

(தா-ம்.) பலத்தைவிரும்பினால் சாஸ்திரவிதிப்படி பகவதாராதனஞ்செய்யவேண்டுமென்கிற மனோநிச்சயத்துடன் செய்யப்போகிற யக்ஞம் சாத்விகமெனப்படும். (கக)

அபிஸந்தாய து பலம் தம்பார்த்தமபி சைவயத்|
இஜ்யதே பரதஶ்ரேஷ்ட தம் யஜ்ஞம் வித்தி ராஜஸம்|| கஉ||

(ப-ம்.) (ஹே) பரதஶ்ரேஷ்ட - ஓ பாரதச்சிரேஷ்ட்டனே! பலம்-பலத்தை, அபிஸந்தாய-விரும்பி, டம்பார்த்தம்அபிச-ஜம்பத்துக்காகவும், ய:-எந்தயாகம், இஜ்யதே-யஜிக்கப்படுமோ, தம்-அதை, ராஜஸம்-இராஜஸமான; யஜ்ஞம் - யக்ஞமென்று, வித்தி - தெரிந்துகொள்வாயாக. (கஉ)

(தா-ம்) அர்ஜ்ஜுனா! பலத்தையும், கீர்த்தியையும் விரும்பிச்செய்யப்படுகிற யக்ஞமே இராஜஸமென்றறிக. (கஉ)

விதிஹீநமஸ்ருஷ்டாந்நம் மந்த்ரஹீநமதக்ஷிணம் |
ஶ்ரத்தாவிரஹிதம் யஜ்ஞம் தாமஸம் பரிசக்ஷதே|| கங||

(ப-ம்.) விதிஹீநம் - ப்ராஹ்மணாஜ்ஞையில்லாததும், அஸ்ருஷ்டாந்நம்-அன்னதானமற்றதும், மந்த்ரஹீநம் - மந்திரமற்றதும், அதக்ஷிணம்-தக்ஷிணையற்றதும், ஶ்ரத்தாவிரஹிதம் - சிரத்தையற்றதுமான, யஜ்ஞம்-யக்ஞத்தை, தாமஸம்-தாமஸமென்று, பரிசக்ஷதே-சொல்வர்கள். (கங)

(தா-ம்.) விதியவஸ்தை, சாஸ்திரோக்ததிரவியம், மந்திரம், தட்சிணை, சிரத்தை, இவைகளின்றி மனம்போனபடி செய்கிறயக்ஞமே தாமஸமெனப்படும். (கங)

देवद्विजगुरुप्राज्ञपूजनं शौचमार्जवम् ।
ब्रह्मचर्यमहिंसा च शारीरं तप उच्यते ॥ ௧௪ ॥

(ப-ம்.) தேவத்விஜ குரு ப்ராஜ்ஞ பூஜநம் - தேவர்கள் பிராம்மணர் குருக்கள் தெரிந்தவர்களை பூசிப்பதும், சௌசம்-பரிசுத்தியும், ஆர்ஜவம்-நேர்நடக்கையும், ப்ரம்ஹசர்யம்-பிரம்மசரியமும், அஹிம்ஸா ச-இம்ஸைசெய்யாமையும், சாரீரம்-சரீரஸம்பந்தமான, தப:-தவம்(என்று), உச்யதே-சொல்லப்படும். (௧௪)

(தா-ம்) தேவதை, அந்தணர், ஆசாரியன், இவைகளைப் பூஜித்தலும், புண்ணியதீர்த்தஸ்நானம் முதலியசௌசமும், ஸத்தியமும் பிரமசாரிவிரதமும்; அஹிம்சையும், சரீரசம்பந்தமான தவமென்று சொல்லப்படும். (௧௪)

अनुद्वेगकरं वाक्यं सत्यं प्रियहितं च यत् ।
स्वाध्यायाभ्यसनं चैव वाङ्मयं तप उच्यते ॥ ௧௫ ॥

(ப-ம்) அநுத்வேககரம்-(பிறருக்கு) கஷ்டத்தையுண்டாக்காததும், ஸத்யம்-ஸத்தியமானதும், ப்ரியஹிதம்ச-பிரியமாயிருக்கச்செய்தே இதமானதும், யத்-யாதொரு, வாக்யம் - வார்த்தையுண்டோ, தத்-அதுவும், ஸ்வாத்யாய அப்யஸநம்சைவ - வேதாத்தியயனமும், வாங்மயம்-வாக்குமயமான, தப:-தவம், இதி-என்று, உச்யதே-சொல்லப்படும். (௧௫)

(தா-ம்) பிறருக்கு மனவருத்தமுண்டாகாமலிருக்கிற வசனமும் அன்பும் நன்மையையும், வேதாப்யாசமும், வாக்குருபமானதவமென்று சொல்லப்படும். (௧௫)

मनःप्रसादः सौम्यत्वं मौनमात्मविनिग्रहः ।
भावसंशुद्धिरित्येतत्तपो मानसमुच्यते ॥ ௧௬ ॥

(ப-ம்) மநப்ரஸாத:-மனத்தெளிவும், ஸௌம்யத்வம்-ஸவும்மியதையும், மௌநம்-பேசாமையும், ஆத்மவிநிக்ரஹ:-அந்தக்கரண நிக்கிரஹமும், பாவஸம்சுத்தி: - அபிப்பிராயசுத்தியும், இதி-என்கிற, ஏதத்-இது, மாநஸம்-மனதைச்சேர்ந்த, தப: - தவம்(என்று), உச்யதே-சொல்லப்படும். (௧௬)

(தா-ம்) மனதிற்கு நிர்மலத்துவம்(காமக்ரோதாதிகளில்லாமை) ஸௌமியத்துவம்(பிறர்மேன்மையை விரும்புதல்) மௌனம்; மனம்,

மனஸ்ஸானல் வாக்குக்கு மனோவிர்த்தியானம் நியாகிக்கிற விஷயத்தில் நிரூபிக்கிறதும் பாவசுத்தியும் மானஸதபஸ்ஸு சொல்லப் படும். (௧௬)

ஶ்ரத்3த4யா பரயா தப்தம் தபஸ்தத் த்ரிவித4ம் நரை꞉।
அப2லாகாங்க்ஷிபி4ர் யுக்தை꞉ ஸாத்த்விகம் பரிசக்ஷதே॥ ௧௭॥

(ப-ம்) அபலாகாங்க்ஷிபிः - பலாபேக்ஷையற்றவரும், யுக்தைः- யுக்தர்களுமான, நரைः-மனுஷியர்களால், பரயா - மேலான, ஶ்ரத்தயா-சிரத்தையுடன், தப்தம்-செய்யப்பட்ட, த்ரிவிதம் - மூவகையான, தத்-அந்த, தபः-தவத்தை, ஸாத்விகம் - ஸாத்விகமென்று, பரிசக்ஷதே-சொல்லுகிறார்கள். (௧௭)

(தா-ம்.) பயனைவிரும்பாமல்பகவதாராதனரூபமென்கிற சித்தசுத்தியோடும் மிக்குசிரத்தையோடும், செய்யப்படுகிற காயிகம், வாசிகம், மானசிகமென்னும் இம்மூன்று விதங்களானதவமும், ஸாத்விகம்சுளெனப்படும். (௧௭)

ஸத்காரமானபூஜார்த2ம் தபோ த3ம்பே4ன சைவ யத்।
க்ரியதே தத்3இஹ ப்ரோக்தம் ராஜஸம் சலமத்4ருவம்॥ ௧௮॥

(ப-ம்) யத்-எந்த, தபः-தவம், ஸத்காரமாநபூஜார்த்தம்-ஸத்காரத்துக்காகவும் மானத்துக்காகவும் பூஜைக்காகவும், தம்பேநசைவ-தம்பத்தோடே, க்ரியதே-செய்யப்படுகிறதோ, சலம் - சஞ்சலமானதும், அத்ருவம்-ஸ்திரமானதுமான, தத்-அது, இஹ - இதில், ராஜஸம்-ராஜஸமென்று, ப்ரோக்தம்-சொல்லப்பட்டது. (௧௮)

(தா-ம்) பிறபெருமைப்படுத்துவதற்கும், துய்ப்பதற்கும், பூஜிப்பதற்கும், படாடோபத்துடன் ஸ்வர்க்காதி போக்கியங்களைக்கருதி செய்யப்படுகிறதவம் இராயஸமெனப்படுகின்றன. அஃது அஸ்திரமாதலின் சாசுவதமன்று. (௧௮)

மூட4க்3ராஹேணாத்மனோ யத் பீட3யா க்ரியதே தப꞉।
பரஸ்யோத்ஸாத3னார்த2ம் வா தத் தாமஸமுதா3ஹ்ருதம்॥ ௧௯॥

(ப-ம்) யத்-எந்த, தபः-தவம், மூடக்ராஹேண - மூர்க்கப்பிடியாய், ஆத்மநः-தனது, பீடயா-பீடையோடு, க்ரியதே-செய்யப்படுகிறதோ, பரஸ்ய - பிறருடைய, உத்ஸாதநார்த்தம்வா - நசிப்பதற்காகவோ, க்ரியதே-செய்யப்படுகிறதோ, தத்-அது, தாமஸம் - தாமஸமென்று), உதாஹ்ருதம்-சொல்லப்பட்டது. (௧௯)

(தா-ம்) அவிவேகத்தால் தன்னைப்பிடித்துக்கொண்டும் பிறரை பிடிப்பதற்கும் செய்கிறதவம் தாமஸமெனப்படும். (௧௯)

தாதவ்யமிதி யத்தானம் தீயதே நுபகாரிணே |
தேசே காலே ச பாத்ரே ச தத்தானம் ஸாத்விகம் ஸ்ம்ருதம் || ௨0 ||

(ப-ம்) யத்-எந்த, தாநம்-தானம், தாதவ்யம்-இதி-கொடுக்கவேண்டியது, என்று, தேசே-தேசத்திலும், காலே-காலத்திலும், பாத்ரேச-பாத்திரத்திலும், அநுபகாரிணே-உபகாரஞ்செய்யாதவன்பொருட்டு, தீயதே-கொடுக்கப்படுகிறதோ, தத்-அந்த, தாநம் - தானமானது, ஸாத்விகம் - ஸாத்துவிகம் (என்று), ஸ்ம்ருதம் - எண்ணப்பட்டது. (௨0)

(தா-ம்.) எந்ததானம் ப்ரசஸ்தமானதேசம், காலம், ஸத்பாத்திரம் இதுகள் தடஸ்தப் பட்டபோது தனக்கு உபகாரஞ்செய்யாதவனுக்குக் கொடுக்கப்படுகிறதோ அந்ததானம்ஸாத்விகமெனப்படும். (ஶ0) காலேச-சங்கராந்தி புண்ணியகாலத்தில். (௨0)

யத்து ப்ரத்யுபகாரார்த்தம் பலமுத்திஶ்ய வா புந: |
தீயதே ச பரிக்லிஷ்டம் தத்தானம் ராஜஸம் ஸ்ம்ருதம் || ௨௧ ||

(ப-ம்) யத்து-எந்த தாநமானால், ப்ரதி உபகாரார்த்தம்-பிரதியுபகாரத்துக்காகவோ, பலம்-பலனை, உத்திச்யவா - உத்தேசித்தோ, பரிக்லிஷ்டம்-கிலேசத்தோடு கூடியிருக்கும்படி, தீயதே-கொடுக்கப்படுகிறதோ, தத்-அந்த தாநம், ராஜஸம் - ராஜஸம் தாநம்(என்று, உதாஹ்ருதம்-சொல்லப்பட்டது). (௨௧)

(தா-ம்) பிரத்யுபகாரத்தை எதிர்நோக்கியாவது, பயனைவிரும்பியாவது சிரந்தத்திரவியமின்றி கொடுக்கப்பட்ட தானம் இராஜஸமென்று சொல்லப்படும் "என்பதால் நல்லவஸ்துவைக்கொடுப்பதற்கு மனமின்றி சாதாரணமான திரவியத்தைக்கொடுப்பது இராஜஸ்தானமென்று கருத்து" (௨௧)

அதேசகாலே யத்தானமபாத்ரேப்யஶ்ச தீயதே |
அஸத்க்ருதமவஜ்ஞாதம் தத்தாமஸமுதாஹ்ருதம் || ௨௨ ||

(ப-ம்.) யத்-எந்த, தாநம்-தானம், அஸத்க்ருதம் - ஸத்காரமில்லாததும், அவ்ஜ்ஞாதம்-திரஸ்காரத்தோடு கூடியதுமாய், அதேசகாலே-அதேசகாலத்தில், அபாத்ரேப்ய:- அயோக்கியருக்கு, தீயதே-

கொடுக்கப்படுகிறதோ, தத்-அந்த தானமானது, தாமஸம் - தாமஸமென்று, உதாஹ்ருதம்-சொல்லப்பட்டது. (உஉ)

(தா-ம்.) அப்பிரசஸ்தமான தேசகாலங்களில் அபாத்திரனுக்கும் பாதப்ரக்ஷாளனஞ் செய்வதற்குகூட தகுதியில்லாதவனுக்கும் உபசாரமின்றி கொடுக்கப்பட்ட தானம் தாமஸமென்று சொல்லப்படும். (உஉ)

ஓம் தத்ஸதிதி நிர்தேசோ ப்ரஹ்மணஸ்த்ரிவித꞉ ஸ்ம்ருத꞉।
ப்ராஹ்மணாஸ்தேந வேதாஶ்ச யஜ்ஞாஶ்ச விஹிதா꞉ புரா॥ உ௩॥

(ப-ம்.) ப்ரஹ்மண꞉-வேதத்துக்கு, நிர்தேச꞉-நிர்தேசம், ஓம் தத் ஸத் இதி-ஓம் தத் ஸத் என்று, த்ரிவித꞉-மூவகையாகி, ஸ்ம்ருத꞉ - எண்ணப்பட்டது; தேந-அதனால், ப்ராஹ்மணா꞉ - பிராம்பணரும், வேதா꞉ச-வேதங்களும், யஜ்ஞா꞉ச-யாகங்களும், புரா-முன்பு, விஹிதா꞉ செய்யப்பட்டன. (உ௩)

(தா-ம்) வைதிககர்மத்திற்கு ஓம், தத், ஸத்; என்கிற மூவ்விதமான சப்தங்கள் அந்வயிக்கின்றது. (என்பதால் வைதிககர்மாரம்பசமயத்தில் ஓம் என்கிற சப்தம் கர்மாங்கமாயும்) தத்ஸத் என்கிறசப்தங்கள் பூஜார்த்தங்களாயும், பிரயோகிக்கப்படுகிறதென்றுகருத்து, அம்மூன்று ஶப்தங்களோடு ஸம்பந்தப்பட்டு பூர்வம் அந்தணர்களையும், வேதங்களையும் யஜ்ஞங்களையும் படைக்கப்பட்டன. (என்பதால் அந்தணர்கட்கு மூன்று சப்தங்கள் உபதேசிகசத்தக்கது வேதம் எஜ்ஞம் இதுகளை ஆரம்பிக்கும்போது மேற்கூறிய சப்தங்களைப் பிரயோகிக்கவேண்டுமென்று கருத்து.) (உ௩)

தஸ்மாதோமித்யுதாஹ்ருத்ய யஜ்ஞதானதப꞉க்ரியா꞉।
ப்ரவர்தந்தே விதாநோக்தா꞉ ஸததம் ப்ரஹ்மவாதிநாம்॥ உ௪॥

(ப-ம்.) தஸ்மாத்-அந்த ஹேதுவினுல், ப்ரஹ்மவாதிநாம்-பிரமவித்துக்களுடைய, யஜ்ஞதாந தப꞉ க்ரியா꞉-யக்ஞதான தவக்கிரியைகள், விதாநோக்தா꞉ - வேதவிதியில் சொல்லப்பட்டவைகளாய், ஆதௌ-ஆதியில், ஓம் இதி-"ஓம்" என்று, உதாஹ்ருத்ய - சொல்லி, ஸததம்-எப்போதும், ப்ரவர்தந்தே-பிரவர்த்திக்கின்றன. ( ௪)

(தா-ம்.) ஆதலின் வேதத்தைக்கற்கும் பிரம்ம, க்ஷத்திரிய, வைசியர்களுடைய சாஸ்திர ஸம்மதமான யஜ்ஞங்கள், தானங்கள், தவ

ங்கள், கிரியைகள் இவைகளெல்லாம் ஓம் என்றுசொன்னபிறகு ஆரம்பிக்கவேண்டும். (௨௪)

ததித்யநபிஸந்தாய பலம் யஜ்ஞதப꞉க்ரியா꞉।
தாநக்ரியாஶ்ச விவிதா꞉ க்ரியந்தே மோக்ஷகாங்க்ஷிபி꞉॥ ௨௫॥

(ப-ம்.) தத்இதி-தத்என்று, பலம்-பலனை, அநபிஸந்தாய-கோராமல், விவிதா꞉-பலவிதமான, யஜ்ஞதப꞉ க்ரியா꞉-தவக்கிரியைகளும் யாகக்கிரியைகளும், தாநக்ரியாஶ்ச-தானக்கிரியைகளும், மோக்ஷகாங்க்ஷிபி꞉ - மோக்ஷாபேக்ஷையுடையோரால், க்ரியந்தே - செய்யப்படுகின்றன. (௨௫)

(தா-ம்.) முத்தியைவிரும்புவோர்களால் பயனைக்கருதாதுசெய்கிறயஜ்ஞம், தவம் தானம் என்கிற அநேககிரியைகள் தத் என்கிற ப்ரம்மவாசகசப்தத்தை யுச்சரித்துச் செய்யப்படுகிறது. (௨௫)

ஸத்பாவே ஸாதுபாவே ச ஸதித்யேதத்ப்ரயுஜ்யதே।
ப்ரஶஸ்தே கர்மணி ததா ஸச்சப்த꞉ பார்த்த யுஜ்யதே॥ ௨௬॥

(ப-ம்.) ஸத் இதி-"ஸத்" என்கிற, ஏதத்-இது, ஸத்பாவே-இருக்குந்தன்மையிலும், ஸாதுபாவே-ஸாதுத்தன்மையிலும், ப்ரயுஜ்யதே-பிரயோகிக்கப்படுகின்றது, (ஹே) பார்த்த - ஓ குந்திபுத்திர!, ததா-அப்படியே, ஸத் சப்த꞉-"ஸத்" என்னும் சொல், ப்ரசஸ்தே-ப்ரஶஸ்தமான, கர்மணி-கருமத்தில், யுஜ்யதே-உபயோகிக்கப்படுகிறது.

(தா-ம்.) அர்ஜ்ஜுனா! தத் என்கிற சப்தம் இருக்கிற தென்பதிலும் பிரஶஸ்தமென்பதிலும் உபயோகப்படுகிறது. அவ்வாறே பிரஶஸ்தமானகர்மத்தில் தத் என்கிற ஶப்தம் உலகத்திற் பிரயோகிக்கப்படுகிறது. (௨௬)

யஜ்ஞே தபஸி தாநே ச ஸ்திதி꞉ ஸதிதி சோச்யதே।
கர்ம சைவ ததர்தீயம் ஸதித்யேவாபிதீயதே॥ ௨௭॥

(ப-ம்.) யஜ்ஞே-யாகத்திலும், தபஸி-தவத்திலும், தாநேச-தானத்திலும், ஸ்திதி꞉-நிஷ்டையானது, "ஸத்"இதி-"ஸத்" என்று, உச்யதே-சொல்லப்படுகிறது. (௨௭)

(தா-ம்.) யஜ்ஞம், தபஸ்ஸு, தானம் இதுகள் வைதீகர்களுக்கு ப்ரஶஸ்தமானதால், ஸத் என்று கூறப்படும். வைதிகர்களுடைய பி

ரயோஜனஹேதுவுக்கு யஜ்ஞாதிகர்மம் ஸத் என்றே சொல்லப்படுகிறது. (ஶ்லோ) உச்யதே-ஞானிகளால் சொல்லப்படுகிறது. (உஎ)

அஶ்ரத்தயா ஹுதம் தத்தம் தபஸ்தப்தம் க்ருதம் ச யத் |
அஸதித்யுச்யதே பார்த்த ந ச தத்ப்ரேத்ய நோ இஹ ||உஅ

(ப-ம்) ததர்த்தீயம்-அந்த மூன்றுவர்ணத்தார் பொருட்டாகிய. கர்மசைவ-யஜ்ஞாதி கர்மங்களும், ஸத் இதி ஏவ-ஸத் என்றே, அபிதீயதே-சொல்லப்படுகின்றது; ஹேபார்த்த-ஓ அர்ஜ்ஜுனா, அஶ்ரத்தயா-சிரத்தையின்றி, ஹுதம் - ஓமம் செய்யப்பட்டதும், தத்தம்-கொடுக்கப்பட்டதும், தப்தம்-செய்யப்பட்டதுமான, தப:-தவமும், யத்-எது, க்ருதம்-(சிரத்தையின்றி) செய்யப்பட்டதோ, (தத்)-அதுவும், அஸத் இதி-“அஸத்” என்று, உச்யதே-சொல்லப்படுகிறது; தத்-அது, ப்ரேத்ய-இறந்தபிறகு, ந-இல்லை, இஹச-இங்கும், ந - இல்லை.

(தா-ம்.) பார்த்தா! சிரத்தையின்றி செய்யப்படுகிற ஹோமம் தானம்முதலியவைகள் அஸத்தென்றுசொல்லப்படும். அவைமுக்திக்கும் இம்மைச்சுகத்திற்கும் பயன்படாதென்றறிக. (உஅ)

ஸ்ரீகீதாஸு விஶ்வரூபஸந்தர்ஶநயோகமென்னும்

பதினேழாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## பதினெட்டாவது அத்தியாயம்.

அர்ச்சுனவாக்கியம்.

அர்ஜுந உவாச.

ஸந்ந்யாஸஸ்ய மஹாபாஹோ தத்த்வமிச்சாமி வேதிதும் |
த்யாகஸ்ய ச ஹ்ருஷீகேஶ ப்ருதக்கேஶிநிஷூதந || க

(ப-ம்.) (ஹே)மஹாபாஹோ-ஓ பெருந்தோளுடையீர்! (ஹே) கேசிநிஷூதந-கேசியைக் கொன்றவரே!, (ஹே) ஹ்ருஷீகேச-ஓ இருடீகேச!, ஸந்யாஸஸ்ய-ஸன்னியாஸத்தினுடையவும், த்யாகஸ்ய ச-தியாகத்தினுடையவும், தத்வம்-ஸ்வரூபத்தை, ப்ருதக் - தனியே, வேதிதும்-அறிய, இச்சாமி-விரும்புகிறேன். (க)

(தா-ம்) ஓ மஹாபாஹோ! ஹ்ருஷீகேசா! கேசிவைரீ! ஸந்யாஸ ஸ்வரூபத்தைத் தனித்தனியே தெரிந்துகொள்வதற்கு விரும்புகிறேன். (க)

ஸ்ரீகிருஷ்ண வாக்கியம்.

𑌕𑌾𑌮𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌨𑍍𑌯𑌾𑌸𑌂 𑌸𑌨𑍍𑌨𑍍𑌯𑌾𑌸𑌂 𑌕𑌵𑌯𑍋 𑌵𑌿𑌦𑍁𑌃 |
𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌤𑍍𑌯𑌾𑌗𑌂 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌸𑍍𑌤𑍍𑌯𑌾𑌗𑌂 𑌵𑌿𑌚𑌕𑍍𑌷𑌣𑌾𑌃 || ௨ ||

(ப-ம்.) கவயஃ-(சில) வித்துவான்கள், காம்யாநாம்-காம்மியமான, கர்மணாம்-கருமங்களின், ந்யாஸம்-விடுதலை; ஸந்யாஸம் விதுஃ-ஸந்நியாஸம், என்பர்கள்; விசக்ஷணாஃ - (பின்னும் சில) பண்டிதாள், ஸர்வகர்மபலத்யாகம் - எல்லாக் கருமபலனையும் விடுவது, த்யாகம்- தியாகம் (என்று), ப்ராஹுஃ-சொல்லுவர்கள். (உ)

(தா-ம்) சில வித்துவான்கள் காம்மியகர்மங்களை விடுவதே ஸந்யாஸமென்று அங்கீகரிக்கின்றார்கள். மற்றும் சில மதிமான்கள் கர்மங்களுக்கெல்லாம் பலேச்சையை விடுவதே தியாகமென்பார்கள். ()

𑌤𑍍𑌯𑌾𑌜𑍍𑌯𑌂 𑌦𑍋𑌷𑌵𑌦𑌿𑌤𑍍𑌯𑍇𑌕𑍇 𑌕𑌰𑍍𑌮 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌰𑍍𑌮𑌨𑍀𑌷𑌿𑌣𑌃 |
𑌯𑌜𑍍𑌞𑌦𑌾𑌨𑌤𑌪𑌃𑌕𑌰𑍍𑌮 𑌨 𑌤𑍍𑌯𑌾𑌜𑍍𑌯𑌮𑌿𑌤𑌿 𑌚𑌾𑌪𑌰𑍇 || ௩ ||

(ப-ம்.) ஏகே-சில, மநீஷிணஃ-பண்டிதர்கள், தோஷவத் - தோஷமுடைய, கர்ம-கருமம், த்யாஜ்யம் இதி - விடத்தக்கது (என்று), ப்ராஹுஃ-சொல்லுகிறார்கள், அபரே-பின்னும் சிலர், யஜ்ஞதாநதபஃ-யக்ஞம் தானம் தவம் (என்னும்) கர்ம-கருமத்தை, நத்யாஜ்யம்- விடத்தகாது, இதி-என்று, (ஆஹுஃ)-சொல்லுவார்கள். (௩)

(தா-ம்.) சில ஞானிகள் கர்மங்களெல்லாம் இராகத்துவேஷமுதலிய தோஷத்துடன் கூடியிருப்பதால் த்யஜிக்கவேண்டுமென்று சொல்லுகிறார்கள். மற்றுஞ்சிலர் யஜ்ஞம், தானம், தபஸ், என்கிற கர்மங்கள் பரித்யாஜ்யங்களாகச் சொல்லுகிறார்கள். (௩)

𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌂 𑌶𑍃𑌣𑍁 𑌮𑍇 𑌤𑌤𑍍𑌰 𑌤𑍍𑌯𑌾𑌗𑍇 𑌭𑌰𑌤𑌸𑌤𑍍𑌤𑌮 |
𑌤𑍍𑌯𑌾𑌗𑍋 𑌹𑌿 𑌪𑍁𑌰𑍁𑌷𑌵𑍍𑌯𑌾𑌘𑍍𑌰 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌃 𑌸𑌂𑌪𑍍𑌰𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌃 ||

(ப-ம்.) பரதஸத்தம-ஓ பாரதச்சிரேஷ்ட்ட!, தத்ர-அந்த, த்யாகே-தியாகத்தில், மே-என்னுடைய, நிச்சயம்-நிச்சயத்தை, ஶ்ருணு-கேள்; (ஹே) புருஷவ்யாக்ர-ஓ புருஷச்சிரேஷ்ட! த்யாகஃ-தியாகம், த்ரிவிதஃ - மூன்றுவகையாய், ஸம்ப்ரகீர்திதஃஹி - சொல்லப்பட்டதன்றோ? (ச)

(தா-ம்) ஓ பாரதா! இவ்விரண்டு ஸந்தேகங்களினது உண்மையைக்கேள் மின் தியாகமென்பது மூன்று விதங்களென்று முன்னமே கூறப்பட்டன. (௪)

யஜ்ஞதாநதப:கர்ம ந த்யாஜ்யம் கார்யமேவ தத்|
யஜ்ஞோ தாநம் தபஸ்சைவ பாவநாநி மநீஷிணாம்|| ௫||

(ப-ம்.) யஜ்ஞதாந-யக்ஞம்,தானம், தப:-தவம்(என்னும்) கர்ம-கருமம், நத்யாஜ்யம்-விடத்தகாது; தத்-அந்தக் கர்மங்கள், கார்யம் ஏவ-செய்யவேண்டுவதே; யஜ்ஞ:-யாகமும், தாநம்-தானமும், தப: சைவ-தவமும். மநீஷிணும்-பண்டிதாளுக்கு. பாவநாநி-பாவங்களைப் போக்கடிப்பவை. (௫)

(தா-ம்) யஜ்ஞம், தானம் தவம் என்கிற கர்மங்கள் விடத்தக்கதன்று. தியாகம்வகையில் தினந்தோரும் செயற்பாலனவேயாம், ஏனெனின், யஜ்ஞம் தானம் தபஸ்ஸு முதலியவைகளை அநுஷ்டிப்போர்க்குப்பரிசுத்தமுண்டாகிறது. (௫)

ஏதாந்யபி து கர்மாணி ஸங்கம் த்யக்த்வா பலாநி ச |
கர்தவ்யாநீதி மே பார்த நிஸ்சிதம் மதமுத்தமம்|| ௬||

(ப-ம்) (ஹே) பார்த்த-ஓபார்த்த, ஏதாநி-இந்த, கர்மாணி- கருமங்கள், ஸங்கம்அபி-(எனதென்கிற) ஸங்கத்தையும், பலாநிச - பலன்களையும், த்யக்த்வா-விட்டு, கர்தவ்யாநி-செய்யவேண்டுவது. இதி-என்னுடைய, நிச்சிதம்-நிச்சயிக்கப்பட்டதும், உத்தமம் - உத்தமமானதுமான, மே-என்னுடைய, மதம்-மதம். (௬)

(தா-ம்.) பார்த்தா! யஜ்ஞம், தானம், தவம்மென்கிறகர்மங்களைக்கூட அகம்பாவத்தையும் பலேச்சையையும் விட்டு அவசியம் செய்யவேணுமென்பது எந்தன் கருத்து. (௬)

நியதஸ்ய து ஸந்ந்யாஸ: கர்மணோ நோபபத்யதே |
மோஹாத்தஸ்ய பரித்யாகஸ்தாமஸ: பரிகீர்தித:|| ௭||

(ப-ம்.) நியதஸ்ய-நியதமான, கர்மண:-கருமத்துக்கு, ஸந்யாஸ:-விடுவதென்பது, நஉபபத்யதே-சேராது, மோஹாத்-அக்ஞானத்தால், தஸ்ய-அதை, பரித்யாக:-விடுவதானது, தாமஸ: - தாமஸம்(என்று), பரிகீர்தித:-சொல்லப்பட்டது. (௭)

(தா-ம்) அவசியமான நித்தியநைமித்திய கர்மங்களைவிடுவது ச

மின்றும். அஜ்ஞானத்தால் அத்தகைய கர்மங்களைவிடுவது தாமஸத் யாகமெனப்படும். (எ)

துஃகமித்யேவ யத்கர்ம காயக்லேசபயாத்த்யஜேத்|
ஸக்ருத்வா ராஜஸம் த்யாகம் நைவ த்யாகபலம் லபேத்|| அ||

(ப-ம்.) யத்-எந்த, கர்ம-கருமமோ, தத்-அதை, துஃகம்-துக்கம், இதிஏவ-என்றே, காயக்லேசபயாத் - சரீரவருத்தத்தில்பயத்தால், யஃ-எவன், த்யஜேத்-விடுவனோ, ஸஃ-அவன், ராஜஸம் - ராஜஸமான, த்யாகம்-தியாகத்தை, க்ருத்வா-பண்ணி, த்யாகபலம் - தியாகபலனை, நைவலபேத்-அடையவேமாட்டான். (அ)

(தா-ம்) பயத்தால் ஶரீரகஷ்ட சாத்தியமென்றெண்ணிக கர்மங்களை விடுவது இராஜஸத்யாகமெனப்படும். அப்படி கர்மத்யாகஞ்செய்வோர்க்குத் தியாகபலமில்லை. (அ)

கார்யமித்யேவ யத்கர்ம நியதம் க்ரியதேऽர்ஜுந|
ஸங்கம் த்யக்த்வா பலஞ்சைவ ஸ த்யாகஸ்ஸாத்த்விகோ மதஃ|| கூ||

(ப-ம்.) (ஹே) அர்ஜுந-ஓ அர்ஜ்ஜுனா, நியதம்-நித்யநைமித்திகரூபமான, கர்ம-கருமமானது, கார்யம் இதிஏவ-செய்யவேண்டுவதென்றே, ஸங்கம்-ஸங்கத்தையும், பலம்ச-பலனையும், த்யக்த்வா-விட்டு, யத்-எது, க்ரியதே-செய்யப்படுமோ, ஸஃ-அந்த, த்யாகஃ - தியாகம், ஸாத்விகஃ-ஸாத்துவிகம் (என்று), மதஃ-எண்ணப்பட்டது. (கூ)

(தா-ம்) அர்ஜ்ஜுனா! கர்மத்தில் தன்புத்தியால் பலேச்சையைவிட்டு செயர்பாலனவாகிய நித்திய நைமித்திக கர்மங்கள் ஸ்வயம்பிரயோஜனமென்றெண்ணி கர்மங்களை யநுஷ்டிப்பது ஸாத்விகத்யாகமென்று அங்கீகரிக்கப்பட்டன. (கூ)

ந த்வேஷ்ட்யகுஶலம் கர்ம குஶலே நாநுஷஜ்ஜதே|
த்யாகீ ஸத்த்வஸமாவிஷ்டோ மேதாவீ சிந்நஸம்ஶயஃ|| க௦||

(ப-ம்) ஸத்வஸமாவிஷ்டஃ-ஸத்துவமுண்டாய், மேதாவீ-ஞானியாய், சிந்நஸம்சயஃ-ஸம்சயமற்று (இப்படி), த்யாகீ-விடுமவன், அகுசலம்-நிஷித்தங்களான, கர்ம-கருமத்தைக்(குறித்து), நத்வேஷ்டி-பகைக்கமாட்டான், குசலே - நல்லதில், நாநுஷஜ்யதே - விரும்பமாட்டான். (ய)

(தா-ம்.) பாபரூபங்களான கர்மங்களைப்புறக்கணி த்வேஷிகள்

ன் புண்ணியகர்மங்களை விரும்பான். அப்படிப்பட்ட சந்தேகமில்லா தஞானியே ஸத்துவவிர்த்தியடைந்த தியாகியாவான். (௰)

ந ஹி தேஹப்ருதா ஶக்யம் த்யக்தும் கர்மாண்யஶேஷத꞉|
யஸ்து கர்மப²லத்யாகீ³ ஸ த்யாகீ³த்யபி⁴தீ⁴யதே|| கக||

(ப-ம்.) தேஹப்ருதா-சரீரமெடுத்தவனால், கர்மாணி - கருமங்களை, அசேஷத꞉-முழுதும், த்யக்தும்-விட, நசக்யம் ஹி-ஸாத்தியமல்லவன்றோ? யஸ்து-எவனுனால், கர்மபலத்யாகீ-கருமப்பயனைவிட்டானோ, ஸ꞉-அவன், த்யாகி-தியாகி, இதி-என்று, அபிதீயதே-சொல்லப்படுகிறான். (கக)

(தா-ம்) சரீரமுடையோன் கர்மங்களைப்பற்ற நீக்குவது சாத்தியமன்று. ஆதலால் கர்மங்களில் பலாபேக்ஷையை ஒழித்தவனே கர்மத்யாகியாவான். (கக)

அநிஷ்டமிஷ்டம் மிஶ்ரம் ச த்ரிவித⁴ம் கர்மண꞉ ப²லம்|
ப⁴வத்யத்யாகி³னாம் ப்ரேத்ய ந து ஸந்ந்யாஸினாம் க்வசித்|| கஉ||

(ப-ம்) அநிஷ்டம்-அனிஷ்டம், இஷ்டம்-இஷ்டம், மிச்ரம்ச - மிச்ரம், இதி-என்று, த்ரிவிதம்-மூன்றுவகையான, கர்மண꞉-கருமத்தின், பலம்-பயனானது, அத்யாகிநாம்-விடாதவருக்கு, ப்ரேத்ய-இறந்த பிறகு, பவதி-உண்டாகிறது, ஸந்யாஸிநாம்து - த்யாகம் செய்தவர்களுக்கோ, க்வசித்அபி-எங்கும், நபவதி-உண்டாகாது. (கஉ)

(தா-ம்.) கர்மத்திற்கு அநிஷ்டம் (நரகமுதலியதுன்பம்) இஷ்டம்(ஸ்வர்காதிசுகம்) மிஶ்ரம் (அநிஷ்டமான துக்கத்துடன் கூடிய புத்திரமித்திராதி இஷ்டபலன்) என்பதால் பயன் மூவகைப்படும். அவை மூன்கூறிய மூவ்வகைத்தியாகம் செய்யாதவற்கு கர்மானுஷ்டானத்திற்குப் பிறகுண்டாகின்றன. அந்தத்தியாகம் செய்தவற்கு ஒன்றுண்டாகாதென்க. (கஉ)

பஞ்சைதானி மஹாபா³ஹோ காரணானி நிபோ³த⁴ மே|
ஸாங்க்²யே க்ருதாந்தே ப்ரோக்தானி ஸித்³த⁴யே ஸர்வகர்மணாம்||

(ப-ம்) (ஹே) மஹாபாஹோ-ஓ பெருந்தோளாய்! ஸாங்க்யே-வஸ்து தத்வங்களின் யதார்த்தஜ்ஞானரூபமான, க்ருதாந்தே - நிர்ணயத்தில், ஸர்வகர்மணாம்-எல்லாககருமங்களும், ஸித்தயே-உண்டாகும்பொருட்டு, ப்ரோக்தாநி-சொல்லப்பட்ட, பஞ்ச - ஐந்துவிதமான,

ஏதானி-இந்த, காரணானி - காரணங்களையும், மே - என்னிடத்தில், நிபோத-தெரிந்துக்கொள், (கந)

(தா-ம்) அர்ஜுநா! தத்துவத்தினது உண்மை ஞானத்தைவிலக்குஞ்சக்திபெற்ற யெல்லாகர்மங்களும் சித்திப்பதற்குக் காரணம் ஐந்தெனக் கூறப்பட்டுளது. அதைக் கேள்மின். (கந)

அதிஷ்டாநம்ததாகர்த்தாகரணஞ்சப்ருதக்விதம்|
விவிதாஶ்சப்ருதக்சேஷ்டா தைவஞ்சைவாத்ரபஞ்சமம்|| கச||

(ப-ம்.) அதிஷ்டாநம்-அதிஷ்டானமும், ததா-அப்படியே, கர்த்தா-கர்த்தாவும், ப்ருதக்விதம்-தனித்தனியான, கரணம்-கரணமும், விவிதாஶ-பலவகைப்பட்ட, ப்ருதக்சேஷ்டா - தனித்தசேஷ்டையும், அத்ர-இவைகளில், பஞ்சமம்-ஐந்தாவது, தைவம்ச-தைவமும் ஆகியிருக்கின்றது. (கச)

(தா-ம்.) ஜீவாத்மாவினால் நியமனம் செய்யப்பட்ட சரீரம், ஞானத்தை ஆஶ்ரயித்த ஜீவான்மா, வாக்கு, பாணி, பாதம், பாயு, உபஸ்தம், என்கிற ஐந்திந்திரியங்கள். ப்ராணாபான ஸமானோதாந வ்யாநங்களென்னும் ஐந்துவாயுக்களின் ஐந்தாவதுதைவம். (அதாவது ஸர்வாந்தர்யாமியான பரமாத்மா) (ஸ) தைவஞ்சைவ - இந்த்ரியாதிஷ்டாமகர்களான சூரியாதிகள். (கச)

ஶரீரவாங்மநோபிர்யத்கர்ம ப்ராரபதே நர:|
ந்யாய்யம்வாவிபரீதம்வா பஞ்சைதேதஸ்யஹேதவ:||

(ப-ம்) நர:-மனிதன்; சரீரவாங்மனோபி:-சரீரவாக்மனங்களால் ந்யாய்யம்வா-நியாயமோ, விபரீதம்வா-அநியாயமோ, யத் - எந்த, கர்ம-கர்மத்தை, ப்ராரபதே - தொடங்குகிறானோ, தஸ்ய - அதற்கு, ஏதே-இந்த, பஞ்ச-ஐந்தும், ஹேதவ:-காரணங்கள். (கரு)

(தா-ம்) இவைகள் சரீரம் வாக்கு மனம் இதுகளால் நியாய அநியாயகர்மங்களைப் புருடன் ஆரம்பித்தபோது அவைகளுக்குக் காரணமாகும். (கரு)

தத்ரைவம்ஸதிகர்த்தாரமாத்மாநம்கேவலந்து ய:|
பஶ்யத்யக்ருதபுத்தித்வாந்நஸபஶ்யதிதுர்மதி:|| கசு||

(ப-ம்) ஏவம்ஸதி-இப்படியாயிருக்க, தத்ர - அந்தக் கர்மத்தில், ய: - எவன், அக்ருதபுத்தித்வாத் - வஸ்து ஸ்த்திதியைத் தெரிந்து

கொள்ளுகிற புத்தியில்லாதவனாகிறதனால், கேவலம் - ஒரு, ஆத்மாநம்-ஆத்மாவை, கர்தாரம்-கர்த்தாவாக, பச்யதி-பார்க்கிறானோ, ஸ:- அந்த, துர்மதி:-கெடுமதியன், நபச்யதி-பார்க்கமாட்டான். (கசு)

(தா-ம்) பரமாத்ம ஸம்பந்தமின்றியும், ஜீவாத்மாவிற்குக் கர்த்துருத்வமே இல்லாமலிருக்கும்போது கர்மங்களில் ஜீவாத்மா ஒருவனே கர்த்தனென்று எண்ணுகிறவன் உண்மைஜ்ஞாநசூன்யனாதலின் பரம்பொருளையறியா தொழிவான். (கசு)

யஸ்ய நாஹங்க்ருதோ பாவோ புத்திர்யஸ்ய ந லிப்யதே|
ஹத்வாபி ஸ இமாந் லோகாந் ந ஹந்தி ந நிபத்யதே|| கஎ||

(ப-ம்.) யஸ்ய-எவனுடைய, பாவ:-அபிப்பிராயம், அஹங்க்ருத:-அஹங்காரத்தால்வந்தது, ந-அல்லவோ, யஸ்ய - எவனுடைய, புத்தி:-புத்தி, நலிப்யதே-ஒட்டாதோ, ஸ: - அவன், இமாந் - இந்த, லோகாந்-பிராணிகளையெல்லாம், ஹத்வாபி - கொன்றும், நஹந்தி-கொல்லுகிறதில்லை; நநிபத்யதே-கட்டுப்படான். (கஎ)

(தா-ப்) எவனது மனோபாவம் அகங்காரத்தை ஆஶ்ரயிக்கவில்லையோ எவனது புத்தி எனது என்கிற மமதையும் பலேச்சையுமில்லாமலிருக்கிறதோ அப்படிப்பட்டவன் இவ்வுலகையெல்லாம் யுத்தத்திற் கொன்றாலும் கொன்றவனாகான். (ஶம்) கரணம்-காதுமுதலியஇந்த்ரியங்களுக்கு புத்தியும். (கஎ)

ஜ்ஞாநம் ஜ்ஞேயம் பரிஜ்ஞாதா த்ரிவிதா கர்மசோதநா|
கரணம் கர்ம கர்தேதி த்ரிவித: கர்மஸங்க்ரஹ:|| கஅ||

(ப-ம்) ஜ்ஞாநம்-அறிவு, ஜ்ஞேயம் - அறியவேண்டுவது, பரிஜ்ஞாதா-அறிபவன், இதி-என்று, கர்மசோதநா-கருமத்தின்விதி, த்ரிவிதா-மூன்றுவகை, கரணம்-சரணம், கர்ம-கருமம், கர்த்தா - கர்த்தா, இதி-என்று, கர்மஸங்க்ரஹ:-கருமச்சுருக்கம், த்ரிவித: - மூன்றுவகை. (கஅ)

(தா-ம்.) கர்ம ஸ்வரூபத்தை அறிந்தும் ஞானம் க்ஞேயம்(அதாவது அறிந்து செய்யப்படுகிற கர்மா) ஞாதா (அறிந்தவன்) இம்மூன்றும் ஸம்பந்தப்படுவதே கர்மவிதிகளென்க. அக்கர்மங்கள் கர்மகர்த்தாவென்றும், கரணமென்றும், கர்மஸங்க்ரகமென்று மூவ்வகைப்படும். அவைகளை யநுஷ்டிப்போன் இம்மூன்றுகளிலும் பற்றுடையவனாகிறான். (கஅ)

ஜ்ஞாநம் கர்ம ச கர்தா ச த்ரிதைவ குணபேதத꞉ ।
ப்ரோச்யதே குணஸங்க்யாநே யதாவச்ச்ருணு தாந்யபி ॥

(ப-ம்.) ஜ்ஞாநம்-ஞானமும், கர்மச-கருமமும், கர்தாச-கர்த்தாவும், குணபேதத꞉-குணங்களின் வித்தியாஸப்படி, த்ரிதைவ - மூன்றுபடியாகவே, குணஸங்க்யாநே-குணஸங்கியானத்தில், ப்ரோச்யதே-சொல்லப்படுகிறது, தாநிஅபி-அவைகளையும், யதாவத்-உள்ளபடியே, ஶ்ருணு-கேள். (௧௯)

(தா-ம்) ஜ்ஞாநம், கர்மம், கர்த்தா என்கிறஸத்துவரஜஸ்தமோ குணங்களால் மூன்று விதங்களாக அக்குணபேதங்களைப் பராமர்சித்தபொழுது வழங்கப்படுகிறது. அதனது ஸ்வரூபங்களை உள்ளதுள்ளபடி கேள்மின்? (ஸ௦) குணஸங்க்யாநே-குணங்களுடைய காரியங்களை கணக்கிடுவதில். (௧௯)

ஸர்வபூதேஷு யேநைகம் பாவமவ்யயமீக்ஷதே ।
அவிபக்தம் விபக்தேஷு தஜ்ஜ்ஞாநம் வித்தி ஸாத்த்விகம் ॥ ௨௰

(ப-ம்.) விபக்தேஷு-பிரிக்கப்பட்ட, ஸர்வபூதேஷு-ஸகலபூதங்களிலும், அவிபக்தம்-பிரிக்கப்படாததும், அவ்யயம் - நிர்விகாரமானதுமான, ஏகம்-ஒரு, பாவம்-ஆத்மவஸ்துவை, யேந - எதினால், ஈக்ஷதே-பார்க்கிறானோ, தத்-அந்த, ஜ்ஞாநம்-ஞானத்தை, ஸாத்விகம்-ஸாத்துவிகமென்று, வித்தி-அறி. (௨௰)

(தா-ம்.) எந்த ஞானத்தால்புருடன் பிராணிகளெல்லாவற்றிலும் ஏகரூபமான ஆத்மா பேதப்பட்டவஸ்துக்களிலிருப்பினும், நிர்க்கஹ்ரஸ்வாதிபேதமின்றியும், விகாரமின்றியும், பார்க்கின்றானோ, அத்தகைய ஞானம் ஸாத்விகமெனப்படும். (௨௰)

ப்ருதக்த்வேந து யஜ்ஜ்ஞாநம் நாநாபாவாந்ப்ருதக்விதாந் ।
வேத்தி ஸர்வேஷு பூதேஷு தஜ்ஜ்ஞாநம் வித்தி ராஜஸம் ॥ ௨௧

(ப-ம்.) யத்ஜ்ஞாநம்ச - எந்த ஞானமானல், ப்ருதக்விதாந் - அநேகவிதங்களான, நாநாபாவாந்-அநேக வஸ்துக்களை, ஸர்வேஷு-ஸகலமான, பூதேஷு-பூதங்களிலும், ப்ருதக்த்வேந-தனியாக, வேத்தி-அறிகிறதோ, தத்-அந்த, ஜ்ஞாநம்-ஞானம், ராஜஸம் - ராஜஸமென்று, வித்தி-அறி. (௨௧)

(தா-ம்.) பிராணிகளெல்லாவற்றிலுமுள்ள ஆத்மாக்களை அந்தந்த ஶரீரத்திற்கேற்றவாறு வேறுவேருகப்பார்ப்பதும், அவைகளுக்கு வேறுவேறுவிதங்களானபலங்கள் அந்தந்த ஶரீரத்திற்கேற்றவாறு பலிக்கிறதென்றுந் தெரிந்துகொள்வது இராஜஸஞானமென்றுணர்க. (உக)

யத்து க்ருத்ஸ்னவதேகஸ்மிந்கார்யே ஸக்தமஹைதுகம்।
அதத்வார்த்தவதல்பஞ்ச தத்தாமஸமுதாஹ்ருதம்॥ உஉ॥

(ப-ம்) யத்து-எந்த ஜ்ஞாநமானுல், ஏகஸ்மிந் கார்யே - ஒரேகருமத்தில், க்ருத்ஸ்நவத்-எல்லாமுடையதுபோல், ஸக்தம்-பற்றியிருக்குமோ, அஹைதுகம்-ஹேதுவற்றதோ, அதத்வார்த்தவத் - உண்மைப்பொருளற்றதோ, அல்பஞ்ச-ஸ்வல்பமானதோ, தத்-அது, தாமஸம்-தாமதமாக, உதாஹ்ருதம்-சொல்லப்பட்டது. (உஉ)

(தா-ம்.) ஒருகாரியத்தில் எல்லாபலங்களையும் சிந்தித்துண்மையில்லாத அர்த்தத்தை ஆச்ரயித்து அற்பபலத்தை விரும்பி அசாத்தியமானதை சாத்தியமென்று கிரகிப்பதே தாமசஞானமெனப்படும். (உஉ)

நியதம்ஸங்கரஹிதமராகத்வேஷதஃக்ருதம்।
அபலப்ரேப்ஸுநா கர்ம யத்தத்ஸாத்விகமுச்யதே॥ உ௩॥

(ப-ம்.) யத்கர்ம-எந்தகர்மம், நியதம்-வர்ணுசிரமங்களுக்குத்தகுந்ததும், ஸங்கரஹிதம்-பற்றொழிந்ததும், அபலப்ரேப்ஸுநா - பலாபேக்ஷையற்றவனுல், அராகத்வேஷதஃ - ராகத்துவேஷமின்றி, க்ருதம்-செய்யப்பட்டதுமோ, தத்-அது, ஸாத்விகம்-ஸாத்விகமாக, உச்யதே-சொல்லப்படும். (உ௩)

(தா-ம்.) தனக்கேற்றகர்த்ருத்வ முதலிய அபிமானமின்றி இராகத்வேஷங்களை விட்டு பலத்தைக்கோராமற்செய்யப்படுகிற கர்மஸாத்விக கர்மமெனப்படும். (உ௩.)

யத்து காமேப்ஸுநா கர்ம ஸாஹங்காரேண வா புநஃ।
க்ரியதே பஹுளாயாஸம் தத்ராஜஸமுதாஹ்ருதம்॥ உச॥

(ப-ம்.) யத்துகர்ம-எந்தகருமமானுல், காமேப்ஸுநா - அபேக்ஷையுடையவனுல், புநஃ-அல்லது, ஸாஹங்காரேணவா-அஹங்காரத்தோடு, பஹுளாயாஸம்-விஸ்தார ஆயாஸத்தோடு கூடியிருக்கு

ம்படி, க்ரியதே-செய்யப்படுகிறதோ, தத்-அது, ராஜஸம்-ராஜஸமென்று, உதாஹ்ருதம்-சொல்லப்படும். (௨௪)

(தா-ம்) பலத்தைக்கருதி தான் கர்த்தனென்றெண்ணி அளவிறந்தபிரயாசையோடு அநுஷ்டிக்கப்படும் கர்மம் இராஜஸகர்மமெனப்படும். (௨௪)

𑌅𑌨𑍁𑌬𑌨𑍍𑌧𑌂 𑌕𑍍𑌷𑌯𑌂 𑌹𑌿𑌂𑌸𑌾𑌮𑌨𑌪𑍇𑌕𑍍𑌷𑍍𑌯 𑌚 𑌪𑍌𑌰𑍁𑌷𑌮𑍍 ।
𑌮𑍋𑌹𑌾𑌦𑌾𑌰𑌭𑍍𑌯𑌤𑍇 𑌕𑌰𑍍𑌮 𑌯𑌤𑍍𑌤𑌤𑍍𑌤𑌾𑌮𑌸𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥ ௨௫ ॥

(ப-ம்.) அநுபந்தம்-பின்புநேரிடுகிறதுக்கமும், க்ஷயம் - விரயத்தையும், ஹிம்ஸாம்-இம்சையையும், பௌருஷம்ச - ஸாமர்த்தியத்தையும், அநபேக்ஷ்ய-ஆலோசியாமல், மோஹாத் - அக்ஞானத்தால், யத்-எந்த, கர்ம-கருமம், ஆரப்யதே-ஆரம்பிக்கப்படுகின்றதோ, தத்-அது, தாமஸம்-தாமதம் (என்று), உச்யதே-சொல்லப்படுகிறது. ()

(தா-ம்) கர்மத்தினது முடிவையும், அதனாலுண்டாகும் இலாபநஷ்டங்களையும், பிறர் சிமையையும், தனது ஶக்தியையும் ஆராய்ந்துணராது அவிவேகத்தாற்செய்யத் தொடங்கும் கர்மம் தாமஸ சர்மமெனப்படும். (௨௫)

𑌮𑍁𑌕𑍍𑌤𑌸𑌙𑍍𑌗𑍋𑌽𑌨𑌹𑌂𑌵𑌾𑌦𑍀 𑌧𑍃𑌤𑍍𑌯𑍁𑌤𑍍𑌸𑌾𑌹𑌸𑌮𑌨𑍍𑌵𑌿𑌤𑌃 ।
𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑍋𑌰𑍍𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌕𑌾𑌰𑌃 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ।

(ப-ம்) முக்தஸங்க:-பலத்தில் விருப்பமில்லாதவனும், அநஹம்வாதீ-அஹங்காரமற்று, த்ருதிஉத்ஸாஹஸமந்வித:-தைரியம் உத்ஸாஹத்தோடுகூடியவனாய், ஸித்திஅஸித்யோ:-ஸித்தியிலும் அஸித்தியிலும்; நிர்விகார:-விகாரமற்ற, கர்த்தா-கர்த்தாவானவன், ஸாத்விக:-ஸாத்துவிகன் (என்று), உச்யதே-சொல்லப்படுகிறான். (௨௬)

(தா-ம்.) பலத்தைவிரும்பாமல் தாமஸகர்மமென்னும் அபிமானத்தைவிட்டு தைரியமாய் உத்ஸாஹத்துடன் கூடினவனாய் ஸித்தியானாலும் ஆகாதபோதிலும் மனம் கெட்டவன் ஸாத்விகமெனப்படுவான். (பப௦) ஸித்த்ய ஸித்தயே-கருமபலன் கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும். (௨௬)

𑌰𑌾𑌗𑍀 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌪𑍍𑌰𑍇𑌪𑍍𑌸𑍁𑌰𑍍𑌲𑍁𑌬𑍍𑌧𑍋 𑌹𑌿𑌂𑌸𑌾𑌤𑍍𑌮𑌕𑍋𑌽𑌶𑍁𑌚𑌿𑌃 ।
𑌹𑌰𑍍𑌷𑌶𑍋𑌕𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌃 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌰𑌾𑌜𑌸𑌃 𑌪𑌰𑌿𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌃 ॥ ௨௭ ॥

(ப-ம்.) ராகீ-கீர்த்தியை விரும்புகிறவனும், கர்மபலப்ரேப்ஸு:

கருமப்பயனைக்கோரியவனும், லுப்தஃ - லுப்தனும், ஹிம்ஸாத்மகஃ- ஹிம்ஸைசெய்பவனும், அசுசிஃ - அபரிசுத்தனும், ஹர்ஷசோகாந்விதஃ-ஸந்தோஷதுக்கங்களோடு கூடியவனுமான, கர்தா - கர்த்தா, ராஜஸஃ-ராஜஸனென்று, பரிகீர்த்திதஃ-சொல்லப்பட்டான். (௨௭)

(தா-ம்.) புகழையும், கர்ம பலத்தையும் விரும்பிப் பொருளைச் செலவிட இச்சித்தவனாய் பிறரை ஹிம்சித்து சுத்தமின்றி கர்மசித்தியில் உத்ஸாகத்தையும், இல்லாதபோது வ்யாசத்தையும் அடைந்தவன் இராஜஸகர்மி யெனப்படுவன். (௨௭)

அயுக்தஃ ப்ராக்ருதஃ ஸ்தப்தஃ ஶடோ நைக்ருதிகோऽலஸஃ ।
விஷாதீ தீர்கஸூத்ரீ ச கர்தா தாமஸ உச்யதே ॥ ௨௮ ॥

(ப-ம்) அயுக்தஃ-கர்மங்களுக்குத்தகாதவனும், ப்ராக்ருதஃ - விவேகமற்றவனும், ஸ்தப்தஃ-ஆரம்பஞ்செய்யாதவனும், சடஃ-சடனும், நைக்ருதிகஃ-வஞ்சகனும், அலஸஃ-மந்தனும், விஷாதி - துக்கப்பாராட்டுமவனும், தீர்க்கஸூத்ரீச - தீர்க்கமான வைரமுடையவனுமான, கர்த்தா-கர்த்தா, தாமஸஃ-தாமஸ(னென்று), உச்யதே-சொல்லப்படுகிறான். (௨௮)

(தா-ம்) கர்மத்தைச் செய்வதற்குரியவனாகாதவனும், கல்விபயிற்சியில்லாதவனும், சோம்பலுள்ளவனும், வஞ்சகனும்,பிறர்க்குத்தீங்கை விளையச்செயற்பாலன் கன்மத்திலம்பு பாவித்தவனும், அதிதாமஸமாய்க் கர்மத்தைச் செய்கிறவனும், துக்கப்படுகிற ஸ்வபாவமுடையவனும், பிறருக்குச் சகிக்கத்தகாத தீங்குகளைச்செய்கிறவனுமிருப்பவன் தாமஸகர்மியெனப்படுவான். (௩௦) ஶடஃ ஆபிசாரம். (௨௮)

புத்தேர்பேதம் த்ருதேஶ்சைவ குணதஸ்த்ரிவிதம் ஶ்ருணு ।
ப்ரோச்யமானமஶேஷேண ப்ருதக்த்வேன தனஞ்ஜய ॥ ௨௯ ॥

(ப-ம்.) (ஹே) தநஞ்ஜய-ஓ அர்ச்சுன! அசேஷேண-நிச்சேஷமாய், ப்ருதக்த்வேந-வேறு வேறாய், ப்ரோச்யமாநம்-சொல்லப்படுகிற, குணதஃ-குணங்களுக்குத்தக்கபடி, த்ரிவிதம் - மூன்றுவகையான, புத்தேஃ-புத்தியினுடையவும், த்ருதேஃ சைவ-தைரியத்தினுடையவும், பேதம்-பேதத்தை, ஶ்ருணு-கேள். (௨௯)

(தா-ம்.) ஞானத்திற்கும், தைரியத்திற்குமுள்ள மூன்றுவிதபேதங்களை வேறுவேறாகச் சமக்கிரமமாய் கூறுதும் அதைக்கேள்மின்!

ப்ரவ்ருத்திஞ்ச நிவ்ருத்திஞ்ச கார்யா கார்யே பயாபயே |
பந்தம் மோக்ஷஞ்ச யா வேத்தி புத்திஸ்ஸா பார்த்த ஸாத்விகீ || ௩௰ ||

(ப-ம்) (ஹே) பார்த்த-ஓ அர்ச்சுனு! யாபுத்திஃ எந்தபுத்தி, ப்ர வ்ருத்திம்ச-புண்ணியஸாதனத்தையும், நிவ்ருத்திம்ச - மோக்ஷஸாதனத்தையும், கார்யா கார்யே-காரியகாரியங்களையும், பயாபயே-பயத்தையும் அபயத்தையும், பந்தம்-பந்தத்தையும், மோக்ஷம்ச-மோக்கத்தையும், யா-எது, வேத்தி-தெரிந்துகொள்ளுகிறதோ, ஸா-அந்த புத்தி; ஸாத்விகீ-ஸத்துவகுணஸம்பந்தமானது. (௩௰)

(தா-ம்) பார்த்தா! இம்மையில் க்ஷேம சாதனகர்மமென்னும்பிரவருத்தியையும், மோக்ஷசாதன கர்மமென்னும் நிவ்ருத்தியையும், செயற்பாலனவைகளையும், செய்யத்தகாதவைகளையும், பயத்தையும், இல்லறத்தையும், துறவரச்சிறப்பையு முணர்த்துணரும்மதி ஸாத்விகமதியெனப்படும். (௩௰)

யயா தர்மமதர்மஞ்ச கார்யஞ்சாகார்யமேவச |
அயதாவத்ப்ரஜாநாதி புத்திஸ்ஸா பார்த்த ராஜஸீ || ௩௧ ||

(ப-ம்.) பார்த்த-ஓ குந்திபுத்திர! யயா-எந்தபுத்தினுல், தர்மம்-தருமத்தையும், அதர்மம்ச-அதருமத்தையும், கார்யம்ச-காரியத்தையும், அகார்யம்ஏவச-அகாரியத்தையும், அயதாவத்-உள்ளபடியன்றிக்கே, ப்ரஜாநாதி-அறிந்துகொள்ளுகிருனே, ஸா-அந்த, புத்திஃ-புத்தி, ராஜஸீ-ரஜோகுண ஸம்பந்தமானது. (௩௧)

(தா-ம்) பார்த்தா! எந்தமதியினுல் மானிடர் தர்மா தர்மங்களையும், கார்யா கார்யங்களையும், உண்மையாயறியப்படுகிறதோ; அதே இராஜஸபுத்தியென்க. (௩௧)

அதர்மம் தர்மமிதி யா மந்யதே தமஸாவ்ருதா |
ஸர்வார்த்தாந் விபரீதாம்ஶ்ச புத்திஸ்ஸா பார்த்த தாமஸீ || ௩௨ ||

(ப-ம்.) ஹே பார்த்த-ஓ குந்திபுத்திர! தமஸா-தமஸினுல், வ்ருதா-சூழப்பட்ட, யா-எந்த(புத்தி), அதர்மம்- அதருமத்தை, தர்மம்இதி-தருமமாகவும், ஸர்வார்த்தாந்-எல்லாவஸ்துக்களையும், விபரீதாம்ச-விபரீதமாக, மந்யதே-எண்ணுகிறதோ, ஸாபுத்திஃ-அந்தபுத்தி, தாமஸீ-தமோகுணஸம்பந்தமானது. (௩௨)

(தா-ம்) எந்த புத்தி அஞ்ஞானத்தால் மூடப்பட்டு அதர்மத்தைத்தர்மமாயும், தர்மத்தை அதர்மமாயும், எல்லாவிஷயங்களையும் விபரீதமாயு முணர்கின்றதோ அது தாமஸபுத்தியாம். (௩௨)

𑌧𑍃𑌤𑍍𑌯𑌾 𑌯𑌯𑌾 𑌧𑌾𑌰𑌯𑌤𑍇 𑌮𑌨𑌃𑌪𑍍𑌰𑌾𑌣𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃|
𑌯𑍋𑌗𑍇𑌨𑌾𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌾𑌰𑌿𑌣𑍍𑌯𑌾 𑌧𑍃𑌤𑌿𑌃 𑌸𑌾 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑍀|| ௩௩||

(ப-ம்) ஹேபார்த்த - ஓ குந்திபுத்திர! யோகேந-யோகத்தோடுகூடி, அவ்யபிசாரிண்யா - தப்பாத, யயா-எந்த, த்ருத்யா-தைரியத்தோடுகூடினவன், மந: ப்ராண இந்த்ரியக்ரியா: - மனம் பிராணன் இந்திரியங்களின் ஆகிய இவற்றின் வ்யாபாரங்களை, புருஷ:-புருஷன், தாரயதே-தரிக்கின்றானோ, ஸா-அந்த, த்ருதி: - தைரியமானது, ஸாத்விகீ-ஸத்வகுண சம்பந்தமுள்ளது. (௩௩)

(தா-ம்) பார்த்தா! எந்தைரியத்தினால் மானிடர்மனத்தொழில்களையும், பிராணத்தின்றொழில்களையும், கண்முதலிய ஞானேந்திரியங்களின் றொழில்களையும், நிலைநிறுத்துகின்றானோ அந்தைரியம் ஸாத்விகமாம். (௩௩)

𑌯𑌯𑌾 𑌤𑍁 𑌧𑌰𑍍𑌮𑌕𑌾𑌮𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑍍 𑌧𑍃𑌤𑍍𑌯𑌾 𑌧𑌾𑌰𑌯𑌤𑍇𑌽𑌰𑍍𑌜𑌨 |
𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌗𑍇𑌨 𑌫𑌲𑌾𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑍀 𑌧𑍃𑌤𑌿𑌃 𑌸𑌾 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌰𑌾𑌜𑌸𑍀|| ௩௪||

(ப-ம்.) பார்த்த-குந்திபுத்திரனான, ஹே அர்ச்சுந - ஓ அருச்சுனா! பலாகாங்க்ஷீ-பலனைக்கோரிய, புருஷ: - புருஷன், ப்ரஸங்கேந-அதிகஸங்கத்தோடு, தர்மகாமார்த்தாந் - தருமகாமார்த்தங்களை, யயா-எந்த, த்ருத்யா-தைரியத்தால், தாரயதே-தரிக்கிறானோ, ஸா - அது, ராஜஸீ-ராஜஸ(மென்னப்படும்). (௩௪)

(தா-ம்) அர்ஜ்ஜுனா! எந்தைரியத்தினால் புருடன் பலத்தை விரும்பி அதிக ஆசையுடன் தர்மம் அர்த்தம், காமம், இவைகளை யநுஷ்டிக்கிறானோ, அது இராஜஸதைர்யமாம். (௩௪)

𑌯𑌯𑌾 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌂 𑌭𑌯𑌂 𑌶𑍋𑌕𑌂 𑌵𑌿𑌷𑌾𑌦𑌂 𑌮𑌦𑌮𑍇𑌵 𑌚|
𑌨 𑌵𑌿𑌮𑍁𑌞𑍍𑌚𑌤𑌿 𑌦𑍁𑌰𑍍𑌮𑍇𑌧𑌾 𑌧𑍃𑌤𑌿𑌃 𑌸𑌾 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌤𑌾𑌮𑌸𑍀|| ௩௫||

(ப-ம்.) ஹேபார்த்த-ஓ குந்திபுத்திர! யயா - எந்த, த்ருத்யா-தைரியத்தால், ஸ்வப்நம்-நித்திரியையும், பயம்-பயத்தையும், சோகம்-சோகத்தையும், விஷாதம்-துக்கத்தையும், மதம்ஏவச - மதத்தையும், துர்மேதா:-கெடுமதி, நவிமுஞ்சதி-விடுகிறதில்லையோ, ஸா-அந்த, த்ருதி:-தைரியம், தாமஸீ-தாமஸ(மென்னப்படும்). (௩௫)

(தா-ம்.) அர்ஜ்ஜுனா! எந்தைரியத்தினால் புத்திஹீனன் தூக்கம், பயம், சோகம், விஷாதம், மதம் இவைகளையொழிக்கானோ அது தாமஸதைரியமாம். (௩௫)

ஸுகம்த்விதாநீம் த்ரிவிதம் ஶ்ருணு மே பரதர்ஷப|
அப்யாஸாத்ரமதே யத்ர து:காந்தம் ச நிகச்சதி|| கசு||

(ப-ம்.) ஹேபரதர்ஷப-ஓ பரதச்சிரேஷ்ட! யத்ர-எதில், அப்யா ஸாத்-பழக்கத்தால், ரமதே-ரமிக்கின்ருனோ, து:காந்தம்ச-ஸம்ஸாரி கதுக்கத்தின் முடிவையும், நிகச்சதி-அடைகின்ருனோ, த்ரிவிதம்-மூ ன்றுவகையான, தத்து ஸுகம்-அச்சுகத்தை.இதாநீம்-இப்பொழுது, மே-என்னிடத்தில், ஶ்ருணு-கேள். (கசு)

(தா-ம்.) பாரதா! அப்பியாசத்தால் எதனிடத்தில் திருப்திய டைந்து துக்கநாசத்தைப்பெறுகின்ருனோ அப்படிப்பட்ட சுகமூவ் வகைப்படும். அத்து கிழவருமாறுணர்க. (கசு)

யத்ததக்ரே விஷமிவ பரிணாமே(அ)ம்ருதோபமம்|
தத்ஸுகம் ஸாத்விகம் ப்ரோக்தமாத்மபுத்திப்ரஸாதஜம்|| கஎ||

(ப-ம்) யத்தத்-எந்த அது, அக்ரே-முதலில், விஷம் இவ-விஷ ம்போலவும், பரிணாமே-பரியவஸானத்தில், அம்ருதோபமம்-அமுத ம்போலவுமோ, ஆத்மபுத்தி ப்ரஸாதஜம் - ஆத்ம புத்தியினது பிரஸ ன்னதையாலுண்டான, தத்-அந்த, ஸுகம்-சுகமானது, ஸாத்விகம்- ஸாத்துவிகமென்று, ப்ரோக்தம்-சொல்லப்பட்டது. (கஎ)

(தா-ம்.) எந்த சுகம் யோகாப்பியாஸாரம்பத்தில் விஷம்போல வும், பரிபாசகாலத்தில் அம்ருதம்போலவு மிருக்குமோ, அப்படிப் பட்ட மெஞ்ஞானம் விளங்குவதாலுண்டாகும் சுகம் ஸாத்விகசுக மெனப்படும். (கஎ)

விஷயேந்த்ரியஸம்யோகாத்யத்ததக்ரே(அ)ம்ருதோபமம் |
பரிணாமே விஷமிவ தத்ஸுகம் ராஜஸம் ஸ்ம்ருதம்|| கஅ||

(ப-ம்) யத்தத்-எந்த சுகம், விஷய இந்த்ரிய ஸம்யோகாத்-விஷ யமும் இந்திரியமும் கலப்பதனல், அக்ரே-முதலில், அம்ருதோபம ம்-அமுதம்போலவும், பரிணாமே-பரியவஸானத்தில், விஷம்இவ - வி ஷம்போலவுமோ, தத்-அது, ராஜஸம்-ராஜஸமான, ஸுகம்-சுகம்(எ ன்று), ஸம்ருதம்-எண்ணப்பட்டது. (கஅ)

(தா-ம்) எந்த சுகம் பூர்வத்தில் விஷயாதிகளோடு இந்திரியங்க ள்சம்பந்தப்படும்போது அம்ருதம்போலவும், பரிபக்குவகாலத்தில்

விஷம்போலவு மிருக்கிறதோ, அந்த சுகம் இராஜஸமென்றுரைக்கப்படும். (ந௦) அக்ரே-அநுபவகாலத்தில். (௬௮)

யதக்ரே சாநுபந்தே ச ஸுகம் மோஹநமாத்மந:|
நித்ராலஸ்யப்ரமாதோத்தம் தத்தாமஸமுதாஹ்ருதம்|| ௬௯||

(ப-ம்.) யத்ஸுகம்-எந்தஸுகம், அக்ரேச-முதலிலும், அநுபந்தேச-பரிணாமத்திலும், ஆத்மந:-ஆத்மாவுக்கு, மோஹநம்-மோஹத்தைச்செய்யுமோ, நித்ராலஸ்ய ப்ரமாதோத்தம்-நித்திரை ஆலஸ்யப்பிரமாதங்களாலுண்டான, தத்-அந்தசுகம், தாமஸம்-தாமஸம் (என்று), உதாஹ்ருதம்-சொல்லப்பட்டது. (௬௯)

(தா-ம்.) எந்தசுகம் பிரதமத்திலும், பரிபாககாலத்திலும் தனக்கு அஜ்ஞானத்தை உண்டுபண்ணுகிறதாய் நித்திரை ஆலசியம் அஜாக்கிரதை முதலியவைகளோடு ஸம்பந்தப்படுகிறதோ, அது தாமஸ ஸுகமெனப்படும். (௬௯)

ந ததஸ்தி ப்ருதிவ்யாம் வா திவி தேவேஷு வா புந:|
ஸத்த்வம் ப்ரக்ருதிஜைர்முக்தம் யதேபி: ஸ்யாத்த்ரிபிர்குணை:||

(ப-ம்.) யத்-எது, ப்ரக்ருதிஜை:-பிரகிருதியிலுண்டான, ஏபி:-இந்த, த்ரிபி:-மூன்று, குணை:-குணங்களால், முக்தம் - விடப்பட்டதோ, தத்-அந்த, ஸத்வம்-ப்ராணி, ப்ருதிவ்யாம்வா - பூமியிலும், நாஸ்தி-இல்லை, திவி-சுவர்க்கத்திலும், தேவேஷுவா புந:-தேவர்களிலும், நாஸ்தி-இல்லை. (௪௰)

(தா-ம்) மானிடரிடத்திலும், தேவர்களிடத்திலும் பிரகிருதிஸம்பந்தமான ஸத்துவரஜஸ் தமஸ்ஸென்னும் மூக்குணங்களால் விடப்பட்டப் பிராணிகளெதுவுமில்லை. (௪௰)

ப்ராஹ்மணக்ஷத்ரியவிஶாம் ஶூத்ராணாம் ச பரந்தப|
கர்மாணி ப்ரவிபக்தாநி ஸ்வபாவப்ரபவைர்குணை:|| ௪க||

(ப-ம்.) ஹே பரந்தப-ஓ பகைவரைத்தவிக்கச்செய்வோய்! ப்ராம்ஹணக்ஷத்ரியவிசாம்-பிராம்மணர் க்ஷத்திரியர் வைச்சியர்களுடையவும், சூத்ராணாம்ச-சூத்திரர்களுடையவும், கர்மாணி-கருமங்கள், ஸ்வபாவப்ரபவை:-சுபாவத்திலுண்டான, குணை:-குணங்களால், ப்ரவிபக்தாநி-பிரிக்கப்பட்டன. (௪க)

(தா-ம்.) பரந்தப! ப்ரம்மக்ஷத்திரிய வைசிய சூத்திரர்களுக்கு ஸ்வபாவத்தினலேயே (ப்ராம்மணாதி ஜன்மங்களுக்கு ஏதுவானத த்தம் ஜன்மாந்திரசர்மத்தினுல் ஏற்படுத்தப்பட்ட ஸத்துவராஜஸ்த மோகுணங்களினலேயே) கர்மங்கள் (ஆசாரங்கள்) (சாஸ்திரங்களால் விதிக்கப்பட்டன.) (௪௧)

𑌶𑌮𑍋 𑌦𑌮𑌸𑍍𑌤𑌪𑌃 𑌶𑍌𑌚𑌂 𑌕𑍍𑌷𑌾𑌨𑍍𑌤𑌿𑌰𑌾𑌰𑍍𑌜𑌵𑌮𑍇𑌵 𑌚 |
𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌾𑌸𑍍𑌤𑌿𑌕𑍍𑌯𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌕𑌰𑍍𑌮 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌜𑌮𑍍 || ௪௨

(ப-ம்.) சமஃ-சமமும், தமஃ-தமமும், தபஃ-தவமும், சௌசம்-பரிசுத்தியும், க்ஷாந்திஃ-பொறுமையும், ஆர்ஜவம் ஏவச - ஆர்ஜவமும், ஜ்ஞாநம்-ஞானமும், விஜ்ஞாநம்-விஜ்ஞானமும், ஆஸ்திக்யம்-ஆஸ்திக்கியமும், ஸ்வபாவஜம்-சுபாவத்தாலுண்டான, ப்ராம்ஹம்- பிராம்மணரைச்சேர்ந்த, கர்ம-வியாபாரம். (௪௨)

(தா-ம்.) சமம்; (இந்திரியநிக்கிரகம்) தமம் (மநோநிக்கிரஹம்) தவம், சுத்தி, பொறுமை, உண்மை, ஞானம், விக்ஞானம், (பரமாத்மாவினது முக்கியகுணங்களையறிதல்) வேதமார்க்கத்தைச் சத்தியமென்று நம்புதல் முதலியவை ப்ராம்மணர்களுக்கு ஜன்மஸித்தமானகர்மம். (௪௨)

𑌶𑍌𑌰𑍍𑌯𑌂 𑌤𑍇𑌜𑍋 𑌧𑍃𑌤𑌿𑌰𑍍𑌦𑌾𑌕𑍍𑌷𑍍𑌯𑌂 𑌯𑍁𑌦𑍍𑌧𑍇 𑌚𑌾𑌪𑍍𑌯𑌪𑌲𑌾𑌯𑌨𑌮𑍍 |
𑌦𑌾𑌨𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑌭𑌾𑌵𑌶𑍍𑌚 𑌕𑍍𑌷𑌾𑌤𑍍𑌰𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌜𑌮𑍍 || ௪௩

(ப-ம்) சௌர்யம்-சவுரியமும், தேஜஃ-தேஜஸ்ஸும், த்ருதிஃ-தைரியமும், தாக்ஷ்யம்-ஸாமர்த்தியமும், யுத்தே-யுத்தத்தில், அபலாயநம்ச-திரும்பி ஓடாமையும், தாநம்-தாநமும், ஈச்வரபாவஃச-ஆளுகையும், ஸ்வபாவஜம்-சுபாவத்திலுண்டான, க்ஷாத்ரம்-க்ஷத்ரியர்களுடைய, கர்ம-வியாபாரம். (௪௩)

(தா-ம்) சௌரியம் (அதாவதுயுத்தத்தில் நிர்ப்பயமாய் பிரவேசிக்கும்தன்மைதேஜஸ்ஸு தைரியம்) அதாவது ஆரம்பித்தகாரியத்திற்கு விக்கினம் வந்தாற்கூடஸாதித்தல்) தக்ஷதா (எல்லா வியாபாரங்களையும் ஸமர்த்தித்தல்) யுத்தத்தில் முதுகுகாட்டி யோடாமலிருத்தல், ஈகை, ப்ரஜாபரிபாலன ஸாமர்த்தியம், இவைகள் க்ஷத்திரியர்களுக்கு இயர்க்கையானகர்மமாம். (௪௩)

க்ருஷிகோரக்ஷவாணிஜ்யம் வைஶ்யகர்ம ஸ்வபாவஜம்।
பரிசர்யாத்மகம் கர்ம ஶூத்ரஸ்யாபி ஸ்வபாவஜம்॥ ௪௪॥

(ப-ம்) க்ருஷிகோரக்ஷ வாணிஜ்யம்-உழுதலும் மாடுகளைக்காத்தலும் கிரயவிக்கிரயம் செய்தலும், ஸ்வபாவஜம்-சுபாவத்திலுண்டான, வைச்யம்-வைச்சியருக்குரிய, கர்ம-வியாபாரம், பரிசர்யாத்மகம்-பணிவிடைரூபமான, கர்ம-கர்மமானது, சூத்ரஸ்யாபி - சூத்திரனுக்கு, ஸ்வபாவஜம்-சுபாவத்தாலுண்டானது. (௪௪)

(தா-ம்) பயிரிடுதல், கோக்களை இரட்சித்தல், வர்த்தகஞ்செய்தல், இவைவைசியர்களின் கர்மமாம். சூத்திரர்களுக்கு மேற்கூறிய மூன்று ஆசிரமிகளுக்கும் உபசாரஞ்செய்தல(அதாவதுபணிகள்)முதலியவைகள் இயாக்கையானகர்மமாம். (௪௪)

ஸ்வே ஸ்வே கர்மண்யபிரத: ஸம்ஸித்திம் லபதே நர:।
ஸ்வகர்மநிரத: ஸித்திம் யதா விந்ததி தச்ச்ருணு॥ ௪௫॥

(ப-ம்) ஸ்வேஸ்வே-தன்தனது, கர்மணி-வியாபாரத்தில்; அபிரத:-ஆஸக்தியுடைய, நர:-மனிதன், ஸம்ஸித்திம் - நல்லஸித்தியை, லபதே-அடைகிறான்; ஸ்வகர்ம நிரத:- தன் வியாபாரத்தில் ஆஸக்தனானவன், ஸித்திம்-ஸித்தியை, யதா-எப்படி, விந்ததி - அடைகிறானோ, தம்-அதை, ஶ்ருணு-கேள். (௪௫)

(தா-ம்) மானிடர்தத்தம் ஜாதிக்குரிய கர்மங்களில் ஆஸக்தியுடையவர்களாக விருப்பார்களேயானால் பரகதியைப்பெறுவார்கள். தம்கர்மத்தில் ஆஸத்தியுடையோன் பரகதியைப்பெறு முறைமைகளைக்கேள்மின்? (௪௫)

யத: ப்ரவ்ருத்திர்பூதானாம் யேன ஸர்வமிதம் ததம்।
ஸ்வகர்மணா தமப்யர்ச்ய ஸித்திம் விந்ததி மானவ:॥ ௪௬॥

(ப-ம்.) பூதாநாம்-பூதங்களின், ப்ரவ்ருத்தி:-பிரவர்த்தி, யத:-எவனிடத்தினின்றுமோ, இதம் ஸர்வம்-இதெல்லாம், யேந-எவனால், ததம்-வியாபிக்கப்பட்டதோ, தம் - அந்த பரப்ரஹ்மத்தை; ஸ்வகர்மணா-தன்வியாபாரத்தால், அப்யர்ச்ய-பூஜித்து, மாநவ: - மனிதன், ஸித்திம்-ஸித்தியை, விந்ததி-அடைகிறான். (௪௬)

(தா-ம்.) எவனிடத்தில் வஸ்துக்கள்தோன்றினவோ, எவனால் உலகமெல்லாம் வியாப்தமாகவிருக்கின்றதோ, அத்தகையபரமேஶ்

வானை தம் கர்மத்தினால் பூஜித்து மானிடர் பரகதியைப் பெறுகி ருர்கள். (௫0) ப்ரவ்ருத்தி:-உற்பத்தி அல்லது சேஷ்டை. (௪௬)

ஶ்ரேயாந்ஸ்வதர்மோ விகுணஃ பரதர்மாத்ஸ்வநுஷ்டிதாத் |
ஸ்வபாவநியதம் கர்ம குர்வந்நாப்நோதி கில்பிஷம் || ௪௭ ||

(ப-ம்.) விகுண:-குணமற்ற, ஸ்வதர்ம:-தன்தருமம், ஸ்வநுஷ்டிதாத்-நன்ருய் ஆசரிக்கப்பட்ட, பரதர்மாத் - பிறருடைய தருமத்தை விட, ஶ்ரேயாந்-மேலானது; ஸ்வபாவநியதம்-சுபாவத்தால் நியமிக்கப்பட்ட, கர்ம-வியாபாரத்தை, குர்வந்-செய்துகொண்டு, கில்பிஷம் ஸம்ஸாரத்தை, ந ஆப்நோதி-அடையமாட்டான். (௪௭)

(தா-ம்.) நன்கநுஷ்டிக்கப்பட்ட அந்நியதர்மங்களைவிட தம்தர்மம் ஸம்பூர்ணகுண மில்லாவிடினும் மிக்குச்சிறப்புடைத்தானதாம என்பதால் தத்தம் ஜாதிக்குரியகர்மத்தை இடைவருதநுஷ்டிப்போன் உத்தமகதியடைவானென்றும், தம்ஜாதிக்குரியகர்மத்தைக் கைவிடுத்துப்புறச்சமயிகட் கன்மத்தைக்கைப்பற்றி நிற்போன் நிரயத்துன்பத்திற்கிலக்காவானென்றும் பொருளபடுகிறது. (௪௭)

ஸஹஜம் கர்ம கௌந்தேய ஸதோஷமபி ந த்யஜேத் |
ஸர்வாரம்பா ஹி தோஷேண தூமேநாக்நிரிவாவ்ருதாஃ ||

(ப-ம்.) ஹே கௌந்தேய-ஓ குந்திபுத்திர! ஸஹஜம் - சுபாவத்தாலுண்டான. கர்ம-கருமத்தை, ஸதோஷம்அபி - தோஷயுக்தமாயினும், ந த்யஜேத்-விடலாகாது, அக்நி:-நெருப்பு, தூமேந இவ - தீயினலேபோல, ஸர்வாரம்பா:-எல்லாக்கருமங்களும், தோஷேண-தோஷத்தால், ஆவ்ருதா:-மூடப்பட்டவையன்ருே ? (௪௮)

(தா-ம்) கௌந்தேயா ! தம் ஜாதிக்கியர்க்கையாயமைந்த கர்மங்கள் தோஷயுக்தமாயிருப்பினும் கைவிடக்கூடாது. எல்லாப்பிரயத்னங்களும் புகையினுல் மறைக்கப்பட்ட அக்கினிபோல் தோஷங்களால் மறைக்கப்பட்டிருக்கின்றன. (௪௮)

அஸக்தபுத்திஃ ஸர்வத்ர ஜிதாத்மா விகதஸ்ப்ருஹஃ |
நைஷ்கர்ம்யஸித்திம் பரமாம் ஸந்ந்யாஸேநாதிகச்சதி || ௪௯ ||

(ப-ம்.) ஸர்வத்ர-எல்லாவற்றிலும், அஸக்தபுத்தி:-பற்றில்லாத புத்தியுடையவன், ஜித ஆத்மா-ஜயிக்கப்பட்டமனமுடையனும், வி

கதஸ்ப்ருஹ:-ஆசையற்றவனுமானவன், ஸங்யாஸேந - ஸன்னியாஸத்தால், பரமாம் - மேலான, நைஷ்கர்ம்ய ஸித்திம் - தியானநிட்டையை, அதிகச்சதி-அடைகிறான். (௪௯)

(தா-ம்.) எந்தவிஷயத்திலும் ஆஸக்தியில்லாதபுத்தியுடன் மனதைஜெயித்து நிராசையுடையவனாய் இந்தஸந்யாஸத்தோடு கர்மம் செய்கிறவன் சிறந்தத்தியான யோகமென்னும் நைஷ்கர்மஸித்தியை அடைவான். (௪௯)

𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍋 𑌯𑌥𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌥𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌨𑌿𑌬𑍋𑌧 𑌮𑍇 |
𑌸𑌮𑌾𑌸𑍇𑌨𑍈𑌵 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌯𑌾 𑌪𑌰𑌾 || ௫௦

(ப-ம்) ஹே கௌந்தேய - ஓ குந்திபுத்திர! ஸித்திம் - ஸித்தியை, ப்ராப்த:-அடைந்தவனாய், ப்ரஹ்ம-பிரமத்தை, யதா - எப்படி, ஆப்நோதி-அடைகிறானோ, ததா-அப்படி, மே-என்னிடத்தினின்றும் ஸமாஸேநைவ-சுருக்கமாயே, நிபோத-கேள், யா-எது, ஜ்ஞாநஸ்ய-ஞானத்தினது, பரா-மேலான, நிஷ்டா-ப்ராப்யமோ. (௫௰)

(தா-ம்) கௌந்தேயா! சித்தியையடைந்தவனுக்கு தியானரூபமான ஞானத்தாற்பெறப்படும் ப்ரம்மப்ராப்தியைச் சுருக்கமாகக் கேள்மின். (௫௰)

𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌯𑌾 𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌧𑍃𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌨𑌿𑌯𑌮𑍍𑌯 𑌚 |
𑌶𑌬𑍍𑌦𑌾𑌦𑍀𑌨𑍍𑌵𑌿𑌷𑌯𑌾𑌂𑌸𑍍𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌰𑌾𑌗𑌦𑍍𑌵𑍇𑌷𑍌 𑌵𑍍𑌯𑍁𑌦𑌸𑍍𑌯 𑌚 || ௫௧

𑌵𑌿𑌵𑌿𑌕𑍍𑌤𑌸𑍇𑌵𑍀 𑌲𑌘𑍍𑌵𑌾𑌶𑍀 𑌯𑌤𑌵𑌾𑌕𑍍𑌕𑌾𑌯𑌮𑌾𑌨𑌸𑌃 |
𑌧𑍍𑌯𑌾𑌨𑌯𑍋𑌗𑌪𑌰𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌂 𑌸𑌮𑍁𑌪𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌃 ||

𑌅𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑌂 𑌬𑌲𑌂 𑌦𑌰𑍍𑌪𑌂 𑌕𑌾𑌮𑌂 𑌕𑍍𑌰𑍋𑌧𑌂 𑌪𑌰𑌿𑌗𑍍𑌰𑌹𑌮𑍍 |
𑌵𑌿𑌮𑍁𑌚𑍍𑌯 𑌨𑌿𑌰𑍍𑌮𑌮𑌃 𑌶𑌾𑌨𑍍𑌤𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌭𑍂𑌯𑌾𑌯 𑌕𑌲𑍍𑌪𑌤𑍇 || ௫௩

(ப-ம்) விசுத்தயா-பரிசுத்தமான, புத்த்யா-புத்தியோடு, யுக்த:-கூடியவனும், த்ருத்யா-தைரியத்தாலே, ஆத்மாநம்-மனதை, நியம்ய ச-அடக்கி, சப்தாதீந்-சத்தம்முதலிய, விஷயாந்-விஷயங்களை, த்யக்த்வா-விட்டு, ராகத்வேஷௌ-இராகத்துவேஷங்களை, வ்யுதஸ்ய ச-பரிஹரித்திருப்பவனும், விவிக்தஸேவீ-நிர்ஜன தேசவாஸியாய், லக்வாசீ-மித ஆஹாரியாய், யதவாக்காயமாநஸ: - அடக்கப்பட்ட வாக்குகாயம் மனம் இவைகளையுடையனாய், நித்யம்-எப்போதும், த்யாநயோகபர:-தியானயோகத்தில் ஊன்றி, வைராக்யம் - வைராக்கியத்

தை, ஸம்ருபாஸ்ரிதஃ-அடைந்தவனாய், அஹங்காரம்-அஹங்காரத்தை யும், பலம்-பெலத்தையும், தர்பம் கொழுப்பையும், காமம் - காமத்தையும், க்ரோதம்-கோவத்தையும், பரிக்ரஹம்ச-பிடிப்பையும், விமுச்ய-விட்டு நிர்மமஃ-மமகாரமற்று, சாந்தஃ-சாந்தனாயிருப்பவன், ப்ரம்ஹபூயாய-ஸ்வஸ்வரூபத்திலிருக்கிற ஆத்மாவை யநுபவிப்பற்கு, கல்பதே-தக்கவனாகிறான். (௫௧-௫௨-௫௩)

(தா-ம்) பரிசுத்தமான ஆத்மஞானத்துடன் தைரியமாய் மனதைக்கட்டி சப்தாதி விஷயங்களை நீக்கி இராகத்துவேஷங்களையொழித்து எக்காலும் நிஜப்பிரவேசத்தை யடைந்து ஆசாரம் அற்பமாயுட்கொண்டு மனம், வாக்கு, காயம் இதுகளை தியானத்திலநுகூலமாகச் செய்துக்கொண்டு தியானயோகத்தையே முக்கியமாய் அநுஷ்டித்து நித்திய வைராக்கிய சீலனாய் அகங்காரத்தையும், பலத்தையும், கெர்வத்தையும், காமத்தையும், குரோதத்தையும் ஸம்பந்தத்தையு மொழித்து, மமதையைவிட்டு சாந்தனாய் தியானயோகம் செய்கிறவன் ப்ரம்மமாவற்குரியவனாகிறான். (ஸ௦) விசுத்த்யா - கபடமற்ற. (௫௧-௫௨-௫௩)

ப்ரஹ்மபூதஃ ப்ரஸந்நாத்மா நஸோசதி நகாங்க்ஷதி|
ஸமஃ ஸர்வேஷு பூதேஷு மத்பக்திம் லபதே பராம்|| ௫௪||

(ப-ம்) ப்ரம்ஹபூதஃ- அபரிச்சின்நஜ்ஞாநமே ஆகாரமாயுற்றதாய்பகவானுக்கு சேஷபூதனாவதே ஸ்வபாவமாயுள்ள ஆத்மஸ்வரூபம் தெரிந்தவன், ப்ரஸந்நஆத்மா-கலக்கமற்ற ஆத்மஸ்வரூபமுறுதலின், நசோசதி-சோகிக்கிறதில்லை, நகாங்க்ஷதி-அபேக்ஷிக்கிறதில்லை, ஸர்வேஷு-ஸகலமான, பூதேஷு-பூதங்களிலும், ஸமஃ - ஸமமாய், பராம்-மேலான, மத்பக்திம் - எனபக்தியை, லபதே-அடைகிறான்.

(தா-ம்) அப்படி சுத்தாத்ம ஸ்வரூபத்தையடைந்தவன் கர்மபந்தமில்லாத ஆத்மாவையுடையவனாய் துக்கிக்காமலும், ஒன்றையும் விரும்பாதவனாயும், எல்லாவஸ்துக்களினும் சமமாகவுமிருப்பான். அப்படிப்பட்டவனுக்கு என்னிடத்திற் பரமபக்தியுண்டாகும். (௫௪)

பக்த்யா மாமபிஜாநாதி யாவாந்யஸ்சாஸ்மி தத்வதஃ|
ததோ மாம் தத்வதோ ஜ்ஞாத்வா விஸதே ததநந்தரம்|| ௫௫||

(ப-ம்) அஹம்-நான், யஃ-எவனோ, யாவாந்-எவ்வளவாக, அஸ்மி-ஆகிறேனோ, (தம்மாம்)-அப்படிப்பட்ட என்னை, பக்த்யா-பக்தியி

வாயானால், விநங்க்ஷ்யஸி-கெட்டுப்போவாய். (௫அ)

(தா-ம்) என்னிடத்தில் சித்தமுண்டாகி என் அனுக்கிரகத்தா ல்எல்லா ஸம்ஸாரதுக்கங்களையும் தாண்டுவாய். நீ அகங்காரத்தால் என்மொழிகளைக் கேளாமற்போனால் நசித்துப்போவாய். (௫அ)

யத³ஹங்காரமாஶ்ரித்ய ந யோத்ஸ்ய இதி மந்யஸே |

மித்²யைஷ வ்யவஸாயஸ்தே ப்ரக்ருதிஸ்த்வாம் நியோக்ஷ்யதி || ௫௯

(ப-ம்.) அஹங்காரம்-அஹங்காரத்தை, ஆஸ்ரித்ய-அடைந்து, நயோத்ஸ்யே-யுத்தம்செய்யேன், இதி-என்று, மந்யஸே யதி-எண்ணு வாயானால், ஏஷஃ-இந்த, தே-உன்னுடைய, வ்யவஸாயஃ-நிச்சயமும் மித்யா-அஸத்ய(மாம்)ப்ரக்ருதிஃ-பிரகிருதி, த்வாம் - உன்னை, நியோ க்ஷ்யதி-ஏவப்போகின்றது. (௫௯)

(தா-ம்) அகங்காரத்தை ஆசிரயித்து யுத்தம்செய்ய மாட்டே னென்று நினைப்பாயேயானால் இந்த உன்னெண்ணம் அபத்தமேயாம். பிரகிருதியே உன்னையுத்தத்திற்கு நியமிக்கும். (௫௯)

ஸ்வபா⁴வஜேந கௌந்தேய நிப³த்³த⁴ஃ ஸ்வேந கர்மணா |

கர்தும் நேச்ச²ஸி யந்மோஹாத்கரிஷ்யஸ்யவஶோऽபி தத் ||

(ப-ம்) (ஹே) கௌந்தேய-ஓ குந்திபுத்திர! யத் - எதை, மோ ஹாத்-மோகத்தால், கர்தும்-செய்ய, நேச்சஸி - விரும்புகில்லையோ, தத்அபி-அதைக்கூட, ஸ்வபாவஜேந-சுபாவத்தாலுண்டான, ஸ்வே ந-தனது, கர்மணா-கருமத்தால், நிபத்தஃ - கட்டப்பட்டவனாய், அவ ஶஃ-பரவசனாய்க்கொண்டு, கரிஷ்யஸி-செய்வாய். (௬௰)

(தா-ம்) கௌந்தேயா! க்ஷத்திரியர்கட்கு ஸ்வபாவஸித்தியை சௌரியகர்மத்தால் கட்டப்பட்ட நீ அஞ்ஞானத்தால் இப்பொழு துசெய்தற்கு இச்சிக்காமல் விஷயத்திற்குக்கூட ஸ்வாதீனப்படாம ல்செய்வாய். (௬௰)

ஈஶ்வரஃ ஸர்வபூ⁴தாநாம் ஹ்ருத்³தே³ஶேऽர்ஜுந திஷ்ட²தி |

ப்⁴ராமயந்ஸர்வபூ⁴தாநி யந்த்ராரூடா⁴நி மாயயா || ௬௧ ||

(ப-ம்) (ஹே) அர்ஜுந-ஓ அர்ச்சுனா! ஈச்வரஃ-ஈச்சுவரன், யந் த்ரஆரூடாநி-யந்திரத்தில் ஏறிய, ஸர்வ பூதாநி-ஸகல பூதங்களையும், மாயயா-பிரகிருதியைக்கொண்டு, ப்ராமயந் - சுழற்றிக்கொண்டு, ஸர் வபூதாநாம்-ஸகலப்பிராணிகளுடைய, ஹ்ருத்தேசே-இருதயதேசத் திலும், திஷ்டதி-இருக்கிறான். (௬௧)

(தா-ம்) அர்ஜுனா! ஸர்வேசுவரன் ஸர்வபூதங்களுடைய சரீர ங்களையே யந்திரங்களிலேற்றி தனதுமாயையினால், சுழலும்படிச் செய்து ஸர்வபூதங்களையுடைய இருதயத்தில்வீற்றிருக்கிறார். (௬௧)

தமேவ ஶரணம் கச்ச ஸர்வபாவேந பாரத।
தத்ப்ரஸாதாத் பராம் ஶாந்திம் ஸ்தாநம் ப்ராப்ஸ்யஸி ஶாஶ்வதம்॥

(ப-ம்) ஹேபாரத-ஓ பாரத, ஸர்வபாவேந-ஸர்வப்பிரகாரத்தாலும், தம்ஏவ-அவனேயே, சரணம்-சரணமாக, கச்ச-அடை; பராம்-மேலான, சாந்திம்-சாந்தியையும், சாச்வதம்-நித்தியமான, ஸ்தாநம்ச-ஸ்தானத்தையும், தத்ப்ரஸாதாத்-அவனருளால், ப்ராப்ஸ்யஸி அடைவாய். (௬௨)

(தா-ம்) அர்ஜுனா! எல்லாவிதத்திலும் அவரையேசரணமென்றடைந்துய்யுவாயாக. அவரது திருவருளால் மேன்மையானசாந்தியென்னும் கர்மநிவ்ருத்தியையும், சாஶ்வதமானபரமபதத்தையும் பெறுவாய். (௬௨)

இதி தே ஜ்ஞாநமாக்யாதம் குஹ்யாத்குஹ்யதரம் மயா।
விம்ருஶ்யைதத் அஶேஷேண யதேச்சஸி ததா குரு॥ ௬௩॥

இதி-இப்படி, மயா-என்னால், குஹ்யாத்-ரஹஸ்யத்திலும், குஹ்யதரம்-மிகக்கோப்யமான, ஜ்ஞாநம்-ஞானம், தே-உனக்கு, ஆக்யாதம்-சொல்லப்பட்டது; ஏதத்-இதை, அசேஷேண-நிச்சேஷமாய், விம்ருச்ய-பரியாலோசித்து, யதா-எப்படி; இச்சஸி-கோருகிறாயோ, ததா-அப்படி, குரு-செய். (௬௩)

(தா-ம்.) உனக்கு இரகசியங்களைவிட மேலான இரகசியமான கர்மயோக, ஞானயோக, பக்தியோகங்களுடைய ஸ்வரூபஞானம் என்னால் இங்ஙனம் கூறப்பட்டன. இவைகளைமுற்றுணர்ந்தபின் உன்னிஷ்டப்படி நடந்துகொள். (௬௩)

ஸர்வகுஹ்யதமம் பூய: ஶ்ருணு மே பரமம் வச:।
இஷ்டோऽஸி மே த்ருடமிதி ததோ வக்ஷ்யாமி தே ஹிதம்॥ ௬௪॥

(ப-ம்) பூய:-மறுபடியும், ஸர்வகுஹ்யதமம்-எல்லாவற்றிலும் மேலானரஹஸ்யமாய், பரமம்-சிரேஷ்டமான, மே-எனது, வச:-வாக்கியத்தை, ஶ்ருணு-கேள்; த்வம்-நீ, மே-எனக்கு, த்ருடம்-மிகுதியும், இஷ்ட:அஸி-இஷ்டன் ஆகிறாய், இதி தத:-என்பதனால், தே-உனக்கு, ஹிதம்-இதத்தை, வக்ஷ்யாமி-சொல்லுகிறேன். (௬௪)

(தா-ம்) இரகசியங்களுக்கெல்லாம் இரகசியமாயும், பக்தியோகவிஷயமாயும், எல்லாவற்றிலும் மேம்பட்டதாயுமுள்ள சிற்சிலமொழிகளைக்கேள்மின்! நீ எனக்கிஷ்டனென்றெண்ணி அவைகளை உன் நன்மையுமபொருட்டுச் சொல்லுகிறேன். (௬௪)

மந்மநா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு।

மாமேவைஷ்யஸி ஸத்யம் தே ப்ரதிஜாநே ப்ரியோऽஸி மே ||

(ப-ம்) மந்மநா:-என்னிடத்தில் மனமுடையனாய், மத்பக்தஃ-என்னிடத்தில் பக்தியுடையனாய், மத்யாஜீ - என்னையாஜிப்பவனாய் பவ-ஆகு; மாம்-என்னை, நமஸ்குரு-நமஸ்கரி; மாம் ஏவ - என்னை( ஏஷ்யஸி-அடைவாய், தே-உனக்கு, ஸத்யம் - ஸத்தியமாய் ப்ரதிஜாநே-பிரதிக்ஞைபண்ணுகிறேன், மே-எனக்கு, ப்ரிய:அஸி - பிரிய கிறாய். (௬

(தா-ம்.) என்னிடத்திலே திடமனதுடையவனாயும், பக்திய ளனாயுமிருப்பாயாக. என்னை பூஜிக்கக்கடவாய் என்னை வந்தன செய். என்னை ஆசிரயித்திரு. இது சத்தியமென்றுபிரதிக்ஞை செய்கிறேன். நீ எனக்கிஷ்டன். (௬

ஸர்வத⁴ர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ |
அஹம் த்வா ஸர்வபாபேப்⁴யோ மோக்ஷயிஷ்யாமி மா ஶுச: ||

(ப-ம்) ஸர்வதர்மாந்-எல்லாத்தருமங்களையும், பரித்யஜ்ய-விட்( ஏகம்-ஒருவனை, மாம்-என்னை, சரணம்-சரணமாக, வ்ரஜ-அடை அஹம்-நான், த்வா-உன்னை, ஸர்வபாபேப்ய: - எல்லாப்பாவங்க ளின்றும், மோக்ஷயிஷ்யாமி-விடுவிக்கிறேன்; மாசுச: - துக்கிக்க( ண்டாம். (௬

(தா-ம்) தர்மங்களையெல்லாம். (கர்மயோகம் ஞானயோகம்ப( தியோகம் இவைகளையெல்லாம்) விட்டுவிட்டு (என் ஆராதனையுண்ட வசற்கு அத்யந்தப்ரீதியோடு அதிகாரத்திற்கேற்றபடி யநுஷ்டித்து( கொண்டே யான் முன் கூறியபலத்யாகம், கர்மத்யாகம், கர்த்ருத்வ யாகமுதலியவைகளைச் செய்து) என்னையொருவனையே சரணமாக ஆ்ரயிப்பாயாக. (கர்த்தாகவும், ஆராதிக்கத்தக்கவனாயும், பலமா ம், உபாயமாகவும், அநுஸந்தானஞ்செய்) இப்படி செய்கிறஉந்தனை யான் உபாயங்களெல்லாவற்றிலிருந்தும் (என்னைச்சேருவதற்குரு ரிகளாய் வெகுகாலமாய் ஸம்பாதிக்கப்பட்ட செய்யத்தகாததை செய்தல், செய்யவேண்டியதை விடுதல் முதலிய அளவிறந்தபாவ களெல்லாவற்றிலிருந்தும்) விடுவிப்பேன் சிந்திக்காதிரு. அப்படிக் ல்லாவிடில்; தர்மங்களையெல்லாம் (பக்தியோகாரம்பத்திற்கு வைரி ளான ப்ராசீன ஸஞ்சிதப்ராப்தங்களையும், அநேகவிதங்களான ( பராசிகளையும், பரிகரிப்பதற்கு யோக்கியங்களான க்ருச்ரசாந்த்ர யணாதி ப்ராயச்சித்தகர்மங்களை) நீக்கிவிடடு (அதாவது சிலகால ஜீவித்திருக்கிறவுனக்கு அவைகளை யனுஷ்டிப்பதற்கு அஸாத்தி( மாதலால் பக்தியோகாரம்பம் ஸித்திப்பதற்கு அவைகளை ஆச்ரயி( காமலொழித்துவிட்டு) என்னை யொருவனையே(என்பதால் தயாப பூரணனும் ஸர்வலோக சரண்யனும், ஆச்ரிதபரிபாலனனுமிரு

க்கிற என்னை) சரணமென்றடையாயாக யானுன்னைபாவங்களெ லலாவற்றி லிருந்தும் விடச்செய்கிறேன் விசனப்படாதே. (௬௬)

இதம் தே நாதபஸ்காய நாபக்தாய கதாசந |
ந சாஶுஶ்ரூஷவே வாச்யம் ந ச மாம் யோ(அ)ப்யஸூயதி || ௬௭ ||

(ப-ம்.) தே-உனக்கு (சொன்ன), இதம்-இது, அதபஸ்காய-தவமற்றவனுக்கு-வாச்யம்-சொல்லத்தக்கதன்று; அபக்தாய-பக்தியில்லாதவனுக்கு, கதாசந-ஒருக்காலும், ந-(சொல்லத்) தகாது; அசுச்ரூஷவே-சுச்ரூஷை இல்லாதவனுக்கு, ந ச (சொல்லத்) தகாது; யஃ-எவன், மாம்-என்னை (பழித்து), அப்யஸூயதி-அஸூயைப்படுகிறானோ, (தஸ்மை)-அவனுக்கும், ந-(சொல்ல) லாகாது. (௬௭)

(தா-ம்.) இந்த பரம இரகசியத்தை தவமில்லாதவனுக்கும், பக்தியில்லாதவனுக்கும் சேவையில் விருப்பமில்லாதவனுக்கும், என்னைப்புறங்கூறுபவனுக்கும் நீ ஒருகாலும் சொல்லாதே. (௬௭)

ய இமம் பரமம் குஹ்யம் மத்பக்தேஷ்வபிதாஸ்யதி |
பக்திம் மயி பராம் க்ருத்வா மாமேவைஷ்யத்யஸம்ஶய: || ௬௮ ||

(ப-ம்) யஃ எவன், மத்பக்தேஷு-என்பக்தாளிடத்தில், இதம்-இந்த, பரமம்-மேலான, குஹ்யம்-ரஹஸ்யத்தை, மயி-என்னிடத்தில், பராம்-மேலான, பக்திம்-பக்தியை, க்ருத்வா-செய்து, அபிதாஸ்யதி-சொல்லுகிறானோ, (ஸஃ)-அவன். மாம் ஏவ-என்னையே, ஏஷ்யதி-அடைவான், அஸம்சயஃ-ஸந்தேகமில்லை. (௬௮)

(தா-ம்) இந்த பரம இரகசியத்தை என்பக்தர்களுக்கு எவன் சொல்லுகிறானோ, அவன் என்னிடத்தில் மிக்கபக்திசெய்து என்னையே அடைவனென்பதிற் றடையேதுமில்லை. (௬௮)

ந ச தஸ்மாந் மநுஷ்யேஷு கஶ்சிந்மே ப்ரியக்ருத்தம: |
பவிதா ந ச மே தஸ்மாதந்ய: ப்ரியதரோ புவி || ௬௯ ||

(ப-ம்) மே-எனக்கு, தஸ்மாத்-அவனைக்காட்டிலும், ப்ரியக்ருத்தமஃ-மிகவும் இஷ்டம் செய்யுமவன், மநுஷ்யேஷு-மனிதரில், கஃசித்ச-ஒருவனும், ந-இல்லை; புவி-பூமியில், தஸ்மாத் - அவனைவிட, அந்யஃ-வேறொருவன், மே-எனக்கு, ப்ரியதரஃ-அதிக இஷ்டன், பவிதா சந-உண்டாகுமவனுமில்லை. (௬௯)

(தா-ம்.) மானிடருள் அப்படிப்பட்டவனைவிட எனக்குமிகமேன்மைசெய்தவன் எவனுமிருந்திலன் இனிமேலும் அப்படிப்பட்டவனைவிட எனக்குப்பிரியமானவன் வேறொருவனு மிருக்கமாட்டான்.

𑌅𑌧𑍍𑌯𑍇𑌷𑍍𑌯𑌤𑍇 𑌚 𑌯 𑌇𑌮𑌂 𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌂 𑌸𑌂𑌵𑌾𑌦𑌮𑌾𑌵𑌯𑍋𑌃|
𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑌜𑍍𑌞𑍇𑌨 𑌤𑍇𑌨𑌾𑌹𑌮𑌿𑌷𑍍𑌟𑌃 𑌸𑍍𑌯𑌾𑌮𑌿𑌤𑌿 𑌮𑍇 𑌮𑌤𑌿𑌃|| ௭௰||

(ப-ம்.) தர்ம்யம்-தருமத்தினின்று நீங்காத, ஆவயோ: - நம்முடைய, இமம்-இந்த, ஸம்வாதம்-ஸம்வாதத்தை, ய:- எவன், அத்யேஷ்யதே-அத்தியயனம் செய்கிறானோ, தேந-அந்த, ஜ்ஞாநயஜ்ஞேந-ஞானயக்ஞத்தால், அஹம்-நான், இஷ்ட: - பூஜிக்கப்பட்டவன், ஸ்யாம்- ஆகுவேன், இதி - என்று, மே - என்னுடைய, மதி: - அபிப்பிராயம். (௭௰)

(தா-ம்) தர்மோபதேசமான இந்த நம் ஸம்வாதத்தை எவன் பாராயணஞ் செய்கிறானோ, அத்தகையவன் ஞானயஞ்ஞத்தாலென்னை ஆராதித்தவனாவானென்பது என்கருத்து. (௭௰)

𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌵𑌾𑌨𑌨𑌸𑍂𑌯𑌶𑍍𑌚 𑌶𑍃𑌣𑍁𑌯𑌾𑌦𑌪𑌿 𑌯𑍋 𑌨𑌰𑌃|
𑌸𑍋𑌽𑌪𑌿 𑌮𑍁𑌕𑍍𑌤𑌃 𑌶𑍁𑌭𑌾𑌂𑌲𑍍𑌲𑍋𑌕𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍁𑌯𑌾𑌤𑍍𑌪𑍁𑌣𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌮𑍍||

(ப-ம்.) அபிச-மேலும், ய:-எந்த, நர:-மனிதன், ச்ரத்தாவாந்-சிரத்தையுடையனும், அநஸூயு:ச-அசூயையற்றவனையும், ச்ருணுயாத்-கேட்பனோ, ஸ:அபி-அவனும், முக்த:-பாவங்களால்விடப்பட்டவனாய், புண்யகர்மணாம்-புண்ணியவான்களுடைய, சுபாந் சுபமான, லோகாந்-லோகங்களை, ப்ராப்நுயாத்-அடைவான். (௭௧)

(தா-ம்) எவன் சிரத்தையுடனாகி பொறாமையின்றி கேட்கின்றானோ, அவன்கூட பக்தியோகத்திற்கு விரோதிகளான பாதகங்களினின்றும் விடப்பட்டு புண்ணியகர்மங்களைச்செய்த என்பக்தர்களுடைய ஸமூகத்தைச் சேருவான். (௭௧)

𑌕𑌚𑍍𑌚𑌿𑌦𑍇𑌤𑌚𑍍𑌛𑍍𑌰𑍁𑌤𑌂 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌤𑍍𑌵𑌯𑍈𑌕𑌾𑌗𑍍𑌰𑍇𑌣 𑌚𑍇𑌤𑌸𑌾|
𑌕𑌚𑍍𑌚𑌿𑌦𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌂𑌮𑍋𑌹𑌃 𑌪𑍍𑌰𑌣𑌷𑍍𑌟𑌸𑍍𑌤𑍇 𑌧𑌨𑌞𑍍𑌜𑌯|| ௭௨||

(ப-ம்.) (ஹே) பார்த்த-ஓ அர்ச்சுனா! த்வயா-உன்னால், ஏதத்-இது, ஏகாக்ரேண-நிச்சலமான, சேதஸா-மனதினால், ச்ருதம் கச்சித்-கேட்கப்பட்டதா? (ஹே) தநஞ்செய!-ஓ அர்ச்சுனா!, தே-உனது, அஜ்ஞாந ஸம்மோஹ: - அக்ஞானத்தாலுண்டான அவிவேகம், ப்ரணஷ்ட: கச்சித்-அழிந்ததா? (௭௨)

(தா-ம்.) அர்ஜுனா! ஒருமனதாய் இதைக்கேட்டையா? தனசயா! நின் அஞ்ஞான இருள்விலகிற்று? (௭௨)

அர்ச்சுனவாக்கியம்.

𑌨𑌷𑍍𑌟𑍋 𑌮𑍋𑌹𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌰𑍍𑌲𑌬𑍍𑌧𑌾 𑌤𑍍𑌵𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌾𑌨𑍍𑌮𑌯𑌾𑌚𑍍𑌯𑍁𑌤|
𑌸𑍍𑌥𑌿𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌗𑌤𑌸𑌨𑍍𑌦𑍇𑌹𑌃 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑍇 𑌵𑌚𑌨𑌂 𑌤𑌵|| ௭௩||

(ப-ம்) (ஹே) அச்யுத-ஓ கிருஷ்ணா!, த்வத்ப்ரஸாதாத்-உன்னுடைய அனுக்கிரஹத்தால், மோஹ:-விபரீதஞானம், நஷ்ட:-நசித்தது; மயா-என்னால், ஸ்ம்ருதி:-ஸ்ம்ருதி, லப்தா-அடையப்பட்டது; கதஸந்தேஹ:-ஸந்தேஹமற்றவனாய், ஸ்தித: அஸ்மி - இருக்கிறேன், தவ-உன்னுடைய, வசநம்-வார்த்தையை, கரிஷ்யே-செய்கிறேன். ()

(தா-ப்) கிருஷ்ணா! உங்களருளால் உனக்கு விபரீதமான ஞானங்களொழிந்தன, உண்மை ஞானவுண்மை நன்கு புலப்பட்டன உங்கள்மொழிகளைக்கேட்டபின் ஸந்தேகங்களெல்லாமொழிந்துவிட்டது திடசித்தனாகவே யிருக்கிறேன். (எங)

இத்யஹம் வாஸுதேவஸ்ய பார்த்தஸ்ய ச மஹாத்மந:|
ஸம்வாதமிமமச்ரௌஷமத்புதம் ரோமஹர்ஷணம்|| எச||

(ப-ம்.) இதி-இப்படி, வாஸுதேவஸ்ய-வாஸுதேவனுடையவும், மஹாத்மந:-மஹாத்துமாவான, பார்த்தஸ்ய-பார்த்தனுடையவும், அத்புதம்-ஆச்சரியகரமும், ரோமஹர்ஷணம்-மயிர்க்கூச்செறியப்பண்ணுவதுமான, இமம்-இந்த, ஸம்வாதம்-ஸம்வாதத்தை, அஹம்-நான், அச்ரௌஷம்-கேட்டேன். (எச)

(தா-ம்) யான் இப்படி ரோமாஞ்சமுண்டாகும்படி அற்புதமாய் கிருஷ்ணனுக்கும், மஹாத்மாவாகிய அர்ஜுனனுக்கும் நடந்த ஸம்வாதத்தைக்கேட்டேன். (எச)

வ்யாஸப்ரஸாதாச்ச்ருதவாநேதத்குஹ்யமஹம் பரம்|
யோகம் யோகேச்வராத்க்ருஷ்ணாத்ஸாக்ஷாத்கதயத: ஸ்வயம்|| எரு||

(ப-ம்) ஏதத்-இந்த, குஹ்யதமம்-மிகவும் ரஹஸ்யமும், பரம்-உத்கிருஷ்டமுமான, யோகம்-யோகத்தை, ஸ்வயம்-ஸ்வயமாக, கதயத:-சொல்லுகின்ற, யோகேச்வராத்-யோகேச்வரனான, க்ருஷ்ணாத்-க்ருஷ்ணனிடத்தில், வ்யாஸப்ரஸாதாத்-வியாஸரின்னருளால், ஸாக்ஷாத்-ப்ரத்யக்ஷமாய், கேட்டவன் அஸ்மி-(ஆகிறேன்). (எரு)

(தா-ப்) பரமரகசியமான இந்த யோகசாஸ்திரத்தையோகேச்ரனை கிருஷ்ணனே பிரத்தியக்ஷமாய்த்தானேசொல்லிக்கொண்டிருக்கும்போது வியாஸருடைய அருளினால யான் கேட்டேன். (எரு)

ராஜந்ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ஸம்வாதமிமமத்புதம்|
கேசவார்ஜுநயோ: புண்யம் ஹ்ருஷ்யாமி ச முஹுர்முஹு: ||

(ப-ம்.) (ஹே) ராஜந்-ஓ ராஜா! கிம்ச-மேலும், அத்புதம்-ஆச்சரியகரமும், புண்யம்ச-புண்ணியமுமான, கேசவார்ஜுநயோ:-கேச

வார்ச்சுனனுடைய, இமம்-இந்த, ஸம்வாதம்-ஸம்வாதத்தை, ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய-நினைத்து நினைத்து, முஹு: முஹு: - அடிக்கடி, ஹ்ருஷ்யாமி ஸந்தோஷிக்கிறேன். (எசு)

(தா-ம்) ஓ திருதராஷ்டிர மகாராஜனே! கிருஷ்ணார்ஜுனனுடைய பரிசுத்தமான இந்த அத்புத ஸம்வாதத்தை நினைத்து நினைத்து அடிக்கடி சந்தோஷிக்கிறேன். (எசு)

தச்ச ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ரூபமத்யத்புதம் ஹரே:|
விஸ்மயோ மே மஹாந் ராஜந் ஹ்ருஷ்யாமி ச புந: புந:||எஎ||

(ப-ம்) (ஹே) ராஜந்-ஓ ராஜனே! ஹரே:-ஹரியினது, அத்யத்புதம்-அதியாச்சரியமான, தத்ரூபம் - அந்த ரூபத்தை, ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய- நினைத்து நினைத்து, மே எனக்கு, மஹாந்-பெரிய, விஸ்மய:-ஆச்சரியம் (பவதி உண்டாகின்றது), புந: புந:ச-மறுபடி மறுபடி, ஹ்ருஷ்யாமி- ஆனந்திக்கிறேன், (எஎ)

(தா-ம்) ஓ திருதராஷ்டிரராஜனே! ஸ்ரீகிருஷ்ணனுடைய அத்புதமான அந்த விஸ்வரூபத்தை நினைக்க நினைக்க எனக்கு அத்யாஸ்சரியமாக விருக்கிறது அடிக்கடி ஸந்தோஷம் மேம்படுகிறது. (எஎ)

யத்ர யோகேஶ்வர: க்ருஷ்ணோ யத்ர பார்த்தோ தநுர்த்தர:|
தத்ர ஸ்ரீர்விஜயோ பூதிர்த்ருவா நீதிர்மதிர்மம|| எஅ||

(ப-ம்) யோகேச்வர:-சேதநா சேதநங்களுடைய ஸ்வபாவயோகங்களுக்கு ஈஸ்வரனாகிய, க்ருஷ்ண:-கிருஷ்ணன், யத்ர - எங்கோ, தநுர்தர:-வில்பிடித்த, பார்த்த:-அருச்சுனன். யத்ர-எந்தப்பக்ஷத்திலிருக்கிறானோ, தத்ர-அங்கே, ஸ்ரீ:-லக்ஷ்மியும், த்ருவா-தப்பாது; விஜய:-வெற்றி (தப்பாது), பூதி:-ஸம்பத்து (தப்பாது), நீதி: - நியாயமும்(தப்பாது) (என்று), மம-என்னுடைய, மதி:-தாத்பரியம். (எஅ)

(தா-ம்) எந்தவிடத்தில் யோகீசனான ஸ்ரீகிருஷ்ணனிருக்கிறானோ எவ்விடத்தில் அர்ஜுனன் தநுர்த்தரனாக்விருக்கிறானோ, அவ்விடத்தில் இலக்ஷ்மியும் விஜயமும் ஐஸ்வர்யமும் நீதியும் ஸ்திரமாயிருக்குமென்பது என் கருத்து. (எஅ)

ஸ்ரீகீதாஸு விஸ்வரூபஸந்தர்ஸநயோகமென்னும்

பதினெட்டாவது அத்தியாயம் முற்றிற்று.

---